கழக வெளியீடு—௫௯௪

உ

திருச்சிற்றம்பலம்

திருமூல நாயனார்

அருளிச்செய்த

# திருமந்திரம்

## மூவாயிரம்



துடிசை கிழார்

அ. சிதம்பரனாரவர்கள்

பல சுவடிகள் கொண்டு ஆராய்ந்து செய்த

பதிப்பு முறையோடும்,

...ிய உரைக் குறிப்போடும்.



திருமுறை

௧௦



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,

திருநெல்வேலி & சென்னை

சித்திரபானு—ஆவணி.

விலை ரூ. 3/8

# பொருளடக்கம்

# திருமந்திர அதிகார அட்டவணை

மெய்யுரைகளாலேயே இனிது விளங்கா

...போல உலகத் திரிவாரான தூய
திருச்சிற்றம்... ...னமெல்லாம் ...

# பதிப்புரை

மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி யருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே.

'திருமூலர்' திருவாய்மலர்ந்தருளிய 'திருமந்திரம்' என்னுந் தமிழ் மூவாயிரம், சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பத்தாவது திருமுறையாக விளங்கி வருகின்றது. "தென்றமிழ்ப் பயன்" என்று சேக்கிழார் பெருமானாற் பாராட்டப்பட்ட திருத்தொண்டத் தொகையில் நம் சமய குரவர் நம்பியாரூரர், திருமூல முனிவரரை நினைந்து "நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்" என்று நாவார இசைத்து மனமுருகிப் பரவி யிருக்கின்றனர். அவ்வருளுரையில் அவர் 'நம்பிரான் திருமூலன்' என்று ஓர் அரிய அடைமொழி தந்து ஓதியிருக்கும் அருள்வாய்மையும் பெருந்தகுதியும் நம்மனோர் அனைவருங் கருத்திருத்திப் பயன்பெறற்குரியது. தமிழ் மக்களாய்ப் பிறக்குஞ் சைவ நன்மக்களனைவர்க்குந் திருமூலர் 'ஞானகுரவ'ரென்பது இதனால் நன்கு புலனாகும்.

இனி, இன்றுகாறும் நம்மனோர்க்குக் கிடைத்துள்ள செந்தமிழ் ஞான நூல்களுள் 'திருமூலர் திருமந்திரம்' ஒன்றே மிகவும் பழமை வாய்ந்தது. அதன்பின், 'ஞானமிர்தம்' 'சிவஞானபோதம்' முதலியன அடுத்து அமையற்பாலன. ஞானநூல் என்றது இங்குச் சாத்திரம் என்றறிதல் வேண்டும். இந்நூல்கள் போல்வன ஆகம மெய்ப்பொருள் அறிவுறுத்துவன.

தமிழ் வழங்கிய தேய முழுமையும் என்றும் ஞானந் தாவி யிருந்ததென்பது, "தமிழ் மண்டலம் ஐந்துந் தாவிய ஞானம்" "தமிழ் மண்டலம் ஐந்துந் தத்துவமாமே" என்னும் இத் திருமந்திர மெய்ம்மொழியினாலேயே இனிது பெறப்படுதலின், இத் தமிழகத்திலுந் திருமூல தேவர்க்கு முன் நெடுக மெய்யுணர்வுக் கருத்துக்கள் அங்கங்குந் தெளியப்பட்டு வந்தமை தேற்றமாம். முதல் இடை கடை என்னும் பழைய சங்க காலங்களில் எழுந்த பல சிறந்த சங்கத் தமிழ்நூல்களூடும் இவ்வருளுணர்வுத் துணுக்குகள் நீளவிராய் ஆங்காங்கும் மின்னிச் சுடர்ந்து நலம் பயந்தமையும் பயக்கின்றமையும் இப்போது கிடைத்தவரையில் அந் நறுநூல்களை ஆழ்ந்து ஆராய்ந்து வருவாரெவரும் இனிதுணர்வர். இத்தகைய செந்தமிழ் இலக்கியங்கள், 'கடவுள்' 'உயிர்' 'உலகம்' என்னும் முப்பொருள் பற்றிய உண்மைகளை அவற்றின் நுட்பதிட்பங்கள் விளக்கமாகப்

ரித்து விளக்குவன அல்ல
பக்கம் டகம்' என்று முறையி
உடல்விடல் 255 யும் உலக நெறி தோன்
பஞ்ச பேதம்

அற்றாயினும், அவற்றின் விழுமிய நோக்கமெல்லாம், மேற் காட்டிய கடவுள், உயிர், உலக மென்னும் முப்பொருள்பற்றிய அவ் வுண்மைகளையே, கற்பார்க்கு முடித்து விளக்குவனவாய் இருக்கின் றனவென்பது, "காமஞ் சான்ற கடைக்கோட் காலை, ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி, அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும் சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே" என்னுந் **தொல்காப்பிய** முடிவுரையோடொத்த இறுத்த கருத்துக்களால் எளிதே தெளிந்து கொள்ளலாம். இவ்வாற்றால் இயல், இசை, நாடக வகையால் மெய்ப்பொருளுண்மைகளை உண்மைகளளவாகவே ஆண்டாண்டு தெளித்து அறிவுறுத்திச் செல்லும் பண்டைச் செந்தமிழ்ப் பனுவல்கள் **முத்தமிழ் வேதமாக**, மற்று அவ்வருட் பேருண்மைகள் மட்டுமே தனிப் பொருளாக வைத்து நுணுகி அறியலுறும் பெருவேட்கை விஞ்சி அதற்குத் தக நுண்ணுணர்வும் நல்லொழுக்கமு மிக்க தனிச் சிறப்பாளர் பொருட்டு, மெய் விளக்கங் கைவந்த பண்டை அருட் சான்றோர் அவ் வேத நூலின்கண் ஆங்காங்கும் உண்மைகளளவாய் மின்னிச் சிதர்ந்து கிடக்கும் அம் மெய்பொருட் கருத்துக்களை ஒருங்கு தொகுத்து ஆராய்ச்சி வகையால் விரித்து விளக்கிச் செய்த செந்தமிழ் ஞான நூல்கள் **ஆகமம்** எனப்பட்டன. முதலில் ஆகமங்கள் ஒன்பது வகையாகப் பாகுபடுத்தப்பட்டுப் பின்பு அவற்றிலிருந்து இருபானெண் ஆகமங்கள் விரிந்து தோன்றலாயின வென்பது, "ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு" என்னுந் திருமூலர் திருமொழியினால் நன்கு விளங்குகின்றது.

ஒருவகை நூல் இங்ஙனம் இறைவன் உண்மைகளை இலை மறைகாய் ஒப்பத்தன்னுட் கரந்துறை பொருளாகக் கொண்டு கலைகள் முகமாக விளக்குதலின் 'வேத நூல்' எனவும், இனி அவ்வுண்மைகளெல்லாம் ஒருங்கு திரட்டி உருவாக்கி நேர் ஞான முகமாக அறிவுறுக்கும் மற்றொரு வகை நூல் 'ஆகம நூல்' எனவும் வழங்கப்பட்ட அரும்பெருஞ் சிறப்பும் அறிந்து இன்புறல் வேண்டும். இதனால் வேதம் என்னும் மறை நூலும், ஆகமம் என்னும் ஞான நூலும் இறையியல்புணர்த்தும் இறைவன் நூல்களேயாயினும், முறையே அவை பொதுவெனவுஞ் சிறப்பென வுங் கொள்ளப்பட்டன. ஆயினும் இவ்விருவகை நூலின் முடிவும், பொருளொருமை காணும் அருட் பெரியோர்க்கு ஒன்றேயாம் என்க. மேற்காட்டிய இவ் வுண்மைகளெல்லாம,

"சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்"

"வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்
ஓதும் சிறப்புஞ் பொதுவுமென் றுள்ளன
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
[illegible] பெரியோர்க் கபேதமே"

என்னும் இத் திருமந்திர மெய்யுரைகளாலேயே இனிது விளங்கா நிற்கும்.

இனி, ஞானம் உமிழ்வதுபோல உலகந் திரிவாரான தூய தமிழ்ச் சான்றோர் தத்தங் காலங்களில் இங்ஙனமெல்லாம் இயற்றி வைத்த வேத நூல்களும், ஆகம நூல்களும், இடையிடையே நிலங் கரந்து வாவி வந்த நீரலைகளானும் மனங்கரந்து தாவி வந்த அயலவர் போரலைகளானும் பிறவற்றானும் பற்பல மறைந்து போயின. பெரிதும் இரங்கத்தக்க இந்நிலை கண்டு, அடுத்தடுத்துப் பின் வந்த அறிவர் பலரும் மீண்டும் மீண்டும் அவ்விருவகை நூற்கருத்துக்களையும், கிடைத்தமட்டும் இருவகை வழக்கும் அறிந்து ஆராய்ந்து, எல்லாம் வல்ல இறைவன் திருவருள் விளக்கம் முன்னின்று நெறியருள, மேன்மேலும் வேதாகம நூல்களைப் புதுப்பித்து வந்தனர். அவரெல்லாம் அங்ஙனஞ் செய்தருளாராயின் இஞ்ஞான்று 'தொல்காப்பியம்', 'சங்க இலக்கியம்', 'திருக்குறள்', 'பெருங்காப்பியம்' போன்ற தமிழ் மாமறைகளும், 'திருமந்திரம்', 'ஞானமிர்தம்', 'மெய்கண்ட நூல்', 'துகளறு போதம்' முதலிய தமிழ்ப்பேராகமங் களும் நாங் காணக் கிடைப்பது எங்ஙனம்? இம் மறைஞானப் பெருநூல்களால் நந் தமிழ் நாடும் தமிழ் மக்கள் மெய்யுணர்வு நிலையும் அடைந்துவரும் பெருமையும் விளக்கமும் எண்ணிலடங்குவ வல்ல.

நந் தெய்வத் திருமூலர் இவ்வகையிற் றமிழ்க்கு ஆற்றியிருக்கும் பெருநலன், வழி வழித் தமிழ் மக்களால் என்ஞான்றும் நினைவு கூர்ந்து இன்புறற்குரியதா யிருக்கின்றது. நமக்கு இஞ்ஞான்று கிடைக்கும் ஞான மெய்ந் நூல்களை இயற்றினருள் அவரே பழமை யுடையராய் முதல்வராகின்றாராகலின், அவர் பெருமை அளத்தற் கரிய தொன்றாம். ஆதலின், திருநாவலூரர் இஞ் ஞானகுரவரை "நம்பிரான் திருமூலன்" என்றருளிச்செய்தது பெரிதும் வாய்வதே யாமென்க. திருமூலர் முதலில் மூலனுடம்பிற் புகுந்து மூலனாகிப், பின் தந் தவப்பேற்றால் சதாசிவப் பெருநிலை கைவரப் பெற்று முத் தமிழ் வேத உணர்வுடையராய், மற்று அந் நிலைதன்னையுங் கடந்து அவ் வேத மெய்ப்பொருளின் அருண்ஞானத் திரளாயுள்ள ஆகமத் தெளிவினை நண்ணித், திருவாவடுதுறைக்கண் அலையா அருளமைதி யிற் றேங்கி, இருக்குமா றிருந்து, இறைவன் திருவருள் நினைந்து, அவன் அருள மூலாகமங்கள் ஒன்பதன் மெய்ப்பொருள்களை இடை யீடின்றி ஆழ்ந்து கருதி ஒன்பது தந்திரங்களால் மூவாயிரந் திருமந் திரங்கள் செய்து இத் திருமந்திரத் தமிழ் ஆகமப் பெருநூலைத் திருவாய்மலர்ந்தருளுவாராயினர், சிக்கில்லா இம் மெய்ம்மை களெல்லாம் அவர்தம் அருள்வள மிக்க திருமந்திரக் கருவூலப் பேழைகளில் அளவுபடாச் சுடரொளிகளோடு திகழ்ந்து மின்னும் அருமாமணிகளான,

"நந்தியருளாலே மூலனை நாடிப்பின்
நந்தியருளாலே சதாசிவ னாயினேன்

"நந்தியரு ளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்தியரு ளாலே நானிருந் தேனே"

சீருடை யாள்சிவன் ஆவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே"

"நவஆ கமம் எங்கள் நந்திபெற் றானே";

"நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்து
அந்தி மதிபுனை அரனடி நாள்தொறுஞ்
சிந்தைசெய்து ஆகமம் செப்பலுற் றேனே"

"தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்"

"என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே."

என்னுந் தீந்தமிழ்த் திருமந்திரங்களினாலேயே எளிதுணரக் கிடக்கின்றன. 'தொல்காப்பியம்' 'திருக்குறள்' 'சிவஞான போதம்' 'பெரிய புராணம்' முதலிய செந்தமிழ்ப் பயன்களெல்லாம் இங்ஙனந் தவவுணர்வும் திருவருளுந் தமிழ் மரபுங் கொண்டு தமிழ் மொழியிலேயே முதன்முதலெழுந்த மெய்ந்நூல்களாகும். 'திருமந் திரம்' நமக்கு இங்ஙனங் கிடைத்த ஞான அருட்கொடையே என்க. தவமும் அருளுந் தமிழுமாயமைந்த இவ் விழுப்பேற்றின் நலம் உல கின் அருஞ்செயல்களுள் ஒன்றன்றே! தமிழ் மக்கள் இப் பெறற் கருஞ் சிறப்பை எத்துணை எளிதாகப் பெற்றிருக்கின்றனர்! இயற் கையே தமக்கமைந்த இவ் வருட்செல்வத்தை நம்மனோர் எத்தனை அன்போடு கருத்தாகப் போற்றிக்கொள்ளல் வேண்டும்! இந் நலன் நினைந்தே நங் கழகம் இப்போது இவ் வாகமப் பெருநூலை நன்முறை யிற் பதிப்பிட்டுத் தமிழ் மக்கள்முன் உய்க்கின்றது.

திருமூலர் திருமந்திரம், பொதுப்பாயிரம், தற்சிறப்புப்பாயிரம் என்னும் இருகூறுகொண்ட பாயிரப் பகுதியும், அதனை யடுத்து ஒன்பது மூலாகமங்களின் உட்கருத்துக்களையும் முறையே விளக்கும் ஒன்பது தந்திரப் பகுதிகளும் வாய்ந்து அவற்றை மூவாயிரம் மந்தி ரப் பாடல்களாற் பலப்பல தலைப்புக்களில் விளக்கும் அருமைப் பாடுடையதாய் விளங்குகின்றது.

பொதுப்பாயிரம், கடவுள் வாழ்த்து, வேதாகமச் சிறப்பு, வான் சிறப்பு, அந்தணர் நிலை, அறன் வலியுறுத்தல் முதலியனவும், தற்சிறப் புப் பாயிரம் குருபரம்பரை, தம் வரலாறு முதலியவும் அறிவுறுப் பன.

அதன்பின், நூலின் முதற் றந்திரம், பொது வகையாக ஞான மெய்ப்பொருள் அறிவுறுக்கப் புக்கு, உலக நிலையாமையும் அதனால் அனைவருங் கடைப்பிடித் தொழுக வேண்டும் நல்லொழுக்க நிலை களுந் தெரிவிக்கின்றது.

இரண்டாந் தந்திரம், அந் நல்லொழுக்க நெறி நின்றார்க்கு, உல கில் வழங்கும் புராண கதைகள் மூகமாக அவற்றுட் சிலவற்றின்

உண்மைப் பொருள் விளக்கமும், இறைவன் செய்யும் ஐந்தொழில் களின் வழியாக உலகுயிர்கள் பலவகைப்பட்டு இயங்கி நிகழுமாறும், அவ்வியற்கை நிகழ்ச்சிக்கேற்ப அருள்வழி நின்று ஒழுகவேண்டும் ஒழுகலாறும் அறிவிக்கின்றது.

மூன்றாந் தந்திரம், அதற்குமேல், அவ்வொழுகலாறுடையா ருள்ளத்தைப் புலன்களினின்று நீக்கி உண்முகப்படுத்தி அவ்வுள்ளத்தையும் உடம்பையும் உரம்பெறச் செய்ததற்கான இயற்கை அகப்பழக்கங்களை இனிதிசைக்கின்றது.

நான்காந் தந்திரம், அவ்வியற்கை அகப் பழக்கங்களால் உரமேறி வரும் உள்ளம் மிகச் சிறந்த ஒலி நுட்பங்களின் உதவியால் உணர்விலேயே ஆட்சி நடத்துதற்கான வாயில்களை வகுத்தோதுகின்றது.

ஐந்தாந் தந்திரம், இதுகாறும் இங்ஙனம் பொது வகையால் ஞானநெறி யறிவுறுத்து அவ்வறிவுறுப்பின் வழியே அகப்புறத் தகுதிகளடைந்து வந்த நல்லோர்க்கு இனிச் சிறப்பு வகையால் நுண்ணிய அருளுண்மைகள் உணர்த்தத் தொடங்கி முதலிற் சைவ சமய நிலைகளையும் சரியை முதலிய அதன் படிகள், முறைகள், நெறிகள், தீக்கைத் தகுதிகள் முதலியவற்றையும் விளக்கித் தருகின்றது.

ஆறாந் தந்திரம், அங்ஙனமே அச் சமய நெறி நிற்க முந்துவோர், குருவின் திருவருளெய்திப் பிறபற்றுக்கள் அற்றுத் தவநெறி கடைப்பிடித்தற்கான் தெளிவு நிலைகளைத் தெருட்டா நின்றது.

ஏழாந் தந்திரம், அத் தெளிவு கைவந்த சீரியோரை அகவழிபாடு புறவழிபாடுகளாகிய அருட்பழக்கத்தில் நேரே இறக்கிப் பழகச் செய்து அதனால் அவர் பெறுகின்ற தகுதிகளையும் அவர் தாமே உணருமாறு அவ் வருள்நிலையில் இரீஇ, ஆண்டிருந்து அந்நிலையில் உறும் இடையூறுகளைக் களைந்து தந்நிலை நிற்கும் ஆற்றலையும் அடைவிக்கின்றது.

எட்டாந் தந்திரம், அத்தகைய அருள் நிலைக்கண் சென்று வைகுந் தூயோர், அதன் விழுமிய மேன்மேற் காட்சிகளில் உயர்ந்து பல் வேறு உள்ளுடம்புகளிலும் உலகுகளிலும் எளிதினுலவுந் தெளிவுக் காட்சியும் இனிதினிருக்குந் திருவருட்பேறு முடையராய் வீட்டின்ப அணுக்கராய் வயங்குமுண்மை உணர்த்துகின்றது.

ஒன்பதாந் தந்திரம், இறுதியாக, அத்துணைப் பேரருள் பெரு விளக்க நிலையிலும் அந்நிலை நின்றார் தந்நிலை வழாமைப் பொருட்டு, ஆண்டெண்ணுதற்குரிய ஐந்தெழுத்தின் உண்மைகளும், அவ்வழி வழாராய் உரையுணர்வு கடந்த நிலைத்த பெருநிலை நோக்கியே தேக் குற்றுக் கிடந்தார் முன் ஆங்கு நிகழுஞ் செம்பொனம்பலவன் திருக் கூத்தியல்புகளும் அக்கூத்தின் பரந்த இயக்கமாம் வீட்டின்ப மாட்சியும், அவர் வீடுபேறுந் தெளிவியாநின்றது.

இங்ஙனம் ஞானம் பழுத்த இம் மூவாயிரந் தமிழ்ச் செய்யுட்களும் எத்தனையோ காலமாக இத் தமிழகத்தைத் தெய்வப் பெற்றியில்

இரீஇ, இதன் உணர்வாற்றலை மாட்சிமைப்படுத்தி வந்திருக்கின்றன. இவற்றைத் தமிழ் மக்கள் நாடோறும் ஓதி அருள்நிலை யெய்துக வென்னுங் கருத்தால் **நம்பியாண்டார் நம்பிகள்,** இவை "முழுத் தமிழின்படி மன்னும் வேதத்தின் சொற்படியே" அருளிச் செய்யப் பட்டன வென்று அதன் வாய்மையினையும் அறிவுறுத்துத், தாங் கோத்த பன்னிரு திருமுறை வரிசையிற் பத்தாந் திருமுறையாக நிரல்செய்து வழங்கியருளினார்.

இத்தகைய விழுமிய சிவஞானப் பெருநூலைத் தமிழ்மக்கட்குத் தகுமுறையில் உய்க்க வேண்டு மென்னுங் கருத்தால், பரம்பரையே சிவநேயமுஞ் செந்தமிழ் ஞானமு மிக்க அருமரபில் வந்தவர்களும், கோட்பாடு வழுவாமல் சிவத்தொண்டு தமிழ்த்தொண்டு செய்தலில் அளவுபடா வேட்கை யுடையவர்களும், செவ்விய ஒழுக்கமிக்க அருஞ் சைவ சீலர்களும், 'விபூதி விளக்கம்', 'உருத்திராக்க விளக்கம்', 'ஆனந்து விளக்கம்' முதலிய பல சிவ சீல நூல்களை இயற்றி வழங்கியவர்களும், தாம் அலுவல்மேற் சென்ற தமிழகத்தின் பற்பல பகுதிகளிலும் ஆங்காங்குள்ள சிவநேயச் செல்வர்களோடும் தமிழறிஞர் கலையறிஞர்களோடும் இனிது அளவளாவி இன்புறுதலே ஒரு பொழுது போக்காகக் கொண்டு அம்முகமாகப் பல தமிழ்ச் சைவ அவைகளை அமைப்பித்து அவற்றை நடைபெறச் செய்து வந்தவர்களும் வருபவர்களும், தமிழ்நாட்டு வரலாற்றாராய்ச்சியில் முதன்மையாய்க் கருத்திருத்தி வருபவர்களும், பலப்பல கலைஞானப் பெருக்குகளில் இனிது நீந்தி மகிழ்பவர்களும், இத் திருமந்திரப்பெருஞான நூலில் தனிப்பயிற்சி யுடையவர்களும், அரசியலில் அங்கங்கும் போலிஸ் சர்கிள் இன்ஸ்பெக்டராயிருந்து இப்போது ஓய்வு பெற்றுக் கோவையில் அமைதி நிலையில் வயங்குபவர்களுமான **சைவப் பெரியார் துடிசை கிழார் அ. சிதம்பரனாரவர்கள்** இந்நூலின் பதிப்பு முறையில் மிக்க உழைப்பெடுத்து இதனைச் சீர்செய்து உதவியிருக்கின்றார்கள்.

இந்நூல், இதன் மூவாயிரம் பாடல்களுக்கு வேறாகத் தலைப்பிற் காப்புச் செய்யுள் ஒன்றும் இறுதியில் வாழ்த்துச் செய்யுள் ஒன்றும் பெற்று இயன்றிருக்கின்றது. இந்நூலின் அளவு இவ்வளவே யாக, இதுகாறும் உலவுந் திருமந்திரப் பதிப்புக்களில் மேலும் நாற்பது ஐம்பது செய்யுட்கள் இடைச் செருகலாய்ச் சேர்க்கப்பட்டிருத்தலோடு, அதிகார அடைவுஞ் செய்யுள் முறையும் நிலைபிறழ்ந்து காணப்படுதலும் ஏடெழுதுவார் அது கோப்பார் முதலியோர் செய்திட்ட வழுக்களாதல் வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும். இப் பதிப்பாசிரியத் திருவினர், தமது பரம்பரையில் வழக்கமாக இருந்து பயிலப்பட்டு வருந் திருமந்திரப் படிகொண்டும், நெடுங்காலமாகத் தாஞ் செய்து போந்த ஆராய்ச்சிகள் கொண்டும் அவ்விடைச் செருகல்களையும் பிறழ்ச்சிகளையும் ஒருங்கு களைந்து 'மூலன் உரை செய்த மூவாயிரந் தமிழ்' இன்னவெனக் காட்டி, இந்நூலை அதற்கிணங்க முறைப்படுத்தி அளித்திருக்கின்றார்கள். இன்றி

யமையாப் பாடவேறுபாடுகளும் அடிக்குறிப்பிற் காட்டப்பட்டிருக்கின்றன. மேலும், இந்நூலின் ஒவ்வொரு தந்திரமும் இன்ன ஆகமத்தின் உட்பொருளைக் கொண்டதென்று அறியும் பொருட்டு, அவ்வத் தந்திரத் தலைப்பின் அடியில் உரிய ஆகமப் பெயருந் தந்திருக்கிறார்கள்.

அன்றியும், இத் திருமந்திரம் முழுமைக்கும் இறுதியில் உரைக் குறிப்புக்களும் அவர்கள் எழுதிச் சேர்த்திருப்பது மிக உதவியாயிருக்கும். இவ்வுரை சமயக் கருத்திற், கற்பார்க்குப் பல ஐயங்களைப் போக்கித் தெளிவு தருவதாய்ச் சிறந்திருக்கின்றது. அஃதல்லாமலும், இந்நூலின் முகப்பிற் 'பாயிரம்' என ஒரு பிரிவும், 'திருமூலர் வரலாறு' என மற்றொரு பிரிவுங் கொண்ட விளக்கமான ஆராய்ச்சி முகவுரை யொன்றும் எழுதிச் சேர்த்திருக்கின்றார்கள். இவ்வரிய முகவுரையினால் திருமந்திரத்தையுந் திருமூலரையும்பற்றி அறிய வேண்டிய பற்பல ஆராய்ச்சிக் குறிப்புக்கள் வெளியாகின்றன. திருமூலருடைய மாணாக்கர்களைப் பற்றிய குறிப்பும், ஆகமங்களைப் பற்றிய குறிப்பும், நந்தி, நந்தியருள் பெற்ற நாதர், அவர் மடங்கள் முதலிய குறிப்புக்களும், திருமந்திரப் பாயிரக் குறிப்புக்களும் 'பாயிரம்' என்னும் பகுதியில் ஆராய்ந்து காட்டப்பட்டிருக்கின்றன. இனி, 'வரலா' றென்னும் பகுதியில், திருமூலர் காலத்துத் தமிழ்நாட் டெல்லை, நந்தியெம்பெருமான் மாணாக்கர், பதஞ்சலிகள் பலராதல், திருமூலர் மன்று தொழுதது, திருமூலர் காலம், அதைப் பற்றிய அகச்சான்றுகள், அகத்தியர் பலராதல், திருக்குறள் திருமந்திரங்களின் ஒருமை முதலிய பல பகுதிகள் ஆராயப்பட்டிருக்கின்றன. திருமூலர் காலத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் தமிழின் உருவ எழுத்துக், கோல் எழுத்து, வட்ட எழுத்துச், சதுர எழுத்துப் பற்றிய குறிப்புக்கள் பல வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள். ஆராய்ச்சியாளர்க்கும் பிறர்க்கும் இவை போல்வன நன்கு உதவக்கூடும்.

இக்காலத்தவர்க்குத் தொன்மையும் முதன்மையும் வாய்ந்த பெரிய தமிழாகம நூலாயிருக்கும் இத் திருமந்திரத்தைக் கழக வெளியீடாக வெளியிடுதற்கு இத்துணை நலங்களோடும் உழைப் போடுஞ் செப்பஞ்செய்து பதிப்பு முறையிற் பேருதவி செய்திருக்கும் இப் பெரியார் சிதம்பரனாரவர்கட்குத் தமிழகம் யாது கைம்மாறு செய்யவல்லது! கழகத்தார் தம் அகம் மருவிய நன்றியறிதலை அவர்கட்கு அன்புடன் அறிவித்துக்கொள்கின்றனர். தமிழ் மக்கள் இச் சிவஞானப் பெருநூலினை யாண்டும் நிரம்பப் பரவச்செய்து இம்மை மறுமை வீட்டின்ப நலங்களெல்லாம் ஒருங்கெய்தி இன்புற்றிடுவாராக!

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முகவுரை

## க. பாயிரம்

" ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே"

என்னும் சூத்திரப்படி ஒரு நூற்குப் பாயிரம் உரைப்பது நூன் முறையாகும். அம் முறைப்படி நாயனாரும் "தமிழ் மூவாயிரத்" துக்குப் பாயிரம் கூறியுள்ளார்.

மூவாயிரம் செய்யுட்களில் பாயிரச் செய்யுட்கள் சேர்ந்தனவே யாயினும், ஒன்பது தந்திரங்களுக்கும் அது பொது.

நாயனார் கூறியது ஒன்பது தந்திரங்களை என்பது,

" தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்
சுந்தரன் ஆகமச் சொன்மொழிந் தானே"

என்ற சிறப்புப் பாயிரப் பாசுரத்தால் விளங்கும்.

பாயிரம், பொது, சிறப்பு என இருவகைப்படும். நாயனார் கூறியது பொதுப்பாயிரம். அவர் மாணாக்கர்கள் கூறியது சிறப்புப் பாயிரம். தற்காலம் அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கின்ற புத்தகங்களில் இவ்விரண்டினையும் வேறு பிரியாது அச்சிட்டிருக்கின்றனர். அதனால் படிக்கிறவர்களுக்கு எது நாயனார் பாடல், எது அவருடைய மாணாக்கர்களுடைய பாடல் என வேறு பிரித்து அறிவது கடினமாயிருக்கிறது. அக் குறையையும் ஒருவாறு களைந்து நீக்கியுள்ளேன்.

நாயனார் ஒன்பது ஆகமங்களின் கருத்தைத்தான் ஒன்பது தந்திரங்களாகப் பாடினார் என்பது,

" அந்தி மதிபுனை அரனடி நாடொறும்
சிந்தை செய்து ஆகமம் செப்பலுற் றேனே"

என்னும் பாயிரச் செய்யுளால் விளங்கும்.

ஆகமங்கள் இருபத்தெட்டு ஆயிற்றே; நாயனார் ஒன்பது ஆகமங்களைப்பற்றி மாத்திரம் ஏன் கூறவேண்டும் என்பார்க்கு, சதாசிவநாயனார் வெளியிட்டது இருபத்தெட்டு ஆகமங்கள் என்றும், அவைகளில் நந்தி என்று பேர்பெற்ற சீகண்ட உருத்திரர்க்கே.

ஒன்பது ஆகமங்கள்தாம் கிட்டின என்றும், அவ்வொன்பது ஆகமங்களையே நந்தியெம்பெருமான் திருமூலர் முதலிய தம் முடைய எட்டுச் சீடர்களுக்கு அருளினார் என்றும், ஆகையால், இப் பூவுலகிற்குக் கிட்டினதே ஒன்பது ஆகமங்கள்தாம் என்றும், ஆதியில் கல்லால் நீழலிலும், மகேந்திர மலையிலும், திருப்புறம் பயத்திலும் ஒவ்வொரு காலங்களில் வெளியிடப்பட்ட ஆகமங்கள் எல்லாம் மறைந்துபோகவே இறைவனுடைய ஆணையால் அவ் வொன்பது ஆகமங்களின் கருத்துக்களை ஒன்பது தந்திரங்களாக நம் நாயனார் பாடி உலகர்க்கு உபகரித்து உள்ளார் என்றும் அடியில் காட்டப்படும் அவருடைய பாசுரங்களால் வெளியாம்.

### ஆகமங்கள் இருபத்தெட்டு என்பது

" அஞ்சனமேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்"

என்பதால் அறியலாம்.

### ஒன்பது ஆகமங்கள்தாம் சீகண்டர் பெற்றார் என்பது

" சிவமாம் பரத்தினில் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் உருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மிற்றும் பெற்ற
நவஆ கமம்எங்கள் நந்திபெற் றனே"

என்னும் பாசுரத்தால் அறியலாம்.

### அவ்வாகமங்கள் இன்னவென்பது

" பெற்றநல் ஆகமம் காரணம் காமிகம்
உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமளம் ஆகுங்கா லோத்தரம்
துற்றநற் சுப்பிரம் சொல்லும் மகுடமே"

என்னும் பாசுரத்தால் விளக்கமாம்.

ஆதலின் முதற்றந்திரம் காரண ஆகமத்தின் சாரமாகவும், இரண்டாம் தந்திரம் காமிக ஆகமத்தின் சாரமாகவும், மூன்றும் தந் திரம் வீர ஆகமத்தின் சாரமாகவும், நான்காம் தந்திரம் சிந்தியா கமத்தின் சாரமாகவும், ஐந்தாம் தந்திரம் வாதுள ஆகமத்தின் சார மாகவும், ஆறும் தந்திரம் வியாமள ஆகமத்தின் சாரமாகவும், ஏழாம் தந்திரம் காலோத்தர ஆகமத்தின் சாரமாகவும், எட்டாம் தந்திரம் சுப்பிரபேத ஆகமத்தின் சாரமாகவும், ஒன்பதாம் தந்திரம் மகுட ஆகமத்தின் சாரமாகவும் அமைந்திருப்பது விளங்கும்.

சதாசிவ மூர்த்தியானவர் இருபத்தெட்டு ஆகமங்களையும் பிரணவர் முதலிய பதின்மருக்கும், மகாஉருத்திரர் முதலிய பதினெண்மருக்கும் ஓரோவொன்று ஒவ்வொருவருக்கும் அருளிச் செய்தார். இதனை,

"எஞ்சலில் விஞ்ஞகர் இருபத் தெண்மரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டனர்"

என்ற பாயிரச் செய்யுளால் அறியலாம்.

ஆனல் ஒன்பது ஆகமங்களையும் ஒருங்கே பெற்றவர் நூற்றுப் பதினெட்டு உருத்திரர்களில் முதல்வராகிய சீகண்ட உருத்திரர் ஆவர். அவரைத்தான் "சிவமாம் பரத்தினில்" என்ற பாசுரத்தில் நாயனர் "நந்தி" எனக் குறிப்பிட்டு உள்ளார்.

ஒன்பது தந்திரங்களிலும் நாயனர் விளக்கியுள்ளவை எவை என்பது,

"ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
ஆயத்தை அச்சிவன் தன்னை அகோசர
வீயத்தை முற்றும் விளக்கியிட் டேனே"

என்னும் பாசுரத்தால் விளங்கும்.

நாயனர் திருமந்திரப் பாட்டுக்களைத் தமிழ் மொழியிலேயேதான் பாடினர் என்பது,

"என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
தன்னை நன்ருகத் தமிழ்செய்யு மாறே"

என்ற நாயனர் வாக்காலும்,

"மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்"

என்ற அவர் மாணக்கர் வாக்காலும்,

"ஒன்றவன்றான்" என எடுத்து நாயனர் திருமந்திரத்தைத் தொடங்கினர் எனச் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் கூறு மாற்ருலும் அறியலாகும்.

தமிழ் மூவாயிரம் என்னும் திருமந்திரமானது நாயனர் மூலனுடைய உடம்பில் புகுந்த பின்னர்த்தான் செய்யப்பட்டது என்பது,

"அகலிடத்தார் மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத்தெம் மெய்யைப் போகவிட் டானே"

என்ற பாசுரத்தாலும்,

"இருந்தேன் இக் காயத்தில் எண்ணிலி கோடி"

என்ற பாசுரத்தாலும் அறியலாம்.

தமிழ் மூவாயிரம் என்னும் திருமந்திர நூலைத் திருவாவடு துறையில் அரசமரத்தின் அடியில் தவமிருந்துகொண்டு படித்து முடித்துத் தம்முடைய ஏழு சீடர்களுக்கும் நாயனார் புகட்டி வந்தார் என்பது,

"சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனை
சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியி னீழலில்
சேர்ந்திருந் தேன்சிவ நாமங்கள் ஓதியே".

என்ற பாசுரத்தாலும் அறியலாம்.

"மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துரு காலாங்கி கஞ்ச மலையனோடு
இந்த எழுவரும் என்வழி யாமே"

என்ற பாசுரத்தாலும் அறியலாம்.

"இருந்த அக் காரணங் கேள் இந்திரனே"

என்ற பாயிரச் செய்யுளில் இந்திரனை முன்னிலைப்படுத்தியும்,

"மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்"

என்ற பாயிரச் செய்யுளில் மாலாங்கனை முன்னிலைப்படுத்தியும்,

"நேர்ந்திடு மூல சரியை நெறியிதென்று
ஆய்ந்திடுங் காலாங்கி கஞ்சன் மலையமான்
ஓர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத்து"

என்ற பாசுரத்தில் காலாங்கியையும் கந்துருவையும் முன்னிலைப் படுத்தியும் நாயனார் கூறுவதால், மேலே "மந்திரம் பெற்ற வழி முறை" என்ற பாசுரத்தில் கூறிய ஏழு சீடர்களில் நால்வர் சம காலத்தவர்கள் என்றும், அவர்கள் எல்லாரும் நாயனாருடன் உடன் உறைந்தவர்கள் என்றும் அறிகிறோம்.

"ஓர்ந்திடுங் கந்துரு" எனத் தனிப்படுத்திக் கூறியுள்ளதால் கந்துரு என்பதே தனிப்பட்ட ஒரு சீடர் பெயர் என்றும், "ஆய்ந் திடும் காலாங்கி கஞ்சன் மலையமான்" என்றதால் அவை மூன்று சொற்களும் ஒரு சீடரையே குறிக்கும் என்றும் அறிகிறோம். எழுவரில் நால்வர் போக மீதியுள்ள சோமன்—பிரமன்—உருத்திரன்—என்பார் இந் நால்வருக்கும் சற்று முந்தியவர் ஆவார்.

ஆகமங்கள் ஒன்பதுதான் என்றும், பின் அவ்வொன்பது ஆக மங்களையும் 28 ஆகமங்களாகப் பிரித்துத் தனித்தனிப் பெயர்கள் கொடுத்து, ஒவ்வொரு ஆகமத்தையும் கருமகாண்டம், ஞான

காண்டம், உபாசனகாண்டம் என மும்மூன்று பிரிவுகளாகச் செய்தார்கள் என்றும், அவைகளே இப்போது சைவ உலகில் வழங்கி வருகின்றன என்றும், ஆதலின் மூலாகமங்கள் ஒன்பதே ஆகும் என்றும் நாயனர்,

"ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழும்
மோகமில் நாலேழும் முப்பேத முற்றுடன்
வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மையொன்(று)
ஆக முடிந்த அருஞ்சுத்த சைவமே"

என்ற பாசுரத்தால் விளக்கியுள்ளார்.

நாயனர் மூவாயிரம் ஆண்டுத் தவமிருந்து ஆண்டுக்கு ஒரு பாட்டாகப் பாடினர் என்பது எப்படி என்பார்க்கு,

"ஈராறு கால்கொண் டெழுந்த புரவியைப்
பேராமற் கட்டிப் பெரிதுண்ண வல்லிரேல்
நீரா யிரமும் நிலமா யிரத்தாண்டும்
பேராது காயம் பிரானந்தி யாணையே"

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே"

"மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள
வேன்ற வியந்திரம் பன்னிரண் டங்குலம்
நான்றவிழ் முட்டை இரண்டையுங் கட்டியிட்
டூன்றி யிருக்க உடலழி யாதே"

என்ற பாசுரங்களினல் உடல் அழியாமல் இருக்கும் வழியைத் தான் தேர்ந்து உடம்பை அழியாமல் காப்பாற்றினதாகவும், ஏனையோர்களும் அப்படிச் செய்தால் உடல் அழியாது என்றும் கூறுவதை நோக்க விளங்கும். ஆகையால், நாயனர் மூவாயிர ஆண்டும் அதற்கு மேலும் இருந்ததைப்பற்றி யாரும் சந்தேகம் கொள்ள நியாயம் இல்லை.

நாயனர் நந்தி என்று சொல்லப்படுகின்ற சிகண்டருடைய எட்டு மாணவர்களில் ஒருவர்.

சனகர்-சனந்தனர்-சனாதனர்-சனற்குமாரர்-சிவயோக மாமுனி-பதஞ்சலி-வியாக்கிரமர்-திருமூலர் ஆகிய எண்மரும் நந்தி அருள் பெற்ற நாதர் ஆவார்கள்.

நாதர் தத்திதாந்த நாமம். நாதர் என்ற மொழிக்கு 'நந்தி அருள் பெற்றவர்' என்பது பொருள்.

இவ்வெண்மரும் தாங்கள் கேட்ட உண்மையை உலகில் மடங்கள் தாபித்துச் சீடர்களைச் சேர்த்துப் பக்குவ ஆன்மாக்களிடத்துப் பரப்பி வந்தார்கள்.

சனற்குமாரருடைய சீடர் சத்தியஞானதரிசினிகள் ஆவர். அவருடைய சீடர் பரஞ்சோதி முனிவர். அவர் சீடர் மெய்கண்டார். அவருடைய பரம்பரையில் ஏற்பட்ட மடங்கள்தாம் திருவாவடுதுறை, தருமபுரம் முதலியவை.

பதஞ்சலி-வியாக்கிரமர் இருவரும் வடதேசத்தில் மடங்கள் தாபித்தது போலவே சிதம்பரத்திலும் தாபித்துத் தங்கொள்கைகளைப் பரப்பி வந்ததோடு சிதம்பரத்திலேயே நடனதரிசனம் செய்து சிவத்துடன் கலந்தார் என்றும் அறிகிறோம்.

சிவயோகமாமுனி என்றாலும் சிவமுனிசித்தசன் என்றாலும் ஒன்றே. அவரும் தென்னாட்டில் பல சித்தர்களுக்குப் போதித்துப் பல மடங்கள் தாபித்துள்ளார்.

திருமூலரும் திருஆவடுதுறையில், அமர்ந்து 'மூவாயிரந்தமிழ்' என்ற திருமந்திர நூலைச் செய்து முடித்து, தம்முடைய எழு சீடர்களுக்கும் போதித்து அவர்கள் மூலமாக ஆகமங்களின் கருத்துக்களை உலகில் பரவச் செய்தார். அவ்வேழு சீடர்களும் எழுமடங்கள் தாபித்துத் தம்முடைய சீடர்களுக்குப் போதித்து வந்தார்கள்.

காலாங்கர் என்பதும், காலங்கி கஞ்சமலையன் என்பதும், காலங்கிகஞ்சன் மலையமான் என்பதும் ஒருவரையே குறிக்கும்.

காலாங்கர் என்பவர் மலை மன்னர் என்று சொல்லப்படும் உடையார் வகுப்பைச் சேர்ந்தவர் என்றும், அவர் கஞ்சமலை என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்றும், அவரைக் கஞ்சமலைச் சித்தர் என்று சொல்வதும் உண்டென்றும் அறிகிறோம். கஞ்சமலை என்னும் ஊரை இப்போது சித்தர்கோயில் என்று வழங்குகிறார்கள்.

நாயனார் தம் திருமந்திர நூலை எழு சீடர்களுக்கும் ஒரே தடவையாகக் கூறவில்லை என்றும், இரண்டு தடவையில் கூறினார் என்றும், முதல் தடவையில் சோமன்—பிரமன்—உருத்திரன் ஆகிய மூவர்க்கும், இரண்டாந் தடவையில் ஏனைய நால்வர்க்கும் கூறினார் என்றும்,

"மொழிந்தது மூவர்க்கும் நால்வர்க்கும் ஈசன்
ஒழிந்த பெருமை இறப்பும் பிறப்பும்"

என்னும் பாசுரத்தால் அறிகிறோம்.

நாயனார் முதலில் கூறிய ஐங்கரன் வாழ்த்தும், கடைசியில் கூறிய "வாழ்கவே வாழ்க" என்னும் வாழ்த்துச் செய்யுளும் நூலில் சேரா.

"ஒன்றவன்றானே" என்ற செய்யுள் முதற்கொண்டு கூறிய பரசிவப்பெருமை 50 செய்யுட்களும்; மும்மூர்த்திகளின் முறைமை 10 செய்யுட்களும்; வேதச் சிறப்பு—7; ஆகமச் சிறப்பு—7; அந்தணர் ஒழுக்கம்—10; அக்கினி காரியம்—10; அரசனது ஆட்சி முறைமை—10; வான் சிறப்பு—2; அறம் செய்வான் திறம்—10; அறம் செயான் திறம்—10; அவையடக்கம்—2 ஆகச் செய்யுட்கள் 68-ம் மொத்தச் செய்யுட்கள் 128-ம் பாயிரமாகும். இப் பாயிரத்தில் தொல்காப்பியப்படி அறுவகை வாழ்த்தும் அடங்கியுள்ள தன்மை கண்டுகொள்க.

குரு பாரம்பரியம்—நாயனுர் தம் வரலாறு கூறல் முதலியன நாயனுர் தம் சீடர்களுக்கு வரன்முறை தெரியவேண்டிக் கூறியவை; ஆதலால் நூலிற் சேரா.

குருமட வரலாறு—திருமந்திரத் தொகைச் சிறப்பு முதலியன மாணுக்கர்கள் ஓதியவை யாதலால் நூலில் சேரா.

இவை யிரண்டினையும் நூலுக்குத் தற்சிறப்புப் பாயிரமாகவும் சிறப்புப் பாயிரமாகவும் கொள்ளுதல் பொருத்தம்.

அக்காலத்திய இலக்கண நூன் முறைப்படி அறுவகை வாழ்த்துக்களும் பாயிரத்தில் அடங்கும்.

சில படிகளில் பாயிரத்தில் இருக்கவேண்டிய அந்தணர் ஒழுக்கம்—அக்கினி காரியம்—அறம் செய்வான் திறம்—அறம் செயான் திறம்—அரசனது ஆட்சி முறைமை—வான் சிறப்பு முதலியன முதற் றந்திரத்தில் சேர்க்கப்பட்டுள்ளன. அவை ஓலைச் சுவடிகள் கோப்பார் கைப்பிசகு ஆகும்.

ஆதலின் பாயிரச் செய்யுள்களுக்கு உரை எழுதுவதன் முன்னம் பாயிரம் இன்னது என்றும், அதில் கூறப்பட்ட அறுவகை வாழ்த்துச் செய்யுள்கள் இன்னவை யென்றும் தெரிந்துகொள்ள வேண்டியிருத்தலால், அவைகளைப்பற்றி ஈண்டு விரிவாக எழுத நேர்ந்தது.

ஆகம நூலைத் தமிழ் உலகுக்குப் பாடி உபகரிக்க வந்தவர் ஆனதால் நாயனுர் நூன்முறைப்படி பாயிரமுரைத்து நூலைத் தொடங்கியுள்ளார் என்பது தெளிவாகின்றது.

# உ. திருமூலநாயனர் வரலாறு

வம்பறு வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணு
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கு மடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கற்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. (அ

—திருத்தொண்டத்தொகை

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
அடிமன்ன வைத்த பிரான்மூல னகின்ற அங்கணனே. (ஆ

—திருவந்தாதி

............ ............ முத்தமிழை—ஆரும்
திருஞான சம்பந்தர் செய்ய கலிக்காமர்
அருண்மூலர் தண்டி யடிகள்—வருமூர்க்கர்
சோமாசி மாறனர் ............... (இ

—திருநாமக்கோவை

கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோ யுடன்வியத் துயர நீடும்
பசுக்களைக்கண்டு அவனுடலில் பாய்ந்து போத
அயலாகப் பண்டையுடல் அருளான் மேவி
ஆவடுதண் டுறையாண்டுக் கொருபா வாகக்
குயிலாரும் அரசடியி லிருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகி னரே. (ஈ)

—திருத்தொண்டர் புராண சாரம்

திருமூல தேவனையே சிந்தை செய்வார்க்குக்
கருமூல மில்லையே காண். (உ)

—பாடினவர் பெயர் தெரியவில்லை

திருமந் திரமே சிவகதிக்கு வித்தாம்
திருமந் திரமே சிவமாம்—அருமந்த
புந்திக்கு ளேநினைந்து போற்றுமடி யார்தமக்குச்
சந்திக்கும் தற்பரமே தான். (ஊ)

—பாடினவர் பெயர் தெரியவில்லை

## (அ) திருமூலர் காலத்தில் தமிழ்நாட்டெல்லை

வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பவ்வத்தின் குடக்கும்.

—புறநானூறு

என்ற புறநானூற்றுச் செய்யுளின்படி, தமிழ்நாடானது 8000 வருடங்களின்முன் வடக்கே பனிமலையாகிய இமயமலை வரைக்கும், தெற்கே உருவத்திற் சிறந்த குமரித் தெய்வத்தின் கோயிலுக்கும் தெற்கே இடைச்சங்கம் இருந்த கபாடபுரத்தைச் சேர்ந்த நாட்டின் வரைக்கும், கிழக்கே இயற்கையாய் அமையாமல் சகரர்களால் தோண்டப்பட்ட வங்கக் கடல் வரைக்கும், மேற்கே தொன்றுதொட்டுள்ள, தற்காலம் அரபிக்கடல் என்று வழங்கப்படும் பழங்கடல் வரைக்கும் பரவி இருந்தது.

"இமய முதல் குமரிவரை ஒரு மொழிவைத் துலகாண்ட சோழன் மணக்கிள்ளி நற்சோணையின் மகன் சேரன் செங்குட்டுவன்" எனச் சிலப்பதிகாரத்தில் கூறுகிறபடியால், கி. பி. இரண்டாம் நூற்றூண்டுவரையும் தமிழ் மொழிக்கு வட எல்லை இமயமலையாகவே இருந்தது.

அதன் பிறகுதான் தமிழ் எல்லை குறுக ஆரம்பித்தது.

## (ஆ) திருமூலர் நந்தியெம்பெருமான் மாணுக்கர்களில் ஒருவர் என்பது.

தமிழ் நாட்டின் வட எல்லையாகிய இமயமலையின் சிகரங்களில் சிறந்த கயிலாயத்தின் (Mount Kailas) திருக்கோயிலுக்கு முதற் பெரு நாயகமாகி, இந்திரன், மால், அயன் முதலாம் இமயவர்க்கு[1] நெறியருளும் நந்தியெம் பெருமானுடைய திருவருள் பெற்ற மாணுக்கர்கள் எண்மர். அவராவார்.

"நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடில்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரமர்
என்றிவர் என்னோடு எண்மரு மாமே"

—தமிழ் மூவாயிரம்

திருமூலர் தம்முடைய நூலில் ஓரிடத்திலும் நால்வர் நந்திகள் இன்னார் என்று அவர்கள் பெயரைக் குறிப்பிடவில்லை. அவருக்குப்

[1] இமயவர்—இமயமலை வாசிகள்.

பின்னால் வந்த பெரியோர்கள் சனகர்—சனந்தனர் — சனாதனர் – சனற்குமாரர் என்றனர்.

பதஞ்சலி என்ற பேர் உடையவர்கள் பலபேர் அக்காலத் லேயே இருந்ததால் அம் மயக்கம் ஒழிய, தம்முடன் கூட இருந் ஒருசாலை மாணாக்கராகிய பதஞ்சலியைக் குறிப்பிடவே திருமூல "மன்று தொழுத" என்று அடைகொடுத்துக் கூறுவார் ஆயின ஏனைய பதஞ்சலிகள் எல்லாம் மன்று தொழுதவர்கள் அல்லர்.

வியாக்கிரமர் என்பார் வியாக்கிரபாதர்—வியாக்கிரபதர்—புலி கால் முனிவர் என்று பலவாறாகப் பேசப்படுவர்.

ஆதலின், இவ்வெண்மரும் சம காலத்தவர்கள் ஆவார்கள் இவர்கள் எல்லாரும் கயிலாயத்தில் உள்ள சித்தர் குழாஅத்தை சேர்ந்தவர்கள்.

ஆதலினாலன்றே "உமாபதி சிவாச்சாரியார் திருமூலரை குறிப்பிடும்போது "கயிலாயத்தொரு சித்தர்" என்றார்.

## (இ) பதஞ்சலிகள் பலர் என்பது

டாக்டர் எ. பி. கீத் (Dr. A. B. Keith) என்பவர் வடமொழ யில் மகாபாஷியம் இயற்றிய பதஞ்சலி வேறு என்றும், யோ சூத்திரம் இயற்றிய பதஞ்சலி வேறு என்னும், முன்னவ கி. மு. 150-லும் பின்னவர் கி. பி. 7-ம் நூற்றாண்டிலும் இருந்தவ கள் என்றும் சரித்திர நூல் ஆராய்ச்சியுடன் கூறுகின்றார்.

சிலர் திருமூலர் தம் நூலில் கூறிய பதஞ்சலி, மகாபாடியப இயற்றியவர்தாமோ என்று கொண்டு, திருமூலரின் காலம் கி. மு இரண்டாம் நூற்றாண்டு என்றும்,

சிலர் திருமூலர் கூறியது, யோக சூத்திரம் செய்த பதஞ்ச தாமோ என்று கொண்டு, திருமூலரின் காலம் கி. பி. 7-ம் நூ றாண்டு என்றும் கூறுகிற்பர்.

இத்தகைய இடர்ப்பாடுகள் வரும் என்றே திருமூலர் தமத ஞானக்கண்ணால் அறிந்து, தம்முடன் கூட இருந்தவரை "மன்று தொழுத பதஞ்சலி" என்று அடை கொடுத்துக் கூறி மயக்கத்தை ஒழித்தார். மேலும் தாம் கூறிய தமிழ் மூவாயிரச் செய்யுளில் பதஞ்சலி ஒருவருக்கு மாத்திரம் அடை கொடுத்தும் மற்றவர்களை பெயர் மாத்திரத்திலும் கூறியிருப்பதை நோக்க, திருமூல நாயனா ருடைய கருத்து விளங்கும்.

ஆதலின், மன்று தொழுத பதஞ்சலி வேறு, யோக சூத்திரம் செய்த பதஞ்சலி வேறு, மாபாடியம் இயற்றிய பதஞ்சலி வேறு எனக் கண்டாம்.

## (ஈ) திருமூலரும் மன்று தொழுதது

நந்தியெம்பெருமான் மாணக்கரில் பதஞ்சலியும், வியாக்கிரமரும் கயிலையினின்றும் தென்னாடுபோந்து தில்லையம்பலத்தில் எம்பெருமானுடைய நடன தரிசனம் காண்பான் வதிந்து வந்த காலத்து, திருமூலநாயனாரும் தம்முடைய சொந்த உடம்புடன் (அதாவது மூலனுடைய சரீரத்தில் புகுவதற்கு முந்தி) அவர்களுடன் கூடவே வந்து, நடன தரிசனத்தைக் கண்டு களித்துப் பின் கயிலைக்கு ஏகி, அங்குத் தவத்தினில் இருந்தார் என்பதை,

> " செப்பும் சிவாகமம் என்னுமப் பேர்பெற்று
> அப்படி நல்கும் அருணந்தி தாள்பெற்றுத்
> தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
> ஒப்பில் எழுகோடி யுகமிருந் தேனே.
>
> இருந்தேனிக் காயத்தில் எண்ணிலி கோடி
> இருந்தேன் இராப்பகல் அற்ற விடத்தே
> இருந்தேன் இமயவர் ஏத்தும் பதத்தே
> இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே."

என்ற தமிழ் மூவாயிரச் செய்யுட்களால் அறியலாம்.

"இமயவர் ஏத்தும் பதத்தே" என்றதாலும், "என் நந்தி இணையடிக் கீழே" என்றதாலும், நாயனார் தில்லைக் கூத்தைக் கண்டு களித்த பின் கயிலை சென்று தவம் இயற்றினார் என்று போதருகின்றது.

## (உ) திருமூலர் என்னும் நாமம் ஏற்பட்ட காரணம்

திருமூலர் பதஞ்சலி வியாக்கிரமருடன் தென்னாடு போந்தது முதல் தடவையாகும். அப்போது அவருக்குத் திருமூலர் என்ற நாமம் கிடையாது. இரண்டாம் தடவை அவர் கயிலையினின்றும் பொதிகையை நோக்கி வரும்போது, சோழநாட்டுச் சாத்தனூரில் கோகுலம் மேய்க்கும் மூலன் இறந்து கிடக்கக் கண்டு, தம் உடலை ஓர் அரசமரப் பொந்தில் சேமித்து வைத்துவிட்டு, தம் உயிரை மூலன் குரம்பையுள் புகுத்தி மூலனாக எழுந்த பின்னர் அப் பெயர் ஏற்பட்டது ஆகும்.

அவர் மூலன் குரம்பையுள் புகுந்த பின்னர்ச் செய்த நூல் "தமிழ் மூவாயிரம்" என்ற ஒரு நூலேயாகும். மூலன் குரம்பையுள்

புகுமுன்னர், "உபதேசம் முப்பது" "மந்திரம் முந்நூறு" என்ற இரண்டு நூல்கள் செய்துள்ளார். இதனைத் தமிழ் மூவாயிரத்திலுள்ள,

"மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்
மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரைசெய்த மூவா யிரம்தமிழ்
மூலன் உரைசெய்த மூன்றும்ஒன் றுமே."

என்ற பாயிரச் செய்யுளால் அறியலாம்.

இச் செய்யுளில் முப்பது உபதேசமும், முந்நூறு மந்திரமும் மூலன் உரை செய்ததாகக் கூறப்பட்டிருக்கிறதே, அந்நூல்களைப் பாடும் போது அவருக்கு மூலன் என்ற பெயர் இல்லையே என்று கேட்கலாம். இச் செய்யுள் மூலன் குரம்பையுள் புகுந்த பின்னர் செய்த தமிழ் மூவாயிரத்துக்குப் பாயிரச் செய்யுளாதலால் உடம்பு வேறுபாடு கருதாது உரைத்ததாகும்.

"மந்திரம் முந்நூறு" என்ற நூலில் சிறப்புப் பாயிரத்தில் திருமூலருடைய இயற்பெயர் சுந்தரநாதன் என்று கூறப்பட்டிருக்கிறது. அச் செய்யுள் வருமாறு:—

"மந்திரங் கொண்டு வழிபடு வோர்க்குச்
சுந்தர நாதன் சொல்லிய மந்திரம்
நந்திஎந் நாதன் நாவார ஓதினன்
பைந்தொடி மேனிப் பயனது தானே."

"வந்தமட மேழு மன்னுஞ்சன் மார்க்கத்தின்
முந்தி உதிக்கின்ற மூலன் மடவரை
தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரம்
சுந்தரன் ஆகமச் சொன்மொழிந் தானே."

என்று தமிழ் மூவாயிரத்திலுள்ள சிறப்புப்பாயிரச் செய்யுளாலும் அறியலாம். இச் செய்யுள் சுந்தரநாதருடன் ஒருங்கு கற்ற ஒருவரால் பாடப்பெற்றது.

இவருக்கு நாதன் என்ற பட்டம் நந்தியெம் பெருமானால் கொடுக்கப்பட்டது. இதனை

"நந்தி அருளாலே நாதனும் பேர்பெற்றோம்."

என்ற தமிழ் மூவாயிரச் செய்யுள் விளக்குகிறது.

இவர் நந்தி அருளாலேயே மூலன் குரம்பையுள் புக நேர்ந்தது என்பதனை,

"நந்தி யருளாலே மூலனை நாடினேன்"

"நந்தி அருளாவ தென்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நானிருந் தேனே"

"நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி அருளாலே சதாசிவன் ஆயினேன்"

என்ற தமிழ் மூவாயிரச் செய்யுள் அடிகளால் அறியலாம்.

சுந்தரநாதர் திருவருள் இயக்க இரண்டாம் தடவை தென்னாடு போந்த காலத்தில், மூலன் தேகத்தில் புக நேர்ந்ததும், ஒன்பது ஆகமங்களையும் ஒன்பது தந்திரங்களாகப் பாடித் "தமிழ் மூவாயிரம்" என்று பெயர் கொடுத்ததும் ஆகும். முதல் தடவைக்கும் இரண்டாம் தடவைக்கும் ஏறக்குறைய 3000 ஆண்டுகள் இடையே உள்ளன.

## (ஊ) திருமூலர் காலம்

அறுபான் மும்மை நாயன்மார்களில் திருமூலரும் ஒருவர். அவர் தாம் பாடிய "தமிழ் மூவாயிரத்தில்" சேய்ஞலூர்ச் சண்டியைப்பற்றி மாத்திரம் கூறியுள்ளார். மற்ற நாயன்மார்களுடைய பெயர்கள் அவர் நூலில் இல்லை. சண்டியைப்பற்றிக் கூறும் செய்யுள் வருமாறு:—

"உறுவ தறிதண்டி ஒண்மணற் கூட்டி
அறுவகை ஆனைந்தும்ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் றானே"

இதனால் சேய்ஞலூர்ப் பிள்ளை ஒருவர் மாத்திரம் திருமூலருக்கு முந்தியவர் என்றும், ஏனைய நாயன்மார்கள் எல்லாம் பிந்தியவர்கள் என்றும் அறிகிறோம்.

இன்னும், தமிழ் மூவாயிரத்தில் (1) அகத்தியர், (2) திரிபுராதிகள், (3) இராவணன், (4) சலந்தரன், (5) தக்கன், (6) அந்தக அசுரன், (7) மார்க்கண்டர் முதலியவர்களைப்பற்றியும் திருமூலர் கூறியுள்ளார். இவர்களில் பெரும்பாலார் திருமூலருக்கு முந்தியவர்களாயும், சிலர் சம காலத்தவர்களாயும் இருக்கிறார்கள்.

திருமூலருக்குச் சம காலத்தவரான பதஞ்சலி வியாக்கிரமர் முதலிய எழுவரில், தசரத இராமருக்குக் குலகுருவாயிருந்த வசிட்டருடைய தங்கையை மணந்தவர் வியாக்கிரமர். வியாக்கிரமருடைய பிள்ளைதான் உபமன்னியு.

உபமன்னியு பிறந்தது வடநாட்டில் வசிட்டருடைய ஆசிரமத்தில் என்று புராணம் கூறும். பிறந்தது முதல் காமதேனுவி

னுடைய பாலைக் குடித்து உபமன்னியு வளர்ந்தார். தென்னாட்டி தன் பிதாவின் ஆசிரமத்துக்கு வந்த பிற்பாடு, பாலுக்காக உபமன் னியு அழ, வியாக்கிரமர் நடராஜப் பெருமானை வேண்ட, கூத்த பெருமான் அருள் சுரந்து பாற்கடலையே வரவழைத்துக் கொடு தார் என்று கோயிற் புராணத்தில் உமாபதி சிவம் கூறுகின்றார். அ பாடல்களாவன :—

நற்பான் மிருதந் தையரும் புதல்வர்
நஞ்சந் நதியுய்ந் திடநண் ணிணையேல்
இற்பா லினியா குதியா திமறித்
திடுவா னுடையான் நெடுவா னடைவான்
முற்பா லுணையா னெனஈ பெறுமா
முனியா துகொலென் றுவசிட் டமுனிக்
கற்பார் தருபின் னியைமன் னுமணக்
கடனால் உடனு நெறிகண் டனனே.

மின்பக் கொடிமன் னுபமன் னியனைப்
பெறவந் தவநந் நதிகொண் டுபெயர்ந்து
இன்பச் சுரபிப் பொழிபா லுகர்வித்
தெழிலா ரவளர்த் திடுநா ளிவர்தாம்
அன்பிற் புணரக் கொணர்வித் துமகிழ்ந்து
அயலென் றிடுமுன் பயிலும் படிசேர்
புன்பற் கமர்பண் டமுமுன் பறிபால்
போலுய்த் தனவும் புகழா திகழ்வான்.

மணமே தருபால் பெறுமா றழுமா
மகனார் முனியாம் வறியோம் அறியோம்
உணவே இனிதாம் அவைதாம் இவர்தா
னுடையா ரெனவாழ் விடையா னெதிரே
துணர்மே லெழுவெங் கனல்தங் கிடுத்
துஞ்சும் தொழிறஞ் செனநைஞ் சமுதக்
கணமே இறையான் இறைபால் அலையுங்
கடல்பெற் றதுகண் டுகளித் திடுவான்

—கோயிற் புராணம்.

ஆதலின், வசிட்டர், உபமன்னியு, பதஞ்சலி, வியாக்கிரமர், திருமூலர் முதலியோர் சமகாலத்தவர் என்க.

தசரத இராமருடைய காலம் 6000 B.C. என்றும், அவர் பாண்டிநாட்டுத் தலைநகராகிய கபாடபுரம் சென்ற காலத்து, அப் போது முடிதாங்கி அரசாண்ட அனந்தகுண பாண்டியன், அவரை உபசரித்ததாகவும் பாண்டிய வமிசாவளியும் சரித்திரமும் பேசுகின் றன.

ஆதலின், திருமூலர் காலம் இற்றைக்கு ஏறக்குறைய 8000 ஆண்டுகள் ஆகின்றன.

திருமூலர் காலம் இராமாயண காலம், அதாவது 6000 B.C. என்று கொண்டால், திருமூலர் தம் நூலின்கண் கூறிய திரிபுராதிகளும், பொதியமலை அகத்தியரும், சலந்தரனும், தக்கனும், அந்தக அசுரனும், மார்க்கண்டேயரும் திருமூலருக்கு முற்பட்டவர்கள் ஆகின்றார்கள்.

வசிட்டர்—வியாக்கிரமர்—மன்று தொழுத பதஞ்சலி—உபமன்னியு—கோதமர்—சநாகந்தர்—இராவணன்—பஞ்சவடி அகத்தியர்—தசரத இராமர், சனகர் முதலியவர்கள் சம காலத்தவர்கள் ஆகின்றார்கள்.

## (எ) அகத்தியர் பலர் என்பது.

அகத்தியர் என்ற பெயர் உடையவர்கள் பலர். அவர்கள் எல்லாரும் பலகாலங்களில் இருந்தவர்கள். அவர்களிற் சிலரை எண்ணித் தருகின்றேன் :—

(1) திரிபுராதிகள் காலத்தில் இருந்த பொதியமலை அகத்தியர் அல்லது குறுமுனி அல்லது குடமுனி.

(2) செங்கோனின் காலத்தில் இருந்த பஃறுளியாற்றுத் தலைப் பாய்ச்சல் முத்தூர் அகத்தியர்.

(3) சூரபன்மன் காலத்தில் இருந்த வாதாபி அகத்தியர்.

(4) பரசுராமர் காலத்தில் இருந்த குடகுமலை அகத்தியர் அல்லது குடமுனி.

(5) இராமாயண காலத்தில் தசரத இராமருக்கு உதவியாயிருந்த பஞ்சவடி அகத்தியர்.

(6) பாரத காலத்தில் இருந்த உலோபா முத்திரையை மணந்த துவாரபதி அகத்தியர்.

(7) பவுத்த மதத்தைச் சேர்ந்த அகத்தியர்.

(8) சித்தர் குழாத்தைச் சேர்ந்த சித்த அகத்தியர்.

(9) வைத்திய முறையில் கைதேர்ந்த அகத்தியவேள்.

(10) காம்போதி நாட்டு (Cambodia) யசோமதியை மணந்த அகத்தியர்.

என எத்துணையோ பேர் அகத்தியர் நாமம் படைத்தவர்கள் ஆவார்கள்.

புலவர்கள் எல்லாம் பெயர் ஒற்றுமை ஒன்றையே கருதி, எல்ல அகத்தியர்களையும் ஒன்றுபடுத்தி ஒருவர் சரிதத்தை இன்னொருவ சரிதத்தில் புகுத்திப் புராணங்களில் எழுதிவிட்டார்கள்.

மேலே கூறிய எல்லா அகத்தியர்களும், காலத்தாலும்—இட தாலும்—உணவாலும்—நடையுடை பாவனைகளாலும்—பழக்க வழ க்கங்களாலும் முற்றிலும் மாறுபட்டவர்கள் ஆவார்கள்.

குடகுமலையில் வாழ்ந்துவந்த அகத்தியரைக் குடகுமுனி என்பா அவரைக் குடமுனி என்றும் சுருக்கம் நோக்கி அழைப்பர். பி காலப் புலவர்கள் சரித்திரம் தெரியாததால் வார்த்தையைக்கொண் குடமுனி குடத்தில் பிறந்தார் என்று கதை கட்டிவிட்டார்கள்.

அதுமாதிரியே, பொதியமலைக்குக் குற்றாலம் என்று ஒரு பே இருப்பதால் பொதியமலை அகத்தியரைக் குற்றாலமுனி என்பர் சுருக்கமாகக் குறுமுனி என்பதும் உண்டு. குறுமுனி என்றாலுப் குற்றாலமுனி என்றாலும் பொதியமலை முனி என்றாலும் ஒன்றே பிற்காலப் புலவர்கள் சரித்திரம் தெரியாமையால் குறுமுனி என்றாக் குறுகிய முனி என்றும் அவர் பெருவிரல் அளவு உள்ளவர் என்றுப் கதை எழுதிவிட்டார்கள்.

மேலும், இராமாயண காலத்தில் பஞ்சவடியில் ஆரிய அரச ராகிய தசரதருக்குத் தூதராக (Ambassador) இருந்த பஞ்சவடி அகத்தியரையும், பொதியமலையில் இமயவரம்பன் மகள் பார்வதி யைக் கலியாணம் செய்த மேருவரம்பன் என்கிற பரமேச்சுரர் காலத் தில் இருந்த பொதியமலை அகத்தியரையும் ஒன்றுபடுத்திக் கூறு வாரும் உளர்.

அகத்தியர் என்ற பெயரை உடைய பல அகத்தியர்களைப் பற்றி "அகத்தியர் விளக்கம்" என்னும் நூலில் பரக்கக் காட்டி யிருக்கின்றேன். ஆண்டுக் கண்டுகொள்க.

ஆதலின், அகத்தியர் என்னும் நாமம் உடையவர் பலர் என் பதூஉம், திருமூலர் தம் நூலில் கூறிய அகத்தியர் பொதியமலை அகத்தியர் என்பதூஉம்; அப் பொதியமலை அகத்தியரைப் பார்க்க வேண்டியே கயிலையினின்றும் அவர் இரண்டாம் தடவை தென்னாடு போந்தார் என்பதூஉம் அறிந்தாம்.

## (ஏ) திருமூலர் காலத்தைக் குறித்த உட்சான்றுகள்

இனி, இன்னொரு விதமாகத் திருமூலர் காலத்தை ஆராய்வாம். சிந்துநதிப் பிரதேசத்தில் உள்ள அரப்பா—மோகஞ்சிதாரோ என்னும் இடங்களில் அகழ்ந்து கண்டுபிடிக்கப்பட்ட கட்டடங்களையும் பொருள்

களையும் நோக்குமிடத்து அவைகள் எல்லாம் 5000 B. C-க்குப் பல்லாண்டுகள் முற்பட்டவை என்றும், அவைகள் எல்லாம் தமிழர் நாகரிகத்தை வெளிப்படுத்துகின்றன என்றும், அந்நாகரிகம் ஆரியர் இந்தியாவுக்கு வருவதற்குப் பன்னூறாண்டுகள் முன்னர் இருந்த நாகரிகம் என்றும், அக் கட்டடங்களில் தமிழில் உருவ எழுத்துக் களால் செதுக்கப்பட்ட பல வரிகள் காணப்படுகின்றன என்றும், அது கற்காலத்துக்கும் (Neo-Lithic-Age), செப்புக் காலத்துக்கும் (Copper Age) இடைப்பட்ட நாகரிகத்தைக் கொண்டதென்றும், தமிழருக்கே சிறப்பான மூக்கு ஆபரணங்களும் தாலி முதலிய கழுத்து ஆபரணங்களும் அக் கட்டடங்களில் காணப்படுகின்றன என்றும் அறிஞர் சர் ஜான் மார்ஷல் என்பவரும், ரெவரெண்டு ஈராஸ் என்னும் பாதிரியாரும் கூறுகின்றனர்.

தமிழ் மொழியானது முதன்முதல் உருவ எழுத்துக்களையும், பின் கோல் எழுத்துக்களையும், பின் வட்ட எழுத்துக்களையும், பின் சதுர எழுத்துக்களையுங் கொண்டு மாறுதல் அடைந்து வந்திருக் கிறது. இது ஆராய்ச்சியாளர் துணிபு.

உருவ எழுத்துக் காலத்திலேதான் தமிழில் இருந்து சினம்—கடாரம்—சுமேரியம்—பினிசியம்—எகுபதியம் முதலிய பல மொழி கள் பிரிந்தன.

கோல் எழுத்துக் காலத்தில் தமிழில் இருந்து மராட்டியம்—வங்கம்—கோசலம் — பஞ்சியம்—ஆரியம் — பாளி — பிராகிருதம் முதலிய பல மொழிகள் பிரிந்தன.

வட்ட எழுத்துக்காலத்தில் தமிழில் இருந்து தெலுங்கு—கன்னடம்—துளு—மலையாளம் முதலிய மொழிகள் பிரிந்தன.

தமிழுக்குத் தற்காலம் சதுர எழுத்துக் காலம்.

ஆரியர்கள் வடமேற்குக் கணவாய்கள் வழியாய்த் தமிழ்நாட்டில் நுழைந்தது கோல் எழுத்துக் காலத்தில் ஆகும். அதாவது, அரப்பா—மொகஞ்சிதாரோ முதலிய தமிழருடைய நகரங்கள் மண்மாரி யால் அழிவெய்திய பிற்றைக்காலத்தில் ஆரியர்கள் முதன் முதல் சிந்துநதிப் பிரதேசத்தில் குடியேறி, பிறகு கங்கை பாயும் நாட்டை விந்தியமலை வரை வென்று, ஆரியாவர்த்தத்தை ஏற்படுத்திக் கொண் டார்கள். ஆரியாவர்த்தத்துக்கு இந்துஸ்தானம் என்று பெயர். இந்துஸ்தானம் என்ற பெயருக்கு இந்துக்கள் வசிக்கும் இடம் என்பது பொருள். ஆரியருக்கு இந்துக்கள் என்ற பெயர் பாரசிகர் களால் கொடுக்கப்பட்டது. “இந்து” என்ற பதம் பாரசிக மொழி யைச் சேர்ந்தது.

ஆரியர் ஆரியாவர்த்தத்தை நிலைநாட்டிய காலத்தில் பல தமிழ் மன்னர்கள், விஸ்வாமித்திரர்—சனகர் முதலியோர் ஆரிய மதத்தை அநுசரித்துக் கொண்டார்கள். சைவராயிருந்து சைன மதத்துக்குப் போன திருநாவுக்கரசு சுவாமிகளுக்குச் சைனர்கள் தங்களுடைய மதத்தலைமை கொடுத்ததுபோல, தமிழராயிருந்து ஆரியமதத்தை அநுசரித்த விசுவாமித்திரருக்குப் "பிரமரிஷி"ப் பட்டமும் சனகருக்கு "ஞானரிஷி"ப் பட்டமும் ஆரியர்கள் அளித்து, மேலும் பல தமிழர்கள் ஆரியமதத்தை அநுசரிக்கும்பொருட்டு அவர்களைப் பெருமைப்படுத்தினார்கள். ஆரியமதத்தை அநுசரிக்காத தமிழ் மன்னர்களும் ஏனைத் தமிழ்ச் சான்றோரும் விந்தியமலைக்குத் தெற்கே **தக்கணம்** என்ற தமிழ்நாட்டின் பகுதிக்கு ஓடிவந்துவிட்டார்கள்.

தக்காணத்திலேதான் தமிழுக்குப் பின் வட்டெழுத்துக் காலம் துவங்கிற்று.

கோல் எழுத்துக் காலத்தில் தமிழில் 16 உயிர்களும் 35 மெய்களும் இருந்ததுபோலவே வட்ட எழுத்துக் காலத்திலும் மேலே சொன்ன 51 எழுத்துக்களும் இருந்தன. ஆரியாவர்த்தத்தில் கோல் எழுத்துக்களால் வழங்கிய மொழிகளுக்கு வட தமிழ்—வட மொழி என்றும், தக்காணத்தில் வட்டெழுத்துக்களால் வழங்கிய மொழிகளுக்குத் தென்தமிழ் தென்மொழி என்றும் வழக்குகள் ஏற்பட்டன.

பிறகு, பாரதகாலத்துக்குச் சற்று முன்பின் தமிழுக்குச் **சதுர எழுத்துக் காலம்** ஆரம்பம் ஆயிற்று. சதுர எழுத்துக் காலத்திலேதான் தமிழுக்கு 12 உயிர்களும், 18 மெய்களும் ஆக அறிஞர்கள் வகுத்தார்கள். இக்காலத்திலேதான் துவராபதியினின்றும் வந்த உலோபாமுத்திரை அகத்தியர், **பேரகத்தியம் சிற்றகத்தியம்** என இரண்டு இலக்கண நூல்களை வகுத்தார். பழந்தமிழ் மொழியினின்றும் வேறு பிரிந்து '**சேந்தமிழ்**' எனத் தமிழ் மொழிக்குப் பெயரிட்டார். தமிழ் மொழி மிகச் சீர்திருந்திய முறையில் ஆய்த எழுத்தைச் சேர்த்து 31 எழுத்துக்களுடன் வழங்கலாயின.

இதேமாதிரி வியாசரும் வடநாட்டில் வழங்கிய மொழிகளாகிய ஆரியம்-பிராகிருதம் முதலியவைகளைச் சீர்திருத்திச் 'சமஸ்கிருதம்' எனப் பெயர் அமைத்து, சமஸ்கிருதத்தில் பல புராணங்களும் இதிகாசங்களும் எழுதினார். ஆனால், அவர் தமிழில் இருந்த கோல் எழுத்துக்களையே கருவியாகக் கொண்டனர். அதனாலேயே சமஸ்கிருதத்துக்கு 'வட தமிழ்' என்ற பெயரும் அமைந்தது.

திருமூலருடைய காலம் 'இராமாயண காலம்' என்று மேலே கூறினோம். இராமாயண காலம் தமிழுக்கு வட்டெழுத்துக் காலம் ஆகும்.

இராவணனுடைய சேனைமொழி (Military Language) தெலுங்கு. அம்மொழியை உண்டு செய்தவன் இராவணன். தமிழ் வட்டெழுத்துக்களையே சிறிது மாற்றி அம்மொழிக்கு நெடுங்கணக்கு ஏற்பாடு செய்தார்கள். ஆதலின், தெலுங்கிலும் 16 உயிர்களும் 35 மெய்களுமாக 51 எழுத்துக்கள் உண்டு.

நம் திருமூலர் வட்டெழுத்துக் காலத்தவர் ஆனபடியால் தம்முடைய நூலில் தமிழ்மொழியிலுள்ள 16 உயிர்களைப்பற்றியும் 35 மெய்களைப்பற்றியும் கூறியுள்ளார். அப் பாடல்கள் வருமாறு:—

"ஓதும் எழுத்தோடு உயிர்க்கலை மூவைந்து
ஆதி எழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர்
சோதி எழுத்தின் நிலைஇரு மூன்றுள
நாத எழுத்திட்டு நாடிக்கொள் ளீரே" 942

"விந்துவி லும்சுழி நாதம் எழுந்திட
பந்தத் தலைவி பதினறு கலையதாக்
கந்தர வாகரம் காலுடம் பாயினள்
அந்தமு மின்றியே ஐம்பத்தோன் றயதே" 943

"ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்துஆ கமங்களும்
ஐம்ப தெழுத்தேயும் ஆவது அறிந்தபின்
ஐம்ப தெழுத்தும்போய் அஞ்செழுத் தாமே" 944

ஆதலின், திருமூலர் வட்டெழுத்துக் காலத்தவர் என்று கூறுவதில் தடை ஒன்றுமில்லை. அவர் சதுர எழுத்துக் காலத்தவராளுல் 12 உயிர்களையும் 18 மெய்களையுமே பற்றிப் பாடியிருப்பர்.

திருமூலர் கூறியது ஆரிய மொழியின் திரிபாகிய சமஸ்கிருதத்தின் எழுத்துக்களையே ஒழிய தமிழ் எழுத்துக்களை அல்ல என்பாரும் உண்டு. அவர்கள் எல்லாரும் கூர்ந்து ஆராய வேண்டியது ஒன்று உண்டு. அதாவது,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே"

என்று கூறியிருக்கும் அடிகளை நோக்குக. இறைவன் அருளால் தமிழ் மூவாயிரம் செய்தவர் வேறு மொழியின் எழுத்துக்களைக் கூற நியாயம் இல்லை.

மேலும் திருமுறை வகுத்த நம்பியாண்டார் நம்பிகள்

". . . . . . . . . . . . . . . . . முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
அடிமன்ன வைத்த பிரான்மூல னகின்ற அங்கணனே"

என்று திருவந்தாதியில் திருமூலரைப்பற்றிக் கூறுவதை நோக்குங்கள். முழுத்தமிழின்படி மன்னும் வேதத்தின் சொற்படி

பாடியதாகக் கூறுகிறார். ஆதலின், திருமூலர் வேறு மொழிகளின் எழுத்துக்களைப்பற்றி முழுத்தமிழ் நூலாகிய தமிழ் மூவாயிரத்தின் கண் கூற ஒரு சிறிதும் நியாயம் இல்லை.

ஆகையால், திருமூலர் தமிழுக்கு வட்டெழுத்துக் காலத்தவர் என்பது நிச்சயம்.

இராமாயண காலத்தில் அயோத்தியிலும், கோசலத்திலும், கிட்கிந்தையிலும், இன்னும் வடநாட்டில் பல இடங்களிலும் தமிழ்மொழி பொது மொழியாக இருந்ததென்று திருவாளர் திரு. நாராயண அய்யங்கார் 1939-ம் வருடச் 'செந்தமிழ்' பத்திரிகையில் "வன்மீகரும் தமிழும்" என்ற கட்டுரையில் விளக்கியுள்ளார். ஆதலின் தமிழ் மொழி இராமாயண காலத்தில் வடபெருங்கல்லில் இருந்து தென்குமரி யாறுவரை பரவியிருந்ததென்று அறியலாம்.

அல்லாமலும் அக்காலத்தில் தமிழ்மொழியானது 5 கண்டங்களிலும் பரவி இருந்ததாக அறிகிறோம். தமிழ்மொழியின் இந்த நிலையைத்தான்,

"தமிழ்மண் டலம்ஐந்தும் தாவிய ஞானம்
உமிழ்வது போல உலகம் திரிவார்
அவிழு மனமும்எம் மாதி அறிவும்
தமிழ்மண் டலம்ஐந்தும் தத்துவ மாமே"

என்று திருமூலர் கூறியுள்ளார்.

தமிழ் மண்டலம் என்பதற்குச் சில பஞ்ச திராவிட மொழிகளான தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், மராட்டிரம் வழங்கும் மண்டலங்கள் என்றும், சேர, சோழ, பாண்டிய, கொங்கு, தொண்டை மண்டலங்கள் என்றும் பொருள் செய்து இடர்ப்படுவார் ஆயினர்.

ஈண்டு மண்டலம் என்று திருமூலர் கூறியது ஆசியா—ஐரோப்பா — ஆபிரிக்கா — அமெரிக்கா — ஆஸ்திரேலியா கண்டங்களையே ஆகும். மண்டலம் = மண் + தலம் எனப் பிரிக்க. அப்பாட்டிலேயே, தமிழ் நாட்டுச் சித்தர் குழாஅங்கள் அக் கண்டங்களிலே "ஞானம் உமிழ்வதுபோல உலகம் திரிவார்" எனக் கூறி மண்டலம் என்பது உலகம் (கண்டங்கள்) என்று விளக்கி யுள்ளார்.

சுத்த தத்துவத்தினின்று அசுத்த தத்துவமும், அசுத்த தத்துவத்தினின்று பிரகிருதி தத்துவமும் தோன்றுகிறபடியால், சுத்த தத்துவத்திலேயே முத்தமிழ் வேதம் தோன்றியதெனச்

"சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்"

என்று திருமூலர் கூறியுள்ளார்.

இதனுனே, அக்காலத்தில் இமய முதல் குமரி வரை, அங்கம் முதல் காந்தாரம் வரை வழங்கிய 18 மொழிகளும் தமிழினின்றுமே பிறந்தன என்பது வெள்ளிடைமலே. பதினெண் மொழிகளாவன :—

"சிங்களம், சோனகம், சீனம், சாவகம்,
கொங்கணம், குடகம், கொல்லம், துளுவம்,
வங்கம், கடாரம், மகதம், கோசலம்,
கங்கம், காச்மீரம், கலிங்கம், நேபாளம்,
அங்கம், காந்தாரம் ஆகிய மொழிகள்
தங்கி வளரும் தமிழ்நா டென்ப"

என்னும் பாட்டால் அறியலாம்.

அக்காலத்தில் பண்டிதர்கள் எல்லாம் 18 மொழிகளிலும் வல்லுநராய் இருந்தனர். இதனையே,

"பண்டித ராவார் பதினெட்டுப் பாடையும்
கண்டவர் கூறும் கருத்தறிவார் என்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலா அரன்சொன்ன வாறே"

என்று நம் மூலர் கூறியுள்ளார்.

தமிழ் மொழியை "மதுரம் வாக்யம்" (=இனிய மொழி=தமிழ் மொழி) என்றும், அதுதான் 'மனிதர் மொழி' என்றும் வான்மீகர் இராமாயணத்தில் கூறுகிறதாகச் 'செந்தமிழ்' பத்திராசிரியர் கூறுகிருர். (Vide செந்தமிழ் Vol. 36 No. 7). "தமிழ் மாநுஷ பாஷையென்று பொதுப்படக் கூறப்பட்டமையால், அக்காலத்தில் மானிடர் வாழும் இடம் எங்கும் தேச பாஷையாகத் தமிழ்மொழி நடைபெற்று இருந்ததென்று அறியத் தக்கது." என்றும் பத்திராசிரியர் கூறுகின்றுர்.

மேலும் செந்தமிழ் Vol. 36 No. 8-ல் பக்கம் 341-ல் "மானிடர்க்கும் பிறப்புரிமையாயுள்ள பாஷை ஒன்று இருக்கவேண்டுமன்றே! அது தமிழ்மொழி என்றும், பின்பு செயற்கையாயுள்ள பாஷை தேவபாஷை முதலிய பிறமொழிகள் என்றும் கொள்ளத் தகும்" என்றும் கூறுகிறதால் ஐந்து கண்டங்களிலும் உள்ள மானிடர் எல்லாருக்கும் பிறப்புரிமையாயுள்ள மொழி தமிழ்மொழியேயாகும்.

ஆதலின், திருமூலர் காலத்தில் தற்காலம் 'இந்தியா' என்று வழங்கும் தமிழ் நாடுகளில் எல்லாம் தமிழ் மொழியே பெரு வழக்காக இருந்தது என்பது பெற்றும்.

அரப்பா—மோகஞ்சிதாரோ நாகரிகம் எல்லாம் தமிழில் உருவ எழுத்துக் காலமாகும். அக்காலக் கடைசியில் மண் மாரி பெய்து, பெரிய நகரங்கள் எல்லாம் அழிந்து, பெரிய மாறுதல் உண்டாயிற்று:

அதன் பிறகு, தமிழில் கோல் எழுத்துக் காலம் ஏற்பட்டது. அக்காலத்திலேதான் ஆரியர் சிந்துநதி தீரத்தில் குடி ஏறினார்கள். பிறகு இருக்க இருக்க தமிழர்க்கும் ஆரியர்க்கும் சச்சரவுகள் ஏற்பட்டன. ஆரியர்கள் தமிழர்களை வென்று, தமிழர் நாடு நகரங்களை அழித்து, பல தமிழ் அரசர்களைத் தம் வயப்படுத்தி, எதிர்த்தோரை விந்தத்துக்குத் தெற்கே விரட்டிவிட்டார்கள். ஆரிய மொழிக்கு எழுத்தில்லாததால் தமிழ்க் கோல் எழுத்துக்களைத் தங்கள் மொழிக்குச் சில மாறுதல்களுடன் நெடுங்கணக்காக வகுத்துக் கொண்டார்கள். சிந்து நதிப் பக்கத்திலும், கங்கை பாயும் நாட்டிலும் தமிழர் நாகரிகம் பாழ்படுத்தப்பட்டது என்பதை ஆரியர்களுடைய இருக்கு வேதத்தைப் படிப்பவர் அறியாமல் இரார்.

ஆரியர்களுக்கு விந்திய மலைக்கு வடக்கே உள்ள நிலங்கள் முழுவதையும் விட்டுவிட்டு, தமிழர்கள் தெற்கே தக்காணத்துக்கு வந்து தம் இனத்தவருடன் கலந்துகொண்டார்கள். அக்காலத்திலேதான் தமிழுக்கு வட்டெழுத்துக் காலம் ஆரம்பமாயிற்று. வட்டெழுத்துக் காலக் கடைசியிலேதான் இராமாயண காலம்.

ஆர்யாவர்த்தத்தை ஏற்படுத்திய பிறகு பல ஆண்டுகள் வரை ஆரியர் தக்கணத்துக்கு வராமல் இருந்தார்கள். ஆரிய இருடிகள் ஆரியரைத் தக்கணத்துக்குச் செல்லக் கூடாதென்று தம்முடைய ஒழுக்க நூல்களில் விதித்தும் இருந்தார்கள். ஆபஸ்தம்பர்—போதாயனர் முதலியோர் சூத்திரங்களே இதற்குச் சான்று பகரும்.

அப்படி இருந்தும், சிவப்பு இந்திய (Red Indian,) வம்சத்தனாகிய இராவணனைத் தமிழ் நாட்டினின்றும் தொலைக்க, தமிழ அரசர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து, ஆரிய அரசனாகிய தசரத இராமனையும் உதவிக்குச் சேர்த்துக்கொண்டு போரிட்டு, வெற்றி அடைந்தார்கள். அன்று தொட்டு ஆரிய நாகரிகம் விந்திய மலைக்குத் தெற்கே தமிழ்நாட்டில் பரவத் தொடங்கியது. சூத்திரங்களில் விதித்ததற்கு மாறாக ஒரு தடவை எண்ணாயிரம் பேரும் (அஷ்டசகஸ்ரம் என்ற பிராமண வகுப்பார்), இன்னொரு தடவை ஆறாயிரம் பேரும் (ஆறு வேலு என்ற தெலுங்க நாட்டுப் பிராமண வகுப்பார்),

இவர்களுக்கெல்லாம் முன்னடி வந்தவரும் (பிரகச்சரணர் என்ற பிராமண வகுப்பார்) கும்பல் கும்பலாகத் தமிழ்நாட்டுக்கு வந்தார்கள்*. ஆரிய மொழிச் சொற்கள் தமிழில் கலக்க ஆரம்பித்தன. ஆரிய மொழிச் சொற்களைக் கலந்து பேசுவதுதான் சிறந்த நாகரிகமானது என்று பல தமிழர் எண்ணினார்கள்.

ஆதலின் அந்தக் காலத்தில் வாழ்ந்த நம் திருமூலரும் ஆரிய மொழிச் சொற்களைத் தம் நூலின்கண் வழங்குவார் ஆயினர்.

இதுகாறுங் கூறியவாற்றால், நம் திருமூலர் இராமாயண காலத்தவர் என்றும், அது இற்றைக்கு ஏறக்குறைய 8000 வருடங்கள் முன்னர் என்றும், சனகர்—சனந்தனர்—சனாதனர்—சனற்குமாரர்—சிவயோக மாமுனி—மன்று தொழுத பதஞ்சலி—வியாக்கிரமர்—உபமன்னியு—வசிட்டர்—பஞ்சவடி அகத்தியர் — கவுசிகர்—கவுதமர்—சதானந்தர் — தரசத இராமர் — வாலி சுக்ரீவர் — இராவணன்—அனந்தகுண பாண்டியன் முதலியோர் திருமூலருக்குச் சம காலத்தவர் என்றும் அறிகின்றாம்.

நம் திருமூலர் சுந்தரநாதன் என்னும் பெயருடன் முதல் தடவை தென்னாட்டுக்கு வந்து தில்லையில் தப்பிலா மன்றில் பதஞ்சலி, வியாக்கிரமர்களுடன் தனிக் கூத்துக் கண்டது 8000 வருடங்கள் முன்னர் ஆகும்.

அதன்பின் அவர் திருக்கயிலைக்குச் சென்று 3000 ஆண்டுகள் தவம் இயற்றினார். பின் 3100 B. C. யில், அதாவது 5041 ஆண்டுகள் முன்னர், அதாவது பாரதச் சண்டை முடிவில் அவர் பொதிய மலை அகத்தியரைப் பார்க்க விரும்பிக் கயிலையினின்றும் புறப்பட்டார். திருமூலருக்கு இது இரண்டாவது தென்னாட்டு யாத்திரை ஆகும்.

[illegible]

என்ற உமாபதி சிவத்தின் வாக்கை நோக்குக.

நம் திருமூலர் கயிலாயத்தினின்றும் புறப்பட்டு வரும் வழியில் மகாநதிக் கரையில் பூரி (ஜெகன்னாதம்) சமீபம், துவரைக்கோமான் கண்ணன் ஒரு வேடனால் கொல்லப்பட்டார். கொன்றவுடன் அவ்வேடன் அக் கண்ணன் சரீரத்தைச் சிதையில் வைத்துக் கொளுத்திவிட்டுப் போய்விட, உடனே பெருமழை பொழிய, கருகிய கை கால்களையுடைய கண்ணன் சரீரமானது வெள்ளத்தால் அடித்துக் கொண்டு போகப்பட்டுப் பூரிக்குப் பக்கத்தில் ஒதுக்கிவிடப்பட்டது. அவ்வூரார் அதனைக் கண்டு துவரைக்கோமான் கண்ணன் சரீரமென்று கருதி, எடுத்து, அதனை அடக்கம் செய்து கோயில் அமைத்

* தில்லை மூவாயிரவரும், திருநாங்கூர் நாலாயிரவரும், திருவெண்காடு இரண்டாயிரவரும் மேலே கூறிய ஆரியக் கும்பல்களே.

தார்கள். அதுவே இப்போது ஜெகன்னாதம். இதனைத் திருமூலர் நேரே கண்டவர் ஆனதால்,

" இருக்குரு வாகிய எழில்வேதத்தி னுள்ளே
உருக்குணர் வாயுணர் வேதத்துள் ஓங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லும்
கருக்குரு வாகிய கண்ணனு மாமே"

என்று தம் தமிழ் மூவாயிரத்தில் பாடியுள்ளார். ஆதலின், இரண்டாம் தடவை திருமூலர் தென்னாடு போந்தது. கி. மு. 3100-ல் ஆகும்.

இவர் பொதியையை நோக்கி வரும் வழியில் சாத்தனூரில், திருவருளியக்க, தம் உடலை ஓர் இடத்தில் சேமித்து வைத்துவிட்டு, இறந்து கிடந்த கோக்குல மேய்க்கும் மூலன் குரம்பையுள்புக்கு, ஆக்களின் துயர் நீக்கிப் பின் தம் உடலை வைத்த இடத்தில் வந்து பார்க்க அவ்வுடல் மறைக்கப்பட்டதைத் திருமூலர் உணர்ந்தார். இதனை,

" அகலிடத்தார் மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத்தேம் மெய்யைப் போகவிட் டானைப்
பகலிடத் தும்இர வும்பணிந் தேத்தி
இகலிடத் தேயிரு ணீங்கிநின் றேனே" 141

என்று தமிழ் மூவாயிரத்தில் விளக்கியுள்ளார்.

பிறகு, மூலன் சரித்திரத்தோடு 'திருமூலர்' என்ற பெயருடன் திருவாவடுதுறையை அடைந்து, அங்கே கோயிலின் வெளிப் பிராகாரத்தில் வடமேற்கு மூலையில் இருந்த ஓர் அரசமரத்தடியில் 3000 ஆண்டுகள் யோகத்தில் இருந்து ஆண்டுக்கு ஒரு பாவாகத் "தமிழ் மூவாயிரத்தைப்" பாடியருளி, கி. மு. 100-ல் பரமுத்தி அடைந்தார்.

அவர் திருவாவடுதுறை அரசமரத்து நீழலில் இருந்தார் என்பதை,

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனை
சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவ நாமங்கள் ஓதியே.

ஞானத் தலைவிதன் னந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பா லூட்டியென் னுதனை யர்ச்சித்து
நானு மிருந்தேன்நற் போதியின் கீழே."

என்ற தமிழ் மூவாயிரச் செய்யுள்களால் அறியலாம்.

தாம் பரமுத்தி அடைவதன் முன்னம் "தமிழ் மூவாயிரத்தைத்" தம்முடைய ஏழு சீடர்களுக்குப் புகட்டி, உலகில் பல மடங்களை ஏற்பாடு செய்து பதி, பசு, பாச இலக்கணங்களைப் புகட்டும்படி செய்து, தமிழ் மூவாயிரப்பாக்கள் வரையப்பட்ட ஒரு சுவடியை திருவாவடுதுறைத் திருக்கோயிலின் முன்னர் இருக்கும் பலிபீடத் தின்கீழ்ச் சேமித்து வைத்துவிட்டுப் பின் தாம் பரமுத்தி எய்தினூர்.

திருமூலருக்கு ஏழு சீடர்கள் உண்டு என்பதும், அவர் ஏழு மடங்களைத் தாபித்தார் என்பதும்,

"மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனேடு
இந்த எழுவரும் என்வழி யாமே"

"வந்த மடமேழு மன்னும்சன் மார்க்கம்
முந்தி உதிக்கின்ற மூலன் மடவரை"

என்ற தமிழ் மூவாயிரச் செய்யுட்களால் அறியலாம்.

திருமூலர் திருவாவடுதுறைத் திருக்கோயிலின் முன்னர் உள்ள பலிபீடத்தின் கீழ் வைத்திருந்த தமிழ் மூவாயிரம் வரையப்பட்ட சுவடியைத்தான், கி. பி. 634 முதல் கி. பி. 650 வரை வாழ்ந்த திரு ஞானசம்பந்தர் எடுத்தார் என்று தேவாரப் பதிப்பாளர்கள் வரைந் துள்ளார்கள். இச் செய்தி பெரிய புராணத்தில் இல்லை. தேவாரப் பதிப்பாளர்களுக்கு ஆதாரம் எதுவோ தெரியவில்லை. ஒருவேளை கர்ணபரம்பரைச் செய்தியாய் இருக்கலாம்.

## (ஐ) திருமூலர் கி. மு. 6000 முதல் கி. மு. 100 வரை வாழ்ந்தவர் என்பது.

திருமூலநாயனூர் கி. மு. 6000 முதல் கி. மு. 100 வரை 5900 ஆண்டுகள் உயிரோடு இருக்கமுடியுமா என்று சந்தேகப் படுகிறவர்களுக்கு, அவர் தமிழ் மூவாயிரத்தில் பாடியுள்ள சில செய்யுட்களைப் பார்த்தால் அவர் அத்தனை ஆண்டுகள் வாழ்ந்திருக்க முடியும் என்று நம்புவார்கள். அப் பாட்டுக்களாவன :—

வளியினை வாங்கி வயத்தி லடக்கில்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் திருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியனு மாமே. (551)

நீல நிறனுடை நேரிழை யாளொடும்
சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு

ஞால மறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவர் பராநந்தி யாணையே. (714)

என்றும்,

எங்கே இருக்கினும் பூரி இடத்திலே
அங்கே அதுசெய்யில் ஆக்கைக்கு அழிவில்லை. (552)

அண்டம் சுருங்கில் ஆக்கைக்கு அழிவில்லை. (715)

நாட்ட மிரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமு மில்லை மனைக்கும் அழிவில்லை. (584)

ஈராறு கால்கொண்டு எழுந்த புரவியைப்
போராமற் கட்டிப் பேரிதுண வல்லிரேல்
நீரா யிரமும் நிலமா யிரத்தாண்டும்
போராது காயம் பிரான்நந்தி ஆணையே. (702)

என்றும்,

" காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்கும் குறியது வாமே. (553)

மூல நாடி மூக்கட் டலகுச்சியுள்
நாலு வாசல் நடுவுள் இருப்பிர்காண்
மேலை வாயில் வெளியுறக் கண்டபின்
காலன் வார்த்தை கனவிலும் இல்லையே. (602)

என்றும்,

உடம்பா ரழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே. (704)

என்றும்,

நாயனர் தம் அநுபவத்தைக் கூறியுள்ளார். " தாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் " என்பது ஆன்றோர் கொள்கை யாதலால், உலகத்தார் உய்யும்பொருட்டு மேற்சொன்ன கூற்றை உரைக்கும் முறைகளைத் தம் நூலின்கண் அருளிச்செய்துள்ளார்.

அவர் எத்தனை ஆண்டுகளேனும் உயிரோடிருக்கும் வன்மை வாய்ந்தவர். இவர் மாத்திரமன்று; இவர் குழாஅத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் பொதியமலை அகத்தியரும் இத்தகைய வன்மை வாய்ந்தவர்களே. இவ்வாறு சித்தி பெற்றவர்களே **சித்தர்கள்.** இவர்கள் கண்ட இந்த முடிவே **சித்தாந்தம்.**

ஆதலின் திருமூலர், கி. மு. 6000 முதல் கி. மு. 100 வரை, 5900 ஆண்டுகள் திருவாவடுதுறையில் நற்போதியின்கீழ் இருந்தார் என்பதில் யாதும் ஐயுறவு இல்லை.

## (ஓ) திருவள்ளுவர் (கி. மு. 75 to 36 கி. பி.), திருமூலரின் கருத்துக்களையும், சொற்களையும், தொடர்களையும் பொன்னேபோல் போற்றியுள்ளார் என்பது.

பாண்டிய நாட்டில் கி. மு. 50 முதல் கி. பி. 30 வரை அரசாண்ட கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி காலத்தில் உள் மந்திரத் தலைவராய் இருந்து, "வள்ளுவர்" என்னும் பட்டம்பெற்று, வழுதியின் வேண்டுகோட் கிணங்கித் திருக்குறள் என்னும் நீதி நூலைப் பாடியவர் "வாளார் நெடுமாறன் வள்ளுவனார்" ஆவார்.

"தப்பா முதற்பாவால் தாமாண்ட பாடலினால்
முப்பாலின் நாற்பால் மொழிந்தவர்—எப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர்"

என்ற கீரந்தையார் பாடலினால் வழுதியின் கட்டளைப்படி வழுதி மனமகிழத் தெய்வத் திருவள்ளுவர் திருக்குறளைப் பாடினார் என்பது பெறும்.

"அறனறிந்தேம் ஆன்ற பொருள்தெரிந்தேம் இன்பின்
திறனறிந்தேம் வீடு தெளிந்தேம்—மறனெறிந்த
வாளார் நெடுமாறன் வள்ளுவனார் தம்வாயால்
கேளா தனவெல்லாங் கேட்டு."

என்ற கோடிஞாழல் மாணிபூதனார் பாட்டால் திருவள்ளுவருடைய இயற்பெயர் "நெடுமாறன் வள்ளுவர்" என்பது பெறும்.

திருவள்ளுவர் தம் இளமையில் தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலையும், 'தமிழ் மூவாயிரம்' என்னும் தத்துவ நூலையும் நன்கு கற்றவர். அரசியல் ஞானமும் உலக அறிவும் மிகுதியும் உடையவர். வாட் படையைத் தாங்கிச் சண்டை செய்வதில் இணையற்றவர். இவர் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதியுடனும் தனித்தும் பல தடவைகளில் பகைவர்களுடன் மலைந்து வெற்றி பெற்றவர். அதனாலன்றோ, "மறன் எறிந்த வாளார் நெடுமாறன் வள்ளுவனார்" என்று கோடிஞாழல் மாணிபூதனார் கூறலாயினார்.

திருவள்ளுவர் கி. மு. 75 முதல் கி. பி. 36 வரை வாழ்ந்தவர். ஆனபடியால், இவர் பிறப்பதற்கு 25 ஆண்டுகள் முன்னர் அதாவது கி. மு. 100-ல் திருமூலர் "தமிழ் மூவாயிரம்" என்னும் நூலை இயற்றி, தம்முடைய எழு சிடர்களுக்கும் உபதேசித்துவிட்டுப் பர முத்தி யடைந்ததை அறிந்தவர் ஆனபடியால், தமிழ் மூவாயிரத்தை நன்கு கற்றார்.

தமிழ் மூவாயிரத்தினின்றும் திருவள்ளுவர் எடுத்தாண்ட பகுதிகளில் சிலவற்றை ஈண்டுத் தருகின்றாம்:—

1. "ஆரும் அறியார் அகாரம் அவனென்று" —தமிழ் மூவாயிரம்
"அகரம்முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன்" —திருக்குறள்
2. "அறிவுடையார் நெஞ்சொடு ஆதிபகவனும்" —தமிழ் மூவாயிரம்
"ஆதிபகவன் முதற்றே யுலகு" —திருக்குறள்
3. "போதுகந் தேறும் புரிசடை யானடி" —தமிழ் மூவாயிரம்
"மலர்மிசை ஏகினான்" —திருக்குறள்
4. "பொருளதுவாய் நின்ற புண்ணியன்" —தமிழ் மூவாயிரம்
"இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார்" —திருக்குறள்
(பொருள்சேர் இறைவன் புகழ் புரிந்தார்)
5. "எண் சத்தி தூய்மையும்" —தமிழ் மூவாயிரம்
"எண் குணத்தான்" —திருக்குறள்
6. "தன்னை யொப்பார் ஒன்றுமில்லாத் தலைமகன்" —தமிழ் மூவாயிரம்
"தனக்கு உவமை யில்லாதான்" —திருக்குறள்
7. "அறவாழி அந்தணன் ஆதி பராபரன்" —தமிழ் மூவாயிரம்
"அறவாழி அந்தணன் தாள்" —திருக்குறள்
8. "விளக்கும் தவம் அறம் மேல்துணை யாமே" —தமிழ் மூவாயிரம்
"தானம் தவம் இரண்டும்" —திருக்குறள்
9. "முழக்கி எழுவன மும்மத வேழம்
அடக்க அறிவெனும் தோட்டியை வைத்தேன்" —தமிழ் மூவாயிரம்
"உரன் என்னும் தோட்டியால் ஓர் ஐந்தும் காத்தல்" —திருக்குறள்
10. "ஆமே சுவை ஒளி யூறோசை நாற்றம்" —தமிழ் மூவாயிரம்
"சுவை ஒளி யூறோசை நாற்றமென் றைந்தின்" —திருக்குறள்
11. "அந்தண்மை பூண்ட அறவோர் ஆகமத்துச்
சிந்தைசெய் அந்தணர் சேரும் செழும்புவி" —தமிழ் மூவாயிரம்
"அந்தணர் என்போர் அறவோர்" —திருக்குறள்

இன்னும் எத்துணையோ உள. விரிவஞ்சி விடுத்தாம். இதனால் தமிழ் மூவாயிரம் திருவள்ளுவர் காலத்துக்கு முற்பட்டது என்றும், இப்போது தமிழில் உள்ள தத்துவநூல்களில் தலையாயது என்றும், திருவள்ளுவர்—பட்டினத்தார்—தாயுமானவர் போன்ற பெரியார்கள் எல்லாம் படித்துச் சுவைத்து இன்புற்றது என்றும் அறிந்தாம்.

## (ஓ) திருமூலர் இரண்டாம் தடவை தென்னாடு வந்தது

திருமூலர் இரண்டாம் தடவை தென்னாட்டுக்கு வந்த வரலாற்றைப்பற்றி விரிவாய்ப் பெரிய புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது. அச் சரித்திரத்தைத்தான் பல பதிப்பாளர்கள் வெளியிட்டுள்ளார்கள். ஆதலின், அதனை யாம் இங்குக் கூறவில்லை. பெரிய புராணத்தில் கண்டுகொள்க.

## (ஔ) தமிழ் மூவாயிரம் மொழிபெயர்ப்பு அல்ல என்பது

"தமிழ் மூவாயிரம்" என்னும் நூலுக்குத் "திருமந்திரம்" என்று ஒரு பெயர் உண்டென்று நாம் முன்னமே கூறியுள்ளாம். திருவாளர் மா. வே. விஸ்வநாத பிள்ளை அவர்கள் பதிப்பில் நூன்முகத்தில் பக்கம் 8-ல் "திருமூலர் தம்முடைய தவப்பயனாய் விளங்கும் இந்நூலைத் திருமந்திரமாலிகை எனப் பெயரிட்டு விடுத்தார் போலும். 'மாலிகா' என்ற வடமொழிக் கிளவி சிறுமாலை எனப் பொருள்படும்" என்றும், பக்கம் 15-ல் அடிக்குறிப்பில் "ஸ்ரீ மந்திர மாலிகா என்னும் ஞான நூல் முதலில் வடமொழியில் ஆக்கப்பட்டதெனக் கொள்வதற்கு இடமுண்டு. உபமன்யு பக்த விலாசத்தில் பகரும் வாய்மையை நோக்கின் இத் திருமந்திரத்தின் முதல்நூல் வடமொழியில் உளது என்பது போதரும்" என்றும் கூறப்பட்டிருக்கிறது. இதனை எழுதியவருடைய துணிபே துணிபு. "நேர்நின்று காக்கை வெளிதென்பார் என் சொலார்" என்னும் சொற்றொடர்ப் பொருட்கு இலக்காகியவர். இத்தகைய தவறான வாக்கியங்களையும் ஒரு பெரிய நூலின் நூன்முகத்தில் பதித்துள்ளதுதான் வேடிக்கை. வடமொழியினின்றுமே தமிழ் நூல்கள் எல்லாம் வந்தன என்று கூறுதற்குக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் குழாஅத்தின் அங்கத்தினருள் நூன்முகம் எழுதியவரும் ஒருவர் ஆவர்.

தமிழர்கள் தமிழையும் சரியாகப் படிப்பதில்லை. வடமொழியும் கற்பதில்லை. ஆங்கிலம் முதலிய பிற பாஷைகளையும் பயில்வதில்லை. ஆதலின், தமிழர்களிடையே எத்தகைய தவறான கொள்கைகளையும் நிலைநாட்டலாம் என்பது சிலருடைய கொள்கையாயிருக்கிறது.

திருமூலருடைய காலமாகிய இராமாயண காலத்தில் இமய முதல் குமரிவரையும் அவ்வெல்லைக்கு அப்பாலும் தமிழே பேசப்பட்டது என்பதை உணர்வார், அவ்வாறு கூறமாட்டார்கள்.

திருமூலர் ஒன்பது ஆகமங்களின் சாரங்களை ஒன்பது தந்திரங்களாகப் பாடினார். இதனை,

"நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றிசெய்து

அந்தி மதிபுனை அரன்அடி நாடோறும்
சிந்தைசெய்து ஆகமஞ் செப்பலுற் றேனே"

என்ற தற்சிறப்புப் பாயிரச் செய்யுளாலும்;

"வந்த மடம்ஏழு மன்னும்சன் மார்க்கத்தின்
முந்தி உதிக்கின்ற மூலன் மடவரை
தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்
சுந்தரன் ஆகமச் சொன்மொழிந் தானே".

என்ற சிறப்புப் பாயிரச் செய்யுளாலும் அறியலாம்.

தமிழ் மொழியில் வேதம் சூத்திரமும், ஆகமம் அதன் பாடியமும் போன்றவை. வேதம் பொது. ஆகமம் சிறப்பு. இதனை,

"வேதமொ டாகமம் மெய்யாம் இறைவனூல்
ஓதும் சிறப்பும் பொதுவும்என் றுன்னுக
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே"

என்ற தமிழ் மூவாயிரச் செய்யுளால் அறியலாம். ஆரிய வேதம் ஆகமத்தை ஒப்புக்கொள்ளவில்லை.

தற்காலம் கிரந்த எழுத்துக்களிலும் நாகரத்திலும் உள்ள ஆகமங்கள் எல்லாம் தமிழ் ஆகமங்களினின்றுமே மொழிபெயர்த்தவையும், வடமொழி கற்ற தமிழர், தமிழ் ஆகமங்களின் சாரங்களை வடமொழியாளர்க்கும் அறிவுறுத்துவான் கருதி எழுதப்பட்டவையுமே தவிர வேறு இல்லை. இவ்வுண்மையைக் காமிகம் முதலிய ஆகமங்கள் பவுஷ்கரம் முதலிய உப ஆகமங்களினுடைய முகவுரையிலிருந்து அறியலாகும்.

மேலும், தமிழ் முறைகளை வகுத்த நம்பியாண்டார் நம்பிகள் "முழுத்தமிழின்படி மன்னும் வேதத்தின் சொற்படியே" நம் திருமூலர் பாடினதாகத் தம் அந்தாதியில் கூறியுள்ளதையேனும் அனைவரும் கூர்ந்து நோக்கினால் உண்மை வெளியாகும்.

மேலும், நம் சேக்கிழார் பெருமான் "ஒன்றவன் தானே என வெடுத்துத்" திருமூலர் தம் நூலைத் தொடங்கினார் எனப் பாடியுள்ளார். "ஒன்று" என்ற சொல்லில் தமிழுக்கே சிறப்பான 'ற'கரம் உள்ளதால் அச் சொல் - வேறு மொழியாயிருக்க நியாயம் சிறிதும் இல்லை.

ஆதலின் தமிழ் மூவாயிரம் என்னும் நூலானது மொழிபெயர்ப்பு நூல் அன்று என்பது காட்டப்பட்டது.

## (க) நூற்பயன்

ஒரு நூலின்கண் நூற்பயனைக் கூறவேண்டும் என்னும் இலக்கண விதியின்படி, நம் திருமூலரின் மாணாக்கர்கள் கூறிய சிறப்புப் பாயிரத்தில் நூற்பயனும் கூறப்பட்டிருக்கிறது. அப் பாடல்களாவன :—

"மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி யருளது
காலை எழுந்து கருத்துஅறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவர் அன்றே"

"வைத்த பரிசே வகைவகை நன்னூலின்
முத்தி முடிவிது மூவா யிரத்திலே
புத்திசெய் பூர்வத்து மூவா யிரம்பொது
வைத்த சிறப்புத் தருமிவை தானே"

உ

ச்சிற்றம்பலம்

# திருமூலர்

# திருமந்திரம்

---

## விநாயகர் காப்பு

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

## க. பொதுப் பாயிரம்

### 1. கடவுள் வாழ்த்து

1 ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே. க

2 போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை
நாற்றிசைக் கும்நல்ல மாதுக்கு நாதனை
மேற்றிசைக் குள்தென் திசைக்கொரு வேந்தனாங்
கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே. உ

3 ஒக்கநின் றானை உலப்பிலி தேவர்கள்
நக்கனென் றேத்திடு நாதனை நாள்தொறும்
பக்கநின் றார்அறி யாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே. ௩

4 சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
தவனச் சடைமுடித் தாமரை யானே. ௪

இல்லை
அருந்தவம் இல்லை
ஆவதொன் றில்லை
அவனன்றி ஊர்புகு மாறறி யேனே. ௫

6 முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
தன்னையொப் பாயொன்றும் இல்லாத் தலைமகன்
தன்னையப் பாஎனில் அப்பனு மாய்உளன்
பொன்னையொப் பாகின்ற போதகத் தானே. ௬

7 தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினும் ஈசன் அருளறி வார்இல்லை
சேயினும் நல்லன் அணியன்நல் அன்பர்க்குத்
தாயினும் நல்லன் தாழ்சடை யோனே. ௭

8 பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னாற் பிறங்க இருந்தவன் பேர்நந்தி
என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
தன்னால் தொழப்படு வாரில்லை தானே. ௮

9 அயலும் புடையும்எம் ஆதியை நோக்கில்
இயலும் பெருந்தெய்வம் யாதுமொன் றில்லை
முயலும் முயலில் முடிவுமற் றாங்கே
பெயலும் மழைமுகிற் பேர்நந்தி தானே. ௯

10 பிதற்றுகின் றேன்என்றும் பேர்நந்தி தன்னை
இயற்றுவன் நெஞ்சத் திரவும் பகலும்
முயற்றுவன் ஓங்கொளி வண்ணன்எம் மானை
இயற்றிகழ் சோதி இறைவனு மாமே. ௧௦

11 கண்ணுத லான்ஒரு காதலின் நிற்கவும்
எண்ணிலி தேவர் இறந்தார் எனப்பலர்
மண்ணுறு வார்களும் வானுறு வார்களும்
அண்ணல் இவன்என் றறியகி லார்களே. ௧௧

12 மண்ணளந் தான்மல ரோன்முதல் தேவர்கள்
எண்ணளந் தின்ன நினைக்கிலார் ஈசனை
விண்ணளந் தான்தன்னை மேல்அளந் தாரில்லை
கண்ணளந் தெங்குங் கடந்துநின் றானே. ௧௨

13 கடந்துநின் றான்கம லம்மல ராதி
கடந்துநின் றான்கடல் வண்ணன்எம் மாயன்
கடந்துநின் றான்அவர்க் கப்புறம் ஈசன்
கடந்துநின் றான்எங்கும் கண்டுநின் றானே. ௧௩

14 ஆதியு மாய்அர னாய்உட லுள்நின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தான்அருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையுள்
நீதியு மாய்நித்த மாகிநின் றானே. கச

15 கோது குலாவிய கொன்றைக் குழற்சடை
மாது குலாவிய வாள்நுதல் பாகனை
யாது குலாவி அமரருந் தேவருங்
கோது குலாவிக் குணம்பயில் வாரே. கரு

16 காயம் இரண்டுங் கலந்து கொதிக்கினும்
ஆயங் கத்தூரி யதுமிகும் அவ்வழி
தேசங் கலந்தொரு தேவனென் றெண்ணினும்
ஈசன் உறவுக் கெதிரில்லை தானே. கசு

17 அதிபதி செய்து அளகை வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவ நோக்கி
அதுபதி யாதரித் தாக்கம தாக்கின்
இதுபதி கொள்ளென்ற எம்பெரு மானே. கஎ

18 இதுபதி ஏலங் கமழ்பொழில் ஏழும்
முதுபதி செய்தவன் மூதறி வாளன்
விதுபதி செய்தவன் மெய்த்தவம் நோக்கி
அதுபதி யாக அமருகின் றானே. கஅ

19 முடிவும் பிறப்பையும் முன்னே படைத்த
அடிகள் உறையும் அறநெறி நாடில்
இடியும் முழக்கமும் ஈசர் உருவங்
கடிமலர்க் குன்ற மலையது தானே. க௯

20 மன்னிய வாய்மொழி யாலும் மதித்தவர்
இன்னிசை உள்ளே எழுகின்ற ஈசனைப்
பின்னை உலகம் படைத்த பிரமனும்
உன்னும் அவனை உணரலு மாமே. உ௦

21 வானப் பெருங்கொண்டல் மாலயன் வானவர்
ஊனப் பிறவி ஒழிக்கும் ஒருவனைக்
கானக் களிறு கதறப் பிளந்தஎங்
கோனைப் புகழுமின் கூடலு மாமே. உக

22 மனத்தில் எழுகின்ற மாயநன் னாடன்
நினைத்த தறிவ னெனில்தான் நினைக்கிலர்
எனக்கிறை அன்பிலன் என்பர் இறைவன்
பிழைக்கநின் றார்பக்கம் பேணிநின் றானே. உஉ

23 வல்லவன் வன்னிக் கிறையிடை வாரணை
நில்லென நிற்பித்த நீதியுள் ஈசனை
இல்லென வேண்டா இறையவர் தம்முதல்
அல்லும் பகலும் அருளுகின் றானே. உ௩

24 போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி
தேற்றுமின் என்றுஞ் சிவனடிக் கேசெல்வ
மாற்றிய தென்று மயலுற்ற சிந்தையை
மாற்றிநின் றார்வழி மன்னிநின் றானே. உ௪

25 பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே. உ௫

26 தொடர்ந்துநின் றானைத் தொழுமின் தொழுதால்
படர்ந்துநின் றான்பரி பாரக முற்றுங்
கடந்துநின் றான்கம லம்மலர் மேலே
உடந்திருந் தானடிப் புண்ணிய மாமே. உ௬

27 சந்தி எனத்தக்க தாமரை வாண்முகத்
தந்தமில் ஈசன் அருள்நமக் கேயென்று
நந்தியை நாளும் வணங்கப் படும்அவர்
புந்தியி னுள்ளே புகுந்துநின் றானே. உ௭

28 இணங்கிநின் றான்எங்கு மாகிநின் றானும்
பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானும்
உணங்கிநின் றான்அம ராபதி நாதன்
வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே. உ௮

29 காணநில் லாயடி யேற்குற வாருளர்
நாணநில் லேன்உன்னை நான்தழு விக்கொளக்
கோணநில் லாத குணத்தடி யார்மனத்
தாணிய னாகி அமர்ந்துநின் றானே. உ௯

30 வானின் றழைக்கும் மழைபோல் இறைவனுந்
தானின் றழைக்குங்கொல் என்று தயங்குவார்
ஆனின் றழைக்கு மதுபோல்என் நந்தியை
நானின் றழைப்பது ஞானங் கருதியே. ௩0

31 மண்ணகத் தான்ஒக்கும் வானகத் தான்ஒக்கும்
விண்ணகத் தான்ஒக்கும் வேதகத் தான்ஒக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே. ௩௧

32 தேவர் பிரான்நம் பிரான்திசை பத்தையும்
மேவு பிரான்விரி நீருல கேழையுந்
தாவு பிரான்தன்மை தானறி வாரில்லை
பாவு பிரான்அருட் பாட லுமாமே. ௩௨

33 பதிபல வாயது பண்டிவ் வுலகம்
விதிபல செய்தொன்று மெய்ம்மை உணரார்
துதிபல தோத்திரஞ் சொல்லவல் லாரும்
மதியிலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே. ௩௩

34 சாந்து கமழுங் கவரியின் கந்தம்போல்
வேந்தன் அமரர்க் கருளிய மெய்ந்நெறி
ஆர்ந்த சுடரன்ன ஆயிர நாமமும்
போந்தும் இருந்தும் புகழுகின் றேனே. ௩௪

35 ஆற்றுகி லாவழி யாகும் இறைவனைப்
போற்றுமின் போற்றிப் புகழ்மின் புகழ்ந்திடில்
மேற்றிசைக் குங்கிழக் குத்திசை எட்டொடு
மாற்றுவன் அப்படி யாட்டவு மாமே. ௩௫

36 அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்
அப்பரி சீசன் அருள்பெற லாமே. ௩௬

37 நானும்நின் றேத்துவன் நாள்தொறும் நந்தியைத்
தானும்நின் றான்தழல் தானொக்கு மேனியன்
வானில்நின் றார்மதி போல்உடல் உள்ளுவந்
தூனில்நின் றாங்கே உயிர்க்கின்ற வாறே. ௩௭

38 பிதற்றொழி யேன்பெரி யான்அரி யானைப்
பிதற்றொழி யேன்பிற வாஉரு வானைப்
பிதற்றொழி யேன்எங்கள் பேர்நந்தி தன்னைப்
பிதற்றொழி யேன்பெரு மைத்தவன் நானே. ௩௮

39 வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத்
தீர்த்தனை அங்கே திளைக்கின்ற தேவனை
ஏத்தியும் எம்பெரு மானென் றிறைஞ்சியும்
ஆத்தஞ்செய் தீசன் அருள்பெற லாமே. ௩௯

40 குறைந்தடைந் தீசன் குரைகழல் நாடும்
நிறைந்தடை செம்பொனின் நேரொளி ஒக்கும்
மறைந்தடஞ் செய்யாது வாழ்த்தவல் லார்க்குப்
புறஞ்சடஞ் செய்வான் புகுந்துநின் றானே. ௪௦

41 சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப்
புனஞ்செய்த நெஞ்சிடை போற்றவல் லார்க்குக்
கனஞ்செய்த வாள்நுதல் பாகனும் அங்கே
இனஞ்செய்த மான்போல் இணங்கிநின் றானே. ௪௧

42 போயரன் தன்னைப் புகழ்வார் பெறுவது
நாயக னன்முடி செய்ததே நல்கு
மாயகஞ் சூழ்ந்து வரவல்ல ராகிலும்
வேயன தோளிக்கு வேந்தொன்றுந் தானே. ௪௨

43 அரனடி சொல்லி அரற்றி அழுது
பரனடி நாடியே பாவிப்ப நாளும்
உரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு
நிரனடி செய்து நிறைந்துநின் றானே. ௪௩

44 போற்றிஎன் பார்அம ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்அசு ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்மனி தர்புனி தன்அடி
போற்றிஎன் அன்புள் பொலியவைத் தேனே. ௪௪

45 விதிவழி அல்லதிவ் வேலை உலகம்
விதிவழி இன்பம் விருத்தமும் இல்லை
துதிவழி நித்தலுஞ் சோதிப் பிரானும்
பதிவழி காட்டும் பகலவ னாமே. ௪௫

46 அந்திவண் ணாஅர னேசிவ னேஎன்று
சிந்தைசெய் வண்ணந் திருந்தடி யார்தொழ
முந்திவண் ணாமுதல் வாபர னேஎன்று
[1]வந்திவ் வண்ணன்எம் மனம்புகுந் தானே. ௪௬

47 மனையுள் இருந்தவர் மாதவர் ஒப்பர்
நினைவுள் இருந்தவர் நேசத்துள் நிற்பர்
பனையுள் இருந்த பருந்தது போல
நினையா தவர்க்கில்லை நின்இன்பந் தானே. ௪௭

48 அடியார் பரவும் அமரர் பிரானை
முடியால் வணங்கி முதல்வனை முன்னிப்
படியார் அருளும் பரம்பரன் எந்தை
விடியா விளக்கென்று மேவிநின் றேனே. ௪௮

49 பரைபசு பாசத்து நாதனை உள்ளி
உரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத்

பா. வே. 1. புந்தி.

திரைபசு பாவச் செழுங்கடல் நீந்திக்
கரைபசு பாசங் கடந்தெய்த லாமே. ௪௯

50 கூடுவன் நெஞ்சிடை வைப்பன் பிரானென்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்துநின்
றாடுவன் ஆடி அமரர்பி ரானென்று
நாடுவன் நானின் றறிவது தானே. ௫௰

## .2. மும்மூர்த்திகளின் முறைமை

51 அளவில் இளமையும் அந்தமும் ஈறும்
அளவியல் காலமும் நாலும் உணரில்
தளர்விலன் சங்கரன் தன்னடி யார்சொல்
அளவில் பெருமை அரிஅயற் காமே. ௧

52 ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யானுஞ்
சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனார்
பேதித் துலகம் பிணங்குகின் றார்களே. ௨

53 ஈசன் இருக்கும் இருவினைக் கப்புறம்
பீசம் உலகிற் பெருந்தெய்வ மானது
ஈசன் அதுஇது என்பார் நினைப்பிலார்
தூசு பிடித்தவர் தூரறிந் தார்களே. ௩

54 சிவன்முதல் மூவரோ டைவர் சிறந்த
அவைமுதல் ஆறிரண் டொன்றொடொன் றாகும்
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதற் சங்கரன் தன்பெயர் தானே. ௪

55 பயன்அறிந் தவ்வழி எண்ணும் அளவில்
அயனொடு மால்நமக் கன்னியம் இல்லை
நயனங்கள் மூன்றுடை நந்தி தமராம்
வயனம் பெறுவீர்அவ் வானவ ராலே. ௫

56 ஓலக்கஞ் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனி பணிந்தடி யேன்தொழ
மாலுக்கும் ஆதிப் பிரமற்கும் ஒப்புநின்
ஞாலத்து நம்மடி நல்கிடென் றானே. ௬

57 வானவர் என்றும் மனிதர்இவர் என்றும்
தேனமர் கொன்றைச் சிவனருள் அல்லது
தானமர்ந் தோருந் தனித்தெய்வம் மற்றில்லை
ஊனமர்ந் தோரை உணர்வது தானே. ௭

58 சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
ஆதிக்கண் ஆவ தறிகிலர் ஆதர்கள்
நீதிக்கண் ஈசன் நெடுமால் அயன்என்று
பேதித் தவரைப் பிதற்றுகின் றாரே. அ

59 பரத்திலே ஒன்றாய்உள் ளாய்ப்புற மாகி
வரத்தினுள் மாயவ னாய்அய னாகித்
தரத்தினுள் தான்பல தன்மைய னாகிக்
கரத்தினுள் நின்று கழிவுசெய் தானே. கூ

60 தானொரு கூறு சதாசிவன் எம்இறை
வானொரு கூறு மருவியும் அங்குளான்
கோனொரு கூறுடல் உள்நின் றுயிர்க்கின்ற
தானொரு கூறு சலமய னாமே. கo

## 3. வேதச் சிறப்பு

61 வேதத்தை விட்ட அறம்இல்லை வேதத்தின்
ஓதத் தகும்அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் றார்களே. க

62 வேதம் உரைத்தானும் வேதிய னாகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட
வேதம் உரைத்தானும் வேதியர் வேள்விக்காய்
வேதம் உரைத்தானும் மெய்ப்பொருள் காட்டவே. உ

63 இருக்குரு வாம்எழில் வேதத்தி னுள்ளே
உருக்குணர் வாயுணர் வேதத்துள் ஓங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லுங்
கருக்குரு வாய்நின்ற கண்ணனு மாமே. ங

64 இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி
அருக்கின்ற மூலத்துள் அங்கே இருக்கும்
அருக்கனுஞ் சோமனும் ஆரழல் வீச
உருக்கிய ரோமம் ஒளிவிடுந் தானே. சு

65 திருநெறி யாவது சித்தசித் தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடும்
ஒருநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே. ரு

66 ஆறங்க மாய்வரு மாமறை ஓதியைக்
கூறங்க மாகக் குணம்பயில் வாரில்லை

வேறங்க மாக விளைவுசெய் தப்புறம்
பேறங்க மாகப் பெருக்குகின் றாரே. ௬

67 பாட்டும் ஒலியும் பரக்குங் கணிகையர்
ஆட்டும் அறாத அவனியின் மாட்டாதார்
வேட்டு விருப்பார் விரதமில் லாதவர்
ஈட்டும் இடஞ்சென் றிகலலுற் றாரே. ௭

### 4. ஆகமச் சிறப்பு

68 அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
எஞ்சலில் விஞ்ஞகர் இருபத் தெண்மரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே. ௧

69 அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடிநூ றாயிரம்
விண்ணவர் ஈசன் விழுப்பம் உரைத்தனர்
எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் நானே. ௨

70 அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்
விண்ணில் அமரர் தமக்கும் விளங்கரி
தண்ணல் அறைந்த அறிவறி யாவிடின்
எண்ணிலி கோடியும் நீர்மேல் எழுத்தே. ௩

71 பரனாய்ப் பராபரங் காட்டி உலகின்
தரனாய்ச் சிவதன்மந் தானேசொல் காலத்
தரனாய் அமரர்கள் அர்ச்சிக்கு நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கிநின் றானே. ௪

72 சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் உருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மில்தாம் பெற்ற
நவஆ கமம்எங்கள் நந்திபெற் றானே. ௫

73 பெற்றநல் ஆகமம் காரணங் காமிகம்
உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்தரந்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே. ௬

74 ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு
மோகமில் நாலேழு முப்பேத முற்றுடன்
வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்மையொன்
றாக முடிந்த வருஞ்சுத்த சைவமே. ௭

## 5. அந்தணரொழுக்கம்

75 அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுளோர்
செந்தழல் ஓம்பிமுப் போதும் நியமஞ்செய்
தந்தவ நற்கரு மத்துநின் றுங்கிட்டுச்
சந்தியும் ஓதிச் சடங்கறுப் போர்களே. ௧

76 காயத் திரியே கருதுசா வித்திரி
ஆய்தற் குவப்பர் மந்திரமாங் குன்னி
நேயத் தேரேறி நினைவுற்று நேயத்தாய்
மாயத்துள் தோயா மறையோர்கள் தாமே. ௨

77 பெருநெறி யான பிரணவம் ஓர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான கிரியை யிருந்து
சொருபம தானோர் துகளில்பார்ப் பாரே. ௩

78 சத்திய முந்தவம் தான்அவன் ஆதலும்
எய்த்தகும் இந்தியம் ஈட்டியே வாட்டலும்
ஒத்த உயிர்கள் உண்டா யுணர்வுற்றுப்
பெத்தம் அறுத்தலு மாகும் பிரமமே. ௪

79 வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தங் கேட்டுந்தம் வேட்கை ஒழிந்திலர்
வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடம்
வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே. ௫

80 நூலுஞ் சிகையும் நுவலிற் பிரமமோ
நூலது கார்ப்பாச நுண்சிகை கேசமாம்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
நூலுடை அந்தணர் காணும் நுவலிலே. ௬

81 சத்தியம் இன்றித் தனிஞானந் தானின்றி
ஒத்த விடையம்விட் டோரும் உணர்வின்றிப்
பத்தியும் இன்றிப் பரன்உண்மை யின்றிப்
பித்தேறும் மூடர் பிராமணர் தாம்அன்றே. ௭

82 திருநெறி யாகிய சித்தசித் தின்றிக்
குருநெறி யாலே குருபதஞ் சேர்ந்து
கரும நியமாதி கைவிட்டுக் காணுந்
துரிய சமாதியாந் தூய்மறை யோர்க்கே. ௮

83 மறையோ ரவரே மறையவ ரானல்
மறையோர்தம் வேதாந்த வாய்மையில் தூய்மை

குறையோர்தன் மற்றுள்ள கோலா கலமென்
றறிவோர் மறைதெரிந் தந்தண ராமே. கூ

84 அந்தண்மை பூண்ட அறவேள் ஆகமத்துச்
சிந்தைசெய் அந்தணர் சேருஞ் செழும்புவி
நந்துதல் இல்லை நரபதி நன்றாகும்
அந்தியுஞ் சந்தியும் ஆகுதி பண்ணுமே. கO

## 6. ஆகுதி வேட்டல்

85 வசையில் விழுப்பொருள் வானும் நிலனுந்
திசையுந் திசைபெறு தேவர் குழாமும்
விசையம் பெருகிய வேத முதலாம்
அசைவிலா அந்தணர் ஆகுதி வேட்கிலே. க

86 ஆகுதி வேட்கும் அருமறை அந்தணர்
போகதி நாடிப் புறங்கொடுத் துண்ணுவர்
தாம்விதி வேண்டித் தலைப்படு மெய்ந்நெறி
தாமறி வாலே தலைப்பட்ட வாறே. உ

87 அணைதுணை அந்தணர் அங்கியுள் அங்கி
அணைதுணை வைத்ததின் உட்பொரு ளான
இணைதுணை யாமத் தியங்கும் பொழுது
துணையணை யாயதோர் தூய்நெறி யாமே. ங

88 [1]தானே விடும்பற் றிரண்டுந் தரித்திட
[2]நானே விடப்படு மேதொன்றை நாடாது
பூமேவு நான்முகன் புண்ணிய போகனாய்
ஓமேவும் ஓரா குதிஅவி உண்ணவே. ச

89 நெய்நின் றெரியும் நெடுஞ்சுட ரேசென்று
மைநின் றெரியும் வகையறி வார்கட்கு
மைநின் றவிழ்தரு மத்தின மாம்என்றுஞ்
செய்நின்ற செல்வம் தீயது வாமே. ரு

90 பாழி அகலும் எரியுந் திரிபோலிட்
டூழி அகலும் உறுவினை நோய்பல
வாழிசெய் தங்கி உதிக்க அவைவிழும்
வீழிசெய் தங்கி வினைசுடு மாமே. சா

91 பெருஞ்செல்வங் கேடென்று முன்னே படைத்த
வருஞ் செல்வம் தந்த தலைவனை நாடும்

---

1. தாமே; 2. நாமே; என்றும் பாடம்.

வருஞ்செல்வத் தின்பம் வரவிருந் தெண்ணி
அருஞ்செல்வத் தாகுதி வேட்கநின் றாரே. எ

92 ஒண்சுட ரானை உலப்பிலி நாதனை
ஒண்சுட ராகிஎன் னுள்ளத் திருக்கின்ற
கண்சுட ரோன்உல கேழுங் கடந்தஅத்
தண்சுட ரோமத் தலைவனு மாமே. அ

93 ஓமத்துள் அங்கியின் உள்ளுளன் எம்இறை
ஈமத்துள் அங்கி இரதங்கொள் வானுளன்
வேமத்துள் அங்கி விளைவு வினைக்கடல்
கோமத்துள் அங்கி குரைகடல் தானே. கூ

94 அங்கி நிறுத்தும் அருந்தவர் ஆரணத்
தங்கி இருக்கும் வகையருள் செய்தவர்
எங்கும் நிறுத்தி இளைப்பப் பெரும்பதி
பொங்கி நிறுத்தும் புகழது வாமே. க௦

## 7. அரசாட்சி முறை

95 கல்லா அரசனுங் காலனும் நேரொப்பர்
கல்லா அரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா அரசன் அறம்ஓரான் கொல்லென்பான்
நல்லாரைக் காலன் நணுகநில் லானே. க

96 நாள்தோறும் மன்னவன் நாட்டில் தவநெறி
நாள்தோறும் நாடி யவன்நெறி நாடானேல்
நாள்தோறும் நாடு கெடுமூட நண்ணுமால்
நாள்தோறுஞ் செல்வம் நரபதி குன்றுமே. உ

97 வேடநெறி நில்லார் வேடம்பூண் டென்பயன்
வேடநெறி நிற்போர் வேடம்மெய் வேடமே
வேடநெறி நில்லார் தம்மை விறல்வேந்தன்
வேடநெறி செய்தால் வீடது வாகுமே. ந

98 மூடங் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்
வாடும் புவியும் பெருவாழ்வு மன்னனும்
பீடொன் றிலனாகும் ஆதலாற் பேர்த்துணர்ந்
தாடம் பரநூற் சிகையறுத் தால்நன்றே. ச

99 ஞானமி லாதார் சடைசிகை நூல்நண்ணி
ஞானிகள் போல நடிக்கின்ற வர்தம்மை
ஞானிக ளாலே நரபதி சோதித்து
ஞானமுண் டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே. ரு

100 ஆவையும் பாவையும் மற்றற வோரையுந்
தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையுங்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவும் மறுமைக்கு மீளா நரகமே. ௬

101 திறந்தரு முத்தியுஞ் செல்வமும் வேண்டின்
மறந்தும் அறநெறி யேஆற்றல் வேண்டும்
சிறந்தநீர் ஞாலஞ் செய்தொழில் யாவையும்
அறைந்திடில் வேந்தனுக் காறிலொன் றாமே. ௭

102 வேந்தன் உலகை மிகநன்று காப்பது
வாய்ந்த மனிதர்கள் அவ்வழி யாநிற்பர்
பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தாங்கொள்ளப்
பாய்ந்த புலியன்ன பாவகத் தானே. ௮

103 கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றிப்
பால்கொண்டு சோமன் முகம்பற்றி உண்ணுந்தோர்
மால்கொண்டு தேறலை உண்ணும் மருளரை
மேல்கொண்டு தண்டஞ்செய் வேந்தன் கடனே. ௯

104 தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண் டமுஞ்செயும் அம்மையில் இம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே. ௧௦

## 8. வானச் சிறப்பு

105 அமுதூறு மாமழை நீரத னாலே
அமுதூறும் பன்மரம் பார்மிசை தோற்றுங்
கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை
அமுதூறுங் காஞ்சிரை ஆங்கது வாமே. ௧

106 வரையிடை நின்றிழி வான்நீர் அருவி
உரையில்லை உள்ளத் தகத்துநின் றூறு
நுரையில்லை மாசில்லை நுண்ணிய தெண்ணீர்க்
கரையில்லை எந்தை கழுமணி யாறே. ௨

## 9. அறஞ்செய்வான் திறம்

107 ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணுங் காலம் அறிமினே. ௧

108 தாமறி வாரண்ணல் தாள்பணி வாரவர்
தாமறி வாரறந் தாங்கிநின் றாரவர்
தாமறி வார்சில தத்துவ ராவர்கள்
தாமறி வார்க்குத் தமர்பர னாமே. ௨

109 யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே. ௩

110 அற்றுநின் றாருண்ணும் ஊணே அறனென்னுங்
கற்றன போதங் கமழ்பவர் மாணிடர்
உற்றுநின் றாங்கொரு கூவற் குளத்தினிற்
பற்றிவந் துண்ணும் பயன்அறி யாரே. ௪

111 அழுக்கினை ஓட்டி அறிவை நிறையீர்
தழுக்கிய நாளில் தருமமுஞ் செய்யீர்
விழித்திருந் தென்செய்வீர் வெம்மை பரந்து
விழிக்கவன் றென்செய்வீர் ஏழைநெஞ் சீரே. ௫

112 தன்னை அறியாது [1] தான்நல்ல ரென்றுஇங்
கின்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னந்
தன்மையின் நல்ல தவஞ்செய்யும் நீரே. ௬

113 துறந்தான் வழிமுதற் சுற்றமும் இல்லை
இறந்தான் வழிமுதல் இன்பமும் இல்லை
மறந்தான் வழிமுதல் வந்திலன் ஈசன்
அறந்தான் அறியும் அளவறி வாரே. ௭

114 தான்தவஞ் செய்வதாஞ் செய்தவத் தவ்வழி
மான்தெய்வ மாக மதிக்கும் மனிதர்கள்
ஊன்தெய்வ மாக உயிர்க்கின்ற பல்லுயிர்
நான்தெய்வம் என்று நமன்வரு வானே. ௮

115 திளைக்கும் வினைக்கடல் தீர்வுறு தோணி
இளைப்பினை நீக்கும் இருவழி உண்டு
கிளைக்குந் தனக்கும்அக் கேடில் புகழோன்
விளைக்குந் தவம்அறம் மேற்றுணை யாமே. ௯

116 பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மிசை
அற்றம் உரையான் அறநெறிக் கல்லது
உற்றுங்க ளால்ஒன்றும் ஈந்தது வேதுணை
மற்றண்ணல் வைத்த வழிகொள்ளு மாறே. ௰

பா. வே. 1. தானல்லா ; தானல என்றுஇங் ;

## 10. அறஞ்செயான் திறம்

117 எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன
ஒட்டிய நல்லறஞ் செய்யா தவர்செல்வம்
வட்டிகொண் டீட்டியே மண்ணின் முகந்திடும்
பட்டிப் பதகர் பயன்அறி யாரே. க

118 ஒழிந்தன காலங்கள் ஊழியும் போயின
கழிந்தன கற்பனை நாளுங் குறுகிப்
பிழிந்தன போலத்தம் பேரிடர் ஆக்கை
அழிந்தன கண்டும் அறம்அறி யாரே. உ

119 அறம்அறி யார்அண்ணல் பாதம் நினையுந்
திறம்அறி யார்சிவ லோக நகர்க்குப்
புறம்அறி யார்பலர் பொய்ம்மொழி கேட்டு
மறம்அறி வார்வகை மன்னிநின் றாரே. ௩

120 இருமலுஞ் சோகையும் ஈளையும் வெப்புந்
தருமஞ்செய் யாதவர் தம்பால தாகும்
உருமிடி நாக முரோணி கழலை
தருமஞ்செய் வார்பக்கல் தாழகி லாவே. ௪

121 பரவப் படுவான் பரமனை ஏத்தார்
இரவலர்க் கீதலை யாயினும் ஈயார்
கரகத்தால் நீரட்டிக் காவை வளர்க்கார்
நரகத்தில் நிற்றிரோ நாள்எஞ்சி னீரே. ரு

122 வழிநடப் பாரின்றி வானோர் உலகங்
கழிநடப் பார்நடந் தார்கரும் பாரும்
மழிநடக் கும்வினை மாசற வோட்டிட்
டொழிநடப் பார்வினை ஓங்கிநின் றாரே. ௬

123 கனிந்தவர் ஈசன் கழலடி காண்பர்
துணிந்தவர் ஈசன் துறக்கம தாள்வர்
மலிந்தவர் மாளுந் துணையுமொன் றின்றி
மெலிந்த சினத்தினுள் வீழ்ந்தொழிந் தாரே. எ

124 இன்பம் இடரென் றிரண்டுற வைத்தது
முன்பவர் செய்கையி னாலே முடிந்தது
இன்பம் அதுகண்டும் ஈகிலாப் பேதைகள்
அன்பிலார் சிந்தை அறம்அறி யாரே. அ

125 கெடுவது மாவதுங் கேடில் புகழோன்
நடுவல்ல செய்தின்ப நாடவும் ஒட்டான்

இடுவதும் ஈவதும் எண்ணுமின் இன்பம்
படுவது செய்யிற் பசுவது வாமே. ௯

126 செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்
புல்லறி வாளரைப் போற்றிப் புலராமல்
இல்லங் கருதி இறைவனை ஏத்துமின்
வில்லி இலக்கெய்த விற்குறி யாமே. ௧௦

## 11. அவையடக்கம்

127 ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
யாரறி வார்இந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே. ௧

128 பாடவல் லார்நெறி பாட அறிகிலேன்
ஆடவல் லார்நெறி ஆட அறிகிலேன்
நாடவல் லார்நெறி நாட அறிகிலேன்
தேடவல் லார்நெறி தேடகில் லேனே. ௨

---

## உ. தற்சிறப்புப் பாயிரம்

### 1. குரு பரம்பரை

129 நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே. க

130 நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளாவ தென்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நானிருந் தேனே. உ

131 நால்வரும் நாலு திசைக்கொன்று நாதர்கள்
நால்வரும் நானா விதப்பொருள் கைக்கொண்டு
நால்வரும் நான்பெற்ற தெல்லாம் பெறுகென
நால்வருந் தேவராய் நாதரா னார்களே. ௩

132 மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ
டிந்த எழுவரும் என்வழி யாமே. ௪

133 மொழிந்தது மூவர்க்கும் நால்வர்க்கும் ஈசன்
ஒழிந்த பெருமை இறப்பும் பிறப்புஞ்
செழுஞ்சுடர் மூன்றொளி யாகிய தேவன்
கழிந்த பெருமையைக் காட்டகி லானே. ௫

134 தத்துவ ஞானம் உரைத்தது தாழ்வரை
முத்திக் கிருந்த முனிவருந் தேவரும்
ஒத்துடன் வேறா யிருந்து துதிசெயும்
பத்திமை யால்இப் பயனறி யாரே. ௬

### 2. திருமூலர் தம் வரலாறு கூறுதல் (மாணுக்கர்களுக்கு)

135 நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை அரனடி நாள்தொறுஞ்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே. க

136 செப்புஞ் சிவாகமம் என்னும்அப் பேர்பெற்றும்
அப்படி நல்கும் அருள்நந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம்இருந் தேனே. உ

137 இருந்தவக் காரணங் கேளிந் திரனே
பொருந்திய செல்வப் புவனா பதியாம்
அருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே. ௩

138 மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. ௪

139 நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவ னாவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே. ௫

140 சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே. ௬

141 அகலிடத் தார்மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத் தெம்மெய்யைப் போதவிட் டானைப்
பகலிடத் தும்இர வும்பணிந் தேத்தி
இகலிடத் தேஇருள் நீங்கிநின் றேனே. ௭

142 இருந்தேன்இக் காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே. ௮

143 ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பா லாட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன்நற் போதியின் கீழே. ௯

144 செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப்
பல்கின்ற தேவர் அசுரர் நரர்தம்பால்
ஒல்கின்ற வான்வழி யூடுவந் தேனே. ௧௰

145 சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே ஓதிய வேதத்தின்
ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கிங் கருளால் அளித்ததே. கக

146 நேர்ந்திடு மூல சரியை நெறியிதென்
றாய்ந்திடுங் காலாங்கி கஞ்ச மலையமான்
ஓர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத்
தோர்ந்திடுஞ் சுத்த சைவத் துயிரதே. கஉ

147 நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரந்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே. கங

148 பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்
சிறப்பொடு வானவர் சென்றுகை கூப்பி
மறப்பிலர் நெஞ்சினுள் மந்திர மாலை
உறைப்பொடுங் கூடிநின் றோதலு மாமே. கச

149 சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்
மிதாசனி யாதிருந் தேனின்ற காலம்
இதாசனி யாதிருந் தேன்மன நீங்கி
உதாசனி யாதுட னேஉணர்ந் தேமால். கரு

150 அங்கிமி காமைவைத் தானுடல் வைத்தான்
எங்குமி காமைவைத் தானுல கேழையுந்
தங்கிமி காமைவைத் தான்தமிழ்ச் சாத்திரம்
பொங்கிமி காமைவைத் தான்பொருள் தானுமே. கசா

151 பண்டித ராவார் பதினெட்டுப் பாடையுங்
கண்டவர் கூறுங் கருத்தறி வார்என்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலான் அறஞ்சொன்ன வாறே. கஎ

152 பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே. கஅ

153 பெற்றமும் மானும் மழுவும் பிறிவற்ற
தற்பரன் கற்பனை யாகுஞ் சராசரத்
தற்றமும் நல்கி அடியேன் சிரத்தினில்
நற்பத மும்அளித் தான்எங்கள் நந்தியே. கக

154 ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
யாயத்தை யச்சிவன் தன்னை யகோசர
வீயத்தை முற்றும் விளக்கியிட் டேனே. ௨௦

155 விளக்கிப் பரமாகும் மெய்ஞ்ஞானச் சோதி
அளப்பில் பெருமையன் ஆனந்த நந்தி
துளக்கறும் ஆனந்தக் கூத்தன்சொற் போந்து
வளப்பில் கயிலை வழியில்வந் தேனே. ௨௧

156 நந்திஅரு ளாலே மூலனை நாடிப்பின்
நந்திஅரு ளாலே சதாசிவ னாயினேன்
நந்திஅரு ளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்திஅரு ளாலே நானிருந் தேனே. ௨௨

பாயிரம் முற்றும்.

# முதல் தந்திரம்

[காரணாகமம்]

## 1. உபதேசம்

157 விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியோ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே. க

158 களிம்பறுத் தான்எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தான்அருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே. உ

159 பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே. ங

160 வேயின் எழுங்கனல் போலேஇம் மெய்யெனுங்
கோயி லிருந்து குடிகொண்ட கோன்நந்தி
தாயினும் மும்மலம் மாற்றித் தயாஎன்னுந்
தோயம தாய்எழுஞ் சூரிய னாமே. ச

161 சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே. ரு

162 மலங்களைந் தாமென மாற்றி அருளித்
தலங்களைந் தானற் சதாசிவ மான
புலங்களைந் தானப் பொதுவினுள் நந்தி
நலங்களைந் தானுள் நயந்தான் அறிந்தே. சு

163 அறிவைம் புலனுட னேநான்ற தாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே அழிந்தது போல
குறியறி விப்பான் குருபர னாமே. எ

164 ஆமேவு பால்நீர் பிறிக்கின்ற அன்னம்போல்
தாமே தனிமன்றில் தன்னந் தனிநித்தந்
தீமேவு பல்கர ணங்களுள் உற்றன
தாமேழ் பிறப்பெரி சார்ந்தவித் தாமே. அ

165 வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற
ஒத்துப் புலனுயிர் ஒன்றாய் உடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யார்களே. கூ

166 சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோகத் துள்புக்குத் தன்னொளி தானாய்
அவயோகஞ் சாரா தவன்பதி போக
நவயோக நந்தி நமக்களித் தானே. ௧0

167 அளித்தான் உலகெங்குந் தானான உண்மை
அளித்தான் அமரர் அறியா உலகம்
அளித்தான் திருமன்றுள் ஆடுந் திருத்தாள்
அளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே. ௧௧

168 வெளியில் வெளிபோய் விரவிய வாறும்
அளியில் அளிபோய் அடங்கிய வாறும்
ஒளியில் ஒளிபோய் ஒடுங்கிய வாறுந்
தெளியும் அவரே சிவசித்தர் தாமே. ௧௨

169 சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்
சத்தமுஞ் சத்த முடிவுந்தம் முள்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே. ௧௩

170 முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய்
ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப அரிய சிவங்கண்டு தான்தெளிந்
தப்பரி சாக அமர்ந்திருந் தாரே. ௧௪

171 இருந்தார் சிவமாகி எங்குந்தா மாகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்
கிருந்தார் இழவுவந் தெய்திய சோம்பே. ௧௫

172 சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பதுஞ் சுத்த வெளியிலே
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடஞ்
சோம்பர்கண் டாரச் சுருதிக்கண் தூக்கமே. ௧௬

173 தூங்கிக்கண் டார்சிவ லோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே. ௧௭

174 எவ்வாறு காண்பான் அறிவு தனக்கெல்லை
அவ்வா றருட்செய்வன் ஆதி யரன்தானும்
ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடுஞ்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர்மா ணிக்கமே. ௧௮

175 மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்றினில் ஆடுந் திருக்கூத்தைப்
பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே. ௧௯

176 பெற்றார் உலகிற் பிரியாப் பெருநெறி
பெற்றார் உலகிற் பிறவாப் பெரும்பயன்
பெற்றார்அம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு
பெற்றார் உலகுடன் பேசாப் பெருமையே. ௨௦

177 பெருமை சிறுமை அறிந்தெம் பிரான்போல்
அருமை எளிமை அறிந்தறி வாரார்
ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந் தடக்கி
இருமையுங் கேட்டிருந் தார்புரை அற்றே. ௨௧

178 புரையற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல்
திரையற்ற சிந்தையுள் சிவனவன் செப்பும்
உரையற் றுணர்வோர் உடம்பிங் கொழிந்தால்
கரையற்ற சோதி கலந்தசத் தாமே. ௨௨

179 சத்த முதல்ஐந்துந் தன்வழித் தான்சாரில்
சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ
சுத்த வெளியிற் சுடரிற் சுடர்சேரும்
அத்தம் இதுகுறித் தாண்டுகொள் அப்பிலே. ௨௩

180 அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே. ௨௪

181 அடங்குபே ரண்டத் தணுஅண்டஞ் சென்றங்
கிடங்கொண்ட தில்லை இதுவன்றி வேறுண்டோ
கடந்தொறும் நின்ற உயிர்கரை காணில்
திடம்பெற நின்றான் திருவடி தானே. ௨௫

182 திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ்சிந் திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே. உசு

183 தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே. உஎ

184 தானே புலன்ஐந்துந் தன்வச மாயிடும்
தானே புலன்ஐந்துந் தன்வசம் போயிடும்
தானே புலன்ஐந்துந் தன்னில் மடைமாறும்
தானே தனித்தெம் பிரான்தனைச் சந்தித்தே. உஅ

185 சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை
சிந்திப் பதுநந்தி செய்ய திருமேனி
வந்திப் பதுநந்தி நாமம்என் வாய்மையால்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே. உகூ

186 போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியைப்
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினோர்
நாதன் நடத்தால் நயனங் களிகூர
வேதந் துதித்திடப் போயடைந் தார்விண்ணே. ௩0

## 2. யாக்கை நிலையாமை

187 மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரந்
திண்ணென் றிருந்தது தீவினை சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானாற்போல்
எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே. க

188 பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே. உ

189 ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. ௩

190 காலும் இரண்டு முகட்டலக் கொன்றுள
பாலுள் பருங்கழி முப்பத் திரண்டுள

மேலுள கூரை பிரியும் பிரிந்தால்முன்
போவுயிர் மீளப் புகஅறி யாதே. ௪

191 சீக்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற
ஆக்கை பிரிந்த தலகு பழுத்தது
மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்
காக்கைக் குப்பலி காட்டிய வாறே. ரு

192 அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே. சு

193 மன்றத்தே நம்பி மாடம் எடுத்தது
மன்றத்தே நம்பி சிவிகைபெற் றேறினான்
மன்றத்தே நம்பி முக்கோடி வழங்கினான்
சென்றத்தா வென்னத் திரிந்திலன் தானே. எ

194 வாசந்தி பேசி மணம்புணர்ந் தப்பதி
நேசந் தெவிட்டி நினைப்பொழி வார்பின்னை
ஆசந்தி மேல்வைத் தமைய அழுதிட்டுப்
பாசந்தீச் சுட்டுப் பலியட்டி னார்களே. அ

195 கைவிட்டு நாடிக் கருத்தழிந் தச்சற
நெய்யட்டிச் சோறுண்ணும் ஐவரும் போயினார்
மையிட்ட கண்ணாளும் மாடும் இருக்கவே
மெய்விட்டுப் போக விடைகொள்ளு மாறே. கூ

196 பந்தல் பிரிந்தது பண்டாரங் கட்டற்ற
ஒன்பது வாசலும் ஒக்க அடைந்தன
துன்புறு காலந் துரிசுவர மேன்மேல்
அன்புடை யார்கள் அழுதகன் றார்களே. ௧0

197 நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன் றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே. ௧௧

198 முப்பதும் முப்பதும் முப்பத் தறுவருஞ்
செப்ப மதிளுடைக் கோயிலுள் வாழ்பவர்
செப்ப மதிளுடைக் கோயில் சிதைந்தபின்
ஒப்ப அனைவரும் ஓட்டெடுத் தார்களே. ௧௨

199 மதுவூர் குழலியும் மாடும் மனையும்
இதுவூர் ஒழிய இதணம தேறிப்
பொதுவூர் புறஞ்சுடு காடது நோக்கி
மதுவூர வாங்கியே வைத்தகன் றார்களே. ௧௩

200 வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்கள்
அச்சக லாதென நாடும் அரும்பொருள்
பிச்சது வாய்ப்பின் தொடர்வுறு மற்றவர்
எச்சக லாநின் றிளைக்கின்ற வாறே. ௧௪

201 ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரும் மக்களும்
ஊர்த்துறைக் காலே ஒழிவர் ஒழிந்தபின்
வேர்த்தலை போக்கி விறகிட் டெரிமூட்டி
நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே. ௧௫

202 வளத்திடை முற்றத்தோர் மாநிலம் முற்றுங்
குளத்தின் மண்கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தால்அவை ஓடென்று வைப்பர்
உடலுடைந் தால்இறைப் போதும்வை யாரே. ௧௬

203 ஐந்து தலைப்பறி யாறு சடையுள
சந்தவை முப்பது சார்வு பதினெட்டுப்
பந்தலும் ஒன்பது பந்தி பதினைந்து
வெந்து கிடந்தது மேலறி யோமே. ௧௭

204 அத்திப் பழமும் அறைக்கீரை நல்வித்துங்
கொத்தி உலைப்பெய்து கூழட்டு வைத்தனர்
அத்திப் பழத்தை அறைக்கீரை வித்துண்ணக்
கத்தி எடுத்தவர் காடுபுக் காரே. ௧௮

205 மேலும் முகடில்லை கீழும் வடிம்பில்லை
காலும் இரண்டு முகட்டலக் கொன்றுண்டு
ஓலையான் மேய்ந்தவ ரூடு வரியாமை
வேலையான் மேய்ந்ததோர் வெள்ளித் தளிகையே. ௧௯

206 கூடங் கிடந்தது கோலங்கள் இங்கில்லை
ஆடும் இலையமும் அற்ற தறுதலும்
பாடுகின் றார்சிலர் பண்ணில் அழுதிட்டுத்
தேடிய தீயினில் தீயவைத் தார்களே. ௨௦

207 முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்
இட்டது தானிலை ஏதேனும் ஏழைகாள்
பட்டது பார்மணம் பன்னிரண் டாண்டினிற்
கெட்ட தெழுபதிற் கேடறி யீரே. ௨௧

208 இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டான்
முடிஞ்ச தறியார் முழங்குவர் மூடர்
விடிஞ்சிரு ளாவ தறியா உலகம்
படிஞ்சு கிடந்து பதைக்கின்ற வாறே. உஉ

209 மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த
உடலும் உயிரும் உருவந் தொழாமல்
இடர்படர்ந் தேழா நரகிற் கிடப்பர்
குடர்பட வெந்தமர் கூப்பிடு மாறே. உங

210 குடையுங் குதிரையுங் கொற்றவா ளுங்கொண்
டிடையுமக் காலம் இருந்து நடுவே
புடையு மனிதனார் போகும்அப் போதே
அடையும் இடம்வலம் ஆருயி ராமே. உச

211 காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பால்துளி பெய்யிலென் பல்லோர் பழிச்சிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே. உரு

## 3. செல்வம் நிலையாமை

212 அருளும் அரசனும் ஆனையுந் தேரும்
பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னந்
தெருளும் உயிரொடுஞ் செல்வனைச் சேரின்
மருளும் பினையவன் மாதவ மன்றே. க

213 இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்குந்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வ மாமே. உ

214 தன்னது சாயை தனக்குத வாதுகண்
டென்னது மாடென் றிருப்பர்கள் ஏழைகள்
உன்னுயிர் போம்உடல் ஒக்கப் பிறந்தது
கண்ணது காணொளி கண்டுகொ ளீரே. ங

215 ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடும்
ஓட்டித் துரந்திட் டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே. ச

216 தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கன்மின்
ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே

மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதிக்கலு மாமே. ௫

217 மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லுங் கலம்போல்
அவிழ்கின்ற ஆக்கைக்கோர் வீடுபே றாகச்
சிமிழொன்று வைத்தமை தேர்ந்தறி யாரே. ௬

218 வாழ்வும் மனைவியும் மக்கள் உடன்பிறந்
தாரு மளவே தெமக்கென்பர் ஒண்பொருள்
மேவு மதனை விரிவுசெய் வார்கட்குக்
கூவுந் துணையொன்று கூடலு மாமே. ௭

219 வேட்கை மிகுத்தது மெய்கொள்வார் இங்கில்லை
பூட்டுந் தறியொன்று போம்வழி ஒன்பது
நாட்டிய தாய்தமர் வந்து வணங்கிப்பின்
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. ௮

220 உடம்பொ டுயிரிடை விட்டோடும் போது
அடும்பரி சொன்றில்லை அண்ணலை எண்ணும்
விடும்பரி சாய்நின்ற மெய்ந்நமன் தூதர்
சுடும்பரி சத்தையுஞ் சூழகி லாரே. ௯

## 4. இளமை நிலையாமை

221 கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே. ௧

222 ஆண்டு பலவுங் கழிந்தன அப்பனைப்
பூண்டுகொண் டாரும் புகுந்தறி வார்இல்லை
நீண்டன காலங்கள் நீண்டு கொடுக்கினுந்
தூண்டு விளக்கின் சுடரறி யாரே. ௨

223 தேய்ந்தற் றொழிந்த இளமை கடைமுறை
ஆய்ந்தற்ற பின்னை அரிய கருமங்கள்
பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை
ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ள போதே. ௩

224 விரும்புவர் முன்னென்னை மெல்லியன் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குக்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயுமொத் தேனே. ௪

225 பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலங் கழிவன கண்டும் அறிகிலார்
ஞாலங் கடந்தண்டம் ஊடறுத் தானடி
மேலுங் கிடந்து விரும்புவன் நானே. ௫

226 காலை எழுந்தவர் நித்தலும் நித்தலும்
மாலை படுவதும் வாணாள் கழிவதுஞ்
சாலும்அவ் வீசன் சலவிய னாகிலும்
ஏல நினைப்பவர்க் கின்பஞ்செய் தானே. ௬

227 கண்ணதுங் காய்கதி ரோனும் உலகினை
உண்ணின் றளக்கின்ற தொன்றும் அறிகிலார்
விண்ணுறு வாரையும் வினையுறு வாரையும்
எண்ணுறும் முப்பதில் ஈர்ந்தொழிந் தாரே. ௭

228 எய்திய நாளில் இளமை கழியாமை
எய்திய நாளில் இசையினால் ஏத்துமின்
எய்திய நாளில் எறிவ தறியாமல்
எய்திய நாளில் இருந்துகண் டேனே. ௮

## 5. உயிர் நிலையாமை

229 தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்
இழைக்கின்ற தெல்லாம் இறக்கின்ற கண்டும்
பிழைப்பின்றி எம்பெரு மானடி ஏத்தார்
அழைக்கின்ற போதறி யாரவர் தாமே. ௧

230 ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது
ஐவரும் அச்செய்யைக் காத்து வருவர்கள்
ஐவர்க்கு நாயகன் ஓலை வருதலால்
ஐவரும் அச்செய்யைக் காவல்விட் டாரே. ௨

231 மத்தளி ஒன்றுள தாளம்இ ரண்டுள
அத்துள்ளே வாழும் அரசரும் அஞ்சுள
அத்துள்ளே வாழும் அரசனும் அஞ்சினான்
மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே. ௩

232 வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை
வேங்கடம் என்றே விரகறி யாதவர்
தாங்கவல் லாருயிர் தாமறி யாரே. ௪

233 சென்றுணர் வான்திசை பத்துந் திவாகரன்
அன்றுணர் வால்அளக் கின்ற தறிகிலர்

நின்றுண ரார்இந் நிலத்தின் மனிதர்கள்
பொன்றுணர் வாரிற் புணர்க்கின்ற மாயமே. ௫

234 மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை
பீறு மதனைப் பெரிதுணர்ந் தாரிலை
கூறுங் கருமயிர் வெண்மயி ராவது
ஈறும் பிறப்புமொ ராண்டெனும் நீரே. ௬

235 துடுப்பிடு பானைக்கும் ஒன்றே அரிசி
அடுப்பிடு மூன்றிற்கும் அஞ்செரி கொள்ளி
அடுத்தெரி யாமற் கொடுமின் அரிசி
விடுத்தன நாள்களும் மேற்சென் றனவே. ௭

236 இன்புறு வண்டிங் கினமலர் மேற்போய்
உண்பது வாச மதுபோல் உயிர்நிலை
இன்புற நாடி நினைக்கிலு மூன்றொளி
கண்புற நின்ற கருத்துள்நில் லானே. ௮

237 ஆம்விதி நாடி அறஞ்செய்மின் அந்நிலம்
போம்விதி நாடிப் புனிதனைப் போற்றுமின்
நாம்விதி வேண்டும தென்சொலின் மானிடர்
ஆம்விதி பெற்ற அருமைவல் லார்க்கே. ௯

238 அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய னாகிச் சிறந்துண் ணும் போதொரு
தவ்வி கொடுமின் தலைப்பட்ட போதே. ௧௦

## 6. கொல்லாமை

239 பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமுஞ் சித்தமும்
உற்றாரும் ஆவி அமர்ந்திடம் உச்சியே. ௧

240 கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லடிக் காரர் வலிக்கயிற் றாற் கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே. ௨

241 கொலையே களவுகட் காமம்பொய் கூறல்
மலைவான பாதக மாம்அவை நீக்கித்
தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்
கிலையாம் இவைஞான னந்தத் திருத்தலே. ௩

## 7. புலால் மறுத்தல்

242 பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே. க

243 கொன்றி லாரைக் கொலச்சொலிக் கூறினர்
தின்றி லாரைத் தினச்சொலித் தெண்டித்தார்
பன்றி யாப்படி யிற்பிறந் தேழ்நர
கொன்று வார்அரன் ஆணையி துண்மையே. உ

## 8. பிறன்மனை நயவாமை

244 ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே. க

245 திருத்தி வளர்த்ததோர் தேமாங் கனியை
அருத்தமென் றெண்ணி அறையிற் புதைத்துப்
பொருத்தமி லாத புளிமாங்கொம் பேறிக்
கருத்தறி யாதவர் காலற்ற வாறே. உ

246 பொருள்கொண்ட கண்டனும் போதகை யாளும்
இருள்கொண்ட மின்வெளி கொண்டுநின் றோரும்
மருள்கொண்டு மாதர் மயலுறு வார்கள்
மருள்கொண்ட சிந்தையை மாற்றகில் லாரே. ௩

## 9. மகளிர் இழிவு

247 இலைநல வாயினும் எட்டி பழுத்தாற்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா
முலைநலங் கொண்டு முறுவல்செய் வார்மேல்
விலகுறு நெஞ்சினை வெய்துகொள் ளீரே. க

248 மனைபுகு வார்கள் மனைவியை நாடில்
சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்குங்
கனவது போலக் கசிந்தெழும் இன்பம்
நனவது போலவும் நாடவொண் ணாதே. உ

249 இயலுறும் வாழ்க்கை இளம்பிடி மாதர்
புயலுறப் புல்லிப் புணர்ந்தவர் எய்தும்
மயலுறும் வானவர் சார்விது என்பார்
அயலுறப் பேசி அகன்றொழிந் தாரே. ௩

250 வையகத் தேமட வாரொடுங் கூடியென்
மெய்யகத் தோருளம் வைத்த விதியது
கையகத் தேகரும் பாலையின் சாறுகொள்
மெய்யகத் தேபெறு வேம்பது வாமே. ௪

251 கோழை ஒழுக்கங் குளமூடு பாசியில்
ஆழ நடுவார் அளப்புறு வார்களைத்
தாழத் துடக்கித் தடுக்ககில் லாவிடில்
பூழை நுழைந்தவர் போகின்ற வாறே. ௫

## 10. நல்குரவு

252 புடைவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை
அடையப்பட் டார்களும் அன்பில ரானார்
கொடையில்லை கோளில்லை கொண்டாட்ட மில்லை
நடையில்லை நாட்டில் இயங்குகின் றார்கட்கே. ௧

253 பொய்க்குழி தூர்ப்பான் புலரி புலருதென்
றக்குழி தூர்க்கும் அரும்பண்டந் தேடுவீர்
எக்குழி தூர்த்தும் இறைவனை ஏத்துமின்
அக்குழி தூரும் அழுக்கற்ற போதே. ௨

254 கற்குழி தூரக் கனகமுந் தேடுவர்
அக்குழி தூர்க்கை யாவர்க்கும் அரியது
அக்குழி தூர்க்கும் அறிவை அறிந்தபின்
அக்குழி தூரும் அழுக்கற்ற வாறே. ௩

255 தொடர்ந்தெழு சுற்றம் வினையினுந் தீய
கடந்ததோர் ஆவி கழிவதன் முன்னே
உடன்றொரு காலத் துணர்விளக் கேற்றித்
தொடர்ந்துநின் றவ்வழி தூர்க்கலு மாமே. ௪

256 அறுத்தன ஆறினும் ஆனின மேவி
அறுத்தனர் ஐவரும் எண்ணிலி துன்பம்
ஒறுத்தன வல்வினை ஒன்றல்ல வாழ்வை
வெறுத்தனன் ஈசனை வேண்டிநின் றேனே. ௫

## 11. அன்புடைமை

257 அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே. ௧

258 பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரும் இளம்பிறை
துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக்குப்
பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே. ௨

259 என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்பொ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்போல் மணியினை எய்தவொண் ணாதே. ௩

260 ஆர்வம் உடையவர் காண்பர் அரன்தன்னை
ஈரம் உடையவர் காண்பார் இணையடி
பாரம் உடையவர் காண்பார் பவந்தன்னைக்
கோர நெருக்கொடு கோங்குபுக் காரே. ௪

261 என்னன் புருக்கி இறைவனை ஏத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியுந்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே. ௫

262 தானொரு காலஞ் சயம்புவென் றேத்தினும்
வானொரு காலம் வழித்துணை யாய்நிற்குந்
தேனொரு பால்திகழ் கொன்றை அணிசிவன்
தானொரு வண்ணம்என் அன்பில்நின் றானே. ௬

263 முன்படைத் தின்பம் படைத்த முதலிடை
அன்படைத் தெம்பெரு மானை அறிகிலார்
வன்படைத் திந்த அகலிடம் வாழ்வினில்
அன்படைத் தான்தன் அகலிடத் தானே. ௭

264 கருத்துறு செம்பொன்செய் காய்கதிர்ச் சோதி
இருத்தியும் வைத்தும் இறைவனென் றேத்தியும்
அருத்தியுள் ஈசனை யாரருள் வேண்டில்
விருத்தி கொடுத்திடும் விண்ணவர் கோனே. ௮

265 நித்தலுந் துஞ்சும் பிறப்பையும் செய்தவன்
வைத்த பரிசறிந் தேயு மனிதர்கள்
இச்சையு ளேவைப்பர் எந்தை பிரானென்று
நச்சியே அண்ணலை நாடுகி லாரே. ௯

266 அன்பினுள் ளான்புறத் தாறுட லாயுளான்
முன்பினுள் ளான்முனி வர்க்கும் பிரானவன்
அன்பினுள் ளாகி அமரும் அரும்பொருள்
அன்பினுள் ளார்க்கே அணைதுணை யாமே. ௧௦

## 12. அன்பு செய்வாரை அறிவன் சிவன்

267 இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்
உகந்தருள் செய்திடும் உத்தம நாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு
மகிழ்ந்தன்பு செய்யு மருளது வாமே. க

268 இன்பப் பிறவிக் கியல்வது செய்தவன்
துன்பப் பிறவித் தொழில்பல என்னினும்
அன்பிற் கலவிசெய் தாதிப் பிரான்வைத்த
முன்பப் பிறவி முடிவது தானே. உ

269 அன்புறு சிந்தையின் மேலெழும் அவ்வொளி
இன்புறு கண்ணியொ டேற்க இசைந்தன
துன்புறு கண்ணியைந் தாடுந் துடக்கற்று
நண்புறு சிந்தையை நாடுமின் நீரே. ௩

270 புணர்ச்சியுள் ஆயிழை மேல்அன்பு போல
உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்கவல் லாருக்
குணர்ச்சியில் லாது குலாவி உலாவி
அணைத்தலும் இன்பம் அதுவிது வாமே. ௪

271 உற்றுநின் றாரொடு மத்தகு சோதியைச்
சித்தர்கள் என்றுந் தெரிந்தறி வார்இல்லை
பத்திமை யாலே பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுத்தவர் முன்புநின் றானே. ௫

272 கண்டேன் கமழ்தரு கொன்றையி னான்அடி
கண்டேன் கரியுரி யான்றன் கழலிணை
கண்டேன் கமல மலர்உறை வானடி
கண்டேன் கழலதென் அன்பினுள் யானே. ௬

273 நம்பனை நானு விதப்பொரு ளாகுமென்
றும்பரில் வானவர் ஓதுந் தலைவனை
இன்பனை இன்பத் திடைநின் றிரதிக்கும்
அன்பனை யாரும் அறியகி லாரே. ௭

274 முன்பு பிறப்பும் இறப்பும் அறியாதார்
அன்பில் இறைவனை யாம்அறி வோம்என்பர்
இன்பப் பிறப்பும் இறப்பும் இலான்நந்தி
அன்பி லவனை அறியகி லாரே. அ

275 ஈசன் அறியும் இராப்பக லுந்தன்னைப்
பாசத்துள் வைத்துப் பரிவுசெய் வார்களைத்

தேசுற் றறிந்து செயலற் றிருந்திடில்
ஈசனவ் னெம்மிடை ஈட்டிநின் றானே. க௯

276 விட்டுப் பிடிப்பதென் மேதகு சோதியைத்
தொட்டுத் தொடர்வன் தொலையாப் பெருமையை
எட்டுமென் னாருயி ராய்நின்ற ஈசனை
மட்டுக் கலப்பது மஞ்சன மாமே. ௩௦

## 13. கல்வி

277 குறிப்பறிந் தேனுடல் உயிரது கூடிச்
செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை
மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான்
கறிப்பறி யாமிகுங் கல்விகற் றேனே. க

278 கற்றறி வாளர் கருதிய காலத்துக்
கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு
கற்றறி வாளர் கருதி உரைசெய்யுங்
கற்றறி காட்டக் கயலுள வாக்குமே. உ

279 நிற்கின்ற போதே நிலையுடை யான்கழல்
கற்கின்ற செய்யின் கழிந்தறும் பாவங்கள்
சொற்குன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்
மற்றொன் றிலாத மணிவிளக் காமே. ௩

280 கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்
பல்வி யுடையார் பாம்பரிந் துண்கின்றார்
எல்லியுங் காலையும் ஏத்தும் இறைவனை
வல்லியுள் வாதித்த காயமு மாமே. ௪

281 துணையது வாய்வருந் தூயநற் சோதி
துணையது வாய்வருந் தூயநற் சொல்லாந்
துணையது வாய்வருந் தூயநற் கந்தந்
துணையது வாய்வருந் தூயநற் கல்வியே. ௫

282 நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்
பாலொன்று பற்றினாற் பண்பின் பயன்கெடுங்
கோலொன்று பற்றினாற் கூடா பறவைகள்
மாலொன்று பற்றி மயங்குகின் றார்களே. ௬

283 ஆய்ந்துகொள் வார்க்கரன் அங்கே வெளிப்படுந்
தோய்ந்த நெருப்பது தூய்மணி சிந்திடும்
ஏய்ந்த இளமதி எட்டவல் லார்கட்கு
வாய்ந்த மனமல்கு நூலேணி யாமே. ௭

284 வழித்துணை யாய்மருந் தாயிருந் தார்முன்
கழித்துணை யாங்கற் றிலாதவர் சிந்தை
ஒழித்துணை யாம்உம்ப ராய்உல கேழும்
வழித்துணை யாம்பெருந் தன்மைவல் லானே. அ

285 பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்
முற்றது எல்லா முதல்வன் அருள்பெறில்
கிற்ற விரகிற் கிளரொளி வானவர்
கற்றவர் பேரின்பம் உற்றுநின் றாரே. ௯

286 கடலுடை யான்மலை யானைந்து பூதத்
துடலுடை யான்பல ஊழிதொ றூழி
அடல்விடை யேறும் அமரர்கள் நாதன்
இடமுடை யார்நெஞ்சத் தில்லிருந் தானே. ௧௦

## 14. கேள்விகேட் டமைதல்

287 அறங்கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும்
மறங்கேட்டும் வானவர் மந்திரங் கேட்டும்
புறங்கேட்டும் பொன்னுரை மேனியெம் ஈசன்
திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே. க

288 தேவர் பிரான்தனைத் திவ்விய மூர்த்தியை
யாவர் ஒருவர் அறிவார் அறிந்தபின்
ஓதுமின் கேள்மின் உணர்மின் உணர்ந்தபின்
ஓதி உணர்ந்தவர் ஓங்கிநின் றாரே. உ

289 மயன்பணி கேட்பது மாநந்தி வேண்டின்
அயன்பணி கேட்பது அரன்பணி யாலே
சிவன்பணி கேட்பவர் தேவரு மாவர்
பயன்பணி கேட்பது பற்றது வாமே. ௩

290 பெருமான் இவனென்று பேசி யிருக்குந்
திருமா னிடர்பின்னைத் தேவரு மாவர்
வருமா தவர்க்கு மகிழ்ந்தருள் செய்யும்
அருமா தவத்தெங்கள் ஆதிப் பிரானே. ௪

291 ஈசன் அருளும் இறப்பும் பிறப்பையும்
பேசி யிருந்து பிதற்றி மகிழ்வெய்தி
நேசமு மாகும் நிகழொளி யாய்நின்று
வாச மலர்க்கந்த மன்னிநின் றானே. ௫

292 விழுப்பமுங் கேள்வியும் மெய்நின்ற ஞானத்
தொழுக்கமுஞ் சிந்தை உணர்கின்ற போது

வழுக்கி விடாவிடில் வானவர் கோனும்
இழுக்கின்றி எண்ணிலி காலம தாமே. ௬

293 சிறியார் மணற்சோற்றில் தேக்கிடு மாபோல்
செறிவால் அனுபோகஞ் சித்திக்கும் என்னில்
குறியாத தொன்றைக் குறியாதார் தம்மை
அறியா திருந்தார் அவராவர் அன்றே. ௭

294 உறுதுணை யாவ துயிரும் உடம்பும்
உறுதுணை யாவ துலகுறு கேள்வி
செறிதுணை யாவது சிவனடிச் சிந்தை
பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே. ௮

295 புகழநின் றார்க்கும் புராணன்எம் ஈசன்
இகழநின் றார்க்கும் இடும்பைக் கிடமா
மகிழநின் றாதியை ஓதி உணராக்
கழியநின் றார்க்கொரு கற்பசு வாமே. ௯

296 வைத்துணர்ந் தான்மனத் தோடும்வாய் பேசி
ஒத்துணர்ந் தான்உரு ஒன்றோடொன் றொவ்வா
தச்சுழன் றாணி கலங்கினும் ஆதியை
நச்சுணர்ந் தார்க்கே நணுகலு மாமே. ௧௦

## 15. கல்லாமை

297 கல்லா தவருங் கருத்தறி காட்சியை
வல்லா ரெனில்அருட் கண்ணான் மதித்துளோர்
கல்லாதார் உண்மைபற் றுநிற்பர் கற்றோருங்
கல்லாதார் இன்பங் காணுகி லாரே. ௧

298 வல்லார்கள் என்றும் வழியொன்றி வாழ்கின்றார்
அல்லா தவர்கள் அறிவு பலஎன்பார்
எல்லா இடத்தும் உளன்எங்கள் தம்இறை
கல்லா தவர்கள் கலப்பறி யாரே. ௨

299 நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து
நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்காள்
எல்லா வுயிர்க்கும் இறைவனே யாயினுங்
கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே. ௩

300 இல்லேன் வினைத்துய ராக்கு மயலானேன்
கல்லேன் அரனெறி அறியாத் தகைமையின்
வல்லேன் வழங்கும் பொருளே மனத்தினுட்
கல்லேன் கழியநின் றாடவல் லேனே. ௪

301 நில்லாது சீவன் நிலையன் றெனவெண்ணி
வல்லார் அறத்துந் தவத்துளும் ஆயினர்
கல்லா மனித்தர் கயவர் உலகினில்
பொல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே. ரு

302 விண்ணினின் உள்ளே விளைந்த விளங்கனி
கண்ணினின் உள்ளே கலந்தங் கிருந்தது
மண்ணினின் உள்ளே மதித்து மதித்துநின்
றெண்ணி எழுதி இளைத்துவிட் டாரே. சா

303 கணக்கறிந் தார்க்கன்றிக் காணவொண் ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடா காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்குங்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே. எ

304 கல்லாத மூடரைக் காணவும் ஆகாது
கல்லாத மூடர்சொல் கேட்கக் கடன்அன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்
கல்லாத மூடர் கருத்தறி யாரே. அ

305 கற்றுஞ் சிவஞானம் இல்லாக் கலதிகள்
சுற்றமும் வீடார் துரிசறார் மூடர்கள்
மற்றும் பலதிசை காணார் மதியிலோர்
கற்றன்பில் நிற்போர் கணக்கறிந் தார்களே. கூ

306 ஆதிப் பிரான்அம ரர்க்கும் பரஞ்சுடர்
சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்
ஓதி உணரவல் லோம்என்பர் உள்நின்ற
சோதி நடத்துந் தொடர்வறி யாரே. கo

## 16. நடுவுநிலைமை

307 நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை
நடுவுநின் றார்க்கு நரகமும் இல்லை
நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்
நடுவுநின் றார்வழி நானும்நின் றேனே. க

308 நடுவுநின் றான்நல்ல கார்முகில் வண்ணன்
நடுவுநின் றான்நல்ல நான்மறை யோதி
நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவோர்
நடுவுநின் றார்நல்ல நம்பனு மாமே. உ

309 நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் றார்சிலர் தேவரு மாவர்

நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் றாரொடு நானும்நின் றேனே. ௩

310 தோன்றிய எல்லாந் துடைப்பன் அவனன்றி
ஏன்றுநின் றாரென்றும் ஈசன் இணையடி
மூன்றுநின் றார்முதல் வன்திரு நாமத்தை
நான்றுநின் றார்நடு வாகிநின் றாரே. ௪

## 17. கள்ளுண்ணாமை

311 கழுநீர்ப் பசுப்பெறிற் கயந்தொறும் தேரா
கழுநீர் விடாய்த்துத்தங் காயஞ் சுருக்கும்
முழுநீர்க் கள்ளுண்போர் முறைமை அகன்றோர்
செழுநீர்ச் சிவன்றன் சிவானந்தத் தேறலே. ௧

312 சித்தம் உருக்கிச் சிவமாஞ் சமாதியில்
ஒத்த சிவானந்தத் தோவாத தேறலைச்
சுத்த மதுவுண்ணச் சுவானந்தம் விட்டிடா
நித்தல் இருத்தல் கிடத்தல்கீழ்க் காலே. ௨

313 காமமுங் கள்ளுங் கலதிகட் கேயாகும்
மாமல முஞ்சம யத்துள் மயலுறும்
போமதி யாகும் புனிதன் இணையடி
யோமய ஆனந்தத் தேறல் உணர்வுண்டே. ௩

314 வாமத்தோர் தாமும் மதுவுண்டு மாள்பவர்
காமத்தோர் காமக்கள் ளுண்டே கலங்குவர்
ஓமத்தோர் உள்ளொளிக் குள்ளே உணர்வர்கள்
நாமத்தோர் அன்றே நணுகுவர் தாமே. ௪

315 உள்ளுண்மை ஓரார் உணரார் பசுபாசம்
வள்ளன்மை நாதன் அருளினின் வாழ்வுறார்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகஞ் சேர்வுறார்
கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறி யாரே. ௫

316 மயக்குஞ் சமய மலமன்னு மூடர்
மயக்கு மதுவுண்ணு மாமூடர் தேரார்
மயக்குறு மாமாயை மாயையின் வீடு
மயக்கில் தெளியின் மயக்குறும் அன்றே. ௬

317 மயங்குந் தியங்குங்கள் வாய்மை அழிக்கும்
இயங்கும் மடவார்தம் இன்பமே எய்தி
முயங்கும் நயங்கொண்ட ஞானத்து முந்தார்
இயங்கும் இடையறா ஆனந்தம் எய்துமே. ௭

318 இராப்பகல் அற்ற இடத்தே இருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் பருகார்
இராப்பகல் அற்ற இறையடி இன்பத்
திராப்பகல் மாயை இரண்டிடத் தேனே. ௮

319 சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தி அழிந்தது தம்மை மறத்தலால்
சத்தி சிவஞானந் தன்னில் தலைப்பட்டுச்
சத்திய ஞானஆ னந்தத்திற் சார்தலே. ௯

320 சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாஞ்
சத்தி அருள்தரிற் சத்தன் அருளுண்டாஞ்
சத்தி சிவமாம் இரண்டுந்தன் னுள்வைக்கச்
சத்தியம் எண்சித்தித் தன்மையு மாமே. ௧௦

321 தத்துவம் நீக்கி மருள்நீக்கித் தானாகிப்
பொய்த்தவம் நீக்கிமெய்ப் போகத்துட் போகியே
மெய்த்த சகமுண்டு விட்டுப் பரானந்தச்
சித்திய தாக்குஞ் சிவானந்தத் தேறலே. ௧௧

322 யோகிகள் கால்கட்டி ஒண்மதி ஆனந்தப்
போத அமுதைப் பொசித்தவர் எண்சித்தி
மோகியர் கள்ளுண்டு மூடராய் மோகமுற்
றாகும் மதத்தால் அறிவழிந் தாரே. ௧௨

முதல் தந்திரம் முற்றும்

# இரண்டாந் தந்திரம்

[காமிகாகமம்]

## 1. அகத்தியம்

323 நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்ற தெம்பெரு மானென்ன ஈசன்
நடுவுள அங்கி அகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னிரென் றானே. ௧

324 அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்
அங்கி உதயஞ்செய் மேல்பா லவனொடு
மங்கி உதயஞ்செய் வடபால் தவமுனி
எங்கும் வளங்கொள் இலங்கொளி தானே. ௨

## 2. பதி வலியில் வீரட்டம் எட்டு

325 கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்
வரத்தின் உலகத் துயிர்களை யெல்லாம்
வருத்தஞ்செய் தானென்று வானவர் வேண்டக்
குருத்துயர் சூலங்கைக் கொண்டுகொன் றானே. ௧

326 கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தானங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்
தலையை யரிந்திட்டுச் சந்திசெய் தானே. ௨

327 எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியுந்
தங்கும் படித்தவன் தாளுணர் தேவர்கள்
பொங்கும் சினத்துள் அயன்தலை முன்னற
அங்(கு)அச் சுதனை உதிரங்கொண் டானே. ௩

328 எங்கும் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற
அங்க முதல்வன் அருமறை யோதிபாற்
பொங்குஞ் சலந்தரன் போர்செய்ய நேர்மையின்
அங்கு விரற்குறித் தாழிசெய் தானே. ௪

329 அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறி வாரே. ௫

330 முத்திக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்
அத்தி யுரியர னவ தறிகிலர்
சத்தி கருதிய தாம்பல தேவரும்
அத்தியின் உள்ளெழுந் தன்று கொலையே. ௬

331 மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே. ௭

332 இருந்த மனத்தை இசைய இருத்திப்
பொருந்தி இலிங்க வழியது போக்கித்
திருந்திய காமன் செயலழித் தங்கண்
அருந்தவ யோகங் கொறுக்கை அமர்ந்ததே. ௮

## 3. இலிங்க புராணம்

333 அடிசேர்வன் என்னஎம் ஆதியை நோக்கி
முடிசேர் மலைமக னார்மக ளாகித்
திடமார் தவஞ்செய்து தேவர் அறியப்
படியார அர்ச்சித்துப் பத்திசெய் தாளே. ௧

334 திரிகின்ற முப்புரஞ் செற்ற பிரானை
அரியனென் றெண்ணி அயர்வுற வேண்டா
புரிவுடை யாளர்க்குப் பொய்யலன் ஈசன்
பரிவொடு நின்று பரிசறி வானே. ௨

335 ஆழி வலங்கொண் டயன்மால் இருவரும்
ஊழி வலஞ்செய்ய ஒண்சுட ராதியும்
ஆழி கொடுத்தனன் அச்சுதற் கவ்வழி
வாழி பிரமற்கும் வாள்கொடுத் தானே. ௩

336 தாங்கி இருபது தோளுந் தடவரை
ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி
ஆங்கு நெரித்தம ராவென் றழைத்தபின்
நீங்கா அருள்செய்தான் நின்மலன் தானே. ௪

337 உறுவ(து) அறிதண்டி ஒண்மணற் கூட்டி
அறுவகை ஆன்ஐந்தும் ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் றானே. ௫

338 ஓடிவந் தெல்லாம் ஒருங்கிய தேவர்கள்
வாடி முகமும் வருத்தத்துத் தாஞ்சென்று

நாடி இறைவா நமனென்று கும்பிட
ஈடில் புகழோன் எழுகவென் றானே. ௯

## 4. தக்கன் வேள்வி

339 தந்தைபி ரான்வெகுண் டான்தக்கன் வேள்வியை
வெந்தழல் ஊடே புறப்பட விண்ணவர்
முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்
சிந்தினர் அண்ணல் சினஞ்செய்த போதே. ௧

340 சந்தி செயக்கண் டெழுகின் றரிதானும்
எந்தை யிவனல்ல யாமே உலகினிற்
பந்தஞ்செய் பாசத்து வீழ்ந்து தவஞ்செய்ய
அந்தமி லானும் அருள்புரிந் தானே. ௨

341 அப்பரி சேயய னார்பதி வேள்வியுள்
அப்பரி சேயங்கி அதிசய மாகிலும்
அப்பரி சேயது நீர்மையை யுள்கலந்
தப்பரி சேசிவன் ஆலிக்கின் றானே. ௩

342 அப்பரி சேஅயன் மால்முதல் தேவர்கள்
அப்பரி சேயவ ராகிய காரணம்
அப்பரி சங்கி யுளநாளும் உள்ளிட்
டப்பரி சாகி அலர்ந்திருந் தானே. ௪

343 அலர்ந்திருந் தானென் றமரர் துதிப்பக்
குலந்தருங் கீழங்கி கோளுற நோக்கிச்
சிவந்த பரமிது சென்று கதுவ
உவந்த பெருவழி யோடிவந் தானே. ௫

344 அரிபிர மன்தக்கன் அருக்க னுடனே
வருமதி வாலை வன்னிநல் இந்திரன்
சிரமுக நாசி சிறந்தகை தோள்தான்
அரனருள் இன்றி அழிந்தநல் லோரே. ௬

345 செவிமந் திரஞ்சொல்லுஞ் செய்தவத் தேவர்
அவிமந் திரத்தின் அடுக்களை கோலிச்
செவிமந் திரஞ்செய்து தாமுற நோக்குங்
குவிமந் திரங்கொல் கொடியது வாமே. ௭

346 நல்லார் நவகுண்டம் ஒன்பதும் இன்புறப்
பல்லார் அமரர் பரிந்தருள் செய்கென
வில்லாற் புரத்தை விளங்கெரி கோத்தவன்
பொல்லா அசுரர்கள் பொன்றும் படிக்கே. ௮

347 தெளிந்தார் கலங்கினும் நீகலங் காதே
அளிந்தாங் கடைவதெம் ஆதிப் பிரானை
விளிந்தானத் தக்கன்அவ் வேள்வியை வீயச்
சுளிந்தாங் கருள்செய்த தூய்மொழி யானே. ௬

## 5. பிரளயம்

348 கருவரை மூடிக் கலங்கெழும் வெள்ளத்
திருவருங் கோவென் றிகல இறைவன்
ஒருவனும் நீருற ஓங்கொளி யாகி
அருவரை யாய்நின் றருள்புரிந் தானே. ௧

349 அலைகடல் ஊடறுத் தண்டத்து வானோர்
தலைவன் எனும்பெயர் தான்றலை மேற்கொண்
டுலகார் அழற்கண் டுள்வீழா தோடி
அலைவாயில் வீழாமல் அஞ்சலென் றானே. ௨

350 தண்கடல் விட்ட தமரருந் தேவரும்
எண்கடல் சூழெம் பிரானென் றிறைஞ்சுவர்
விண்கடல் செய்தவர் மேலெழுந் தப்புறங்
கண்கடல் செய்யுங் கருத்தறி யாரே. ௩.

351 சமைக்கவல் லானைச் சயம்புவென் றேத்தி
அமைக்கவல் லாரிவ் வுலகத்து ளாரே
திகைத்ததெண் ணீரிற் கடலொலி ஓசை
மிகைக்கொள அங்கி மிகாமைவைத் தானே. ௪

352 பண்பழி செய்வழி பாடுசென் றப்புறங்
கண்பழி யாத கமலத் திருக்கின்ற
நண்பழி யாளனை நாடிச்சென் றச்சிரம்
விண்பழி யாத விருத்திகொண் டானே. ௫

## 6. சக்கரப் பேறு

353 மால்போ தகனென்னும் வண்மைக்கிங் காங்காரங்
கால்போதங் கையினோ டந்தரச் சக்கர
மேல்போக வெள்ளி மலைஅம ராபதி
பார்போக மேழும் படைத்துடை யானே. ௧

354 சக்கரம் பெற்றுநல் தாமோ தரன்தானும்
சக்கரந் தன்னைத் தரிக்கவொண் ணுமையால்
மிக்கான் தன்னை விருப்புடன் அர்ச்சிக்கத்
தக்கநற் சத்தியைத் தான்கூறு செய்ததே. ௨

355 கூறது வாகக் குறித்துநற் சக்கரங்
கூறது செய்து கொடுத்தனன் மாலுக்குக்
கூறது செய்து கொடுத்தனன் சத்திக்குக்
கூறது செய்து தரித்தனன் கோலமே. ௯

356 தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பால்
தக்கன்றன் வேள்வியில் தாமோ தரன்தானுஞ்
சக்கரந் தன்னைச் சசிமுடி மேல்விட
அக்கி உமிழ்ந்தது வாயுக் கரத்திலே. ௰

## 7. எலும்பும் கபாலமும்

357 எலும்புங் கபாலமும் ஏந்தி எழுந்த
வலம்பன் மணிமுடி வானவ ராதி
எலும்புங் கபாலமும் ஏந்தில னாகில்
எலும்புங் கபாலமும் இற்றுமண் ணாமே. ௧

## 8. அடிமுடி தேடல்

358 பிரமனும் மாலும் பிரானேநான் என்னப்
பிரமன்மால் தங்கள்தம் பேதைமை யாலே
பரமன் அனலாய்ப் பரந்துமுன் நிற்க
அரனடி தேடி அரற்றுகின் றாரே. ௧

359 அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்
படிகண் டிலர்மீண்டும் பார்மிசைக் கூடி
அடிகண் டிலேனென் றச்சுதன் சொல்ல
முடிகண்டேன் என்றயன் பொய்மொழிந் தானே. ௨

360 ஆமே ழுலகுற நின்றஎம் அண்ணலுந்
தாமே ழுலகில் தழற்பிழம் பாய்நிற்கும்
வானே ழுலகுறும் மாமணி கண்டனை
நானே அறிந்தேன் அவன்ஆண்மை யாலே. ௩

361 ஊனாய் உயிராய் உணர்வங்கி யாய்முன்னஞ்
சேணாய்வா னோங்கித் திருவுரு வாய்அண்டத்
தாணுவும் ஞாயிறுந் தண்மதி யுங்கடந்
தாண்முழு தண்டமு மாகிநின் றானே. ௪

362 நின்றான் நிலமுழு தண்டத்துள் நீளியன்
அன்றே யவன்வடி வஞ்சின ராய்ந்தது
சென்றார் இருவர் திருமுடி மேற்செல
நன்றாங் கழலடி நாடவொண் ணாதே. ௫

363 சேவடி ஏத்துஞ் செறிவுடை வானவர்
மூவடி தாவென் றானும் முனிவரும்
பாவடி யாலே பதஞ்செய் பிரமனுந்
தாவடி யிட்டுத் தலைப்பெய்து மாறே. ௬

364 தானக் கமலத் திருந்த சதுமுகன்
தானக் கருங்கட லூழித் தலைவனும்
ஊனத்தின் உள்ளே உயிர்போல் உணர்கின்ற
தானப் பெரும்பொருள் தன்மைய தாமே. ௭

365 ஆலிங் கனஞ்செய் தெழுந்த பரஞ்சுடர்
மேலிங்ஙன் வைத்ததோர் மெய்ந்நெறி முன்கண்
டாலிங் கனஞ்செய் துலகம் வலம்வருங்
கோலிங் கமைஞ்சருள் கூடலு மாமே. ௮

366 வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்கள்
ஆள்கொடுத் தெம்போல் அரனை அறிகிலர்
ஆள்கொடுத் தின்பங் கொடுத்துக்கோ ளாகத்
தாள்கொடுத் தானடி சாரகி லாரே. ௯

367 ஊழி வலஞ்செய்தங் கோரும் ஒருவற்கு
வாழி சதுமுகன் வந்து வெளிப்படும்
வீழித் தலைநீர் விதித்தது தாவென
ஊழிக் கதிரோன் ஒளியைவென் றானே. ௧௦

## 9. படைப்பு

368 ஆதியோ டந்தம் இலாத பராபரம்
போதம தாகப் புணரும் பராபரை
சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாந்
தீதில் பரையதன் பால்திகழ் நாதமே. ௧

369 நாதத்தில் விந்துவும் நாதவிந் துக்களில்
தீதற் றகம்வந்த சிவன்சத்தி என்னவே
பேதித்து ஞானங் கிரியை பிறத்தலால்
வாதித்த விச்சையில் வந்தெழும் விந்துவே. ௨

370 இல்லது சத்தி இடந்தனில் உண்டாகிக்
கல்லொளி போலக் கலந்துள் ளிருந்திடும்
வல்லது ஆக வழிசெய்த அப்பொருள்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமே. ௩

371 தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியாய்
ஆர்வத்து நாதம் அணைந்தொரு விந்துவாய்ப்

பாரச் சதாசிவம் பார்முதல் ஐந்துக்கும்
சார்வத்துச் சத்திஓர் சாத்துமா னாமே. ௪

372 மானின்கண் வானாகி வாயு வளர்ந்திடும்
கானின்கண் நீருங் கலந்து கடினமாய்த்
தேனின்கண் ஐந்துஞ் செறிந்தைந்து பூதமாய்ப்
பூவின்கண் நின்று பொருந்தும் புவனமே. ௫

373 புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திரர் ஐவர்
புவனம் படைப்பானும் பூமிசை யானாய்ப்
புவனம் படைப்பானப் புண்ணியன் தானே. ௬

374 புண்ணியன் நந்தி பொருந்தி உலகெங்கும்
தண்ணிய மானை வளர்த்திடுஞ் சத்தியுங்
கண்ணியல் பாகக் கலவி முழுதுமாய்
மண்ணியல் பாக மலர்ந்தெழு பூவிலே. ௭

375 நீரகத் தின்பம் பிறக்கும் நெருப்பிடை
காயத்திற் சோதி பிறக்கும்அக் காற்றிடை
ஓர்வுடை நல்லுயிர்ப் பாதம் ஒலிசத்தி
நீரிடை மண்ணின் நிலைப்பிறப் பாமே. ௮

376 உண்டுல கேழும் உமிழ்ந்தான் உடனாகி
அண்டத் தமரர் தலைவனும் ஆதியுங்
கண்டச் சதுமுகக் காரணன் தன்னொடும்
பண்டிவ் வுலகம் படைக்கும் பொருளே. ௯

377 ஒக்கு பெருங்கடல் உள்ளுறு வானொடும்
பாங்கார் கயிலைப் பராபரன் தானும்
வீங்குங் கமல மலர்மிசை மேலயன்
ஆங்குயிர் வைக்கும் அதுவுணர்ந் தானே. ௧௦

378 காரணன் அன்பிற் கலந்தெங்கும் நின்றவன்
நாரணன் நின்ற நடுவுட லாய்நிற்கும்
பாரணன் அன்பிற் பதஞ்செய்யும் நான்முகன்
ஆரண மாய்உல காயமர்ந் தானே. ௧௧

379 பயன்எளி தாம்பரு மாமணி செய்ய
நயன்எளி தாகிய நம்பன்ஒன் றுண்டு
அயன்ஒளி யாயிருந் தங்கே படைக்கும்
பயனெளி தாம்வய ணந்தெளிந் தேனே. ௧௨

380 போக்கும் வரவும் புனிதன் அருள்புரிந்
தாக்கமுஞ் சிந்தைய தாகின்ற காலத்து

மேக்கு மிகநின்ற எட்டுத் திசையொடுந்
தாக்குங் கலக்குந் தயாபரன் தானே. கந

381 நின்றுயி ராக்கு நிமலன்என் னுருயிர்
ஒன்றுயி ராக்கும் அளவை உடலுற
முன்துய ராக்கும் உடற்குந் துணையதா
நன்றுயிர்ப் பானே நடுவுநின் றானே. கச

382 ஆகின்ற தன்மையில் அக்கணி கொன்றையன்
வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன்
போகின்ற சீவன் புகுந்துட லாய்உளன்
ஆகின்ற தன்மைசெய் ஆண்டகை யானே. கரு

383 ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்
இருவர் விளையாட்டும் எல்லாம் விளக்கும்
பருவங்கள் தோறும் பயன்பல வான
திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே. கசு

384 புகுந்தறி வான்புவ னாபதி அண்ணல்
புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல்
புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள்
புகுந்தறி யும்முடிக் காகிநின் றாரே. கஎ

385 ஆணவச் சத்தியும் ஆம்அதில் ஐவருங்
காரிய காரண ஈசர் கடைமுறை
பேணிய ஐந்தொழி லால்விந்து விற்பிறந்
தாணவம் நீங்கா தவரென லாகுமே. கஅ

386 உற்றமுப் பாலொன்று மாயாள் உதயமா
மற்றைய மூன்று மாயோ தயம்விந்து
பெற்றவன் நாதம் பரையிற் பிறத்தலால்
துற்ற பரசிவன் தொல்விளை யாட்டிதே. ககூ

387 ஆகாய மாதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர்
மாகாய ஈசன் அரன்மால் பிரமனும்
ஆகாயம் பூமி காண அளித்தலே. உ௦

388 அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னில்
அளியார் திரிபுரை யாம்அவள் தானே
அளியார் சதாசிவ மாகி அமைவாள்
அளியார் கருமங்கள் ஐந்துசெய் வாளே. உக

389 வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி
காரணி காரிய மாகக் கலந்தவள்

வாரணி ஆரணி வானவர் மோகினி
பூரணி போதாதி போதமு மாமே. ௨௨

390 நின்றது தானுய்ந் நின்றந்த மகேசுரன்
சென்றங் கியங்கும் அரன்திரு மாலவன்
மன்றது செய்யும் மலர்மிசை மேலயன்
என்றிவ ராக இசைந்திருந் தானே. ௨௩

391 ஒருவனு மேஉல கேழும் படைத்தான்
ஒருவனு மேஉல கேழும் அளித்தான்
ஒருவனு மேஉல கேழும் துடைத்தான்
ஒருவனு மேஉல கோடுயிர் தானே. ௨௪

392 செந்தா மரைவண்ணன் தீவண்ணன் எம்இறை
மைந்தார் முகில்வண்ணன் மாயஞ்செய் பாசத்தும்
கொந்தார் குழலியர் கூடிய கூட்டத்தும்
அந்தார் பிறவி அறுத்துநின் றானே. ௨௫

393 தேடுந் திசைஎட்டுஞ் சிவன் உடல்உயிர்
கூடும் பிறவிக் குணஞ்செய்த மாநந்தி
ஊடு மவர்தம துள்ளத்தின் உள்நின்று
நாடும் வழக்கமும் நான்அறிந் தேனே. ௨௬

394 ஓராய மேஉல கேழும் படைப்பதும்
ஓராய மேஉல கேழும் அளிப்பதும்
ஓராய மேஉல கேழும் துடைப்பதும்
ஓராய மேஉல கோடுயிர் தானே. ௨௭

395 நாதன் ஒருவனும் நல்ல இருவருங்
கோது குலத்தொடுங் கூட்டிக் குழைத்தனர்
ஏது பணியென் றிசையும் இருவருக்
காதி இவனே அருளுகின் றானே. ௨௮

396 அப்பரி சென்பத்து நான்குநா றாயிரம்
மெய்ப்பரி செய்தி விரிந்துயி ராய்நிற்கும்
பொய்ப்பரி செய்திப் புகலும் மனிதர்கட்
கிப்பரி சேஇறை கூடிநின் றானே. ௨௯

397 ஆதித்தன் சந்திரன் அங்கிஎண் பாலர்கள்
போதித்த வாறெலி பொங்கிய நீர்புவி
வாதித்த சத்தாதி வாக்கு மனாதிகள்
ஓதுற்ற மாயையின் விந்துவின் உற்றதே. ௩௦

## 10. காப்பு

398 புகுந்துநின் றான்வெளி யாய்இரு ளாகிப்
புகுந்துநின் றான்புகழ் வாய்இகழ் வாகிப்
புகுந்துநின் றான்உட லாய்உயி ராகிப்
புகுந்துநின் றான்புந்தி மன்னிநின் றானே. க

399 தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே உடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே கடல்மலை யாதியு மாய்நிற்குந்
தானே உலகில் தலைவனு மாமே. உ

400 உடலாய் உயிராய் உலகம தாகிக்
கடலாய்க் கார்முகில் நீர்பொழி வானாய்
இடையாய் உலப்பிலி எங்குந்தா னாகி
அடையார் பெருவழி அண்ணல்நின் றானே. ந

401 தானொரு காலந் தனிச்சுட ராய்நிற்குந்
தானொரு கால்சண்ட மாருத மாய்நிற்குந்
தானொரு காலந் தண்மழை யாய்நிற்குந்
தானொரு காலந்தண் மாயனு மாமே. ச

402 அன்பும் அறிவும் அடக்கமு மாய்நிற்கும்
இன்பமும் இன்பக் கலவியு மாய்நிற்கும்
முன்புறு காலமும் ஊழியு மாய்நிற்கும்
அன்புற ஐந்தில் அமர்ந்துநின் றானே. ரு

403 உற்று வளைவான் அவனே உலகினைப்
பெற்று வளைவான் அவனே பிறவியைச்
சுற்றிய சாலும் குடமுஞ் சிறுதூதை
மற்றும் அவனே வளையவல் லானே. சு

404 உள்ளுயிர்ப் பாயுட லாகிநின் றான்நந்தி
வெள்ளுயி ராகும் வெளியாய் நிலங்கொளி
உள்ளுயிர்க் கும்உணர் வேயுட லுட்பரந்
தள்ளுயி ராவண்ணந் தாங்கிநின் றானே. எ

405 தாங்கருந் தன்மையுந் தானவை பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் பிறிதில்லை
ஓங்கி எழுமைக்கும் யோகாந்த மவ்வழி
தாங்கிநின் றானும்அத் தாரணி தானே. அ

406 அணுகினுஞ் சேயவன் அங்கியிற் கூடி
நணுகினும் ஞானக் கொழுந்தொன்று நல்கும்

பணிகினும் பார்மிசைப் பல்லுயி ராகித்
தணிகினும் மண்ணுடல் அண்ணல்செய் வானே. ௯

## 11. அழிப்பு

407 அங்கிசெய் தீசன் அகலிடஞ் சுட்டது
அங்கிசெய் தீசன் அலைகடற் சுட்டது
அங்கிசெய் தீசன் அசுரரைச் சுட்டது
அங்கியவ் வீசற்குக் கைஅம்பு தானே. ௧

408 இலயங்கள் மூன்றினும் ஒன்றாகப் பார்க்க
நிலையன் றழிந்தமை நின்றுணர்ந் தேனால்
உலைதந்த மெல்லரி போலும் உலகம்
மலைதந்த மாநிலந் தான்வெந் ததுவே. ௨

409 பதஞ்செய்யும் பாரும் பனிவரை எட்டும்
உதஞ்செய்யும் ஏழ்கடல் ஓதம் முதலாங்
குதஞ்செய்யும் அங்கி கொளுவியா காசம்
விதஞ்செய்யும் நெஞ்சில் வியப்பில்லை தானே. ௩

410 கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி
அண்டத்துள் ஊறி யிருந்தெண் டிரையாகி
ஒன்றின் பதஞ்செய்த ஓம்என்ற அப்புறக்
குண்டத்தின் மேல்அங்கி கோலிக்கொண் டானே. ௪

411 நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்
வைத்தசங் காரமுஞ் சாக்கிரா தீதமாஞ்
சுத்தசங் காரந் தொழிலற்ற கேவலம்
உய்த்தசங் காரம் பரன்அருள் உண்மையே. ௫

412 நித்தசங் காரம் இரண்டுடல் நீவுதல்
வைத்தசங் காரமும் மாயாசங் காரமாஞ்
சுத்தசங் காரம் மனாதீதந் தோய்வுறல்
உய்த்தசங் காரஞ் சிவன்அருள் உண்மையே. ௬

413 நித்தசங் காரங் கருவிடர் நீக்கினால்
ஒத்தசங் காரம் உடலுயிர் நீவுதல்
சுத்தசங் காரம் அதீதத்துட் டோய்வுறல்
உய்த்தசங் காரம் பரனருள் உண்மையே. ௭

414 நித்தசங் காரமும் நீடிளைப் பாற்றலின்
வைத்தசங் காரமும் மன்னும் அநாதியிற்
சுத்தசங் காரமுந் தோயாப் பரன்அருள்
உய்த்தசங் காரமும் நாலாம் உதிக்கிலே. ௮

415 பாழே முதலா எழும்பயிர் அப்பயிர்
பாழாய் அடங்கினும் பண்டைப்பாழ் பாழாகா
வாழாச்சங் காரத்தின் மாலயன் செய்தியாம்
பாழாம் பயிராய் அடங்கும்அப் பாழிலே. ௯

416 தீயவைத் தார்மின்கள் சேரும் வினைதனை
மாயவைத் தான்வைத்த வன்பதி ஒன்றுண்டு
காயம்வைத் தான்கலந் தெங்கும் நினைப்பதோர்
ஆயம்வைத் தானுணர் வாரவைத் தானே. ௧௦

## 12. மறைப்பு

417 உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா ஒருவனை
உள்ளமுந் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருவறி யாதே. ௧

418 இன்பப் பிறவி படைத்த இறைவனுந்
துன்பஞ்செய் பாசத் துயருள் அடைத்தனன்
என்பிற் கொளுவி இசைந்துறு தோற்றசை
முன்பிற் கொளுவி முடிகுவ தாமே. ௨

419 இறையவன் மாதவன் இன்பம் படைத்த
மறையவன் மூவரும் வந்துடன் கூடி
இறையவன் செய்த இரும்பொறி யாக்கை
மறையவன் வைத்த பரிசறி யாதே. ௩

420 காண்கின்ற கண்ணொளி காதல்செய் ஈசனை
ஆண்பெண் அலியுரு வாய்நின்ற ஆதியை
ஊண்படு நாவுடை நெஞ்சம் உணர்ந்திட்டுச்
சேண்படு பொய்கைச் செயலணை யாரே. ௪

421 தெருளும் உலகிற்குந் தேவர்க்கும் இன்பம்
அருளும் வகைசெய்யும் ஆதிப் பிரானுஞ்
சுருளுஞ் சுடருறு தூவெண் சுடரும்
இருளும் அறநின் றிருட்டறை யாமே. ௫

422 அரைக்கின் றருள்தரும் அங்கங்கள் ஓசை
உரைக்கின்ற ஆசையும் ஒன்றொன்றொன் றெவ்வாப்
பரக்கும் உருவமும் பாரகந் தானாய்க்
கரக்கின் றவைசெய்த காண்டகை யானே. ௬

423 ஒளித்துவைத் தேனுள் ளூறவுணர்ந் தீசனை
வெளிப்பட்டு நின்றருள் செய்திடு மீண்டே

களிப்பொடுங் காதன்மை என்னும் பெருமை
வெளிப்பட் டிறைஞ்சினும் வேட்சியு மாமே. ௭

424 ஒருங்கிய பாசத்துள் உத்தம சித்தின்
இருங்கரை மேலிருந் தின்புற நாடி
வருங்கரை ஓரா வகையினிற் கங்கை
அருங்கரை பேணில் அழுக்கற லாமே. ௮

425 மண்ணொன்று தான்பல நற்கல மாயிடும்
உண்ணின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா
அண்ணலும் இவ்வண்ண மாகிநின் றானே. ௯

## 13. அருளல்

426 எட்டுத் திசையும் எறிகின்ற காற்றொடு
வட்டத் திரையனல் மாநிலம் ஆகாயம்
ஒட்டி உயிர்நிலை என்னும்இக் காயப்பை
கட்டி அவிழ்ப்பன் கண்ணுதல் காணுமே. ௧

427 உச்சியில் ஓங்கி ஒளிதிகழ் நாதத்தை
நச்சியே இன்பங்கொள் வார்க்கு நமன்இல்லை
விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்குத்
தச்சு மவனே சமைக்கவல் லானே. ௨

428 குசவன் திரிகையில் ஏற்றிய மண்ணைக்
குசவன் மனத்துற்ற தெல்லாம் வனைவன்
குசவனைப் போல்எங்கள் கோன்நந்தி வேண்டில்
அசைவில் உலகம் அதுஇது வாமே. ௩

429 விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்
படையுடை யான்பரி சேஉல காக்குங்
கொடையுடை யான்குணம் எண்குண மாகுஞ்
சடையுடை யான்சிந்தை சார்ந்துநின் றானே. ௪

430 உகந்துநின் றேபடைத் தான்உல கேழும்
உகந்துநின் றேபடைத் தான்பல ஊழி
உகந்துநின் றேபடைத் தான்ஐந்து பூதம்
உகந்துநின் றேஉயிர் ஊன்படைத் தானே. ௫

431 படைத்துடை யான்பண் டுலகங்கள் ஏழும்
படைத்துடை யான்பல தேவரை முன்னே
படைத்துடை யான்பல சீவரை முன்னே
படைத்துடை யான்பர மாகிநின் றானே. ௬

432 ஆதி படைத்தனன் ஐம்பெரும் பூதம்
ஆதி படைத்தனன் ஆசில்பல் ஊழி
ஆதி படைத்தனன் எண்ணிலி தேவரை
ஆதி படைத்தவை தாங்கிநின் றானே. எ

433 அகன்றான் அகலிடம் ஏழுமொன் றாகி
இவன்றா னெனநின் றெளியனும் அல்லன்
சிவன்றான் பலபல சீவனும் ஆகி
நவின்றான் உலகுறு நம்பனு மாமே. அ

434 உண்ணின்ற சோதி உறநின்ற ஓருடல்
விண்ணின் றமரர் விரும்பும் விழுப்பொருள்
மண்ணின்ற வானோர் புகழ்திரு மேனியன்
கண்ணின்ற மாமணி மாபோத மாமே. சு

435 ஆரும் அறியாத அண்டத் திருவுருப்
பார்முத லாகப் பயிலுங் கடத்திலே
நீரினிற் பால்போல நிற்கின்ற நேர்மையைச்
சோராமற் காணுஞ் சுகம்அறிந் தேனே. க0

## 14. கரு உற்பத்தி

436 ஆக்குகின் றான்முன் பிரிந்த இருபதஞ்
சாக்குகின் றானவ னாதிஎம் ஆருயிர்
ஆக்குகின் றான்கர்ப்பக் கோளகை யுள்ளிருந்
தாக்குகின் றான்அவன் ஆவ தறிந்தே. க

437 அறிகின்ற மூலத்தின் மேல்அங்கி அப்புச்
செறிகின்ற ஞானத்துச் செந்தாள் கொளுவிப்
பொறைநின்ற இன்னுயிர் போந்துற நாடிப்
பறிகின்ற பத்தெனும் பாரஞ்செய் தானே. உ

438 இன்புறு காலத் திருவர்முன் பூறிய
துன்புறு பாசத் துயர்மனை வாழுளன்
பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையும்
அன்புறு காலத் தமைத்தொழிந் தானே. ௩

439 கருவை ஒழிந்தவர் கண்டநால் மூவேழ்
புருடன் உடலில் பொருந்துமற் றோரார்
திருவின் கருக்குழி தேடிப் புகுந்த
துருவம் இரண்டாக ஓடி விழுந்ததே. ச

440 விழுந்தது லிங்கம் விரிந்தது யோனி
ஒழிந்த முதல்ஐந்தும் ஈரைந்தொ டேறிப்

பொழிந்த புனல்பூதம் போற்றுங் கரணம்
ஒழிந்த நுதல்உச்சி உள்ளே ஒளித்ததே. ரு

441 பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவுந்
தாவி உலகில் தரிப்பித்த வாறுபோல்
மேவிய சீவனில் மெல்லநீள் வாயுவுங்
கூவி அவிழுங் குறிக்கொண்ட போதே. சு

442 ஏற எதிர்க்கில் இறையவன் றானாகும்
மாற எதிர்க்கில் அரியவன் றானாகும்
நேரொக்க வைக்கின் நிகர்போதத் தானாகும்
பேரொத்த மைந்தனும் பேரர சாளுமே. எ

443 ஏயங் கலந்த இருவர்தஞ் சாயத்துப்
பாயுங் கருவும் உருவா மெனப்பல
காயங் கலந்தது காணப் பதிந்தபின்
மாயங் கலந்த மனோலய மானதே. அ

444 கர்ப்பத்துக் கேவல மாயாள் கிளைகூட்ட
நிற்குந் துரியமும் பேதித்து நினைவெழ
வற்புறு காமியம் எட்டாதல் மாயேயஞ்
சொற்புறு தூய்மறை வாக்கினுஞ் சொல்லே. கூ

445 என்பால் மிடைந்து நரம்பு வரிக்கட்டிச்
செம்பால் இறைச்சி திருந்த மனைசெய்து
இன்பால் உயிர்நிலை செய்த இறைபோங்கும்
நன்பால் ஒருவனை நாடுகின் றேனே. கo

446 பதஞ்செய்யும் பால்வண்ணன் மேனிப் பகலோன்
இதஞ்செய்யு மொத்துடல் எங்கும் புகுந்து
குதஞ்செய்யும் அங்கியின் கோபந் தணிப்பான்
விதஞ்செய்யு மாறே விதித்தொழிந் தானே. கக

447 ஒழிபல செய்யும் வினையுற்ற நாளே
வழிபல நீராடி வைத்தெழ வாங்கிப்
பழிபல செய்கின்ற பாசக் கருவைச்
சுழிபல வாங்கிச் சுடாமல்வைத் தானே. கஉ

448 சுக்கில நாடியில் தோன்றிய வெள்ளியும்
அக்கிர மத்தே தோன்றுமவ் வியோனியும்
புக்கிடும் எண்விரல் புறப்பட்டு நால்விரல்
அக்கரம் எட்டும்எண் சாணது வாகுமே. கங

449 போகத்துள் ஆங்கே புகுந்த புனிதனுங்
கோசத்துள் ஆகங் கொணர்ந்த கொடைத்தொழில்
ஏகத்துள் ஆங்கே இரண்டெட்டு மூன்றைந்து
மோகத்துள் ஆங்கொரு முட்டைசெய் தானே. கச

450 பிண்டத்தில் உள்ளுறு பேதைப் புலன்ஐந்தும்
பிண்டத்தி னூடே பிறந்து மரித்தது
அண்டத்தின் உள்ளுறு சிவனும் அவ்வகை
அண்டத்து நாதத் தமர்ந்திடுந் தானே. கரு

451 இலைப்பொறி யேற்றி யெனதுடல் ஈசன்
துலைப்பொறி யிற்கரு ஐந்துட னாட்டி
நிலைப்பொறி முப்பது நீர்மை கொளுவி
உலைப்பொறி ஒன்பதில் ஒன்றுசெய் தானே. கசு

452 இன்புற் றிருவர் இசைவித்து வைத்தமண்
துன்பக் கலசம் அணைவான் ஒருவனே
ஒன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு
வெந்தது சூளை விளைந்தது தானே. கஎ

453 அறியீ ருடம்பினி லாகிய வாறும்
பிறியீ ரதனிற் பெருகுங் குணங்கள்
செறியீ ரவற்றினுட் சித்திகள் இட்ட
தறியவீ ரைந்தினு ளானது பிண்டமே. கஅ

454 உடல்வைத்த வாறும் உயிர்வைத்த வாறும்
மடைவைத்த ஒன்பது வாய்தலும் வைத்துத்
திடம்வைத்த தாமரைச் சென்னியுள் அங்கிக்
கடைவைத்த ஈசனைக் கைகலந் தேனே. ககூ

455 கேட்டுநின் றேன்எங்குங் கேடில் பெருஞ்சுடர்
மூட்டுகின் றான்முதல் யோனி மயனவன்
கூட்டுகின் றான்குழம் பின்கரு வையுரு
நீட்டிநின் றாகத்து நேர்பட்ட வாறே. உ0

456 பூவுடன் மொட்டுப் பொருந்த அலர்ந்தபின்
காவுடைத் தீபங் கலந்து பிறந்திடும்
நீரிடை நின்ற குமிழி நிழலதாய்ப்
பாருடல் எங்கும் பரந்தெட்டும் பற்றுமே. உக

457 எட்டினுள் ஐந்தாகும் இந்திரி யங்களுங்
கட்டிய மூன்று கரணமு மாய்விடும்
ஒட்டிய பாச உணர்வென்னுங் காயப்பை
கட்டி அவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. உஉ

458 கண்ணுதல் நாமங் கலந்துடம் பாயிடைப்
பண்ணுதல் செய்து பசுபாசம் நீங்கிட
எண்ணிய வேதம் இசைத்த பரப்பினை
மண்முத லாக வகுத்துவைத் தானே. உ௩

459 அருளல்ல தில்லை அரனவன் அன்றி
அருளில்லை யாதலி னவ்வோர் உயிரைத்
தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே. உ௪

460 வகுத்த பிறவியை மாதுநல் லாளுந்
தொகுத்திருள் நீக்கிய சோதி யவனும்
பகுத்துணர் வாகிய பல்லுயிர் எல்லாம்
வகுத்துள்ளும் நின்றதோர் மாண்பது வாமே. உ௫

461 மாண்பது வாக வளர்கின்ற வன்னியுங்
காண்பது ஆண்பெண் அலியெனுங் கற்பனை
பூண்பது மாதா பிதாவழி போலவே
ஆம்பதி செய்தானச் சோதிதன் ஆண்மையே. உ௬

462 ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகிற் பெண்ணாகும்
பூணிரண் டொத்துப் பொருந்தில் அலியாகும்
தாண்மிகு மாகில் தரணி முழுதாளும்
பாணவ மிக்கிடில் பாய்ந்ததும் இல்லையே. உ௭

463 பாய்ந்தபின் னஞ்சோடில் ஆயுளும் நூறாகும்
பாய்ந்தபின் னாலோடில் பாரினில் எண்பதாம்
பாய்ந்திடும் வாயுப் பகுத்தறிந் திவ்வகை
பாய்ந்திடும் யோகிக்குப் பாய்ச்சலு மாமே. உ௮

464 பாய்கின்ற வாயு குறையிற் குறளாகும்
பாய்கின்ற வாயு விளைக்கின் முடமாகும்
பாய்கின்ற வாயு நடுப்படிற் கூனாகும்
பாய்கின்ற வாயுமா தர்க்கில்லை பார்க்கிலே. உ௯

465 மாதா உதரம் மலமிகில் மந்தனாம்
மாதா உதரம் சலமிகில் மூங்கையாம்
மாதா உதரம் இரண்டொக்கில் கண்ணில்லை
மாதா உதரத்தில் வந்த குழவிக்கே. ௩௦

466 குழவியும் ஆணாம் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணாம் இடத்தது வாகில்
குழவியும் இரண்டாம் அபான னெதிர்க்கில்
குழவி அலியாகுங் கொண்டகால் ஒக்கிலே. ௩௧

467 கொண்டநல் வாயு இருவர்க்கும் ஒத்தெழில்
கொண்ட குழவியுங் கோமள மாயிடுங்
கொண்டநல் வாயு இருவர்க்குங் குழறிடில்
கொண்டதும் இல்லையாங் கோல்வளை யாட்கே. ௩௨

468 கோல்வளை உந்தியிற் கொண்ட குழவியுந்
தால்வளை யுள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந் துள்ளே பகலவன் பொன்னுருப்
போல்வளர்ந் துள்ளே பொருந்துரு வாமே. ௩௩

469 உருவம் வளர்ந்திடும் ஒண்டிங்கள் பத்திற்
பருவம தாகவே பாரினில் வந்திடும்
மருவி வளர்ந்திடு மாயையி னாலே
அருவம தாவதிங் காரறி வாரே. ௩௪

470 இட்டான் அறிந்திலன் ஏற்றவள் கண்டிலள்
தட்டான் அறிந்தும் ஒருவர்க் குரைத்திலன்
பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்
கெட்டேன்இம் மாயையின் கீழ்மையெவ் வாறே. ௩௫

471 இன்புற நாடி இருவருஞ் சந்தித்துத்
துன்புறு பாசத்தில் தோன்றி வளர்ந்தபின்
முன்புற நாடி நிலத்தின்முன் தோன்றிய
தொன்புற நாடிநின் றோதலு மாமே. ௩௬

472 குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக்கூட் டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல்
இயக்கில்லை போக்கில்லை ஏனென்ப தில்லை
மயக்கத்தால் காக்கை வளர்க்கின்ற வாறே. ௩௭

473 முதற்கிழங் காய்முளை யாய்அம் முளைப்பின்
அதற்புத லாய்ப்பல மாய்நின் றளிக்கும்
அதற்கது வாய்இன்ப மாவது போல
அதற்கது வாய்நிற்கும் ஆதிப் பிரானே. ௩௮

474 பரத்திற் கரைந்து பதிந்தநற் காயம்
உருத்தரித் திவ்வுடல் ஓங்கிட வேண்டித்
திரைக்கடல் உப்புத் திரண்டது போலத்
திரித்துப் பிறக்குந் திருவரு ளாலே. ௩௯

## 15. மூவகைச் சீவவர்க்கம்

475 சத்தி சிவன்விளை யாட்டால் உயிராக்கி
ஒத்த இருமாயா கூட்டத் திடைபூட்டிச்

சுத்தம தாகுந் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவமய மாக்குமே. க

476 விஞ்ஞானர் நால்வரு மெய்ப்பிரள யாகலத்
தஞ்ஞானர் மூவருந் தங்கு சகலத்தின்
அஞ்ஞானர் மூவரு மாகும் பதின்மராம்
விஞ்ஞான ராதியர் வேற்றுமை தானே. உ

477 விஞ்ஞானர் கேவலத் தாரது விட்டவர்
தஞ்ஞானர் அட்டவித் தேசராஞ் சார்ந்துளோர்
எஞ்ஞானர் ஏழ்கோடி மந்திர நாயகர்
மெய்ஞ்ஞானர் ஆணவம் விட்டுநின் றாரே. ந

478 இரண்டா வதில்முத்தி எய்துவர் அத்தனை
இரண்டாவ துள்ளே இருமல பெத்தர்
இரண்டாகு நூற்றெட்டு ருத்திரர் என்பர்
முரண்சேர் சகலத்தர் மும்மலத் தாரே. ச

479 பெத்தத்த சித்தொடு பேண்முத்தச் சித்தது
ஒத்திட் டிரண்டிடை யூடுற்றார் சித்துமாய்
மத்தது மும்மலம் வாட்டுகை மாட்டாதார்
சத்தத் தமிழ்ந்து சகலத்து ளாரே. ரு

480 சிவமாகி ஐவகைத் திண்மலஞ் செற்றோர்
அவமாகார் சித்தர்முத் தாந்தத்து வாழ்வார்
பவமான தீர்வோர் பசுபாசம் அற்றோர்
நவமான தத்துவம் நாடிக்கண் டோரே. சு

481 விஞ்ஞானர் ஆணவ கேவல மேவுவோர்
விஞ்ஞானர் மாயையில் தங்கும் இருமலர்
அஞ்ஞானர் அச்சக லத்தர் சகலராம்
விஞ்ஞான ராதிகள் ஒன்பான்வே றுயிர்களே. எ

482 விஞ்ஞான கன்மத்தால் மெய்யகங் கூடிய
அஞ்ஞான கன்மத்தி னால்சுவர் யோனிபுக்
கெஞ்ஞான மெய்தீண்டி யேயிடை யிட்டுப்போய்
மெஞ்ஞான ராகிச் சிவமேவல் உண்மையே. அ

483 ஆணவந் துற்ற அவித்தா நனவற்றோர்
காணிய விந்துவா நாத சகலாதி
ஆணவ மாதி யடைந்தோ ரவரன்றே
சேணுயர் சத்தி சிவதத் துவமாமே. கூ

## 16. பாத்திரம்

484 திலமத் தனையே சிவஞானிக் கீந்தால்
பலமுத்தி சித்தி பரபோக முந்தரும்
நிலமத் தனைபொன்னை நின்மூடர்க் கீந்தால்
பலமுமற் றேபர போகமுங் குன்றுமே. க

485 கண்டிருந் தாருயிர் உண்டிடுங் காலனைக்
கொண்டிருந் தாருயிர் கொள்ளுங் குணத்தனை
நன்றுணர்ந் தார்க்கருள் செய்திடு நாதனைச்
சென்றுணர்ந் தார்சிலர் தேவரு மாமே. உ

486 கைவிட்டி லேன்கரு வாகிய காலத்து
மெய்விட்டி லேன்விகிர் தன்னடி தேடுவன்
பொய்விட்டு நானே புரிசடை யானடி
நெய்விட் டிலாத விடிஞ்சிலு மாமே. ங

487 ஆவன ஆவ அழிவ அழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவன்
ஏவன செய்யும் இளங்கிளை யோனே. ச

## 17. அபாத்திரம்

488 கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்
பாலைக் கறந்து பருகுவ தேயொக்கும்
சீலமும் நோன்பும் இலாதவர்க் கீந்தது
காலங் கழிந்த பயிரது ஆகுமே. க

489 ஈவது யோக இயம நியமங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி
ஆவ தறிந்தன்பு தங்கா தவர்களுக்
கீவ பெரும்பிழை யென்றுகொ ளீரே. உ

490 ஆமா றறியான் அதிபஞ்ச பாதகன்
தோமாறும் ஈசற்குந் தூய குரவற்குங்
காமாதி விட்டோர்க்குந் தரல்தந்து கற்பிப்போன்
போமா நரகிற் புகான்போதங் கற்கவே. ங

491 மண்மலை யத்தனை மாதனம் ஈயினும்
அண்ணல் இவனென்றே யஞ்சலி யத்தனாய்
எண்ணி யிறைஞ்சாதார்க் கீந்த இருவரும்
நண்ணுவர் ஏழா நரகக் குழியிலே. ச

## 18. தீர்த்தம்

492 உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
கள்ள மனமுடைக் கல்வியி லோரே. க

493 தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றுங்
குளியறி வாளர்க்குக் கூடவும் ஒண்ணான்
வளியறி வாளர்க்கு வாய்க்கிலும் வாய்க்குந்
தெளியறி வாளர்தஞ் சிந்தையு ளானே. உ

494 உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனைக்
கள்ளத்தி னாருங் கலந்தறி வார்இல்லை
வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்
பள்ளத்தி லிட்டதோர் பங்கருள் ளானே. ங

495 அறிவார் அமரர்கள் ஆதிப் பிரானைச்
செறிவா னுறைபதஞ் சென்று வலங்கொள்
மறியார் வளைக்கை வருபுனற் கங்கைப்
பொறியார் புனல்மூழ்கப் புண்ணிய ராமே. ச

496 கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்டல்
உடலுற்றுத் தேடுவார் தம்மையொப் பாரிலர்
திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென்
றுடலிற் புகுந்தமை ஒன்றறி யாரே. ரு

497 கலந்தது நீர துடம்பிற் கறுக்குங்
கலந்தது நீர துடம்பிற் சிவக்குங்
கலந்தது நீர துடம்பில் வெளுக்குங்
கலந்தது நீர்நிலங் காற்றது வாமே. சு

## 19. திருக்கோயில்

498 தாவர லிங்கம் பறித்தொன் றில் தாபித்தால்
ஆவதன் முன்னே அரசு நிலைகெடுஞ்
சாவதன் முன்னே பெருநோய் அடுத்திடுங்
காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே. க

499 கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்அபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டுவித் தேவிடும் விண்ணவன் ஆணையே. உ

500 ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளெல்லாஞ்
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே. ௩

501 முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றுங்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே. ௪

502 பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தாற்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாமென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே. ௫

## 20. அதோமுக தெரிசனம்

503 எம்பெரு மான்இறை வாமுறை யோஎன்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல்ல
அம்பவள மேனி அறுமுகன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் தானே. க

504 அண்டமொ டெண்டிசை தாங்கும் அதோமுகங்
கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
உண்டது நஞ்சென் றுரைப்பர் உணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோற்கே. ௨

505 செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே யுரைத்துப் புகழும் மனிதர்கள்
மெய்யே யுரைக்கில் விண்ணோர் தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே. ௩

506 நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய
செந்தீக் கலந்துட் சிவனென நிற்கும்
முந்திக் கலந்தங் குலகம் வலம்வரும்
அந்தி இறைவன் அதோமுக மாமே. ௪

507 அதோமுகங் கீழண்ட மான புராணன்
அதோமுகத் தன்னொடும் எங்கு முயனுஞ்
சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானும்
அதோமுகன் ஊழித் தலைவனு மாமே. ௫

508 அதோமுக மாமல ராயது கேளும்
அதோமுகத் தாலொரு நாலுய் விரிந்து

அதோமுக மாகிய அந்தமில் சத்தி
அதோமுக மாகி அமர்ந்திருந் தானே. ௬

## 21. சிவநிந்தை

509 தெளிவுறு ஞானத்துச் சிந்தையின் உள்ளே
அளிவுறு வாரம ராபதி நாடி
எளியனென் றீசனை நீசர் இகழில்
கிளியொன்று பூனையிற் கீழது வாகுமே. க

510 முளிந்தவர் வானவர் தானவர் எல்லாம்
விளிந்தவர் மெய்ந்நின்ற ஞானம் உணரார்
அளிந்தமு தூறிய ஆதிப் பிரானைத்
தளிந்தவர்க் கல்லது தாங்கவொண் ணாதே. உ

511 அப்பகை யாலே அசுரருந் தேவரும்
நற்பகை செய்து நடுவே முடிந்தனர்
எப்பகை யாகிலும் எய்தார் இறைவனைப்
பொய்ப்பகை செய்யினும் ஒன்றுபத் தாமே. ௩

512 போகமும் மாதர் புலவி யதுநினைந்
தாகமும் உள்கலந் தங்குள னாதலில்
வேதிய ராயும் விகிர்தனும் என்கின்ற
நீதியுள் ஈசன் நினைப்பொழி வாரே. ௪

## 22. குருநிந்தை

513 பெற்றிருந் தாரையும் பேணார் கயவர்கள்
உற்றிருந் தாரை உளைவன சொல்லுவர்
கற்றிருந் தார்வழி உற்றிருந் தாரவர்
பெற்றிருந் தாரன்றி யார்பெறும் பேறே. க

514 ஓரெழுத் தொருபொருள் உணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்
ஊரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்
வாரிடைக் கிருமியாய் மாய்வர் மண்ணிலே. உ

515 பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடுஞ்
சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே. ௩

516 மந்திரம் ஓரெழுத் துரைத்த மாதவர்
சிந்தையில் நொந்திடத் தீமைகள் செய்தவர்

நுந்திய சுணங்கனுய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே. ச

517 ஈச னடியார் இதயங் கலங்கிடத்
தேசமும் நாடுஞ் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாசம தாகுமே நந்நந்தி யாணையே. ரு

518 சன்மார்க்க சற்குரு சந்நிதி பொய்வரின்
நன்மார்க்க முங்குன்றி ஞானமுந் தங்காது
தொன்மார்க்க மாய துறையும் மறந்திட்டுப்
பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே. சா

519 கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு
மெய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விதிபோன்றும்
கைப்பட்ட நெய்பால் தயிர்நிற்கத் தானறக்
கைப்பிட்டுண் பான்போன்றும் கன்மிஞா னிக்கொப்பே. எ

## 23. மாகேசுரர் நிந்தை

520 ஆண்டான் அடியவ ரார்க்கும் விரோதிகள்
ஆண்டான் அடியவர் ஐயமேற் றுண்பவர்
ஆண்டான் அடியாரை வேண்டாது பேசினோர்
தாந்தாம் விழுவது தாழ்நர காகுமே. க

521 ஞானியை நிந்திப் பவனும் நலனென்றே
ஞானியை வந்திப் பவனுமெய் நல்வினை
யான கொடுவினை தீர்வா ரவன்வயம்
போன பொழுதே புகுஞ்சிவ போகமே. உ

## 24. பொறையுடைமை

522 பற்றிநின் றார்நெஞ்சிற் பல்லிதான் ஒன்றுண்டு
முற்றிக் கிடந்தது மூக்கையும் நாவையுந்
தெற்றிக் கிடந்து சிதைக்கின்ற சிந்தையுள்
வற்றா தொழிவது மாகமை யாமே. க

523 ஞானம் விளைந்தவர் நம்மிடை மன்னவர்
சேனை வளைந்து திசைதொறுங் கைதொழ
ஊனை விளைத்திடும் உம்பர்தம் ஆதியை
ஏனை வளைந்தருள் எட்டலு மாமே. உ

524 வல்வகை யாலும் மனையிலும் மன்றிலும்
பல்வகை யாலும் பயிற்றிப் பதஞ்செய்யுங்

கொல்லையி னின்று குதிகொள்ளுங் கூத்தனுக்
கெல்லையி லாத விலயமுண் டாமே. ௯

## 25. பெரியாரைத் துணைக்கோடல்

525 ஓடவல் லார்தம ரோடு நடாவுவன்
பாடவல் லாரொலி பார்மிசை வாழ்குவன்
தேடவல் லார்க்கருள் தேவர்பி ரானொடுங்
கூடவல் லாரடி கூடுவன் யானே. ௧

526 தாமிடர்ப் பட்டுத் தளிர்போல் தயங்கினும்
மாமனத் தங்கன்பு வைத்த நிலையாகும்
நீயிடர்ப் பட்டிருந் தென்செய்வாய் நெஞ்சமே
போமிடத் தென்னொடும் போதுகண் டாயே. ௨

527 அறிவார் அமரர் தலைவனை நாடிச்
செறிவார் பெறுவர் [1]சிலர்தத் துவத்தை
நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்
பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே. ௩

528 தார்சடை யான்றன் தமராய் உலகினிற்
போர்புக ழானெந்தை பொன்னடி சேருவர்
வாயடை யாவுள்ளந் தேர்வார்க் கருள்செய்யுங்
கோவடைந் தந்நெறி கூடலு மாமே. ௪

529 உடையான் அடியார் அடியா ருடன்போய்ப்
படையா ரழன்மேனிப் பதிசென்று புக்கேன்
கடையார நின்றவர் கண்டறி விப்ப
உடையான் வருகென ஓலமென் றாரே. ௫

530 அருமைவல் லான்கலை ஞானத்துள் தோன்றும்
பெருமைவல் லோன்பிற விச்சுழி நீந்தும்
உரிமைவல் லோன்உணர்ந் தூழி யிருந்துந்
திருமைவல் லாரொடு சேர்ந்தனன் யானே. ௬

இரண்டாந் தந்திரம் முற்றும்.

---

பா. வே. 1. சிவதத் துவத்தை.

# மூன்றாந் தந்திரம்

[வீரர்கமம்]

## 1. அட்டாங்க யோகம்

531 உரைத்தன வற்கரி ஒன்று மூடிய
நிரைத்த இராசி நிரைமுறை எண்ணிப்
பிரச்சதம் எட்டும் பேசியே நந்தி
நிரைத்த இயமம் நியமஞ்செய் தானே. க

532 செய்த இயம நியமஞ் சமாதிசென்
றுய்யப் பராசத்தி உத்தர பூருவ
மெய்த கவச நியாசங்கள் முத்திரை
எய்த வுரைசெய்வன் இந்நிலை தானே. உ

533 அந்நெறி இந்நெறி என்னாதட் டாங்கத்
தன்னெறி சென்று சமாதியி லேநின்மின்
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்
புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே. ந

534 இயம நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு பிராணயா மம்பிரத்தி யாகாரஞ்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறும் அட்டாங்க மாவது மாமே. ச

## 2. இயமம்

535 எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையுஞ்
செழுந்த ணியமங்கள் செய்மினென் றண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. க

536 கொல்லான்பொய் கூறான் களவிலான் எண்குணன்
நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லா னியமத் திடையின்நின் றானே. உ

## 3. நியமம்

537 ஆதியை வேதத்தின் அப்பொரு ளானைச்
சோதியை அங்கே சுடுகின்ற அங்கியைப்
பாதியுள் மன்னும் பராசத்தி யோடுடன்
நீதி யுணர்ந்து நியமத்த னாமே. க

538 தூய்மை அருளூண் சுருக்கம் பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமங் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னாமே. உ

539 தவஞ்செபஞ் சந்தோடம் ஆத்திகந் தானஞ்
சிவன்றன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகஞ்சிவ பூசையொண் மதிசொல்லீ ரைந்து
நிவம்பல செய்யின் நியமத்த னாமே. ந.

## 4. ஆதனம்

540 பங்கய மாதி பரந்தபல் ஆதனம்
அங்குள வாம்இரு நாலும் அவற்றினுள்
சொங்கில்லை யாகச் சுவத்திக மெனமிகத்
தங்க இருப்பத் தலைவனு மாமே. க

541 ஓரணை யப்பத மூருவின் மேலேறிட்
டார வலித்ததன் மேல்வைத் தழகுறச்
சீர்திகழ் கைகள் அதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மா சனமென லாகுமே. உ

542 துரிசில் வலக்காலைத் தோன்றவே மேல்வைத்து
அரிய முழந்தாளி லங்கையை நீட்டி
உருசி யொடுமுடல் செவ்வே யிருத்திப்
பரிசு பெறுமது பத்திரா சனமே. ந

543 ஒக்க அடியிணை யூருவில் ஏறிட்டு
முக்கி யுடலை முழங்கை களில்ஏற்றித்
தொக்க அறிந்து துளங்கா திருந்திடிற்
குக்குட ஆசனங் கொள்ளலு மாமே. ச

544 பாத முழந்தாளிற் பாணி களைநீட்டி
ஆதர வோடும்வாய் அங்காந் தழகுறக்
கோதில் நயனங் கொடிமூக்கி லேயுறச்
சீர்திகழ் சிங்கா தனமெனச் செப்புமே. ரு

545 பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி
சொத்திரம் வீரஞ் சுகாதனம் ஓரேழு
முத்தம மாமுது ஆசனம் எட்டெட்டுப்
பத்தொடு நூறு பலஆ சனமே. சா

## 5. பிராணாயாமம்

546 ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேறுங் குதிரைமற் றொன்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்குங் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தானே. க

547 ஆரிய னல்லன் குதிரை இரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூரிய நாதன் குருவின் அருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே. உ

548 புள்ளினும் மிக்க புரவியை மேற்கொண்டாற்
கள்ளுண்ண வேண்டாம் தானே களிதருந்
துள்ளி நடப்பிக்குஞ் சோம்பு தவிர்ப்பிக்கும்
உள்ளது சொன்னோம் உணர்வுடை யோருக்கே. ௩

549 பிராணன் மனத்தொடும் போரா தடங்கிப்
பிராண னிருக்கிற் பிறப்பிறப் பில்லை
பிராணன் மடைமாறிப் பேச்சறி வித்துப்
பிராண னடைபேறு பெற்றுண்டீர் நீரே. ச

550 ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பம் அறுபத்து நாலதில்
ஊறுதல் முப்பத் திரண்டதி ரேசகம்
மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே. ரு

551 வளியினை வாங்கி வயத்தில் அடக்கில்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் திருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியனு மாமே. ௬

552 எங்கே இருக்கினும் பூரி இடத்திலே
அங்கே யதுசெய்ய ஆக்கைக் கழிவில்லை
அங்கே பிடித்தது விட்டள வுஞ்செல்லச்
சங்கே குறிக்கத் தலைவனு மாமே. எ

553 ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே. அ

554 மேல்கீழ் நடுப்பக்க மிக்குறப் பூரித்துப்
பாலாம் இரேசகத் தாலுட் பதிவித்து

மாலாகி யுந்தியுட் கும்பித்து வாங்கவே
ஆலாலம் உண்டான் அருள்பெற லாமே. ௯

555 இட்ட தவ்வீ டிளகா திரேசித்துப்
புட்டிப் படத்தச நாடியும் பூரித்துக்
கொட்டிப் பிராணன் அபானனுங் கும்பித்து
நட்டம் இருக்க நமனில்லை தானே. ௰

556 புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே. ௧௧

557 கூடம் எடுத்துக் குடிபுக்க மங்கையர்
ஓடுவர் மீளுவர் பன்னிரண் டங்குலம்
நீடுவர் எண்விரல் கண்டிப்பர் நால்விரல்
கூடிக் கொளிற்கோல அஞ்செழுத் தாமே. ௧௨.

558 பன்னிரண் டானை பகல்இர வுள்ளது
பன்னிரண் டானையைப் பாகன் அறிகிலன்
பன்னிரண் டானையைப் பாகன் அறிந்தபின்
பன்னிரண் டானைக்குப் பகல்இர வில்லையே. ௧௩

## 6. பிரத்தியாகாரம்

559 கண்டுகண் டுள்ளே கருத்துற வாங்கிடிற்
கொண்டுகொண் டுள்ளே குணம்பல காணலாம்
பண்டுகந் தெங்கும் பழமறை தேடியை
இன்றுகண் டிங்கே இருக்கலு மாமே. ௧

560 நாபிக்குங் கீழே பன்னிரண் டங்குலம்
தாபிக்கு மந்திரந் தன்னை அறிகிலர்
தாபிக்கு மந்திரந் தன்னை அறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடியிருந் தானே. ௨

561 மூலத் திருவிரல் மேலுக்கு முன்நின்ற
பாலித்த யோனிக் கிருவிரல் கீழ்நின்ற
கோலித்த குண்டலி யுள்ளெழுந் செஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழதே. ௩

562 நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்த மாயோகம் வந்து தலைப்படும்
தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாமே. ௪

563 சோதி இரேகைச் சுடரொளி தோன்றிடிற்
கோதில் பரானந்தம் என்றே குறிக்கொண்மின்
நேர்திகழ் கண்டத்தே நிலவொளி எய்தினால்
ஓதுவ துன்னுடல் உன்மத்த மாமே. ௫

564 மூலத் துவாரத்தை மொக்கர மிட்டிரு
மேலைத் துவாரத்தின் மேல்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லுங் கருத்திது தானே. ௬

565 எருவிடும் வாசற் கிருவிரன் மேலே
கருவிடும் வாசற் கிருவிரற் கீழே
உருவிடுஞ் சோதியை உள்கவல் லார்க்குக்
கருவிடுஞ் சோதி கலந்துநின் றானே. ௭

566 ஒருக்கால் உபாதியை ஒண்சோதி தன்னைப்
பிரித்துணர் வந்த உபாதிப் பிரிவைக்
கரைத்துணர் வுன்னல் கரைதல்உள் நோக்கல்
பிரத்தியா காரப் பெருமைய தாமே. ௮

567 புறப்பட்ட வாயு புகவிடா வண்ணந்
திறப்பட்டு நிச்சயஞ் சேர்ந்துடன் நின்றால்
உறப்பட்டு நின்றது உள்ளமும் அங்கே
புறப்பட்டுப் போகான் பெருந்தகை யானே. ௯

## 7. தாரணை

568 கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணாத்தண் டூடே வெளியுறத் தானோக்கிக்
காணாக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணாள் அடைக்கும் வழியது வாமே. ௧

569 மலையார் சிரத்திடை வானீர் அருவி
நிலையாரப் பாயும் நெடுநாடி யூடே
சிலையார் பொதுவில் திருநட மாடுந்
தொலையாத ஆனந்தச் சோதிகண் டேனே. ௨

570 மேலை நிலத்தினாள் வேதகப் பெண்பிள்ளை
மூல நிலத்தில் எழுகின்ற மூர்த்தியை
ஏல எழுப்பி இவளுடன் சந்திக்கப்
பாலனும் ஆவான் பார்நந்தி ஆணையே. ௩

571 கடைவாச லைக்கட்டிக் காலை எழுப்பி
இடைவாசல் நோக்கி இனிதுள் இருத்தி

மடைவாயிற் கொக்குப்போல் வந்தித் திருப்பார்க்
குடையாமல் ஊழி இருக்கலு மாமே. ௪

572 கலந்த உயிருடன் காலம் அறியில்
கலந்த உயிரது காலின் நெருக்கம்
கலந்த உயிரது காலது கட்டிற்
கலந்த உயிருடல் காலமும் நிற்குமே. ௫

573 வாய்திற வாதார் மனத்திலோர் மாடுண்டு
வாய்திறப் பாரே வளியிட்டுப் பாய்ச்சுவர்
வாய்திற வாதார் மதியிட்டு மூட்டுவர்
கோய்திற வாவிடிற் கோழையு மாமே. ௬

574 வாழலு மாம்பல காலும் மனத்திடைப்
போழ்கின்ற வாயு புறம்படாப் பாய்ச்சுறில்
ஏழுசா லேகம் இரண்டு பெருவாய்தல்
பாழி பெரியதோர் பள்ளி அறையே. ௭

575 நிரம்பிய ஈரைந்தில் ஐந்திவை போனால்
இரங்கி விழித்திருந் தென்செய்வை பேதாய்
வரம்பினைக் கோலி வழிசெய்கு வார்க்குக்
குரங்கினைக் [1]கொட்டை போதிய லாமே. ௮

576 முன்னம் வந்தனர் எல்லாம் முடிந்தனர்
பின்னை வந்தவர்க் கென்ன பிரமாணம்
முன்னுறு கோடி உறுகதி பேசிடில்
என்ன மாயம் இடிகரை நிற்குமே. ௯

577 அரித்த வுடலைஐம் பூதத்தில் வைத்துப்
பொருத்தஐம் பூதஞ்சத் தாதியிற் போந்து
தெரித்த மனாதிசத் தாதியிற் செல்லத்
தரித்தது தாரணை தற்பரத் தோடே. ௧௦

## 8. தியானம்

578 வருமாதி யீரெட்டுள் வந்த தியானம்
பொருவாத புந்தி புலன்போக மேவல்
உருவாய சத்தி பரத்தியான முன்றுங்
குருவார் சிவத்தியானம் யோகத்தின் கூறே. ௧

579 கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்
பண்ணுக்கி நின்ற பழம்பொருள் ஒன்றுண்டு

பா. வே. 1. கோட்டைப்.

அண்ணாக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டிப்
புண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே. உ

580 ஒண்ணா நயனத்தில் உற்ற ஒளிதன்னைக்
கண்ணாரப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில்
விண்ணாறு வந்து வெளிகண் டிடவோடிப்
பண்ணாமல் நின்றது பார்க்கலு மாமே. ௩

581 ஒருபொழு துன்னார் உடலோ டுயிரை
ஒருபொழு துன்னார் உயிருட் சிவனை
ஒருபொழு துன்னார் சிவனுறை சிந்தையை
ஒருபொழு துன்னார் சந்திரப் பூவே. ௪

582 மனத்து விளக்கினை மாண்பட ஏற்றிச்
சினத்து விளக்கினைச் செல்ல நெருக்கி
அனைத்து விளக்குந் திரியொக்கத் தூண்ட
மனத்து விளக்கது மாயா விளக்கே. ௫

583 எண்ணா யிரத்தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணார் அமுதனைக் கண்டறி வாரில்லை
உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கிற்
கண்ணாடி போலக் கலந்துநின் றானே. ௬

584 நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை
வேட்டமும் இல்லை சிவனவ னாமே. ௭

585 நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்
டுயர்வெழா வாயுவை உள்ளே அடக்கித்
துயரற நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லை தானே. ௮

586 மணிகடல் யானை வார்குழல் மேகம்
அணிவண்டு தும்பி வளைபே ரிகையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண் ணாதே. ௯

587 கடலொடு மேகம் களிறொடும் ஓசை
அடவெழும் வீணை அண்டரண் டத்துச்
சுடர்மன்னு வேணு சுரிசங்கின் ஓசை
திடமறி யோகிக்கல் லாற்றெரி யாவே. ௧௦

588 ஈசன் இயல்பும் இமையவர் ஈட்டமும்
பாசம் இயங்கும் பரிந்துயி ராய்நிற்கும்
ஓசை யதன்மணம் போல விடுவதோர்
ஓசையாம் ஈசன் உணரவல் லார்க்கே. ௧௧

589 நாத முடிவிலே நல்லாள் இருப்பது
நாத முடிவில்நல் யோகம் இருப்பது
நாத முடிவிலே நாட்டம் இருப்பது
நாத முடிவில்நஞ் சுண்ட கண்டனே. ௧௨

590 உதிக்கின்ற ஆறினும் உள்ளங்கி ஐந்துந்
துதிக்கின்ற தேசுடைத் தூங்கிருள் நீங்கி
அதிக்கின்ற ஐவருள் நாதம் ஒடுங்கக்
கதிக்கொன்றை ஈசன் கழல்சேர லாமே. ௧௩

591 பள்ளி அறையிற் பகலே இருளில்லை
கொள்ளி அறையிற் கொளுந்தாமற் காக்கலாம்
ஒள்ளி தறியிலோ ரோசனை நீளிது
வெள்ளி அறையில் விடிவில்லை தானே. ௧௪

592 கொண்ட விரதங் குறையாமற் றொன்றித்
தண்டுடன் ஓடித் தலைப்பட்ட யோகிக்கு
மண்டல மூன்றினும் ஒக்க வளர்ந்தபின்
பிண்டமும் ஊழி பிரியா திருக்குமே. ௧௫

593 அவ்வவர் மண்டல மாம்பரி சொன்றுண்டு
அவ்வவர் மண்டலத் தவ்வவர் தேவராம்
அவ்வவர் மண்டலம் அவ்வவர்க் கேகில்
அவ்வவர் மண்டல மாயமற் றோர்க்கே. ௧௬

594 இளைக்கின்ற நெஞ்சத் திருட்டறை உள்ளே
முளைக்கின்ற மண்டலம் மூன்றினும் ஒன்றித்
துளைப்பெரும் பாசந் துருவிடு மாகில்
இளைப்பின்றி மார்கழி ஏற்றம தாமே. ௧௭

595 முக்குண மூடற வாயுவை மூலத்தே
சிக்கென மூடித் திரித்துப் பிடித்திட்டுத்
தக்க வலமிடம் நாழிகை சாதிக்க
வைக்கும் உயிர்க்கிலை வானவர் கோனே. ௧௮

596 நடலித்த நாபிக்கு நால்விரல் மேலே
மடலித்த வாணிக் கிருவிரல் உள்ளே
கடலித் திருந்து கருதவல் லார்கள்
சடலத் தலைவனைத் தாமறிந் தாரே. ௧௯

949 வேரெழுத் தாய்விண்ணாய் அப்புற மாய்நிற்கும்
நீரெழுத் தாய்நிலந் தாங்கியும் அங்குளன்
சீரெழுத் தாய்அங்கி யாயுயி ராமெழுத்
தோரெழுத் தீசனும் ஒண்சுட ராமே. ருசு

950 நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது
நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று
நாலாம் எழுத்தே நவிலவல் லார்கட்கு
நாலாம் எழுத்தது நன்னெறி தானே. ருஎ

951 பட்ட பரிசே பரமஞ் செழுத்ததின்
இட்ட மறிந்திட் டிரவு பகல்வர
நட்டம தாடு நடுவே நிலயங்கொண்
டட்டதே சப்பொரு ளாகிநின் றானே. ருஅ

952 அகாரம் உயிரே உகாரம் பரமே
மகார மலமாய் [1]வருமுப் பதத்திற்
சிகாரஞ் சிவமாய் வகாரம் வடிவமாய்
அகாரம் உயிரென் றறையலு மாமே. ருகூ

953 நகார மகார சிகார நடுவாய்
வகாரம் இரண்டும் வளியுடன் கூடி
ஓகார முதற்கொண் டொருகால் உரைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே. கூ0

954 அஞ்சுள வானை அடவியுள் வாழ்வன
அஞ்சுக்கும் அஞ்செழுத் தங்குச மாவன
அஞ்சையுங் கூடத் தடுக்கவல் லார்கட்கே
அஞ்சாதி யாதி அகம்புக லாமே. கூக

955 ஐந்து கலையில் அகராதி தன்னிலே
வந்த நகராதி மாற்றி மகராதி
நந்தியை மூலத்தே நாடிப் பரையொடுஞ்
சந்திசெய் வார்க்குச் சடங்கில்லை தானே. கூஉ

956 மருவுஞ் சிவாயமே மன்னும் உயிரும்
அருமந்த [2]யோகமும் ஞானமு மாகுந்
தெருள்வந்த சீவனார் சென்றிவற் றாலே
அருள்தங்கி யச்சிவ மாவது வீடே. கூங

957 அஞ்சுக அஞ்செழுத் துண்மை அறிந்தபின்
நெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்

பா. வே. 1. வருமுப்பத் தாறிற். 2. போகமும்.

வஞ்சக மில்லை மனைக்கும் அழிவில்லை
தஞ்ச மிதுவென்று சாற்றுகின் றேனே. ௬௪

958 சிவயவொ டவ்வே தெளிந்துளத் தோதச்
சிவயவொ டவ்வே சிவனுரு வாகுஞ்
சிவயவொ டவ்வுந் தெளியவல் லார்கள்
சிவயவொ டவ்வே தெளிந்திருந் தாரே. ௬௫

959 சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
ஓகார முடனே ஒருகா லுரைக்க
மகார முதல்வன் மதித்துநின் றானே. ௬௬

960 நம்முதல் ஓரைந்தின் நாடுங் கருமங்கள்
அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை
சிம்முத லுள்ளே தெளியவல் லார்கட்குத்
தம்முத லாகுஞ் சதாசிவந் தானே. ௬௭

961 நவமுஞ் சிவமும் உயிர்பர மாகுந்
தவமொன் றிலாதன தத்துவ மாகுஞ்
சிவமொன்றி யாய்பவ ராதர வால்அச்
சிவமென்ப தானும் எனுந்தெளி வுற்றதே. ௬௮

962 கூடிய எட்டும் இரண்டுங் குவிந்தறி
நாடிய நந்தியை ஞானத்துள் ளேவைத்து
ஆடிய ஐவரும் அங்குற வாவர்கள்
தேடி அதனைத் தெளிந்தறி யீரே. ௬௯

963 எட்டும் இரண்டும் இனிதறி கின்றிலர்
எட்டும் இரண்டும் அறியாத ஏழையர்
எட்டும் இரண்டும் இருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே. ௭0

964 எட்டு வரையின்மே லெட்டு வரைகீறி
இட்ட நடுவுள் இறைவன் எழுத்தொன்றில்
வட்டத்தி லேயறை நாற்பத்தெட் டும்மிட்டுச்
சிட்டஞ் செழுத்துஞ் செபிசீக் கிரமே. ௭௧

965 தானவர் சட்டர் சதிரர் இருவர்கள்
ஆனஇம் மூவரோ டாற்றவ ராதிகள்
ஏனைப் பதினைந்தும் விந்துவும் நாதமுஞ்
சேனையுஞ் செய்சிவ சக்கரந் தானே. ௭௨

966 பட்டன மாதவ மாறும் பராபரம்
விட்டனர் தம்மை விகிர்தா நமஎன்பர்
எட்டனை யாயினும் ஈசன் திறத்திறம்
ஒட்டுவன் பேசுவன் ஒன்றறி யேனே.

967 வித்தாஞ் சகமய மாக வரைகீறி
நத்தார் கலைகள் பதினாறு நாட்டிப்பின்
உத்தாரம் பன்னிரண் டாதி கலைதொகும்
பத்தாம் பிரம சடங்குபார்த் தோதிடே. எ௪

968 கண்டெழுந் தேன்கம லம்மல ருள்ளிடை
கொண்டொழிந் தேன்உடன் கூடிய காலத்துப்
பண்பழி யாத பதிவழி யேசென்று
நண்பழி யாமே நமவென லாமே. எ௫

969 புண்ணிய வானவர் பூமழை தூவிநின்
றெண்ணுவர் அண்ணல் இணையடி மந்திரம்
நண்ணுவர் நண்ணி நமஎன்று நாமத்தைக்
கண்ணென உன்னிக் கலந்துநின் றாரே. எ௬

970 ஆறெழுத் தாவ தாறு சமயங்கள்
ஆறுக்கு நாலே இருபத்து நாலென்பர்
சாவித் திரியில் தலையெழுத் தொன்றுள
பேதிக்க வல்லார் பிறவியற் றார்களே. எஎ

971 எட்டினில் எட்டறை யிட்டோ ரறையிலே
கட்டிய ஒன்றெட்டாய்க் காண நிறையிட்டுச்
சுட்டி இவற்றைப் பிரணவஞ் சூழ்ந்திட்டு
மட்டும் உயிர்கட் குமாபதி யானுண்டே. எஅ

972 நம்முதல் அவ்வொடு நாவின ராகியே
அம்முத லாகிய எட்டிடை யுற்றிட்டு
உம்முத லாகவே உணர்பவர் உச்சிமேல்
உம்முத லாயவன் உற்றுநின் றானே. எ௯

973 நின்ற அரசம் பலகைமேல் நேராக
ஒன்றிட மவ்விட்டு ஒப்பிற் சாதகந்
துன்று மெழுகையுள் பூசிச் சுடரிடைத்
தன்று வெதுப்பிடத் தம்பனங் காணுமே. அ0

974 கரான விரளிப் பலகை யமன்றிசை
மரணமிட் டெட்டின் மகார வெழுத்திட்டு
வரணமி லைங்காயம் பூசி யடுப்படை
முரணிற் புதைத்திட மோகன மாகுமே. அக

975 ஆங்கு வடமேற்கில் ஐயனார் கோட்டத்திற்
பாங்கு படவே பலாசப் பலகையிற்
காங்கரு மேட்டிற் கடுப்பூசி விந்துவிட்
டோங்காரம் வைத்திடும் உச்சா டனத்துக்கே. அஉ

976 உச்சியம் போதில் ஒளிவன்னி மூலையிற்
பச்சோலை யிற்பஞ்ச காயத்தைப் பாரித்து
முச்சது ரத்தின் முதுகாட்டில் வைத்திடு
வைச்சபின் மேலோர் மாரணம் வேண்டிலே. அங

977 ஏய்ந்த வரிதார மேட்டின்மே லேபூசி
ஏய்ந்த வகாரம் உகாரம் எழுத்திட்டு
வாய்ந்ததோர் வில்லம் பலகை வசியத்துக்
கேய்ந்தவைத் தெண்பதி னாயிரம் வேண்டிலே. அச

978 எண்ணுக் கருடனை ஏட்டின் [1]உகாரமிட்
டெண்ணுப் [2]பொன்னொளி எழுவெள்ளி பூசிடா
வெண்ணுவற் பலகையி லிட்டுமேற் கேநோக்கி
எண்ணு வெழுத்தொடெண் ணாயிரம் வேண்டிலே. அரு

## 3. அருச்சனை

979 அம்புய நீலங் கழுநீ ரணிநெய்தல்
வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரந்
தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே. க

980 சாங்கம தாகவே சந்தொடு சந்தனந்
தேங்கமழ் குங்குமங் கர்ப்பூரங் காரகிற்
பாங்கு படப்பனி நீராற் குழைத்துவைத்
தாங்கே அணிந்துநீர் அர்ச்சியும் அன்பொடே. உ

981 அன்புட னேநின் றமுதமும் ஏற்றியே
பொன்செய் விளக்கும் புகைதீபந் திசைதொறுந்
துன்பம் அகற்றித் தொழுவோர் நினையுங்கால்
இன்புட னேவந் தெய்திடும் முத்தியே. ங

982 எய்தி வழிப்படில் எய்தா தனவில்லை
எய்தி வழிப்படில் இந்திரன் செல்வமுன்
எய்தி வழிப்படில் எண்சித்தி உண்டாகும்
எய்தி வழிப்படில் எய்திடும் முத்தியே. ச

---

பா. வே. 1. அகாரமிட். 2. பொன்னொளில்.

983 நண்ணும் பிறதார நீத்தார் அவித்தார்
மண்ணிய நைவேத் தியமனு சந்தான
நண்ணிய பஞ்சாங்க நண்ணுஞ் செபமென்னு
மன்னு மனபவ னத்தொடு வைகுமே. ௫

984 வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்
வேண்டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபோர்
வேண்டார்கள் கன்மம் மிகுசிவ யோகிகள்
வேண்டார்கள் கன்மம் மிகுதியோ ராய்ந்தன்பே. ௬

985 அறிவரு ஞானத் தெவரும் அறியார்
பொறிவழி தேடிப் புலம்புகின் றார்கள்
நெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கில்
எறிமணி யுள்ளே இருக்கலு மாமே. ௭

986 இருளும் வெளியும்போல் இரண்டாம் இதய
மருளறி யாமையும் மன்னு மறிவு
மருளிவை விட்டறி யாமை மயங்கு
மருளுஞ் சிதைத்தோ ரவர்களா மன்றே. ௮

987 தானவ னாக அவனேதா னயிட
ஆன இரண்டில் அறிவன் சிவமாகப்
போனவ னன்பிது நாலா மரபுறத்
தானவ னாகுமோ [1]ராசித்த தேவரே. ௯

988 ஓங்கார முந்திக்கீழ் உற்றிடும் எந்நாளும்
நீங்கா வகாரமும் நீள்கண்டத் தாயிடும்
பாங்கார் நகாரம் பயில்நெற்றி யுற்றிடும்
வீங்காகும் விந்துவும் நாதமே லாகுமே. ௧௦

989 நமவது வாசன் மான பசுவே
சிவமது சித்திச் சிவமாம் பதியே
நமவற வாதி நாடுவ தன்றுஞ்
சிவமாகு மாமோனஞ் சேர்தல்மெய் வீடே. ௧௧

990 தெளிவரு நாளிற் சிவஅமு தூறும்
ஒளிவரு நாளில் ஓரெட்டில் உகளும்
ஒளிவரும் அப்பதத் தோரிரண் டாகில்
வெளிதரு நாதன் வெளியாய் இருந்தே. ௧௨

---

பா. வே. 1. ராதித்த.

## 4. நவகுண்டம்

991 நவகுண்ட மானவை நானுரை செய்யின்
நவகுண்டத் துள்ளெழு நற்றீபந் தானும்
நவகுண்டத் துள்ளெழு நன்மைகள் எல்லாம்
நவகுண்ட மானவை நானுரைப் பேனே. க

992 உரைத்திடுங் குண்டத்தின் உள்ளேமுக் காலும்
நகைத்தெழு நாற்கோண நன்மைகள் ஐந்தும்
பகைத்திடு முப்புரம் பாரங்கி யோடே
மிகைத்தெழு கண்டங்கள் மேலறி யோமே. உ

993 மேலறிந் துள்ளே வெளிசெய்த வப்பொருள்
காலறிந் துள்ளே கருத்துற்ற செஞ்சுடர்
பாரறிந் தண்டஞ் சிறகற நின்றது
நானறிந் துள்ளே நாடிக்கொண் டேனே. ங

994 கொண்டஇக் குண்டத்தின் உள்ளெழு சோதியாய்
அண்டங்கள் ஈரேழு மாக்கி அழிக்கலாம்
பண்டையுள் வேதம் பரந்த பரப்பெலாம்
இன்றுசொல் நூலாய் எடுத்துரைத் தேனே. ச

995 எடுத்தவக் குண்டத் திடம்பதி னாறிற்
பதித்த கலைகளும் பாலித்து நிற்குங்
கதித்தனல் உள்ளெழக் கண்டுகொள் வார்க்கே
கொதித்தெழும் வல்வினை கூடகி லாவே. ரு

996 கூடமுக் கூடத்தின் உள்ளெழு குண்டத்துள்
ஆடிய ஐந்தும் அகம்புறம் பாய்நிற்கும்
பாடிய பன்னீ ரிராசியும் அங்கெழ
நாடிக்கொள் வார்கட்கு நற்சுடர் தானே. சு

997 நற்சுட ராகுஞ் சிரமுக வட்டமாங்
கைச்சுட ராகுங் கருத்துற்ற கைகளிற்
பைச்சுடர் மேனி பதைப்புற் றிலிங்கமும்
நற்சுட ராயெழு நல்லதென் றுளே. எ

998 நல்லதென் றுளே நமக்குற்ற நாயகஞ்
சொல்லதென் றுளே சுடர்முடிப் பாதமா
மெல்லநின் றுளே வினவகில் லாதவர்
கல்லதன் றுளேயுங் கற்றும்வின் ஞளே. அ

999 வின்ஞ விளம்பிறை மேவிய குண்டத்துச்
சொன்ஞல் இரண்டுஞ் சுடர்நாகந் திக்கெங்கும்

பன்னாலு நாகம் பரந்த பரஞ்சுடர்
என்னகத் துள்ளே இடங்கொண்ட வாறே. ௯

1000 இடங்கொண்ட பாதம் எழிற்சுட ரேக
நடங்கொண்ட பாதங்கள் [1]நண்ணீ ரதற்குச்
சகங்கொண்ட கையிரண் டாறுந் தழைப்ப
முகங்கொண்ட செஞ்சுடர் முக்கண னார்க்கே. ௧௦

1001 முக்கணன் றானே முழுச்சுட ராயவன்
அக்கணன் றானே அகிலமும் உண்டவன்
திக்கண னாகித் திசையெட்டுங் கண்டவன்
எக்கணன் றானுக்கும் எந்தை பிரானே. ௧௧

1002 எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த்
தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலாற்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலான்
மைந்தன் இவனென்று மாட்டிக்கொள் ளீரே. ௧௨

1003 மாட்டிய குண்டத்தின் உள்ளெழு வேதத்துள்
ஆட்டிய காலொன்றும் இரண்டும் அலர்ந்திடும்
வாட்டிய கையிரண் டொன்று பதைத்தெழ
நாட்டுஞ் சுரரிவர் நல்லொளி தானே. ௧௩

1004 நல்லொளி யாக நடந்துல கெங்குங்
கல்லொளி யாகக் கலந்துள் இருந்திடும்
சொல்லொளி யாகத் தொடர்ந்த உயிர்க்கெலாங்
கல்லொளி கண்ணுளு மாகிநின் [2]றானே. ௧௪

1005 நின்றஇக் குண்டம் நிலையாறு கோணமாய்ப்
பண்டையில் வட்டம் பதைத்தெழு மாறுறுங்
கொண்டஇத் தத்துவம் உள்ளே கலந்தெழ
விண்ணுளும் என்ன எடுக்கலு மாமே. ௧௫

1006 எடுக்கின்ற பாதங்கண் மூன்ற தெழுத்தைக்
கடுத்த முகம்இரண் டாறுகண் ணாகப்
படித்தெண்ணு நாவெழு கொம்பொரு நாலும்
அடுத்தெழு கண்ணான தந்தமி லாற்கே. ௧௬

1007 அந்தமில் லானுக் ககலிடந் தானில்லை
அந்தமில் லானை அளப்பவர் தாமில்லை
அந்தமில் லானுக் கடுத்தசொற் றானில்லை
அந்தமில் லானை அறிந்துகொள் பத்தே. ௧௭

---

பா. வே. 1. நன்னீ. 2. றானே.

1008 பத்திட்டங் கெட்டிட் டாறிட்டு நாலிட்டு
மட்டிட்ட குண்டம் மலர்ந்தெழு தாமரை
கட்டிட்டு நின்று கலந்தமெய் யாகமும்
பட்டிட்டு நின்றது பார்ப்பதி பாலே. கஅ

1009 பார்ப்பதி பாகன் பரந்தகை நாலைந்து
காற்பதி பத்து முகம்பத்துக் கண்களும்
பூப்பதி பாதம் இரண்டு சுடர்முடி
நாற்பது சோத்திரம் நல்லிரு பத்தஞ்சே. ககூ

1010 அஞ்சிட்ட கோலம் அளப்பன ஐயைந்தும்
மஞ்சிட்ட குண்ட மலர்ந்தங் கிருத்தலால்
பஞ்சிட்ட சோதி பரந்த பரஞ்சுடர்
கொஞ்சிட்ட வன்னியைக் கூடுதன் முத்தியே. உ0

1011 முத்திநற் சோதி முழுச்சுட ராயவன்
கற்றற்று நின்றார் கருத்துள் இருந்திடும்
பற்றற நாடிப் பரந்தொளி யூடுபோய்ச்
செற்றற் றிருந்தவர் சேர்ந்திருந் தாரே. உக

1012 சேர்ந்த கலையஞ்சுஞ் சேருமிக் குண்டமும்
ஆர்ந்த திசைகளும் அங்கே அமர்ந்திடும்
பாய்ந்தஐம் பூதமும் பார்க்கின்ற வன்னியைக்
காய்ந்தவர் என்றுங் கலந்தவர் தாமே. உஉ

1013 மெய்கண்ட மாம்விரி நீருல கேழையும்
உய்கண்டஞ் செய்த ஒருவனைச் சேருமின்
செய்கண்ட ஞானந் திருந்திய தேவர்கள்
பொய்கண்டம் இல்லாப் பொருள்கலந் தாரே. உங

1014 கலந்திரு பாதம் இருகர மாகு
மலர்ந்திரு குண்ட மகாரத்தோர் மூக்கு
மலர்ந்தெழு செம்முக மற்றைக்கண் நெற்றி
உணர்ந்திரு குஞ்சியங் குத்தம னார்க்கே. உச

1015 உத்தமன் சோதி உளனொரு பாலனாய்
மத்திம னாகி மலர்ந்தங் கிருந்திடும்
பச்சிம திக்கும் பரந்து குழிந்தன
சத்திமா னாகத் தழைத்த கொடியே. உரு

1016 கொடியாறு சென்று குலாவிய குண்டம்
அடியிரு கோணமாய் அந்தமும் ஒக்கும்
படியே முலகும் பரந்த சுடரை
மடியாது கண்டவர் மாதன மாமே. உசா

1017 மாதன மாக வளர்கின்ற வன்னியைச்
சாதன மாகச் சமைந்த குருவென்று
போதன மாகப் பொருந்த உலகாளும்
பாதன மாகப் பரிந்தது பார்த்தே. உஎ

1018 பார்த்திடம் எங்கும் பரந்தெழு சோதியை
ஆத்தம தாகவே யாய்ந்தறி வாரில்லை
காத்துட லுள்ளே கருதி இருந்தவர்
மூத்துடல் கோடி யுகங்கண்ட வாறே. உஅ

1019 உகங்கண்ட ஒன்பது குண்டமும் ஒக்க
அகங்கண்ட யோகியுள் நாடி எழுப்பும்
பயங்கண்டு கொண்டஇப் பாய்கரு வொப்பச்
சகங்கண்டு கொண்டது சாதன மாமே. உகூ

1020 சாதனை நாலு தழல்மூன்று வில்வயம்
வேதனை வட்டம் விளையாறு பூநிலை
போதனை போதைஞ்சு பொற்கய வாரண
நாதனை நாடு நவகோடி தானே. ௩0

## 5. சத்திபேதம் - திரிபுரை சக்கரம்

1021 மாமாயை மாயை வயிந்தவம் வைகரி
ஓமாயை உள்ளொளி ஓராறு கோடியில்
தாமான மந்திரஞ் சத்திதன் மூர்த்திகள்
ஆமா யலவாந் திரிபுரை யாங்கே. க

1022 திரிபுரை சுந்தரி அந்தரி சிந்துரப்
பரிபுரை நாரணி யாம்பல வன்னத்தி
இருள்புரை ஈசி மனோன்மனி என்ன
வருபல வாய்நிற்கு மாமாது தானே. உ

1023 தானா அமைந்தவம் முப்புரந் தன்னிடைத்
தானான மூவுரு வோருருத் தன்மையள்
தானான பொன்செம்மை வெண்ணிறத் தாள்கல்வி
தானான போகமும் முத்தியும் நல்குமே. ௩

1024 நல்குந் திரிபுரை நாதநா தாந்தங்கள்
பல்கும் பரவிந்து பாரண்ட மானவை
நல்கும் பரைஅபி ராமி அகோசரி
புல்கு மருளுமப் போதந்தந் தாளுமே. ௪

1025 தாளணி நூபுரஞ் செம்பட்டுத் தானுடை
வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்

ஏரணி அங்குச பாசம் எழில்முடி
காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே. ரு

1026 குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள்
கொண்ட வரத்த நிறமன்னு கோலத்தள்
கண்டிகை யாரங் கதிர்முடி மாமதிச்
சண்டிகை நாற்றிசை தாங்கிநின் றாளே. சு

1027 நின்ற திரிபுரை நீளும் புராதனி
குன்றலில் மோகினி மாதிருக் குஞ்சிகை
நன்றறி கண்டிகை நாற்காற் கரீடணி
துன்றிய நற்சுத்த தாமரைச் சுத்தையே. எ

1028 சுத்தவம் பாரத் தனத்தி சுகோதயள்
வத்துவ மாயா ளுமாசத்தி மாபரை
அத்தகை [1]யாவும் [2]அனோரணி தானுமாய்
வைத்தவக் கோல மதியவ ளாகுமே. அ

1029 அவளை யறியா அமரரும் இல்லை
அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவளன்றி ஐவரால் ஆவதொன் றில்லை
அவளன்றி யூர்புகு மாறறி யேனே. கூ

1030 அறிவார் பராசத்தி ஆனந்தம் என்பர்
அறிவா [3]ரறிவுரு வாமவள் என்பர்
அறிவார் கருமம வளிச்சை என்பர்
அறிவார் பரனு மவளிடத் தானே. க0

1031 தானெங் குளன்அங் குளள்தையல் மாதேவி
ஊனெங் குளதங் குளன்உயிர்க் காவலன்
வானெங் குளதங் குளமந்த மாருதம்
கோனெங்கும் நின்ற குறிபல பாரே. கக

1032 பராசத்தி மாசத்தி பல்வகை யாலுந்
தராசத்தி யாய்நின்ற தன்மை புணராய்
உராசத்தி ஊழிகள் தோறும் உடனே
புராசத்தி புண்ணிய மாகிய போகமே. கஉ

1033 போகஞ்செய் சத்தி புரிகுழ லாளொடும்
பாகஞ்செய் தாங்கே பராசத்தி யாய்நிற்கும்
ஆகஞ்செய் தாங்கே அடியவர் நாள்தொறும்
பாகஞ்செய் ஞானம் படர்கின்ற கொம்பே. கங

---

பா. வே. 1. யான. 2. மனோரணி. 3. ரருவுரு.

1034 கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்
செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை
நம்பிஎன் உள்ளே நயந்துவைத் தேனே. கச

1035 வைத்த பொருளும் மருவுயிர்ப் பன்மையும்
பத்து முகமும் பரையும் பராபரைச்
சித்தக் கரணச் செயல்களுஞ் செய்திடுஞ்
சத்தியும் வித்தைத் தலையவ ளாமே. கரு

1036 தலைவி தடமுலை மேல்நின்ற தையல்
தொலைவில் தவஞ்செயுந் தூய்நெறித் தோகை
கலைபல வென்றிடுங் கன்னியென் உள்ளம்
நிலைபெற இங்கே நிறைந்துநின் றாளே. கசு

1037 நின்றவள் நேரிழை நீள்கலை யோடுற
என்றன் அகம்படிந் தேழுல குந்தொழ
மன்றது வொன்றி மனோன்மணி மங்கலி
ஒன்றெனோ டொன்றிநின் றொத்தடைந் தாளே. கஎ

1038 ஒத்தடங் குங்கும லத்திடை யாயிழை
அத்தகை செய்கின்ற வாய பெரும்பதி
மத்தடை கின்ற மனோன்மணி மங்கலி
சித்தடைக் கும்வழி தேர்ந்துண ரார்களே. கஅ

1039 உணர்ந்துட னேநிற்கும் உள்ளொளி யாகி
மணங்கமழ் பூங்குழல் மங்கையுந் தானும்
புணர்ந்துட னேநிற்கும் போதருங் காலைக்
கணிந்தெழு வார்க்குக் கதியளிப் பாளே. ககூ

1040 அளியொத்த பெண்பிள்ளை ஆனந்த சுந்தரி
புளியுறு புன்பழம் போலுள்ள நோக்கித்
தெளியுறு வித்துச் சிவகதி காட்டி
ஒளியுற வைத்தென்னை உய்யவுண் டாளே. உ0

1041 உண்டில்லை என்ற துருச்செய்து நின்றது
வண்டில்லை மன்றினுள் மன்னி நிறைந்தது
கண்டிலர் காரண காரணி தன்னொடு
மண்டல மூன்றுற மன்னிநின் றாளே. உக

1042 நின்றா ளவன்றன் உடலும் உயிருமாய்ச்
சென்றாள் சிவகதி சேரும் பராசத்தி
ஒன்றாக என்னுட் புகுந்துணர் வாகியே
நின்றாள் பரஞ்சுடர் ஏடங்கை யாளே. உஉ

1043 ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி
வேடம் படிகம் விரும்பும்வெண் தாமரை
பாடுந் திருமுறை பார்ப்பணி பாதங்கள்
சூடுமின் சென்னிவாய்த் தோத்திரஞ் சொல்லுமே. ௨௩

1044 தோத்திரஞ் செய்து தொழுது துணையடி
வாய்த்திட ஏத்தி வழிபடு மாறிரும்
பார்த்திடு மங்குச பாசம் பசுங்கரும்
பார்த்திடும் பூம்பிள்ளை யாகுமாம் ஆதிக்கே. ௨௪

1045 ஆதி விதமிகுத் தண்டந்த மால்தங்கை
நீதி மலரின்மேல் நேரிழை நாமத்தைப்
பாதியில் வைத்துப் பலகாற் பயில்விரேல்
சோதி மிகுத்துமுக் காலமுந் தோன்றுமே. ௨௫

1046 மேதாதி ஈரெட்டு மாகிய மெல்லியல்
வேதாதி நூலின் விளங்கும் பராபரை
ஆதார மாகியே ஆய்ந்த பரப்பினள்
நாதாதி நாதத்து நல்லரு ளாளே. ௨௬

1047 அருள்பெற் றவர்சொல்ல வாரீர் மனிதர்
பொருள்பெற்ற சிந்தைப் புவனா பதியார்
மருளுற்ற சிந்தையை மாற்றி யருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவன் நானே. ௨௭

1048 ஆன வராக முகத்தி பதத்தினள்
ஈன வராகம் இடிக்கும் முசலத்தோ
டேனை யுழுபடை ஏந்திய வெண்ணகை
ஊன் மறவுணர்ந் தாருளத் தோங்குமே. ௨அ

1049 ஓங்காரி என்பா ளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்
ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு
ரீங்காரத் துள்ளே யினிதிருந் தாளே. ௨௯

1050 தானே தலைவி யெனநின்ற தற்பரை
தானே யுயிர்வித்துத் தந்த பதினாலும்
வானோர் தலமும் மனமும்நற் புத்தியுந்
தானே சிவகதி தன்மையு மாமே. ௩0

## 6. வயிரவி மந்திரம்

1051 பன்னிரண் டாங்கலை யாதி பயிரவி
தன்னில் அகாரமு மாயையுங் கற்பித்துப்

பன்னிரண் டாதியோ டந்தம் பதினாறுஞ்
சொன்னிலை சோடச மந்தமென் றோதிடே. க

1052 அந்தம் பதினாறும் அதுவே வயிரவி
முந்து நடுவும் முடிவும் முதலாகச்
சிந்தைக் கமலத் தெழுகின்ற மாசத்தி
அந்தமும் ஆதியு மாகிநின் றாளே. உ

1053 ஆகின்ற மூவரும் அங்கே அடங்குவர்
போகின்ற பூதம் பொருந்து புராதரர்
சார்கின்ற சார்வுழிச் சாரார் சதிர்பெறப்
போகுந் திரிபுரை புண்ணியத் தோரே. ௩

1054 புண்ணிய நந்தி புனிதன் திருவாகும்
எண்ணிய நாட்கள் இருபத்தேழ் சூழ்மதி
பண்ணிய வன்னி பகலோன் மதியீறு
திண்ணிய சிந்தைதன் தென்னனு மாமே. ச

1055 தென்னன் திருநந்தி சேவகன் தன்னொடும்
பொன்னங் கிரியிற் பூதலம் போற்றிடும்
பன்னும் பரிபிடி யந்தம் பகவனோ
டுன்னுந் திரிபுரை ஓதிநின் றானுக்கே. ரு

1056 ஓதிய நந்தி உணருந் திருவருள்
நீதியில் வேத நெறிவந் துரைசெய்யும்
போதம் இருபத் தெழுநாள் புணர்மதி
சோதி வயிரவி சூலம்வந் தாளுமே. சா

1057 சூலங் கபாலங்கை ஏந்திய சூலிக்கு
நாலாங் கரமுள நாகபா சாங்குச
மாலங் கயனறி யாத வடிவுக்கு
மேலங்க மாய்நின்ற மெல்லிய லாளே. எ

1058 மெல்லியல் வஞ்சி விடமி கலைஞானி
சொல்லிய கிஞ்சுக நிறமன்னு சேயிழை
கல்லியல் ஒப்பது காணுந் திருமேனி
பல்லிய லாடையும் பன்மணி தானே. அ

1059 பன்மணி சந்திர கோடி திருமுடி
சொன்மணி குண்டலக் காதி யுழைக்கண்ணி
நன்மணி சூரிய சோம நயனத்தள்
பொன்மணி வன்னியும் பூரிக்கின் றாளே. கூ

1060 பூரித்த பூவிதழ் எட்டினுக் குள்ளேயோர்
ஆரியத் தாளுண்டங் கெண்மர் கன்னியர்
பாரித்த பெண்கள் அறுபத்து நால்வருஞ்
சாரித்துச் சத்தியைத் தாங்கள்கண் டாரே. க௦

1061 கண்ட சிலம்பு வளைசங்கு சக்கரம்
எண்டிசை யோகி இறைவி பராசத்தி
அண்டமொ டெண்டிசை தாங்கும் அருட்செல்வி
புண்டரி கத்தினுட் பூசனை யாளே. கக

1062 பூசனை கந்தம் புனைமலர் மாகோடி
யோசனை பஞ்சத் தொலிவந் துரைசெய்யும்
வாசமி லாத மணிமந் திரயோகந்
தேசந் திகழுந் திரிபுரை காணே. கஉ

1063 காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு
பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்
பேணுஞ் சிவனும் பிரமனும் மாயனும்
காணுந் தலைவிநற் காரணி காணே. கங

1064 காரணி மந்திரம் ஓதுங் கமலத்துப்
பூரண கும்ப விரேசம் பொருந்திய
நாரணி நந்தி நடுவங் குரைசெய்த
ஆரண வேதநூல் அந்தமு மாமே. கச

1065 அந்த நடுவிரல் ஆதி சிறுவிரல்
வந்த வழிமுறை மாறி யுரைசெய்யுஞ்
செந்தமி ழாதி தெளிந்து வழிபடு
நந்தி இதனை நவமுரைத் தானே. கரு

1066 உரைத்த நவசத்தி ஒன்று முடிய
நிரைத்த விராசி நெடுமுறை எண்ணிப்
பிரைச்சதம் எட்டுமுன் பேசிய நந்தி
நிரைத்து நியதி நியமஞ்செய் தானே. கசு

1067 தாமக் குழலி தயைக்கண்ணி உள்நின்ற
வேமத் திருளற வீசும் இளங்கொடி
ஓமப் பெருஞ்சுடர் உள்ளெழு நுண்புகை
மேவித் தழுதொடு மீண்டது காணே. கஎ

1068 காணும் இருதய மந்திர முங்கண்டு
பேணு நமவென்று பேசுந் தலைமேலே
வேணு நடுவு மிகநின்ற வாகுதி
பூணு நடுவென்ற வந்தஞ் சிகையே. கஅ

1069 சிகைநின்ற வந்தக் கவசங்கொண் டாதிப்
பகைநின்ற வங்கத்தைப் பாரென்று மாறித்
தொகைநின்ற நேத்திர முத்திரை சூலம்
வகைநின்ற யோனி வருத்தலு மாமே. கக

1070 வருத்த மிரண்டுஞ் சிறுவிரன் மாறிப்
பொருத்தி அணிவிரற் சுட்டிப் பிடித்து
நெரித்தொன்ற வைத்து நெடிது நடுவே
பெருத்த விரலிரண் டுள்புக்குப் பேசே. உ0

1071 பேசிய மந்திரம் இகாரம் பிரித்துரை
கூச மிலாத சகாரத்தை முன்கொண்டு
வாசிப் பிராணன் உபதேச மாகைக்குக்
கூசிய விந்து வுடன்கொண்டு கூவே. உக

1072 கூவிய சீவன் பிராணன் முதலாகப்
பாவிய சவ்வுடன் பண்ணும் யகாரத்தை
மேவிய மாயை விரிசங்கு முத்திரை
தேவி நடுவுள் திகழ்ந்துநின் றளே. உஉ

1073 நின்ற வயிரவி நீலி நிசாசரி
ஒன்றும் இரண்டும் ஒருங்கிய உள்ளத்துச்
சென்றருள் நாயகி தேவர் பிரானுக்கே
நன்றருள் ஞாலத்து நாடிடுஞ் சாற்றியே. உ௩

1074 சாற்றிய வேதஞ் சராசரம் ஐம்பூதம்
நாற்றிசை முக்கண்ணி நாடும் இருள்வெளி
தோற்றும் உயிர்ப்பன்மை சோதி பராபரை
ஆற்றலொ டாய்நிற்கும் ஆதி முதல்வியே. உ௪

1075 ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி
ஓதி யுணரில் உடலுயிர் ஈசனும்
பேதை உலகிற் பிறவிகள் நாசமாம்
ஓத வுலவாத கோலமொன் றருமே. உ௫

1076 கோலக் குழலி குலாய புருவத்தள்
நீலக் குவளை மலரன்ன கண்ணினள்
ஆலிக்கும் இன்னமு தானந்த சுந்தரி
மேலைச் சிவத்தை வெளிப்படுத் தாளே. உ௬

1077 வெளிப்படு வித்து விளைவறி வித்துத்
தெளிப்படு வித்தென் சிந்தையி னுள்ளே
களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதி
ஒளிப்படு வித்தென்னை உய்யக்கொண் டாளே. உ௭

1078 கொண்டனள் கோலங் கோடி அநேகங்கள்
கண்டனள் எண்ணெண் கலையின்கண் மாலைகள்
விண்டனள் மேலை விரிகதிர் மூன்றையுந்
தண்டலை மேல்நின்ற தையல்நல் லாளே. ௨அ

1079 தையல்நல் லாளைத் தவத்தின் தலைவியை
மையலை நோக்கும் மனோன்மணி மங்கையைப்
பையநின் றேத்திப் பணிமின் பணிந்தபின்
வெய்ய பவமினி மேவகி லாவே. ௨௯

1080 வேயன தோளி விரையுறு மென்மலர்
ஏய குழலி இளம்பிறை ஏந்திழை
தூய சடைமுடிச் சூலினி சுந்தரி
ஏயென துள்ளத் தினிதிருந் தாளே. ௩0

1081 இனியதென் மூலை இருக்குங் குமரி
தனியொரு நாயகி தானே தலைவி
தனிப்படு வித்தனள் சார்வு படுத்து
நனிப்படு வித்துள்ளம் நாடிநின் றாளே. ௩க

1082 [1]நாடிகள் மூன்று நடுவெழு [2]ஞாளத்துக்
கூடி இருந்த குமரி குலக்கன்னி
பாடகச் சீறடிப் பைம்பொற் சிலம்பொலி
ஊடக மேவி உறங்குகின் றாளே. ௩௨

1083 உறங்கு மளவின் மனோன்மணி வந்து
கறங்கு வளைக்கைக் கழுத்தாரப் புல்லிப்
பிறங்கொளித் தம்பலம் வாயில் உமிழ்ந்திட்
டுறங்கலை யாவென் றுபாயஞ்செய் தாளே. ௩௩

1084 உபாயம் அளிக்கும் ஒருத்தியென் உள்ளத்
தபாயம் அறக்கெடுத் தன்பு விளைத்துச்
சுவாவை விளக்குஞ் சுழியகத் துள்ளே
அவாவை அடக்கிவைத் தஞ்சலென் றாளே. ௩௪

1085 அஞ்சொல் மொழியாள் அருந்தவப் பெண்பிள்ளை
செஞ்சொல் மடமொழி சீருடைச் சேயிழை
தஞ்சமென் றெண்ணித்தன் சேவடி போற்றுவார்க்
கின்சொல் அளிக்கும் இறைவியென் றாரே. ௩௫

1086 ஆருயி ராயும் அருந்தவப் பெண்பிள்ளை
காரியல் கோதையள் காரணி நாரணி

---

பா. வே. 1. நாடிய கண்மூன்று. 2. ஞானத்துக்.

ஊரும் உயிரும் உலகும் ஒடுக்கிடுங்
கோரியென் உள்ளங் குலாவிநின் றாளே. ௩௬

1087 குலாவிய கோலக் குமரியென் னுள்ளம்
நிலாவி யிருந்து நெடுநாள் அணைந்தும்
உலாவி இருந்துணர்ந் துச்சியி னுள்ளே
கலாவி யிருந்த கலைத்தலை யாளே. ௩௭

1088 கலைத்தலை நெற்றியோர் கண்ணுடைக் கண்ணுள்
முலைத்தலை மங்கை முயங்கி இருக்குஞ்
சிலைத்தலை யாய தெரிவினை நோக்கி
அலைத்தபூங் கொம்பினள் அங்கிருந் தாளே. ௩௮

1089 இருந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவிப்
[1]பொருந்திய நால்விரல் புக்கனள் புல்லித்
திருந்திய தாணுவிற் சேர்ந்துடன் ஒன்றி
அருந்தவ மெய்தினள் ஆதியி னாளே. ௩௯

1090 ஆதி யனாதி யகாரணி காரணி
சோதிய சோதி சுகபர சுந்தரி
மாது சமாதி மனோன்மணி மங்கலி
ஓதியென் னுள்ளத் துடனியைந் தாளே. ௪0

1091 இயைந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவி
நயந்தனள் அங்கே நமசிவ என்னும்
அயன்றனை யோரும் பதமது பற்றும்
பெயர்ந்தனள் மற்றும் பிதற்றறுத் தாளே. ௪௧

1092 பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர்
முயற்றியின் முத்தி அருளும் முதல்வி
கயற்றிகழ் முக்கண்ணுங் கம்பலைச் செவ்வாய்
முகத்தருள் நோக்கமும் முன்னுள்ள தாமே. ௪௨

1093 உள்ளத் திதயத்து நெஞ்சத் தொருமூன்றுள்
பிள்ளைத் தடமுள்ளே பேசப் பிறந்தது
[2]வள்ளற் றிருவின் வயிற்றினுள் மாமாயைக்
கள்ள ஒளியின் கருத்தாகுங் கன்னியே. ௪௩

1094 கன்னியுங் கன்னி அழிந்திலள் காதலி
துன்னியங் கைவரைப் பெற்றனள் தூய்மொழி
பன்னிய நன்னூற் பகவரும் அங்குள
என்னேஇம் மாயை இருளது தானே. ௪௪

பா. வே. 1. பொருந்திரு. 2. வள்ளத் திருவினை.

1095 இருளது சத்தி வெளியதெம் அண்ணல்
பொருளது புண்ணியர் போகத்துள் இன்பம்
தெருளது சிந்தையைத் தெய்வமென் றெண்ணில்
அருளது செய்யுமெம் ஆதிப் பிரானே. சரு

1096 ஆதி அனாதியும் ஆய பராசத்தி
பாதி பராபரை மேலுறை பைந்தொடி
மாது சமாதி மனோன்மணி மங்கலி
ஓதுமென் னுள்ளத் துடன்முகிழ்த் தாளே. சசு

1097 ஓதிய வண்ணங் கலையின் உயர்கலை
ஆதியில் வேதமே யாமென் றறிகிலர்
சாதியும் பேதமுந் தத்துவ மாய்நிற்பள்
ஆதியென் றோதினள் ஆவின் கிழத்தியே. சஎ

1098 ஆவின் கிழத்திநல் லாவடு தண்டுறை
நாவின் கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடுந்
தேவின் கிழத்தி திருவாஞ் சிவமங்கை
மேவுங் கிழத்தி வினைகடிந் தாளே. சஅ

1099 வினைகடிந் தாருள்ளத் துள்ளொளி மேவித்
தனையடைந் தோர்க்கெல்லாந் தத்துவ மாய்நிற்பள்
எனையடி மைகொண்ட ஏந்திழை ஈசன்
கணவனைக் காண அனாதியு மாமே. சகூ

1100 ஆதி அனாதி அகாரணி காரணி
வேதமதாய்ந்தனள் வேதியர்க் காய்நின்ற
சோதித் தனிச்சுடர் சொரூப மாய்நிற்கும்
பாதி பராபரை பன்னிரண் டாதியே. ருo

## 7. பூரண சத்தி

1101 அளந்தேன் அகலிடத் தந்தமும் ஆதியும்
அளந்தேன் அகலிடத் தாதிப் பிரானை
அளந்தேன் அகலிடத் தாணொடு பெண்ணும்
அளந்தேன் அவனருள் ஆய்ந்துணர்ந் தேனே. க

1102 உணர்ந்திலர் ஈசனை ஊழிசெய் சத்தி
புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள்
கணங்களைத் தன்னருள் செய்கின்ற கன்னி
கொணர்ந்த வழிகொண்டு கும்பக மாமே. உ

1103 கும்பக் களிறைந்துங் கோலொடு பாகனும்
வம்பில் திகழும் மணிமுடி வண்ணனும்

இன்பக் கலவி இனிதுறை தையலும்
அன்பிற் கலவியு ளாயொழிந் தாரே. ௩

1104 இன்பக் கலவியில் இட்டெழு கின்றதோர்
அன்பிற் புகவல்ல னும்எங்கள் அப்பனும்
துன்பக் குழம்பில் துயருறும் பாசத்துள்
என்பிற் பராசத்தி என்னம்மை தானே. ௪

1105 என்னம்மை என்னப்பன் என்னுஞ் செருக்கற்று
உன்னம்மை ஊழித் தலைவனும் அங்குளன்
மன்னம்மை யாகி மருவி யுரைசெய்யும்
பின்னம்மை யாய்நின்ற பேர்நந்தி தானே. ௫

1106 தார்மேல் உறைகின்ற தண்மலர் நான்முகன்
பார்மேல் இருப்ப தொருநூறு தானுள
பூமேல் உறைகின்ற போதகம் வந்தனள்
நாமேல் உறைகின்ற நாயகி ஆணையே. ௬

1107 ஆணைய மாய்வருந் தாது ளிருந்தவர்
மாணைய மாய மனத்தை ஒருக்கிப்பின்
பாணைய மாய பரத்தை அறிந்தபின்
தாணைய மாய தனுதனன் தானே. ௭

1108 தானே எழுந்தஇத் தத்துவ நாயகி
வானோர் எழுந்து மதியை விளக்கினள்
தேனோர் எழுகின்ற தீபத் தொளியுடன்
மானே நடமுடை மன்றறி யீரே. ௮

1109 அறிவான மாயையும் ஐம்புலக் கூட்டமும்
அறிவான மங்கை அருளது சேரிற்
பிறியா அறிவறி வாருளம் பேணு
நெறியாய சித்த நினைந்திருந் தாளே. ௯

1110 இரவும் பகலும் இலாத இடத்தே
குரவஞ்செய் கின்ற குழலியை நாடி
அரவஞ்செய் யாமல் அருளுடன் தூங்கப்
பருவஞ்செய் யாததோர் பாலனு மாமே. க௦

1111 பாலனு மாகும் பராசத்தி தன்னொடு
மேலனு காவிந்து நாதங்கள் விட்டிட
மூலம தாமெனும் முத்திக்கு நேர்படச்
சாலவு மாய்நின்ற தற்பரத் தாளே. கக

1112 நின்ற பராசத்தி நீள்பரன் தன்னொடு
நின்றறி ஞானமும் இச்சையு மாய்நிற்கும்
நன்றறி யுங்கிரி யாசத்தி நண்ணவே
மன்ற னவற்றுள் மருவிடுந் தானே. கஉ

1113 மருவொத்த மங்கையுந் தானும் உடனே
உருவொத்து நின்றமை ஒன்றும் உணரார்
கருவொத்து நின்று கலக்கின போது
திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றானே. கஙு

1114 சிந்தையின் உள்ளே திரியுஞ் சிவசத்தி
விந்துவும் நாதமு மாயே விரிந்தனள்
சந்திர பூமி சடாதரி சாத்தவி
அந்தமொ டாதிய தாம்வண்ணத் தாளே. கச

1115 ஆறி யிருந்த அமுத பயோதரி
மாறி யிருந்த வழியறி வாரில்லை
தேறி யிருந்துநல் தீபத் தொளியுடன்
ஊறி யிருந்தனள் உள்ளுடை யார்க்கே. கரு

1116 உடையவன் அங்கி உருத்திர சோதி
விடையவன் ஏறி விளங்கி யிருக்குங்
கடையவர் போயிடுங் கண்டவர் நெஞ்சத்
தடையது வாகிய சாதகர் தாமே. கசு

1117 தாமேல் உறைவிடம் ஆறித ழானது
பார்மேல் இதழ்பதி னெட்டிரு நூறுள
பூமேல் உறைகின்ற புண்ணியம் வந்தனள்
பார்மேல் உறைகின்ற பைங்கொடி யாளே. கஎ

1118 பைங்கொடி யாளும் பரம னிருந்திடத்
திண்கொடி யாகத் திகழ்தரு சோதியாம்
விண்கொடி யாகி விளங்கி வருதலாற்
பெண்கொடி யாக நடந்த துலகே. கஅ

1119 நடந்தது வம்மலர் நாலுடன் அஞ்சாய்
இருந்தனர் கன்னிகள் எட்டுடன் ஒன்றாய்ப்
படர்ந்தது தன்வழி பங்கயத் துள்ளே
தொடர்ந்தது உள்வழிச் சோதி யடுத்தே. கசு

1120 அடுக்குந் தாமரை ஆதி இருப்பிடம்
எடுக்குந் தாமரை இல்லகத் துள்ளது
மடுக்குந் தாமரை மத்தகத் தேசெல
முடுக்குந் தாமரை முச்சது ரத்தே. உ0

1121 முச்சது ரத்தே எழுந்த முளைச்சுடர்
எச்சது ரத்தும் இடம்பெற ஓடிடக்
கைச்சது ரத்துக் கடந்துள் ஒளிபெற
எச்சது ரத்தும் இருந்தனள் தானே. உக

1122 இருந்தனள் தன்முகம் ஆறிரண் டாலாய்ப்
பரந்தன வாயு திசைதிசை தோறுங்
குவிந்தன முத்தின் முகவொளி நோக்கி
நடந்தது தேறல் அதோமுகம் அம்பே. உஉ

1123 அம்பன்ன கண்ணி அரிவை மனோன்மனி
கொம்பன்ன நுண்ணிடை கோதை குலாவிய
செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாடொறும்
நம்பனை நோக்கி நவிலுகின் றாளே. உங

1124 நவிலும் பெருந்தெய்வம் நான்மறைச் சத்தி
துகிலுடை யாடை நிலம்பொதி பாதம்
அகிலமும் அண்ட முழுதுஞ்செம் மாந்து
புகலுமுச் சோதி புனையநிற் பாளே. உச

1125 புனையவல் லாள்புவ னத்திறை எங்கள்
வனையவல் லாள்அண்ட கோடிகள் உள்ளே
புனையவல் லாள்மண்ட லத்தொளி தன்னைப்
புனையவல் லாளையும் போற்றியென் பேனே. உரு

1126 போற்றியென் பேன்புவ னாபதி அம்மையென்
ஆற்றலுள் நிற்கும் அருந்தவப் பெண்பிள்ளை
சீற்றங் கடிந்த திருநுதற் சேயிழை
கூற்றந் துரக்கின்ற கோள்பைந் தொடியே. உசு

1127 தொடியார் தடக்கைச் சுகோதய சுந்தரி
வடிவார் திரிபுரை யாமங்கை சங்கைச்
செடியார் வினைகெடச் சேர்வரை என்றென்
றடியார் வினைகெடுத் தாதியு மாமே. உஎ

1128 மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடி
பல்லிசைப் பாவை பயன்தரு பைங்கொடி
புல்லிசைப் பாவையைப் போகத் துரந்திட்டு
வல்லிசைப் பாவை மனம்புகுந் தாளே. உஅ

1129 தாவித் தவப்பொருள் தானவன் எம்மிறை
பாவித் துலகம் படைக்கின்ற காலத்து
மேவிப் பராசத்தி மேலொடு கீழ்தொடர்ந்
தாவிக்கு மப்பொருள் தானது தானே. உகூ

1130 அதுவிது என்பார் அவனை அறியார்
கதிவர நின்றதோர் காரணங் காணார்
மதுவிரி பூங்குழல் மாமங்கை நங்கை
திதமது உன்னார்கள் தேர்ந்தறி யாரே. ௩௦

## 8. ஆதாரவாதேயம்

1131 நாவிதழ் ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு
தானித ழானவை நாற்பத்து நாலுள
பாவித ழானவள் பங்கய மூலமாய்த்
தானித ழாகித் தரித்திருந் தாளே. க

1132 தரித்திருந் தாளவள் தன்னொளி நோக்கி
விரித்திருந் தாளவள் வேதப் பொருளைக்
குறித்திருந் தாளவள் கூறிய ஐந்து
மறித்திருந் தாளவள் மாதுநல் லாளே. உ

1133 மாதுநல் லாளும் மணாளன் இருந்திடப்
பாதிநல் லாளும் பகவனு மானது
சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல்
வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே. ௩

1134 வெள்ளடை யானிரு மாமிகு மாமலர்க்
கள்ளடை யாரக் கமழ்குழ லார்மன
மள்ளடை யானும் வகைத்திற மாய்நின்ற
பெண்ணொரு பாகம் பிறவிபெண் ணாமே. ௪

1135 பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதைமை
பெண்ணிடை ஆணும் பிறந்து கிடந்தது
பெண்ணுடை ஆணென் பிறப்பறிந் தீர்க்கின்ற
பெண்ணுடை ஆணிடைப் பேச்சற்ற வாறே. ௫

1136 பேச்சற்ற நற்பொருள் காணும் பெருந்தகை
மாச்சற்ற சோதி மனோன்மணி மங்கையாங்
காச்சற்ற சோதி கடவு ளுடன்புணர்ந்
தாச்சற்றெ னுட்புகுந் தாலிக்குந் தானே. ௬

1137 ஆலிக்குங் கன்னி அரிவை மனோன்மணி
பாலித் துலகிற் பரந்துபெண் ணாகும்
வேலைத் தலைவியை வேத முதல்வியை
ஆலித் தொருவன் உகந்துநின் றானே. ௭

1138 உகந்துநின் றான்நம்பி ஒண்ணுதற் கண்ணோ
டுகந்துநின் றான்நம் முழைபுக நோக்கி

உகந்துநின் றுன்இவ் உலகங்கள் எல்லாம்
உகந்துநின் றுன்அவ டன்றே டொருத்தே. அ

1139 குத்து முலைச்சி குழைந்த மருங்கினள்
துத்தி விரிந்த சுணங்கினள் தூமொழி
புத்தகச் சீறடிப் பாவை புணர்வினைத்
தொத்த கருத்தது சொல்லகி லேனே. ௯

1140 சொல்லவொண் ணாத அழற்பொதி மண்டலஞ்
செல்லவொண் ணாது திகைத்தங் கிருப்பர்கள்
வெல்லவொண் ணாத வினைத்தனி நாயகி
மல்லவொண் ணாத மனோன்மணி தானே. ௧௦

1141 தானே இருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடும்அங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே வடவரைத்: தண்கடற் கண்ணே. ௧௧

1142 கண்ணுடை யாளைக் கலந்தங் கிருந்தவர்
மண்ணுடை யாரை மனித்தரிற் கூட்டொணுப்
பண்ணுடை யார்கள் பதைப்பற் றிருந்தவர்
விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே. ௧௨

1143 கண்டெண் டிசையுங் கலந்து வருங்கன்னி
பண்டெண் டிசையும் பராசத்தி யாய்நிற்கும்
விண்டெண் டிசையும் விரைமலர் கைக்கொண்டு
தொண்டெண் டிசையுந் தொழநின்ற கன்னியே. ௧௩

1144 கன்னி ஒளியென நின்றவிச் சந்திரன்
மன்னி யிருக்கின்ற மாளிகை செந்நிறஞ்
சென்னி யிருப்பிடஞ் சேர்பதி னுறுடன்
பன்னி யிருப்பப் பராசத்தி யாமே. ௧௪

1145 பராசத்தி யென்றென்று பல்வகை யாலுந்
தராசத்தி யான தலைப்பிர மாணி
இராசத்தி யாமள வாகமத் தாளாகுங்
குராசத்தி கோலம் பலவுணர்ந் தேனே. ௧௫

1146 உணர்ந்துல கேழையும் யோகினி சத்தி
உணர்ந்துயி ராய்நிற்கும் உன்னதன் ஈசன்
புணர்ந்தொரு காலத்துப் போகமு தாதி
இணைந்து பரமென் றிசைந்திது தானே. ௧௬

1147 இதுவப் பெருந்தகை எம்பெரு மானும்
பொதுவக் கல்வியும் போகமு மாகி
மதுவக் குழலி மனோன்மணி மங்கை
அதுவக் கல்வியுள் ஆயுழி யோகமே. கஎ

1148 யோகநற் சத்தி ஒளிபீடந் தானாகும்
யோகநற் சத்தி ஒளிமுகந் தெற்காகும்
யோகநற் சத்தி உதர நடுவாகும்
யோகநற் சத்திதாள் உத்தரந் தேரே. கஅ

1149 தேர்ந்தெழு மேலாஞ் சிவனங்கி யோடுற
வார்ந்தெழு மாயையு மந்தம தாய்நிற்கும்
ஓர்ந்தெழு விந்துவும் நாதமும் ஓங்கிடக்
கூர்ந்தெழு கின்றனள் கோல்வளை தானே. கக

1150 தானான வாறெட்டுத் தாம்பரைக் குண்மிசை
தானான வாறுமீ ரேழுஞ் சமகலை
தானான விந்து சகமே பரமெனுந்
தானும் பரவா தனையெனத் தக்கதே. உo

1151 தக்க பராவித்தை தானிரு பானேழிற்
றக்கெழு மோருத் திரஞ்சொல்லச் சொல்லவே
மிக்கிடும் எண்சத்தி வெண்ணிற முக்கண்ணி
தொக்க கதையோடு தோன்முத் திரையாளே. உக

1152 முத்திரை மூன்றின் முடிந்தமெய்ஞ் ஞானத்தள்
தத்துவ மாயல்ல வாய சகலத்தள்
வைத்த பராபர னாய பராபரை
சத்தியு மானந்த சத்தியுங் கொங்கே. உஉ

1153 கொங்கின்ற கொம்பின் குரும்பைக் குலாங்கன்னி
பொங்கிய குங்குமத் தோளி பொருந்தினள்
அங்குச பாச மெனுமகி லங்கனி
தங்கு மவள்மனை தானறி வாயே. உங

1154 வாயு மனமுங் கடந்த மனோன்மணி
பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவுங் கடந்த அரனுக்குத்
தாயும் மகளுநல் தாரமு மாமே. உச

1155 தாரமு மாகுவள் தத்துவ மாய்நிற்பள்
காரண காரிய மாகுங் கலப்பினள்
பூரண விந்து பொதிந்த புராதனி
பாரள வாந்திசை பத்துடை யாளே. உரு

1156 பத்து முகமுடை யாள்நம் பராசத்தி
வைத்தனள் ஆறங்க நாலுடன் மூன்வேதம்
ஒத்தனள் ஆதாரம் ஒன்றுடன் ஓங்கியே
நித்தமாய் நின்றாளெம் நேரிழை கூறே. உசு

1157 கூறிய கன்னி குலாய புருவத்தள்
சீறிய ளாயுல கேழுந் திகழ்ந்தவள்
ஆரிய நங்கை யமுத பயோதரி
பேருயி ராளி பிறிவறுத் தாளே. உஎ

1158 பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை
குறியொன்றி நின்றிடுங் கோமளக் கொம்பு
பொறியொன்றி நின்று புணர்ச்சிசெய் தாங்கே
அறிவொன்ற நின்றனள் ஆருயி ருள்ளே. உஅ

1159 உள்ளத்தி னுள்ளே யுடனிருந் தைவர்தங்
கள்ளத்தை நீக்கிக் கலந்துட னேபுல்கிக்
கொள்ளத் தவநெறி கூடிய இன்பத்து
வள்ளற் றலைவி மருட்டிப் புரிந்தே. உகூ

1160 புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி
இருந்தருள் செய்கின்ற இன்பம் அறியார்
பொருந்தி யிருந்த புதல்விபூ வண்ணத்
திருந்த விலக்கில் இனிதிருந் தாளே. ௩0

1161 இருந்தனள் ஏந்திழை என்னுள மேவித்
திருந்து புணர்ச்சியில் தேர்ந்துணர்ந் துன்னி
நிரந்தர மாகிய நிரதி சயமொடு
பொருந்த விலக்கிற் புணர்ச்சி அதுவே. ௩க

1162 அதுஇது என்னும் அவாவினை நீக்கித்
துதியது செய்து சுழியுற நோக்கில்
விதியது தன்னையும் வென்றிட லாகும்
மதிமல ராள்சொன்ன மண்டல மூன்றே. ௩உ

1163 மூன்றுள மண்டலம் மோகினி சேர்விடம்
ஏன்றுள ஈரா றெழுகலை உச்சியில்
தோன்று மிலக்குற வாகுதல் மாமாயை
ஏன்றனள் ஏழிரண் டிந்துவொ டேறே. ௩௩

1164 இந்துவி னின்றெழு நாதம் இரவிபோல்
வந்துபின் நாக்கின் மதித்தெழுங் கண்டத்தில்
உந்திய சோதி இதயத் தெழும்ஒலி
இந்துவின் மேலுற்ற ஈறது தானே. ௩௪

1165 ஈறது தான்முதல் எண்ணிரண் டாயிர
மாறுதல் இன்றி மனோவச மாயெழில்
தூறது செய்யுஞ் சுகந்தச் சுழியது
பேறது செய்து பிறந்திருந் தாளே. ௩௫

1166 இருந்தனள் ஏந்திழை ஈறதி லாகத்
திருந்திய ஆனந்தஞ் செந்நெறி நண்ணிப்
பொருந்து புவனங்கள் போற்றிசெய் தேத்தி
வருந்த இருந்தனள் மங்கைநல் லாளே. ௩௬

1167 மங்கையும் மாரனுந் தம்மொடு கூடிநின்
றங்குலி கூட்டி அகம்புறம் பார்த்தனர்
கொங்கைநல் லாளுங் குமாரர்கள் ஐவருந்
தங்களின் மேவிச் சடங்குசெய் தாரே. ௩௭

1168 சடங்கது செய்து தவம்புரி வார்கள்
கடந்தனி னுள்ளே கருதுவ ராகில்
தொடர்ந்தெழு சோதி துளைவழி ஏறி
அடங்கிடும் அன்பின தாயிழை பாலே. ௩௮

1169 பாலித் திருக்கும் பனிமல ராறினும்
ஆலித் திருக்கும் அவற்றின் அகம்படி
சீலத்தை நீக்கத் திகழ்ந்தெழு மந்திர
மூலத்து மேலது முத்தது வாமே. ௩௯

1170 முத்து வதனத்தி முகந்தொறு முக்கண்ணி
சத்தி சதிரி சகளி சடாதரி
பத்துக் கரத்தி பராபரன் பைந்தொடி
வித்தகி என்னுள்ள மேவிநின் றாளே. ௪௦

1171 மேவிய மண்டலம் மூன்றுடன் கீழெரி
தாவிய நற்பதத் தண்மதி யங்கதிர்
மூவருங் கூடி முதல்வியாய் முன்னிற்பார்
ஓவினு மேவிடும் உள்ளொளி யாமே. ௪௧

1172 உள்ளொளி மூவிரண் டோங்கிய அங்கங்கள்
வெள்ளொளி அங்கியின் மேவி அவரொடுங்
கள்ளவிழ் கோதைக் கடந்துட னேநிற்குங்
கொள்ள விசுத்திக் கொடியமு தாமே. ௪௨

1173 கொடிய திரேகை குருவுள் இருப்பப்
படியது வாருணைப் பைங்கழ லீசன்
வடிவது வானந்தம் வந்து முறையே
இடிமுதல் ஆறங்கம் ஏந்திழை யாளே. ௪௩

1174 ஏந்திழை யாளும் இறைவர்கள் மூவருங்
காந்தார மாறுங் கலைமுதல் ஈரெட்டு
மாந்த குளத்தியு மந்திர ராயுவுஞ்
சார்ந்தனர் ஏத்த இருந்தனள் சத்தியே. சச

1175 சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி என்ப தறிகிலர்
பத்தியைப் பாழில் உகுத்தஅப் பாவிகள்
கத்திய நாய்போற் கதறுகின் றாரே. சரு

1176 ஆரே திருவின் திருவடி காண்பார்கள்
நேரேநின் றோதி நினையவல் லார்க்குக்
காரேர் குழலி கமல மலரன்ன
சீரேயுஞ் சேவடி சிந்தைவைத் தாளே. சசா

1177 சிந்தையில் வைத்துச் சிராதியி லேவைத்து
முந்தையில் வைத்துத்தம் மூலத்தி லேவைத்து
நிந்தையில் வையா நினைவதி லேவைத்துச்
சந்தையில் வைத்துச் சமாதிசெய் வீரே. சஎ

1178 சமாதிசெய் வார்கட்குத் தான்முத லாகிச்
சிவாதியி லாருஞ் சிலைநுத லாளை
நவாதியி லாக நயந்தது ஓதில்
உவாதி அவளுக் குறைவில தாமே. சஅ

1179 உறைபதி தோறும் முறைமுறை மேவி
நறைகமழ் கோதையை நாடொறு நண்ணி
மறையுட னேநிற்கு மற்றுள்ள நான்கும்
இறைதினைப் போதினில் எய்திட லாமே. சகூ

1180 எய்திட லாகும் இருவினை யின்பயன்
கொய்தளிர் மேனிக் குமரி குலாங்கன்னி
மைதவழ் கண்ணிநன் [1] மாதுரி கையொடு
கைதவம் இன்றிக் கருத்துறும் வாறே. ருo

1181 கருத்துறுங் காலங் கருது மனமுங்
திருத்தி யிருந்தவை சேரு நிலத்து
ஒருத்தியை உன்னி உணர்ந்திடு மண்மேல்
இருத்திடும் எண்குணம் எய்தலும் ஆமே. ருக

1182 ஆமையொன் றேறி அகம்படி யானென
ஓமஎன் றோதியெம் உள்ளொளி யாய்நிற்கும்

---

பா. வே. 1. மாரிதூர்க் கையொடு.

தாம நறுங்குழல் தையலைக் கண்டபின்
சோம நறுமலர் சூடிநின் றாளே. ௫௨

1183 சூடிடும் அங்குச பாசத் துளைவழி
கூடும் இருவளைக் கோலக்கைக் குண்டிகை
நாடும் இருபத நன்னெடு ருத்திரம்
ஆடிடுஞ் சீர்புனை ஆடக மாமே. ௫௩

1184 ஆமயன் மாலரன் ஈசன் சதாசிவன்
தாமடி சூடிநின் றெய்தினர் தம்பதங்
காமனுஞ் சாமன் இரவி கனலுடன்
சோமனும் வந்தடி சூடநின் றாளே. ௫௪

1185 சூடும் இளம்பிறை சூலி கபாலினி
நீடும் இளங்கொடி நின்மலி நேரிழை
நாடி நடுவிடை ஞான முருவநின்
றூடு மதன்வழி அண்ட முதல்வியே. ௫௫

1186 அண்ட முதலாய் அவனி பரியந்தங்
கண்டதொன் றில்லை கனங்குழை யல்லது
கண்டனுங் கண்டியு மாகிய காரணங்
குண்டிகை கோளிகை கண்டத னாலே. ௫௬

1187 ஆலமுண் டானமு தாங்கவர் தம்பதஞ்
சாலவந் தெய்துந் தவத்தின்பந் தான்வரும்
கோலிவந் தெய்துங் குவிந்த பதவையோ
டேலவந் தீண்டி இருந்தனள் மேலே. ௫௭

1188 மேலாம் அருந்தவம் மேன்மேலும் வந்தெய்தக்
காலால் வருந்திக் கழிவர் கணத்திடை
நாலா ளினநின் றேத்திநட் டுச்சிதன்
மேலா மெழுத்தின ளாமத்தி னாளே. ௫௮

1189 ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினள்
ஓமத்தி லேயும் ஒருத்தி பொருந்தினள்
நாம நமசிவ என்றிருப் பார்க்கு
நேமத் துணைவி நிலாவிநின் றாளே. ௫௯

1190 நிலாமய மாகிய நீள்படி கத்தின்
சிலாமய மாகுஞ் செழுந்தா ளத்தின்
சுலாமய மாகுஞ் சுரிகுழற் கோதை
கலாமய மாகக் கலந்துநின் றாளே. ௬0

1191 கலந்துநின் றாள்கன்னி காதல னோடுங்
கலந்துநின் றாளுயிர் கற்பனை எல்லாங்
கலந்துநின் றாள்கலை ஞானங்கள் எல்லாங்
கலந்துநின் றாள்கன்னி காலமு மாயே. கூக

1192 காலவி எங்குங் கருத்தும் அருத்தியுங்
கூலவி ஒன்றாகுங் கூட விழைத்தனள்
மாலினி மாகுலி மந்திர சண்டிகை
பாலினி பாலவன் பாகம தாமே. கூஉ

1193 பாகம் பராசத்தி பைம்பொன் சடைமுடி
ஏகம் இருதயம் ஈரைந்து திண்புய
மோக முகமைந்து முக்கண் முகந்தொறும்
நாக முரித்து நடஞ்செய்யும் நாதர்க்கே. கூங

1194 நாதனு நாலொன் பதின்மருங் கூடிநின்
றோதிடுங் கூட்டங்கள் ஓரைந் துளஅவை
வேதனும் ஈரொன்ப தின்மரு மேவிநின்
றாதியும் அந்தமு மாகிநின் றாளே. கூச

1195 ஆகின்ற நாள்கலை ஐம்பத் தொருவர்கள்
ஆகிநின் றார்களில் ஆருயி ராமவள்
ஆகிநின் றாளுடன் ஆகிய சக்கரத்
தாகிநின் றானவன் ஆயிழை பாடே. கூரு

1196 ஆயிழை யாளொடு மாதிப் பரமிடம்
ஆயதொ ரண்டவை யாறும் இரண்டுள
ஆய மனந்தொ றறுமுக மவைதனில்
ஏயவார் குழலி இனிதுநின் றாளே. கூசூ

1197 நின்றனள் நேரிழை யோடுடன் நேர்பட
இன்றெ னகம்படி ஏழும் உயிர்ப்பெய்துந்
துன்றிய வோரொன் பதின்மருஞ் சூழலுள்
ஒன்றுயர் வோதி யுணர்ந்துநின் றாளே. கூஎ

1198 உணர்ந்தெழு மந்திரம் ஓமெனும் உள்ளே
மணந்தெழு மாங்கதி யாகிய தாகுங்
குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக்
கணந்தெழுங் காணுமக் காமுகை யாமே. கூஅ

1199 ஆமது வங்கியும் ஆதியும் ஈசனும்
மாமது மண்டல மாருத மாதியும்
ஏமது சீவன் சிகையங் கிருண்டிடக்
கோமலர்க் கோதையுங் கோதண்ட மாகுமே. கூகூ

1200 ஆகிய கோதண்டத் தாகு மனோன்மணி
ஆகிய ஐம்ப துடனே அடங்கிடும்
ஆகும் பராபரை யோடப் பரையவள்
ஆகு மவள்ஐங் கருமத்தள் தானே. எ0

1201 தானிகழ் மோகினி சார்வான யோகினி
போன மயமுடை யாரடி போற்றுவர்
ஆனவ ராவியி னாகிய வச்சிவந்
தானும் பரசிவ மேலது தானே. எக

1202 தானந்த மேலே தருஞ்சிகை தன்னுடன்
ஆனந்த மோகினி யம்பொற் றிருவொடு
மோனையில் வைத்து மொழிதரு கூறது
வானவை யோமெனும் அவ்வுயிர் மார்க்கமே. எஉ

1203 மார்க்கங்கள் ஈன்ற மனோன்மணி மங்கலி
யார்க்கும் அறிய வரியா ளவளாகும்
வாக்கு மனமு மருவியொன் றாய்விட்ட
நோக்கும் பெருமைக்கு நுண்ணறி வாமே. எந

1204 நுண்ணறி வாகும் நுழைபுலன் மாந்தர்க்குப்
பின்னறி வாகும் பிரானறி வத்தடஞ்
செந்நெறி யாகுஞ் சிவகதி சேர்வார்க்குத்
தன்னெறி யாவது சன்மார்க்க மாமே. எச

1205 சன்மார்க்க மாகச் சமைதரு மார்க்கமுந்
துன்மார்க்க மானவை எல்லாந் துரந்திடும்
நன்மார்க்கத் தேவரும் நன்னெறி யாவதுஞ்
சன்மார்க்கத் தேவியுஞ் சத்தியென் பாளே. எரு

1206 சத்தியும் நானுஞ் சயம்புவும் அல்லது
முத்தியை யாரும் முதலறி வாரில்லை
அத்திமேல் வித்திடில் அத்தி பழுத்தக்கான்
மத்தியி லேற வழியது வாமே. எசு

1207 அதுவிது வென்றவ மேகழி யாதே
மதுவிரி பூங்குழல் மங்கைநல் லாளைப்
பதிமது மேவிப் பணியவல் லார்க்கு
விதிவழி தன்னையும் வென்றிட லாமே. எஎ

1208 வென்றிட லாகும் விதிவழி தன்னையும்
வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை
வென்றிட லாகும் விழைபுலன் தன்னையும்
வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே. எஅ

1209 ஓரைம் பதின்மருள் ஒன்றியே நின்றது
பாரம் பரியத்து வந்த பரமிது
மாரங் குழலாளும் அப்பதி தானுமுன்
சாரும் பதமிது சத்திய மாமே. எக

1210 சத்தியி னோடு சயம்புவும் நேர்படில்
வித்தது வின்றியே எல்லாம் விளைந்தன
அத்தகை யாகிய ஐம்பத் தொருவருஞ்
சித்தது மேவித் திருந்திடு வாரே. அ0

1211 திருந்து சிவனுஞ் சிலைநுத லாளும்
பொருந்திய வானவர் போற்றிசெய் தேத்த
அருந்திட அவ்விடம் ஆரமு தாக
இருந்தனள் தானங் கிளம்பிறை என்றே. அக

1212 என்றும் எழுகின்ற வேரினை எய்தினர்
தன்றது வாகுவர் தார்குழ லாளொடு
மன்றரு கங்கை மதியொடு மாதவர்
துன்றிய தாரகை சோதிநின் றுளே. அஉ

1213 நின்றனள் நேரிழை யாளொடு நேர்பட
ஒன்றிய வுள்ளொளி யாலே யுணர்ந்தது
சென்ற பிராணிகள் சிந்தையில் வேண்டிய
துன்றிடு ஞானங்கள் தோன்றிடுந் தானே. அ௩

1214 தோன்றிடும் வேண்டுரு வாகிய தூய்நெறி
ஈன்றிடு மாங்கவள் எய்திய பல்கலை
மான்றரு கண்ணியும் மாரனும் வந்தெதிர்
சான்றது வாகுவர் தாமவ ளாயுமே. அ௪

1215 ஆயும் அறிவுங் கடந்தணு வாரணி
மாயம தாகி மதோமதி யாயிடுஞ்
சேய அரிவை சிவானந்த சுந்தரி
நேயம தாநெறி யாகிநின் றுளே. அ௫

1216 நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப்
பிறிவது செய்யாது பிஞ்ஞக னோடுங்
குறியது கூடிக் குறிக்கொண்டு நோக்கும்
அறிவொடும் ஆங்கே அடங்கிட லாமே. அ௬

1217 ஆமயன் மாலரன் ஈசன்மா லாங்கதி
ஓமய மாகிய ஒன்பதும் ஒன்றிடத்
தேமய னாந் தெனுதெ்தன என்றிடும்
மாமய மானது வந்தெய்த லாமே. அஎ

1218 வந்தடி போற்றுவர் வானவர் தானவர்
இந்து முதலாக எண்டிசை யோர்களுங்
கொந்தணி யுங்குழ லாளொடு கோனையும்
வந்தனை செய்யும் வழிநவில் வீரே. அஅ

1219 நவிற்றுநன் மந்திரம் நன்மலர் தூபங்
கவற்றிய கந்தங் கவர்ந்தெரி தீபம்
பயிற்றும் உலகினிற் பார்ப்பதி பூசை
அவிக்கொண்ட சோதிக்கோர் அர்ச்சனை தானே. அகூ

1220 தாங்கி உலகில் தரித்த பராபரன்
ஓங்கிய காலத் தொருவன் உலப்பிலி
பூங்கிளி தங்கும் புரிகுழ லாளன்று
பாங்குடன் ஏற்பப் பராசத்தி போற்றே. கூ0

1221 பொற்கொடி மாதர் புனைகழல் ஏத்துவர்
அற்கொடி மாதுமை யார்வத் தலைமகள்
நற்கொடி மாதை நயனங்கண் மூன்றுடை
விற்கொடி மாதை விரும்பி விளங்கே. கூக

1222 விளங்கொளி யாய விரிசுடர் மாலை
துளங்கு பராசத்தி தூங்கிருள் நீங்கக்
களங்கொள் மணியுடன் காம வினோதம்
உளங்கொ ளிலம்பியம் ஒன்று தொடரே. கூஉ

1223 தொடங்கி உலகினிற் சோதி மணாளன்
அடங்கி இருப்பதென் அன்பின் பெருமை
விடங்கொள் பெருஞ்சடை மேல்வரு கங்கை
ஒடுங்கி யுமையொடும் ஓருரு வாமே. கூங.

1224 உருவம் பலவுயி ராய்வல்ல நந்தி
தெருவம் புகுந்தமை தேர்வுற நாடிற்
புரிவளைக் கைச்சியெம் பொன்னணி மாதை
மருவி இறைவன் மகிழ்வன மாயமே. கூச

1225 மாயம் புணர்க்கும் வளர்சடை யானடித்
தாயம் புணர்க்குஞ் சலநதி அமலனைக்
காயம் புணர்க்குங் கலவியுள் மாசத்தி
ஆயம் புணர்க்குமவ் வியோனியு மாமே. கூரு

1226 உணர்ந்தொழிந் தேனவ னெங்கள் ஈசனைப்
புணர்ந்தொழிந் தேன்புவ னாபதி யாரை
அணைந்தொழிந் தேனெங்கள் ஆதிதன் பாதம்
பிணைந்தொழிந் தேன்றன் அருள்பெற்ற வாறே. கூகா

1227 பெற்றாள் பெருமை பெரிய மனோன்மணி
நற்றாள் இறைவனே நற்பய னேஎன்பர்
கற்றான் அறியுங் கருத்தறி வார்கட்குப்
பொற்றாள் உலகம் புகல்தனி யாமே. கூஎ

1228 தனிநா யகன்றனோ டென்னெஞ்சம் நாடி
இனியார் இருப்பிடம் ஏழுல கென்பர்
பனியான் மலர்ந்தபைம் போதுகை ஏந்திக்
கனியாய் நினைவதென் காரணம் அம்மையே. கூஅ

1229 அம்மனை அம்மை அரிவை மனோன்மணி
செம்மனை செய்து திருமங்கை யாய்நிற்கும்
இம்மனை செய்த இந்நில மங்கையும்
அம்மனை யாகி அமர்ந்துநின் றாளே. கூகூ

1230 அம்மையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அம்மையும் அத்தனு மாரறி வாரென்னை
அம்மையொ டத்தனும் யானும் உடனிருந்
தம்மையொ டத்தனை யான்புரிந் தேனே. சOO

## 9. ஏரொளிச் சக்கரம்

1231 ஏரொளி யுள்ளெழு தாமரை நாலிதழ்
ஏரொளி விந்துவி னாலெழு நாதமாம்
ஏரொளி யக்கலை எங்கும் நிறைந்தபின்
ஏரொளிச் சக்கர மந்நடு வன்னியே. க

1232 வன்னி யெழுத்தவை மாபலம் உள்ளன
வன்னி யெழுத்தவை வானுற ஓங்கின
வன்னி யெழுத்தவை மாபெருஞ் சக்கரம்
வன்னி யெழுத்திடு வாறது சொல்லுமே. உ

1233 சொல்லிய விந்துவும் ஈராறு நாதமாஞ்
சொல்லிடு மப்பதி யவ்வெழுத் தாவன
சொல்லிடு நூறொடு நாற்பத்து நாலுரு
சொல்லிடு சக்கர மாய்வரு மேலதே. ந

1234 மேல்வரும் விந்துவு மவ்வெழுத் தாய்விடும்
மேல்வரு நாதமும் ஓங்கும் எழுத்துடன்
மேல்வரு மப்பதி யவ்வெழுத் தேவரின்
மேல்வரு சக்கர மாய்வரு ஞாலமே. ச

1235 ஞாலம தாக விரிந்தது சக்கரம்
ஞாலம தாயிடும் விந்துவும் நாதமும்

ஞாலம தாயிடு மப்பதி யோசனை
ஞாலம தாக விரிந்த தெழுத்தே. ரு

1236 விரிந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விரிந்த எழுத்தது சக்கர மாக
விரிந்த எழுத்தது மேல்வரும் பூமி
விரிந்த எழுத்தினில் அப்புறம் அப்பே. சு

1237 அப்பது வாக விரிந்தது சக்கரம்
அப்பினில் அப்புறம் அவ்வன லாயிடும்
அப்பினில் அப்புறம் மாருத மாயெழ
அப்பினில் அப்புறம் ஆகாச மாமே. எ

1238 ஆகாச அக்கர மாவது சொல்லிடில்
ஆகாச அக்கரத் துள்ளே எழுத்தவை
ஆகாச அவ்வெழுத் தாகிச் சிவானந்தம்
ஆகாச அக்கர மாவ தறிமினே. அ

1239 அறிந்திடுஞ் சக்கரம் ஐயைந்து விந்து
அறிந்திடுஞ் சக்கர நாத முதலா
அறிந்திடும் அவ்வெழுத் தப்பதி யோர்க்கும்
அறிந்திடும் அப்பக லோணிலை யாமே. கூ

1240 அம்முதல் ஆறுமவ் வாதி எழுத்தாகும்
அம்முதல் ஆறுமவ் வம்மை எழுத்தாகும்
[1]இம்முதல் நாலும் [2]இருந்திடு வன்னியே
இம்முத லாகும் எழுத்தவை எல்லாம். க௦

1241 எழுத்தவை நூறொடு நாற்பத்து நாலும்
எழுத்தவை யாறது வந்நடு வன்னி
எழுத்தவை யந்நடு வச்சுட ராகி
எழுத்தவை தான்முதல் அந்தமு மாமே. கக

1242 அந்தமும் ஈறு முதலா னவையற
அந்தமும் அப்பதி னெட்டுடன் ஆதலால்
அந்தமும் அப்பதின் மூன்றில் அமர்ந்தபின்
அந்தமும் இந்துகை யாருட மானதே. கஉ

1243 ஆவின மானவை முந்நூற் றறுபது
மாவின மப்பதி னைந்தின மாயுறு
மாவின மப்பதி னெட்டுட னுயுறு
மாவின மக்கதி ரோன்வர வந்தே. கங

பா. வே. 1. அம்முதல். 2. இருநடு.

1244 வந்திடும் ஆகாசம் ஆறது நாழிகை
வந்திடும் அக்கரம் முப்பதி ராசியும்
வந்திடு நாளது முந்நூற் றறுபதும்
வந்திடு ஆண்டு வகுத்துரை யவ்வியே. கச

1245 அவ்வின மூன்றுமவ் வாடது வாய்வருங்
[1]கெவ்வின மூன்றுங் கிளர்தரு வேரதாஞ்
சவ்வின மூன்றுந் தழைத்திடுந் தண்டதாம்
இவ்வின மூன்றும் இராசிக ளெல்லாம். கரு

1246 இராசியுட் சக்கரம் எங்கும் நிறைந்தபின்
இராசியுட் சக்கர மென்றறி விந்துவாம்
இராசியுட் சக்கர நாதமும் ஒத்தபின்
இராசியுட் சக்கரம் நின்றிடு மாறே. கசு

1247 நின்றிடு விந்துவென் றுள்ள எழுத்தெலாம்
நின்றிடு நாதமும் ஓங்கும் எழுத்துடன்
நின்றிடு மப்பதி யவ்வெழுத் தேவரில்
நின்றிடு மப்புறந் தாரகை யானதே. கஎ

1248 தாரகை யாகச் சமைந்தது சக்கரந்
தாரகை மேலோர் தழைத்தது பேரொளி
தாரகை சந்திரன் நற்பக லோன்வரத்
தாரகை தாரகை தாரகை கண்டதே. கஅ

1249 கண்டிடு சக்கரம் விந்து வளர்வதாங்
கண்டிடு நாதமுந் தன்மேல் எழுந்திடக்
கண்டிடு வன்னிக் கொழுந்தன வொத்தபின்
கண்டிடு மப்புறங் காரொளி யானதே. கசு

1250 காரொளி அண்டம் பொதிந்துல கெங்கும்
பாரொளி நீரொளி சாரொளி காலொளி
வாரொளி ஒக்க வளர்ந்து கிடந்துபின்
நேரொளி ஒன்றாய் நிறைந்தங்கு நின்றதே. உ0

1251 நின்றது அண்டமும் நீளும் புவியெலாம்
நின்றவிவ் வண்ட நிலைபெறக் கண்டிட
நின்றவிவ் வண்டமு மூல மலமொக்கும்
நின்றவிவ் வண்டம் பலமது விந்துவே. உக

1252 விந்துவும் நாதமும் ஒக்க விழுந்திடில்
விந்துவும் நாதமும் ஒக்க விரையதாம்

---

பா. வே. 1. எவ்வின.

விந்திற் குறைந்திடு நாதம் எழுந்திடில்
விந்துவை எண்மடி கொண்டது வீசமே. உஉ

1253 வீசம் இரண்டுள நாதத் தெழுவன
வீசமும் ஒன்று விரைந்திடு மேலுற
வீசமும் நாதமும் எழுந்துடன் ஒத்தபின்
வீசமும் விந்து விரிந்தது காணுமே. உ௩

1254 விரிந்தது விந்துவுங் கெட்டது வீசம்
விரிந்தது விந்துவும் நாதத் தளவினில்
விரிந்தது வுட்கட்ட எட்டெட்டு மாகில்
விரிந்தது விந்து விரையது வாமே. உ௪

1255 விரையது விந்து விளைந்தன எல்லாம்
விரையது விந்து விளைந்த உயிரும்
விரையது விந்து விளைந்தவிஞ் ஞாலம்
விரையது விந்து விளைந்தவன் தாளே. உ௫

1256 விளைந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விளைந்த எழுத்தது சக்கர மாக
விளைந்த எழுத்தவை மெய்யினுள் நிற்கும்
விளைந்த எழுத்தவை மந்திர மாமே. உ௬

1257 மந்திரஞ் சக்கர மானவை சொல்லிடில்
தந்திரத் துள்ளெழுத் தொன்றெரி வட்டமாங்
கந்தரத் துள்ளு மிரேகையில் ஒன்றில்லை
பந்தம தாகும் பிரணவம் உன்னிடே. உ௭

1258 உன்னிட்ட வட்டத்தில் ஒத்தெழு மந்திரம்
பின்னிட்ட ரேகை பிழைப்பது தானில்லை
தன்னிட் டெழுந்த தகைப்பறப் பின்னிற்கப்
பன்னிட்ட மந்திரம் பார்க்கலு மாமே. உ௮

1259 பார்க்கலு மாகும் பகையறு சக்கரங்
காக்கலு மாகுங் கருத்தில் தடமெங்கும்
நோக்கலு மாகும் நுணுக்கற்ற நுண்பொருள்
ஆக்கலு மாகும் அறிந்துகொள் வார்க்கே. உ௯

1260 அறிந்திடுஞ் சக்கர மாதி யெழுத்து
விரிந்திடுஞ் சக்கர மேலெழுத் தம்மை
பரிந்திடுஞ் சக்கரம் பாரங்கி நாலும்
குவிந்திடுஞ் சக்கரங் கூறலு மாமே. ௩0

1261 கூறிய சக்கரத் துள்ளெழு மந்திரம்
மாறியல் பாக அமைந்து விரிந்திடுந்
தேறிய அஞ்சுடன் சேர்ந்தெழு மாரண
மாறியல் பாக மதித்துக்கொள் வார்க்கே. ௩௧

1262 மதித்திடும் அம்மையும் மாமாது மாகும்
மதித்திடும் அம்மையு மங்கனல் ஒக்கும்
மதித்தங் கெழுந்தவை காரண மாகில்
கொதித்தங் கெழுந்தவை கூடகி லாவே. ௩௨

1263 கூடிய தம்பனம் மாரணம் வசியம்
மாடியல் பாக அமைந்து செறிந்திடும்
பாடியுள் ளாகப் பகைவரும் வந்துறுர்
தேடியுள் ளாகத் தெளிந்துகொள் வார்க்கே. ௩௩

1264 தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே
அளிந்த வகாரத்தை யங்கடு வாக்கிக்
[1]குளிந்த வரவினைக் கூடியுள் வைத்து
வளிந்தவை யங்கெழு நாடிய காலே. ௩௪

1265 காலரை முக்கால் முழுதெனும் மந்திரம்
ஆலித் தெழுந்தமைந் தூறி எழுந்ததாய்ப்
பாலித் தெழுந்து பகையற நின்றபின்
மாலுற்ற மந்திர மாறிக்கொள் வார்க்கே. ௩௫

1266 கொண்டஇம் மந்திரங் கூத்தன் எழுத்ததாய்ப்
பண்டையுள் நாவிற் பகையற விண்டபின்
மன்றுள் நிறைந்த மணிவிளக் காயிடும்
இன்றும் இதயத் தெழுந்து நமவெனே. ௩௬

## 10. வயிரவச் சக்கரம்

1267 அறிந்த பிரதமையோ டாறு மறிஞ்சு
அறிந்தவச் சத்தமி மேலிவை குற்றம்
அறிந்தவை யொன்றுவிட் டொன்றுபத் தாக
அறிந்து வலமது வாக நடவே. க

1268 நடந்து வயிரவன் சூல கபாலி
கடந்த பகைவனைக் கண்ணது போக்கித்
தொடர்ந்த வுயிரது வுண்ணும் பொழுது
படர்ந்த வுடல்கொடு பந்தாட லாமே. உ

பா. வே. 1. குளிர்ந்த-வரனைக்.

1269 ஆமேவப் பூண்டரு ளாதி வயிரவன்
ஆமே கபாலமுஞ் சூலமுங் கைக்கொண்டங்
காமே தமருக பாசமுங் கையது
வாமே சிரத்தொடு வாளது கையே. ௩

1270 கையவை யாறுங் கருத்துற நோக்கிடு
மெய்யது செம்மை விளங்கு வயிரவன்
துய்ய ருளத்தில் துளங்குமெய் யுற்றதாய்ப்
பொய்வகை விட்டுநீ பூசனை செய்யே. ௪

1271 பூசனை செய்யப் பொருந்தியோ ராயிரம்
பூசனை செய்யு மதுவுட னுடுமால்
பூசனை சாந்து சவாது புழுகுநெய்
பூசனை செய்துநீர் பூசலை வேண்டுமே. ௫

1272 வேண்டிய வாறு கலகமு மாயிடும்
வேண்டிய ஆறினுண் மெய்யது பெற்றபின்
வேண்டிய வாறு வரும்வழி நீநட
வேண்டிய வாறது வாகுங் கருத்தே. ௬

## 11. சாம்பவி மண்டலச் சக்கரம்

1273 சாம்பவி மண்டலச் சக்கரஞ் சொல்லிடில்
ஆம்பதம் எட்டாக விட்டிடின் மேலதாங்
காண்பதந் தத்துவ நாலுள் நயனமும்
நாம்பதங் கண்டபின் நாடறிந் தோமே. ௧

1274 [1]நாடறி மண்டலம் நல்லவிக் குண்டத்துக்
கோடற வீதியுங் கொடர்ந்துள் இரண்டழி
பாடறி பத்துடன் ஆறு நடுவீதி
ஏடற நாலைந் திடவகை யாமே. ௨

1275 நாலைந் திடவகை யுள்ளதோர் மண்டலம்
நாலுநல் வீதியுள் நல்ல இலிங்கமாய்
நாலுநற் கோணமும் நந்நா லிலிங்கமாய்
நாலுநற் பூநடு நண்ணலவ் வாறே. ௩

1276 ஆறிரு பத்துநா லஞ்செழுத் தஞ்சையும்
வேறுரு வாக விளைந்து கிடந்தது
தேறி நிருமல சிவாய நமவென்று
கூறுமின் கூறிற் குறைகளும் இல்லையே. ௪

பா. வே. 1. நாடரி.

1277 குறைவதும் இல்லை குரைகழற் கூடு
மறைவது மாரண மவ்வெழுத் தாகித்
திறமது வாகத் தெளியவல் லாருக்
கிறவில்லை என்றென் றியம்பினர் காணே. ௫

1278 காணும் பொருளுங் கருதிய தெய்வமும்
பேணும் பதியும் பெருகிய தீர்த்தமும்
ஊணும் உணர்வும் உறக்கமுந் தானாகக்
காணுங் கனகமுங் காரிகை யாமே. ௬

1279 ஆமே எழுத்தஞ்சு மாம்வழி யேயாகப்
போமே யதுதானும் போம்வழி யேபோனால்
நாமே நினைத்தன செய்யலு மாகும்
பார்மேல் ஒருவர் பகையில்லை தானே. ௭

1280 பகையில்லை என்றும் பணிந்தவர் தம்பால்
நகையில்லை நாளும் நன்மைக ளாகும்
வினையில்லை என்றும் விருத்தமும் இல்லை
தகையில்லை தானுஞ் சலமது வாமே. ௮

1281 ஆரும் உரைசெய்ய லாமஞ் செழுத்தாலே
யாரும் அறியாத ஆனந்த ரூபமாம்
பாரும் விசும்பும் பகலு மதியதி
ஊனும் உயிரும் உணர்வது வாமே. ௯

## 12. புவனாபதி சக்கரம்

1282 ககராதி யோரைந்துங் காணிய பொன்மை
அகராதி யோரா றரத்தமே போலும்
சகராதி யோர்நான்குந் தான்சுத்த வெண்மை
ககராதி மூவித்தை காமிய முத்தியே. ௧

1283 ஓரில் இதுவே உரையும்இத் தெய்வத்தைத்
தேரிற் பிறிதில்லை யானென்று செப்பக்கேள்
வாரித் திரிகோண மனமின்ப முத்தியுந்
தேரில் அறியுஞ் சிவகாயந் தானே. ௨

1284 ஏக பராசத்தி ஈசற்காம் அங்கமே
யாகம் பராவித்தை யாமுத்தி சித்தியே
ஏகம் பராசத்தி யாகச் சிவகுரு
யோகம் பராசத்தி உண்மைஎட் டாமே. ௩

1285 எட்டா கிய[1] சத்தி எட்டாகும் யோகத்துக்
கட்டாகு நாதாந்தத் தெட்டுங் கலப்பித்த
தொட்டாத விந்துவுந் தானற் றொழிந்தது
கிட்டா தொழிந்தது கீழான மூடர்க்கே. ௪

1286 ஏதும் பலமா மியந்திரா சன்னடி
ஓதிக் குருவின் உபதேசம் உட்கொண்டு
நீதங்கும் அங்க நியாசந் தனைப்பண்ணிச்
சாதங் கெடச்செம்பிற் சட்கோணந் தானிடே. ௫

1287 சட்கோணந் தன்னில் ஸ்ரீம்ஹ்ரீம் தானிட்டு
அக்கோண மாறின் தலையில்ரீங் காரமிட்
டெக்கோண முஞ்சூழ எழில்வட்டம் இட்டுப்பின்
மிக்கிரெட் டக்கர மம்முதன் மேலிடே. ௬

1288 இட்ட இதழ்கள் இடையந் தரத்திலே
அட்டஹவ் விட்டதின் மேலே உவ்விட்டுக்
கிட்ட இதழ்களின் மேலே் கிரோம்சிரோம்
இட்டுவா மத்தாங் கிரோங்கென்று மேவிடே. ௭

1289 மேவிய சக்கர மீது வலத்திலே
கோவை யடைவே குரோங்சிரோங் கென்றிட்டுத்
தாவில்ரீங் காரத்தாற் சக்கரஞ் சூழ்ந்து
பூவைப் புவனா பதியைப்பின் பூசியே. ௮

1290 பூசிக்கும் போது புவனா பதிதன்னை
ஆசற் றகத்தினில் ஆவா கனம்பண்ணிப்
பேசிய பிராணப் பிரதிட்டை யதுசெய்து
தேசுற் றிடவே தியான மதுசெய்யே. ௯

1291 செய்ய திருமேனி செம்பட் டுடைதானுங்
கையிற் படையங் குசபாசத் தோடபய
மெய்யில் அணிகலன் இரத்தின மாமேனி
துய்ய முடியும் அவயவத்தில் தோற்றமே. ௰

1292 தோற்போர்வை நீக்கித் துதித்தடைவிற் பூசித்துப்
பாற்போ னகமந் திரத்தாற் பயின்றேத்தி
நாற்பால நாரதா யாசுவா காஎன்று
சீர்ப்பாகச் சேடத்தை மாற்றிப்பின் சேவியே. ௧௧

1293 சேவிப் பதன்முன்னே தேவியையுத் வாகனத்தாற்
பாவித் திதய கமலம் பதிவித்தங்

பா. வே. 1. சித்தி.

கியாவர்க்கும் எட்டா இயந்திர ராசனை
நீவைத்துச் சேமி நினைந்தது தருமே. கஉ

## 13. நவாக்கரி சக்கரம்

1294 நவாக்கரி சக்கர நானுரை செய்யின்
நவாக்கரி ஒன்று நவாக்கரி யாக
நவாக்கரி எண்பத் தொருவகை யாக
நவாக்கரி யக்கிலீ சௌமுத லீறே. க

1295 சௌமுதல் அவ்வொடு ஹௌவுட ஹ்ங்கிரீம்
கௌவு ளுமையுளுங் கலந்திரீம் கிரீமென்
றுெவ்வில் எழுங்கிலீ மந்திர பாதமாச்
செவ்வுள் எழுந்து சிவாய நமவென்னே. உ

1296 நவாக்கரி யாவது நானறி வித்தை
நவாக்கரி யுள்ளெழும் நன்மைகள் எல்லாம்
நவாக்கரி மந்திர நாவுளே ஓத
நவாக்கரி சத்தி நலந்தருந் தானே. ௩

1297 நலந்தரு ஞானமுங் கல்வியும் எல்லாம்
உரந்தரு வல்வினை யும்மைவிட் டோடிச்
சிரந்தரு தீவினை செய்வ தகற்றி
வரந்தரு சோதியும் வாய்த்திடுங் காணே. ௪

1298 கண்டிடுஞ் சக்கரம் வெள்ளிபொன் செம்பிடை
கொண்டிடும் உள்ளே குறித்த வினைகளை
வென்றிடு மண்டலம் வெற்றி தருவிக்கும்
நின்றிடுஞ் சக்கரம் நினைக்கு மளவே. ௫

1299 நினைத்திடு மச்சிரீ மக்கிலீ மீரு
நினைத்திடுஞ் சக்கர மாதியு மீறு
நினைத்திடு நெல்லொடு புல்லினை யுள்ளே
நினைத்திடும் அருச்சனை நேர்தரு வாளே. ௬

1300 நேர்தரு மத்திரு நாயகி யானவள்
யாதொரு வண்ணம் அறிந்திடும் பொற்பூவை
கார்தரு வண்ணங் கருதின கைவரும்
நார்தரு வண்ணம் நடந்திடு நீயே. ௭

1301 நடந்திடும் பாரினில் நன்மைகள் எல்லாங்
கடந்திடுங் காலனும் எண்ணிய நாளும்
படர்ந்திடு நாமமும் பாய்கதிர் போல
அடைந்திடு வண்ணம் அடைந்திடு நீயே. அ

1302 அடைந்திடும் பொன்வெள்ளி கல்லுடன் எல்லாம்
அடைந்திடு மாதி யருளுந் திருவும்
அடைந்திடும் அண்டத் தமரர்கள் வாழ்வும்
அடைந்திடும் வண்ணம் அறிந்திடு நீயே. ௯

1303 அறிந்திடு வார்கள் அமரர்க ளாகத்
தெரிந்திடு வானோர் தேவர்கள் தேவன்
பரிந்திடும் வானவன் பாய்புனல் சூடி
முரிந்திடு வானை முயன்றிடு நீரே. ௧0

1304 நீர்பணி சக்கரம் நேர்தரு வண்ணங்கள்
பாரணி யும்ஹிரீ முன்ஸ்ரீ மீருந்
தாரணி யும்புகழ்த் தையல்நல் லாள்தனைக்
காரணி யும்பொழிற் கண்டுகொள் ளீரே. ௧௧

1305 கண்டுகொள் ளுந்தனி நாயகி தன்னையும்
மொண்டுகொ ளும்முக வசியம தாயிடும்
பண்டுகொ ளும்பர மாய பரஞ்சுடர்
நின்று கொளுநிலை பேறுடை யாளையே. ௧௨

1306 பேறுடை யாள்தன் பெருமையை எண்ணிடில்
நாடுடை யார்களும் நம்வச மாகுவர்
மாறுடை யார்களும் வாழ்வது தானிலை
கூறுடை யாளையுங் கூறுமின் நீரே. ௧௩

1307 கூறுமின் எட்டுத் திசைக்குந் தலைவியை
யாறுமின் அண்டத் தமரர்கள் வாழ்வென
மாறுமின் வையம் வரும்வழி தன்னையுந்
தேறுமின் நாயகி சேவடி சேர்ந்தே. ௧௪

1308 சேவடி சேரச் செறிய இருந்தவர்
நாவடி யுள்ளே நவின்றுநின் றேத்துவர்
பூவடி யிட்டுப் பொலிய இருந்தவர்
மாவடி காணும் வகையறி வாரே. ௧௫

1309 ஐம்முத லாக வளர்ந்தெழு சக்கர
மைம்முத லாக அமர்ந்திரீ மீருகும்
அம்முத லாகி யவர்க்குடை யாடனை
மைம்முத லாக வழுத்திடு நீயே. ௧௬

1310 வழுத்திடு நாவுக் கரசிவள் தன்னைப்
பகுத்திடும் வேதமெய் யாகம மெல்லாந்
தொகுத்தொரு நாவிடை சொல்லவல் லாளை
முகத்துளும் முன்னெழக் கண்டுகொ ளீரே. ௧௭

1311 கண்ட இச் சக்கரம் நாவில் எழுதிடிற்
கொண்ட இம் மந்திரங் கூத்தன் குறியதா
மன்றினுள் வித்தையு மானுடர் கையதாய்
வென்றிடும் வையக மெல்லியல் மேவியே. கஅ

1312 மெல்லிய லாகிய மெய்ப்பொரு ளாள் தனைச்
சொல்லிய லாலே தொடர்ந்தங் கிருந்திடும்
பல்லிய லாகப் பரந்தெழு நாள்பல
நல்லியல் பாலே நடந்திடுந் தானே. கக

1313 நடந்திடு நாவினுள் நன்மைகள் எல்லாந்
தொடர்ந்திடுஞ் சொல்லொடு சொற்பொருள் தானும்
கடந்திடுங் கல்விக் கரசிவ ளாகப்
படர்ந்திடும் பாரிற் பகையில்லை தானே. உ0

1314 பகையில்லை கௌமுத லையது வீரு
நகையில்லை சக்கர நன்றறி வார்க்கு
மிகையில்லை சொல்லிய பல்லுரு வெல்லாம்
வகையில்லை யாக வணங்கிடுந் தானே. உக

1315 வணங்கிடுந் தத்துவ நாயகி தன்னை
நலங்கிடு நல்லுயி ரானவை யெல்லாங்
கலங்கிடுங் காம வெகுளி மயக்கந்
துலங்கிடுஞ் சொல்லிய சூழ்வினை தானே. உஉ

1316 தானே கழறித் தணியவும் வல்லனுய்த்
தானே நினைத்தவை சொல்லவும் வல்லனுய்த்
தானே தனிநடங் கண்டவள் தன்னையுந்
தானே வணங்கித் தலைவனு மாமே. உங

1317 ஆமே யனைத்துயி ராகிய அம்மையுந்
தாமே சகலமும் ஈன்றஅத் தையனும்
ஆமே யவளடி போற்றி வணங்கிடிற்
போமே வினைகளும் புண்ணிய னுகுமே. உச

.318 புண்ணிய னுகிப் பொருந்தி உலகெங்கும்
கண்ணிய னுகிக் கலந்தங் கிருந்திடுந்
தண்ணிய னுகித் தரணி முழுதுக்கும்
அண்ணிய னுகி அமர்ந்திருந் தானே. உரு

319 தானது கம்பிறீக் கௌவது ஈறும்
நானது சக்கர நன்றறி வார்க்கெலாம்
கானது கன்னி கலந்த பராசத்தி
கேளது வையங் கிளரொளி யானதே. உசா

1320 ஒளிக்கும் பராசத்தி உள்ளே அமரிற்
களிக்கும்இச் சிந்தையிற் காரணங் காட்டித்
தெளிக்கு மழையுடன் செல்வமுண் டாக்கும்
அளிக்கும் இவளை அறிந்துகொள் வார்க்கே. உ௭

1321 அறிந்திடுஞ் சக்கரம் அருச்சனை யோடே
எறிந்திடும் வையத் திடரவை காணின்
மறிந்திடு மன்னனும் வந்தனை செய்யும்
பொறிந்திடுஞ் சிந்தை புகையில்லை தானே. உஅ

1322 புகையில்லை சொல்லிய பொன்னொளி யுண்டாங்
குகையில்லை கொல்வ திலாமையி னாலே
வகையில்லை வாழ்கின்ற மன்னுயிர்க் கெல்லாஞ்
சிகையில்லை சக்கரஞ் சேர்ந்தவர் தாமே. உகூ

1323 சேர்ந்தவர் என்றுந் திசையொளி யானவர்
காய்ந்தெழு மேல்வினை காணகி லாதவர்
பாய்ந்தெழும் உள்ளொளி பாரிற் பரந்தது
மாய்ந்தது காரிருள் மாமொளி தானே. ௩०

1324 ஒளியது ஹௌமுன் கிரீமது ஈறுங்
களியது சக்கரங் கண்டறி வார்க்குத்
தெளிவது ஞானமுஞ் சிந்தையுந் தேறப்
பணிவது பஞ்சாக் கரமது வாமே. ௩க

1325 ஆமே சதாசிவ நாயகி யானவள்
ஆமே அதோமுகத் துள்ளறி வானவள்
ஆமே சுவையொளி யூறோசை [1]நாற்றம்
ஆமே யனைத்துயிர் தன்னுளு மாமே. ௩உ

1326 தன்னுளு மாகித் தரணி முழுதுங்கொண்
டென்னுளு மாகி இடம்பெற நின்றவள்
மண்ணுளும் நீரனல் காலுளும் வானுளுங்
கண்ணுளும் மெய்யுளுங் காணலு மாமே. ௩௩

1327 காணலு மாகுங் கலந்துயிர் செய்வன
காணலு மாகுங் கருத்து ளிருந்திடிற்
காணலு மாகுங் கலந்து வழிசெயக்
காணலு மாகுங் கருத்துற நில்லே. ௩௪

1328 நின்றிடும் ஏழு புவனமும் ஒன்றாகக்
கண்டிடும் உள்ளங் கலந்தெங்குந் தானாகக்

பா. வே. 1. கண்டவள்.

கொண்டிடும் வையங் குணம்பல தன்னையும்
விண்டிடும் வல்வினை மெய்ப்பொரு ளாகுமே. ௩௫

1329 மெய்ப்பொரு ளௌமுதல் ஹௌவது ஈறுக்
கைப்பொரு ளாகக் கலந்தெழு சக்கரந்
தற்பொரு ளாகச் சமைந்தமு தேஸ்வரி
நற்பொரு ளாக நடுவிருந் தாளே. ௩௬

1330 தாளதி னுள்ளே சமைந்தமு தேஸ்வரி
காலது கொண்டு கலந்துற வீசிடில்
நாளது நாளும் புதுமைகள் கண்டபின்
கேளது காயமுங் கேடில்லை காணுமே. ௩௭

1331 கேடில்லை காணுங் கிளரொளி கண்டபின்
நாடில்லை காணும் நாண்முத லற்றபின்
மாடில்லை காணும் வரும்வழி கண்டபின்
காடில்லை காணுங் கருத்துற் றிடத்துக்கே. ௩௮

1332 உற்றிட மெல்லாம் உலப்பில்பா ழாக்கிக்
கற்றிட மெல்லாங் கடுவெளி யானது
மற்றிட மில்லை வழியில்லை தானில்லை
சற்றிட மில்லை சலிப்பற நின்றிடே. ௩௯

1333 நின்றிடும் ஏழ்கடல் ஏழ்புவி எல்லாம்
நின்றிடும் உள்ளம் நினைத்தவை தாமெக்கும்
நின்றிடுஞ் சத்தி நிலைபெறக் கண்டிட
நின்றிடும் மேலை விளக்கொளி தானே. ௪௦

1334 விளக்கொளி ஸௌமுத லௌவது ஈறு
விளக்கொளிச் சக்கரம் மெய்ப்பொரு ளாகும்
விளக்கொளி யாகிய மின்கொடி யாளை
விளக்கொளி யாக விளங்கிடு நீயே. ௪௧

1335 விளங்கிடு மேல்வரு மெய்ப்பொருள் சொல்லின்
விளங்கிடு மெல்லிய லானது வாகும்
விளங்கிடு மெய்ந்நின்ற ஞானப் பொருளை
விளங்கிடு வார்கள் விளங்கினர் தானே. ௪௨

1336 தானே வெளியென எங்கும் நிறைந்தவள்
தானே பரம வெளியது வானவள்
தானே சகலமு மாக்கி அழித்தவள்
தானே யனைத்துள அண்ட சகலமே. ௪௩

1337 அண்டத்தி னுள்ளே அளப்பரி தானவள்
பிண்டத்தி னுள்ளே பெருவெளி கண்டவள்
குண்டத்தி னுள்ளே குணம்பல காணினுங்
கண்டத்தில் நின்ற கலப்பறி யார்களே. சச

1338 கலப்பறி யார்கடல் சூழுல கெல்லாம்
உலப்பறி யாருட லோடுயிர் தன்னைச்
சிலப்பறி யார்சில தேவரை நாடித்
தலைப்பறி யாகச் சமைந்தவர் தாமே. சரு

1339 தானே எழுந்தஅச் சக்கரஞ் சொல்லிடின்
மானே மதிவரை பத்திட்டு வைத்தபின்
தேனே யிரேகை திகைப்பற ஒன்பதில்
தானே கலந்த வரையெண்பத் தொன்றுமே. சசு

1340 ஒன்றிய சக்கரம் ஓதிடும் வேளையில்
வென்றிகொள் மேனி மதிவட்டம் பொன்மையாங்
கன்றிய ரேகை கலந்திடுஞ் செம்மையில்
என்றிய லம்மை எழுத்தவை பச்சையே. சஎ

1341 ஏய்ந்த மரவுரி தன்னில் எழுதிய
வாய்ந்தஇப் பெண்ணெண்பத் தொன்றில் நிறைத்தபின்
காய்ந்தவி நெய்யுட் கலந்துடன் ஓமமு
மாந்தலத் தாமுயி ராகுதி பண்ணுமே. சஅ

1342 பண்ணிய பொன்னைப் பரப்பற நீபிடி
எண்ணிய நாட்களில் இன்பமும் எய்திடும்
நண்ணிய நாமமும் நான்முகன் ஒத்தபின்
துண்ணென நேயநற் சேர்க்கலு மாமே. சகு

1343 ஆகின்ற சந்தனங் குங்குமங் கத்தூரி
போகின்ற சாந்து சவாது புழுகுநெய்
ஆகின்ற கற்பூர மாகோ சனநீருஞ்
சேர்கின்ற ஒன்பதுஞ் சேரநீ வைத்திடே. ருo

1344 வைத்திடும் பொன்னுடன் மாதவ நோக்கிடிற்
கைச்சிறு கொங்கை கலந்தெழு கன்னியைத்
தச்சிது வாகச் சமைந்தஇம் மந்திரம்
அர்ச்சனை யாயிரம் ஆயிரஞ் சிந்தியே. ருக

1345 சிந்தையி னுள்ளே திகழ்தரு சோதியாய்
எந்தை கரங்கள் இருமூன்றும் உள்ளது
பந்தமா சூலம் படைபாசம் வில்லம்பு
முந்தை கிலீமெழ முன்னிருந் தாளே. ரு௨

1346 இருந்தனர் சத்திகள் அறுபத்து நால்வர்
இருந்தனர் கன்னிகள் எண்வகை எண்மர்
இருந்தனர் சூழ எதிர்சக் கரத்தே
இருந்த கரமிரு வில்லம்பு கொண்டே. ருரு

1347 கொண்ட கனகங் குழைமுடி யாடையாய்க்
கண்டஇம் முத்தங் கனல்திரு மேனியாய்ப்
பண்டமர் சோதிப் படரித ழானவள்
உண்டங் கொருத்தி உணரவல் லாருக்கே. ருச

1348 உணர்ந்திருந் துள்ளே ஒருத்தியை நோக்கிற்
கலந்திருந் தெங்குங் கருணை பொழியும்
மணந்தெழும் ஓசை யொளியது காணுந்
தணந்தெழு சக்கரந் தான்தரு வாளே. ருரு

1349 தருவழி யாகிய தத்துவ ஞானங்
குருவழி யாகுங் குணங்களுள் நின்று
கருவழி யாகுங் கணக்கை யறுத்துப்
பெருவழி யாக்கும் பேரொளி தானே. ருசு

1350 பேரொளி யாய பெரிய பெருஞ்சுடர்
சீரொளி யாகித் திகழ்தரு நாயகி
காரொளி யாகிய கன்னிகை பொன்னிறம்
பாரொளி யாகிப் பரந்துநின் றாளே. ருஎ

1351 பரந்த கரம்இரு பங்கயம் ஏந்திக்
குவிந்த கரமிரு கொய்தளிர்ப் பாணி
பரிந்தருள் கொங்கைகண் முத்தார் பவளம்
இருந்தநல் லாடை மணிபொதிந் தன்றே. ருஅ

1352 மணிமுடி பாதஞ் சிலம்பணி மங்கை
அணிபவ ளன்றி யருளில்லை யாகுந்
தணிபவர் நெஞ்சினுள் தன்னரு ளாகிப்
பணிபவர்க் கன்றே பரகதி யாமே. ருகூ

1353 பரந்திருந் துள்ளே அறுபது சத்தி
கரந்தன கன்னிகள் அப்படி சூழ
மலர்ந்திரு கையின் மலரவை ஏந்தச்
சிறந்தவர் ஏத்துஞ் சிறீம்தன மாமே. கூ0

1354 தனமது வாகிய தையலை நோக்கி
மனமது வோடி மரிக்கிலோ ராண்டிற்
கனமவை யற்றுக் கருதிய நெஞ்சந்
தினகர னிடஞ் செய்திய தாமே. கூக

1355 ஆகின்ற மூலத் தெழுந்த முழுமலர்
போகின்ற பேரொளி யாய மலரதாய்ப்
போகின்ற பூரண மாக நிறைந்தபின்
சேர்கின்ற செந்தழல் மண்டல மானதே. ௬௨

1356 ஆகின்ற மண்டலத் துள்ளே அமர்ந்தவள்
ஆகின்ற ஐம்பத் தறுவகை யானவள்
ஆகின்ற ஐம்பத் தறுசத்தி நேர்தரு
ஆகின்ற ஐம்பத் தறுவகை சூழவே. ௬௩

1357 சூழ்ந்தெழு சோதி சுடர்முடி பாதமாய்
ஆங்கணி முத்தம் அழகிய மேனியுந்
தாங்கிய கைய்வை தார்கிளி ஞானமாய்
ஏந்து கரங்கள் எடுத்தமர் பாசமே. ௬௪

1358 பாசம தாகிய வேரை யறுத்திட்டு
நேசம தாக நினைத்திரு மும்முளே
நாசம தெல்லாம் நடந்திடும் ஐயாண்டிற்
காசினி மேலமர் கண்ணுத லாகுமே. ௬௫

1359 கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி
பண்ணுறு நாதம் பகையற நின்றிடில்
விண்ணமர் சோதி விளங்க ஹ்ரீங்கார
மண்ணுடை நாயகி மண்டல மாகுமே. ௬௬

1360 மண்டலத் துள்ளே மலர்ந்தெழு தீபத்தைக்
கண்டகத் துள்ளே கருதி யிருந்திடும்
விண்டகத் துள்ளே விளங்கி வருதலால்
தண்டகத் துள்ளவை தாங்கலு மாமே. ௬௭

1361 தாங்கிய நாபித் தடமலர் மண்டலத்
தோங்கி எழுங்கலைக் குள்ளுணர் வானவள்
ஏங்க வரும்பிறப் பெண்ணி யறுத்திட
வாங்கிய நாதம் வலியுட னாகுமே. ௬௮

1362 நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம்
பூவுக்கு நாயகி பொன்முடி யாடையாம்
பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தள்
ஆவுக்கு நாயகி அங்கமர்ந் தாளே. ௬௯

1363 அன்றிரு கையில் அளந்த பொருள்முறை
இன்றிரு கையில் எடுத்தவெண் குண்டிகை
மன்றது காணும் வழியது வாகவே
கண்டங் கிருந்தவர் காரணி காணுமே. ௭0

1364 காரணி சத்திகள் ஐம்பத் திரண்டெனக்
காரணி கன்னிகள் ஐம்பத் திருவராய்க்
காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்குங்
காரணி தன்னரு ளாகிநின் றாளே. எக

1365 நின்றஇச் சத்தி நிலைபெற நின்றிடிற்
கண்டஇவ் வன்னி கலந்திடும் ஓராண்டிற்
கொண்ட விரதநீர் குன்றாமல் நின்றிடின்
மன்றினி லாடு மணியது காணுமே. எஉ

1366 கண்டஇச் சத்தி இருதய பங்கயங்
கொண்டஇத் தத்துவ நாயகி யானவள்
பண்டையவ் வாயுப் பகையை யறுத்திட
இன்றென் மனத்துள் இனிதிருந் தாளே. எஙு

1367 இருந்தவிச் சத்தி இருநாலு கையிற்
பரந்தஇப் பூங்கிளி பாச மழுவாள்
கரந்திடு கேடகம் வில்லம்பு கொண்டங்
குரந்தங் கிருந்தவள் கூத்துகந் தாளே. எச

1368 உகந்தனள் பொன்முடி முத்தார மாகப்
பரந்த பவளமும் பட்டாடை சாத்தி
மலர்ந்தெழு கொங்கை மணிக்கச் சணிந்து
தலைந்தங் கிருந்தவள் தான்பச்சை யாமே. எரு

1369 பச்சை இவளுக்குப் பாங்கிமார் ஆறெட்டு
கொச்சையார் எண்மர்கள் கூடி வருதலாற்
கச்சணி கொங்கைகள் கையிரு காப்பதாய்
எச்ச விடைச்சி இனிதிருந் தாளே. எசு

1370 தாளதி னுள்ளே தாங்கிய சோதியைக்
காலது வாகக் கலந்துகொள் என்று
மாலது வாக வழிபாடு செய்துநீ
பாலது போலப் பரந்தெழு விண்ணிலே. எஎ

1371 விண்ணமர் நாபி இருதய மாங்கிடைக்
கண்ணமர் கூபங் கலந்து வருதலாற்
பண்ணமர்ந் தாதித்த மண்டல மானது
தண்ணமர் கூபந் தழைத்தது காணுமே. எஅ

1372 கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள
தாபத்துச் சத்தி தயங்கி வருதலால்
ஆபத்துக் கைகள் அடைந்தன நாலைந்து
பாசம் அறுக்கப் பரந்தன சூலமே. எகூ

1373 சூலந்தண் டொள்வாள் சுடர்பறை ஞானமாய்
வேலம்பு தமருக மாகிளி விற்கொண்டு
காலம்பூப் பாசம் மழுகத்தி கைக்கொண்டு
கோலஞ்சேர் சங்கு குவிந்தகை எண்ணதே. அ௦

1374 எண்ணமர் சத்திகள் நாற்பத்து நாலுடன்
எண்ணமர் சத்திகள் நாற்பத்து நால்வராம்
எண்ணிய பூவித ழுள்ளே யிருந்தவள்
எண்ணிய எண்ணங் கடந்துநின் றாளே. அக

1375 கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு
தொடர்ந்தணி முத்து பவளங்கச் சாகப்
படர்ந்தல்குற் பட்டாடை பாதச் சிலம்பு
மடந்தை சிறியவள் வந்துநின் றாளே. அஉ

1376 நின்றஇச் சத்தி நிரந்தர மாகவே
கண்டிடு மேரு வணிமாதி தானாகிப்
பண்டைய வானின் பகட்டை யறுத்திட்
டொன்றிய தீபம் உணர்ந்தார்க்குண் டாமே. அங

1377 உண்டோர் அதோமுகம் உத்தம மானது
கண்டஇச் சத்தி சதாசிவ நாயகி
கொண்ட முகமைந்து கூறுங் கரங்களும்
ஒன்றிரண் டாகவே மூன்றுநா லானதே. அச

1378 நன்மணி சூலங் கபாலங் கிளியுடன்
பன்மணி நாகம் மழுகத்தி பந்தாகுங்
கன்மணி தாமரைக் கையில் தமருகம்
பொன்மணி பூணாரம் பூசனை யானதே. அரு

1379 பூசனைச் சத்திகள் எண்ணைவர் சூழவே
நேசவள் கன்னிகள் நாற்பத்து நேரதாய்க்
காசினிச் சக்கரத் துள்ளே கலந்தவள்
மாசடை யாமல் மகிழ்ந்திருந் தார்களே. அசு

1380 தாரத்தி னுள்ளே தயங்கிய சோதியைப்
பாரத்தி னுள்ளே பரந்துள் எழுந்திட
வேரது வொன்றிநின் றெண்ணு மனோமயங்
காரது போலக் கலந்தெழு மண்ணிலே. அஎ

1381 மண்ணில் எழுந்த அகார உகாரங்கள்
விண்ணில் எழுந்து சிவாய நமவென்று
கண்ணில் எழுந்தது காண்பரி தன்றுகொல்
கண்ணில் எழுந்தது காட்சி தரஎன்றே. அஅ

1382 என்றங் கிருந்த அமுத கலையிடைச்
சென்றங் கிருந்த அமுத பயோதரி
கண்டங் கரமிரு வெள்ளிபொன் மண்ணடை
கொண்டங் கிருந்தது வண்ணம் அமுதே. அகூ

1383 அமுதம தாக அழகிய மேனி
படிகம தாகப் பரந்தெழு முள்ளே
குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்துக்
கெமுதம தாகிய கேடிலி தானே. கூ0

1384 கேடிலி சத்திகள் முப்பத் தறுவரும்
நாடிலி கன்னிகள் நாலொன் பதின்மரும்
பூவிலி பூவிதழ் உள்ளே யிருந்திவர்
நாளிலி தன்னை நணுகிநின் றார்களே. கூக

1385 நின்றது புந்தி நிறைந்திடும் வன்னியுங்
கண்டது சோதி கருத்துள் இருந்திடக்
கொண்டது வோராண்டு கூடி வருகைக்கு
விண்டவௌ காரம் விளங்கின அன்றே. கூ௨

1386 விளங்கிடு வானிடை நின்றவை யெல்லாம்
வணங்கிடு மண்டலம் மன்னுயி ராக
நலங்கிளர் நன்மைகள் நாரண னொத்துச்
சுணங்கிடை நின்றிவை சொல்லலு மாமே. கூ௩

1387 ஆமே அதோமுக மேலே அமுதமாய்த்
தாமே யுகாரந் தழைத்தெழுஞ் சோமனுங்
காமேல் வருகின்ற கற்பக மானது
பூமேல் வருகின்ற பொற்கொடி யானதே. கூ௪

1388 பொற்கொடி யாளுடைப் பூசனை செய்திட
அக்களி யாகிய ஆங்காரம் போயிடும்
மற்கட மாகிய மண்டலந் தன்னுளே
பிற்கொடி யாகிய பேதையைக் காணுமே. கூ௫

1389 பேதை யிவளுக்குப் பெண்மை அழகாகுந்
தாதை யிவளுக்குத் தாணுவு மாய்நிற்கும்
மாதை யவளுக்கு மண்ணுந் திலகமாய்க்
கோதையர் சூழக் குவிந்திடங் காணுமே. கூ௬

1390 குவிந்தனர் சத்திகள் முப்பத் திருவர்
நடந்தனர் கன்னிகள் நாலெண்மர் சூழப்
பரந்தித ழாகிய பங்கயத் துள்ளே
இருந்தனள் காணும் இடம்பல கொண்டே. கூஎ

1401 ஞானி புவியெழு நன்னூ லனைத்துடன்
மோன திசையும் முழுஎண்ணெண் சித்தியும்
ஏனை நிலமும் எழுதா மறையீறுங்
கோனொடு தன்னையுங் காணுங் குணத்தனே. ச

## 3. மார்க்க சைவம்

1402 பொன்னாற் சிவசாத னம்பூதி சாதனம்
நன்மார்க்க சாதனம் மாஞான சாதனந்
துன்மார்க்க சாதனந் தோன்றாத சாதனஞ்
சன்மார்க்க சாதன மாஞ்சுத்த சைவர்க்கே. க

1403 கேடறு ஞானி கிளர்ஞான பூபதி
பாடறு வேதாந்த சித்தாந்த பாகத்தின்
ஊடுறு ஞானோ தயனுண்மை முத்தியோன்
பாடுறு சுத்தசை வப்பத்த நித்தனே. உ

1404 சுத்தம் அசுத்தந் துரியங்கள் ஓரேழுஞ்
சத்தும் அசத்துந் தணந்த பராபரை
உய்த்த பராபரை யுள்ளாம் பராபரை
அத்தன் அருட்சத்தி யாயெங்கு மாமே. ௩

1405 சத்தும் அசத்துந் தணந்தவர் தாமாகிச்
சித்தும் அசித்துந் தெரியாச் சிவோகமாய்
முத்தியுள் ஆனந்த சத்தியுள் மூழ்கினோர்
சித்தியு மங்கே சிறந்துள தானே. ௪

1406 தன்னைப் பரனைச் சதாசிவன் என்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை மாசற்ற
முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை
உன்னத் தகுஞ்சுத்த சைவர் உபாயமே. ரு

1407 பூரணந் தன்னிலே வைத்தற்ற வப்போத
மாரண மந்த மதித்தானந் தத்தோடு
நேரென ஈராறு நீதி நெடும்போகங்
காரண மாஞ்சுத்த சைவர்க்குக் காட்சியே. சா

1408 மாறாத ஞான மதிப்பற மாயோகந்
தேறாத சிந்தையைத் தேற்றிச் சிவமாக்கிப்
பேறான பாவனை பேணி நெறிநிற்றல்
கூறாகு ஞானி சரிதை குறிக்கிலே. எ

1409 வேதாந்தங் கண்டோர் பிரமமித் தியாதரர்
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்

வேதாந்த மில்லாத சித்தாந்தங் கண்டுளோர்
சாதா ரணமன்ன சைவர் உபாயமே. அ

1410 விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள்
கண்ணினைச் சென்றணு காப்பல காட்சிகள்
எண்ணினைச் சென்றணு காம லெணப்படும்
அண்ணலைச் சென்றணு காபசு பாசமே. கூ

1411 ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக
நின்று சமய நிராகார நீங்கியே
நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற்
சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே. க0

## 4. கடுஞ்சுத்த சைவம்

1412 வேடங் கடந்து விகிர்தன்றன் பான்மேவி
ஆடம் பரமின்றி ஆசாபா சஞ்செற்றுப்
பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச்
சாடுஞ் சிவபோ தகர்சுத்த சைவரே. க

1413 உடலான ஐந்தையும் ஓராறும் ஐந்து
மடலான மாமாயை மற்றுள்ள நீவப்
படலான கேவல பாசந் துடைத்துத்
திடமாய்த் தனையுறல் சித்தாந்த மார்க்கமே. உ

1414 சுத்தச் சிவனுரை தானதில் தோயாமல்
முத்தர் பதப்பொருள் முத்திவித் தாமூலம்
அத்தகை யான்மா அரனை அடைந்தற்றாற்
சுத்த சிவமாவ ரேசுத்த சைவரே. ங

1415 நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலால்
தானென்று நானென்றுஞ் சாற்றகில் லேனே. ச

1416 சாற்றரி தாகிய தத்துவஞ் சித்தித்தால்
ஆற்றரி தாகிய ஐந்தும் அடங்கிடும்
மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற்கும்
பாற்பர சாயுச்சிய மாகும் பதியே. ரு

## 5. சரியை

1417 உயிர்க்குயி ராய்நிற்றல் ஒண்ஞான பூசை
உயிர்க்கொளி நோக்கல் மகாயோக பூசை

உயிர்ப்பெறு மாவா கனம்புறப் பூசை
செயிற்கடை நேசஞ் சிவபூசை யாமே. க

1418 நாடு நகரமும் நற்றிருக் கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெரு மான்என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே. உ

1419 பத்தர் சரிதை படுவோர் கிரியையோர்
அத்தகு தொண்டர் அருள்வேடத் தாகுவோர்
சுத்த வியமாதி சாதகர் தூயோகர்
சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே. ங

1420 சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ னுயினோர்
சேர்ந்தவெண் யோகத்தர் சித்தர் சமாதியோர்
ஆய்ந்த கிரியையோர் அருச்சனை தப்பாதோர்
நேர்ந்த சரியையோர் நீள்நிலத் தோரே. ச

1421 கிரியை யோகங்கள் கிளர்ஞான பூசை
அரிய சிவனுரு அமரும் அரூபந்
தெரியும் பருவத்துத் தேர்ந்திடும் பூசை
உரியன நேயத் துயர்பூசை யாமே. ரு

1422 சரியாதி நான்குந் தருஞான நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்த மாறும்
பொருளா னதுநந்தி பொன்னகர் போந்து
மருளாகு மாந்தர் வணங்கவைத் தானே. சு

1423 சமையம் பலசுத்தித் தன்செயல் அற்றிடும்
அமையும் விசேடமும் அரன்மந் திரசுத்தி
சமைய நிருவாணங் கலாசுத்தி யாகும்
அமைமன்னு ஞானமார்க் கம்அபி டேகமே. எ

## 6. கிரியை

1424 பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண்
டெத்திக் கிலரில்லை என்பதின் அமலர்க்
கொத்துத் திருவடி நீழல் சரணெனத்
தத்தும் வினைக்கடல் சாராது காணுமே. க

1425 காணுறு கோடி கடிகமழ் சந்தனம்
வாணுறு மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே. உ

1426 கோனக்கன் றாயே குரைகழல் ஏத்துமின்
ஞானக்கன் றாகிய நடுவே யுழிதரும்
வானக்கன் றாகிய வானவர் கைதொழு
மானக்கன் றீசன் அருள்வள்ள மாமே. ௩

1427 இதுபணிந் தெண்டிசை மண்டலம் எல்லாம்
அதுபணி செய்கின் றவனொரு கூறன்
இதுபணி மானுடர் செய்பணி யீசன்
பதிபணி செய்வது பத்திமை காணே. ௪

1428 பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த அருளால் துரிசற்ற யோகத்தில்
உய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே. ௫

1429 அன்பின் உருகுவ னாளும் பணிசெய்வன்
செம்பொன்செய் மேனி கமலத் திருவடி
முன்புநின் றாங்கே மொழிவ தெனக்கருள்
என்பினுட் சோதி இலங்குகின் றானே. ௬

## 7. யோகம்

1430 நெறிவழி யேசென்று நேர்மையுள் ஒன்றித்
தறியிருந் தாற்போல் தம்மை யிருத்திச்
சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக்
குறியறி வாளர்க்குக் கூடலு மாமே. ௧

1431 ஊழிதோ றூழி உணர்ந்தவர்க் கல்லால்
ஊழிதோ றூழி யுணரவுந் தானொட்டான்
ஆழி அமரும் அரியயன் என்றுளார்
ஊழி முயன்றும் ஒருச்சியு ளானே. ௨

1432 பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே. ௩

1433 உய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்
கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்
சிந்தை யுறவே தெளிந்திருள் நீங்கினால்
முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே. ௪

1434 எழுத்தொடு பாடலும் எண்ணெண் கலையும்
பழித்தலைப் பாசப் பிறவியும் நீங்கா

வழித்தலைச் சோமனோ டங்கி யருக்கன்
வழித்தலைச் செய்யும் வகையுணர்ந் தேனே. ரு

1435 விரும்பிநின் றேசெயில் மெய்த்தவ ராகும்
விரும்பிநின் றேசெயின் மெய்யுரை யாகும்
விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ் மாகும்
விரும்பிநின் றேசெயில் விண்ணவ னுருமே. சு

1436 பேணிற் பிறவா உலகருள் செய்திடுங்
காணில் தனது கலவியு ளேநிற்கும்
நாணில் நரக நெறிக்கே வழிசெயும்
ஊனிற் சுடுமங்கி யுத்தமன் றானே. எ

1437 ஒத்தசெங் கோலார் உலப்பிலி மாதவர்
எத்தனை யாயிரம் வீழ்ந்தனர் எண்ணிலி
சித்தர்கள் தேவர்கள் மூவர் பெருமையாய்
அத்த னிவனென்றே அன்புறு வார்களே. அ

1438 யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டுற்றோர்
ஆகத் தருகிரி யாதி சரியையாந்
தாகத்தை விட்ட சரியையோன் றாம்ஒன்றுள்
ஆதித்தன் பத்தியுள் அன்புவைத் தேனே. கூ

1439 யோகச் சமயமே யோகம் பலவுன்னல்
யோக விசேடமே அட்டாங்க யோகமாம்
யோகநிர் வாணமே யுற்ற பரோதயம்
யோக அபிடேகமே ஒண்சித்தி யுற்றலே. கo

## 8. ஞானம்

1440 ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே. க

1441 சத்தமுஞ் சத்த மனனுந் தருமனம்
உய்த்த வுணர்வு முணர்த்தும் அகந்தையுஞ்
சித்தமென் றிம்மூன்றுஞ் சிந்திக்குஞ் செய்கையுஞ்
சத்தங் கடந்தவர் பெற்றசன் மார்க்கமே. உ

1442 தன்பால் உலகுந் தனக்கரு ளாவதும்
அன்பா லெனக்கரு ளாவது மாவன
என்பார்கள் ஞானமும் எய்துஞ் சிவோகமும்
பின்பாலின் நேயமும் பெற்றிடுந் தானே. ௩

1443 இருக்குஞ் சேம இடம்பிரம மாகும்
வருக்கஞ் சராசர மாகும் உலகந்
தருக்கிய ஆசார மெல்லாந் தருமே
திருக்கிலா ஞானத்தைத் தேர்ந்துணர்ந் தோர்க்கே. ௪

1444 அறிவும் அடக்கமும் அன்பும் உடனே
பிறியா நகர்மன்னும் பேரரு ளாளன்
குறியுங் குணமுங் குரைகழல் நீங்கா
நெறியறி வார்க்கிது நீர்த்தொனி யாமே. ௫

1445 ஞானம் விளங்கெழு கின்றதோர் சிந்தையுள்
ஏனம் விளங்கெதி ரேகாண் வழிதொறுங்
கூனல் மதிமண் டலத்தெதிர் நீர்கண்டு
ஊன மறுத்துநின் றொண்சுட ராகுமே. ௬

1446 ஞானிக் குடன்குண ஞானத்தில் நான்குமா
மோனிக் கிவையொன்றுங் கூடாமுன் மோகித்து
மேனிற்ற லாஞ்சத்தி வித்தை விளைத்திடுந்
தானிக் குலத்தோர் சரியை கிரியையே. ௭

1447 ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு
ஞானத்தின் ஞானமே நாமென தென்றல்
ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி
ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே. ௮

1448 நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவங் கடந்த பிணக்கற்றோன்
கண்ணிய நேயங் கரைஞானங் கண்டுளோன்
திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே. ௯

1449 ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டல்
ஞான விசேடமே நாடு பரோதய
ஞானநிர் வாணமே நன்றறி வானருள்
ஞானாபி டேகமே நற்குரு பாதமே. க0

## 9. சன்மார்க்கம்

1450 சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத்
தோற்றங்க ளான சுருதிச் சுடர்கண்டு
சீற்றம் ஒழிந்து சிவயோக சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. க

1451 சைவப் பெருமைத் தனிநா யகன்நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு

தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத்துள் ளார்க்கு வகுத்துவைத் தானே. ௨

1452 தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்
குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத்
தருமுத்திச் சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே. ௩

1453 தெளிவறி யாதார் சிவனை யறியார்
தெளிவறி யாதார் சீவனு மாகார்
தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்
தெளிவறி யாதவர் தீரார் பிறப்பே. ௪

1454 தானவ னாகித் தானைந்தா மலஞ்செற்று
மோனம தாமொழிப் பான்முத்த ராவது
மீனமில் ஞானானு பூதியில் இன்பமுந்
தானவ னுயுற லானசன் மார்க்கமே. ௫

1455 சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமுஞ்
சன்மார்க்கத் தார்க்கும் இடத்தொடு தெய்வமுஞ்
சன்மார்க்கத் தார்க்கு வருக்கந் தெரிசனம்
எம்மார்க்கத் தார்க்கும் இயம்புவன் கேண்மினோ. ௬

1456 சன்மார்க்க சாதனந் தான்ஞான ஞேயமாம்
பின்மார்க்க சாதனம் பேதையர்க் காய்நிற்கும்
துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றோர்
சன்மார்க்கந் தானவ னாகுஞ்சன் மார்க்கமே. ௭

1457 சன்மார்க்க மெய்த வருமருஞ் சீடர்க்குப்
பின்மார்க்க மூன்றும் பெறவியல் பாமென்றால்
நன்மார்க்கந் தானே சிவனொடு நாடலே
சொன்மார்க்க மென்னச் சுருதிகைக் கொள்ளுமே. ௮

1458 அன்னிய பாசமும் ஆகுங் கருமமும்
முன்னும் அவத்தையும் மூலப் பகுதியும்
பின்னிய ஞானமும் பேதாதி பேதமுந்
தன்னொடுங் கண்டவர் சன்மார்க்கத் தோரே. ௯

1459 பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்
தொசியாத வுண்மைச் சொரூபோ தயத்துற்
றசைவான தில்லாமை யானசன் மார்க்கமே. ௰

1460 மார்க்கஞ்சன் மார்க்கிகள் கிட்ட வகுப்பது
மார்க்கஞ்சன் மார்க்கமே யன்றிமற் றொன்றில்லை
மார்க்கஞ்சன் மார்க்க மெனுநெறி வைகாதோர்
மார்க்கஞ்சன் மார்க்க மாஞ்சித்த யோகமே. கக

## 10. சகமார்க்கம்

1461 சன்மார்க்கந் தானே சகமார்க்க மானது
மன்மார்க்க மாமுத்தி சித்திக்குள் வைப்பதாம்
பின்மார்க்க மானது பேராப் பிறந்திறந்
துன்மார்க்க ஞானத் துறுதியு மாமே. க

1462 மருவுந் துவாதச மார்க்கமில் லாதார்
குருவுஞ் சிவனுஞ் சமயமுங் கூடார்
வெருவுந் திருமகள் வீட்டில்லை யாகும்
உருவுங் கிளையும் ஒருங்கிழப் பாரே. உ

1463 யோகச் சமாதியின் உள்ளே யகலிடம்
யோகச் சமாதியின் உள்ளே யுளரொளி
யோகச் சமாதியின் உள்ளே யுளசத்தி
யோகச் சமாதி யுகந்தவர் சித்தரே. ௩

1464 யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்
யோகஞ் சிவரூபம் உற்றிடும் உள்ளத்தோர்
போகம் புவியிற் புருடார்த்த சித்திய
தாகும் இரண்டும் அழியாத யோகிக்கே. ச

1465 ஆதார சோதனை யானாடி சுத்திகள்
மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி
போதா லயத்துப் புலன்கர ணம்புந்தி
சாதா ரணங்கெட லாஞ்சக மார்க்கமே. ரு

1466 பிணங்கிநிற் கின்றவை யைந்தையும் பின்னை
அணங்கி யெறிவ னயிர்மன வாளாற்
கணம்பதி னெட்டுங் கருதும் ஒருவன்
வணங்கவல் லான்சிந்தை வந்துநின் றானே. சு

1467 வளங்கனி யொக்கும் வளநிறத் தார்க்கும்
வளங்கனி யொப்பதோர் வாய்மைய னாகும்
உளங்கனிந் துள்ள முகந்திருப் பார்க்குப்
பழங்கனிந் துள்ளே பகுந்துநின் றானே. எ

## 11. சற்புத்திர மார்க்கம்

1468 மேவிய சற்புத்திர மார்க்கமே தொழில்
தாவிப்ப தாஞ்சக மார்க்கஞ் சகத்தொழில்
ஆவ திரண்டும் அகன்று சகமார்க்கத்
தேவியோ டொன்றல் சன்மார்க்கத் தெளிவதே. க

1469 பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்
ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை
நேசித்திட் டன்னமும் நீசுத்தி செய்தன்மற்
றாசற்ற சற்புத் திரமார்க்க மாகுமே. உ

1470 அறுகாற் பறவை அலர்தேர்ந் துழலு
மறுகா நரையன்னந் தாமரை நீலங்
குறுகா நறுமலர் கொய்வன கண்டுஞ்
சிறுகால் அறநெறி சேரகி லாரே. ங

1471 அருங்கரை யாவது அவ்வடி நீழற்
பெருங்கரை யாவது பிஞ்ஞக னாணை
வருங்கரை யேகின்ற மன்னுயிர்க் கெல்லாம்
ஒருங்கரை யாயுல கேழினைத் தானே. ச

1472 உயர்ந்தும் பணிந்தும் முகந்துந் தழுவி
வியந்தும் அரனடிக் கேமுறை செய்மின்
பயந்தும் பிறவிப் பயனது வாகும்
பயந்து பரிக்கிலப் பான்மைய னாமே. ரு

1473 நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்றன்னை
என்றுந் தொழுவன் எழிற்பரஞ் சோதியைத்
துன்று மலர்தூவித் தொழுமின் தொழுந்தோறுஞ்
சென்று வெளிப்படுந் தேவர் பிரானே. சு

1474 திருமன்னுஞ் சற்புத் திரமார்க்கச் சரியை
உருமன்னி வாழும் உலகத்தீர் கேண்மின்
கருமன்னு பாசங் கைகூம்பத் தொழுது
இருமன்னு நாடோறும் இன்புற் றிருந்தே. எ

## 12. தாச மார்க்கம்

1475 எளியனல் தீப மிடல்மலர் கொய்தல்
அளிதின் மெழுக லதுதூர்த்தல் வாழ்த்தல்
பளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி
தளிதொழில் செய்வது தான்தாச மார்க்கமே. அ

1476 அதுவிது வாதிப் பரமென் றகல்வர்
இதுவழி யென்றங் கிறைஞ்சின ரில்லை
விதிவழி யேசென்று வேந்தனை நாடு
மதுவிது நெஞ்சில் தணிக்கின்ற வாறே. உ

1477 அந்திப்பன் திங்க ளதன்பின்பு ஞாயிறு
சிந்திப்பன் என்றும் ஒருவன் செறிகழல்
வந்திப்ப வானவர் தேவனை நாடொறும்
வந்திப்ப தெல்லாம் வகையின் முடிந்ததே. ௩

1478 அண்ணலை வானவர் ஆயிரம் பேர்சொல்லி
உன்னுவர் உள்மகிழ்ந் துண்ணின் றடிதொழக்
கண்ணவ னென்று கருது மவர்கட்குப்
பண்ணவன் பேரன்பு பற்றிநின் றானே. ௪

1479 வாசித்தும் பூசித்தும் மாமலர் கொய்திட்டும்
பாசிக் குளத்தில்வீழ் கல்லா மனம்பார்க்கின்
மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை
நேசத் திருந்த நினைவறி யாரே. ரு

1480 எவ்விடத் தும்பணி யின்மை கண்டுளோர்
எவ்விடத் தும்பணி யீசன் பணியென்றே
அவ்விடத் தைங்கரு மத்தால் அறிதலால்
உவ்விடத் தோருக்கோர் உபாய மில்லையே. சா

## 13. சாலோகம்

1481 சாலோக மாதி சரியாதி யிற்பெறுந்
சாலோகஞ் சாமீபந் தங்குஞ் சரியையான்
மாலோகஞ் சேரில் வழியாகுஞ் சாரூபம்
பாலோகம் இல்லாப் பரனுரு வாமே. க

1482 சமயங் கிரியையிற் றன்மனங் கோயில்
சமய மனுமுறை தானே விசேடந்
சமயத்து மூலந் தனைத்தேறல் மூன்றுந்
சமயாபி டேகந் தானுஞ் சமாதியே. உ

## 14. சாமீபம்

1483 பாசம் பசுவான தாகும்இச் சாலோகம்
பாச மருளான தாகும்இச் சாமீபம்
பாசஞ் சிரமான தாகும்இச் சாரூபம்
பாசங் கரைபதி சாயுச் சியமே. க

## 15. சாரூபம்

1484 தங்கிய சாரூபந் தானெட்டாம் யோகமாந்
தங்குஞ் சன்மார்க்கந் தனிலன்றிக் கைகூடா
அங்கத் துடல்சித்தி சாதன ராகுவர்
இங்கிவ ராக விழிவற்ற யோகமே. க

1485 சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே
சயிலம தாகுஞ் சராசரம் போலப்
பயிலுங் குருவின் பதிபுக்க போதே
கயிலை இறைவன் கதிர்வடி வாமே. உ

## 16. சாயுச்சியம்

1486 சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவஞ் சிவந்தன்னைச் சாராமல் நீவுதல்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச் சியமே. க

1487 சாயுச் சியஞ்சாக் கிராதீதஞ் சாருதல்
சாயுச் சியமுப சாந்தத்துத் தங்குதல்
சாயுச் சியஞ்சிவ மாதல் முடிவிலாச்
சாயுச் சியமனத் தானந்த சத்தியே. உ

## 17. சத்திநிபாதம்

### மந்தம்

1488 இருட்டறை மூலை யிருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புரிந் தாளே. க

1489 திம்புல னான திசையது சிந்திக்கில்
அம்புல னாயறி வார்க்கமு தாய்நிற்குந்
தெம்புல னான தெளிவறி வார்கட்குக்
கோம்புல னாடிய கொல்லையு மாமே. உ

1490 இருள்நீக்கி எண்ணில் பிறவி கடத்தி
அருள்நீங்கா வண்ணமே யாதி யருளும்
மருள்நீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருள்நீங்கா இன்பம் புலம்பயில் தானே. ௩

1491 இருள்சூ ழறையில் இருந்தது நாடிற்
பொருள்சூழ் விளக்கது புக்கெரிந் தாற்போன்
மருள்சூழ் மயக்கத்து மாமலர் நந்தி
அருள்சூழ் இறைவனும் அம்மையு மாமே. ௪

மந்ததரம்

1492 மருட்டிப் புணர்ந்து மயக்கமும் நீக்கி
வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
அருட்டிகழ் ஞான மதுபுரிந் தாளே. க

1493 கன்னித் துறைபடிந் தாடிய ஆடவர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்திலர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்துண்டேற்
பின்னைப் பிறவி பிறிதில்லை தானே. உ

1494 செய்யன் கரியன் வெளியன்நற் பச்சையன்
எய்த வுணர்ந்தவர் எய்வர் இறைவனை
மைவென் றகன்ற பகடுரி போர்த்தவெங்
கைய னிவனென்று காதல்செய் வீரே. ௩

1495 எய்திய காலங்கள் எத்தனை யாயினுந்
தையலுந் தானுந் தனிநா யகமென்பர்
வைகலுந் தன்னை வணங்கு மவர்கட்குக்
கையிற் கருமஞ்செய் காட்டது வாமே. ௪

1496 கண்டுகொண் டோமிரண் டுந்தொடர்ந் தாங்கொளி
பண்டுபண் டோயும் பரமன் பரஞ்சுடர்
வண்டுகொண் டாடு மலர்வார் சடையண்ணல்
நின்றுகண் டார்க்கிருள் நீக்கிநின் றானே. ரு

தீவிரம்

1497 அண்ணிக்கும் பெண்பிள்ளை அப்பனார் தோட்டத்தில்
எண்ணிக்கும் ஏழேழ் பிறவி யுணர்விக்கும்
உண்ணிற்ப தெல்லாம் ஒழிய முதல்வனைக்
கண்ணுற்று நின்ற கனியது வாகுமே. க

1498 பிறப்பை யறுக்கும் பெருந்தவம் நல்கும்
மறப்பை யறுக்கும் வழிபட வைக்குங்
குறப்பெண் குவிமுலை கோமள வல்லி
சிறப்பொடு பூசனை செய்யநின் றார்க்கே. உ

1499 தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலைமகன்
பூங்கமழ் கோதைப் புரிகுழ லாளொடும்
ஆங்கது சேரும் அறிவுடை யார்கட்குத்
தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே. ௩

1500 நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும்
பணிகிலும் பன்மலர் தூவிப் பணிவன்
அணுகிய தொன்றறி யாத வொருவன்
அணுகும் உலகெங்கு மாவியு மாமே. ௪

தீவிரதரம்

1501 இருவினை நேரொப்பில் இன்னருட் சத்தி
குருவென வந்து குணம்பல நீக்கித்
தருமெனு ஞானத்தால் தன்செய லற்றால்
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. க

1502 மாலை விளக்கும் மதியமும் ஞாயிறுஞ்
சால விளக்குந் தனிச்சுடர் அண்ணலுள்
ஞானம் விளக்கிய நாதன்என் உள்புகுந்
தூனை விளக்கி யுடனிருந் தானே. உ

## 18. புறச்சமய தூடணம்

1503 ஆயத்துள் நின்ற அறுசம யங்களுங்
காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலா
மாயக் குழியில் விழுவர் மனைமக்கள்
பாசத்தில் உற்றுப் பதைக்கின்ற வாறே. க

1504 ஆறு சமய முதலாஞ் சமயங்கள்
ஊறு தெனவும் உணர்க உணர்பவர்
வேறு தறவுணர் வார்மெய்க் குருநந்தி
யாறி யமைபவர்க் கண்ணிக்குந் தானே. உ

1505 உள்ளத்து ளேதான் கரந்தெங்கும் நின்றவன்
வள்ளல் தலைவன் மலருறை மாதவன்
பொள்ளற் குரம்பை புகுந்து புறப்படுங்
கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே. ௩

1506 உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் என்பவர்க்
குள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் எம்மிறை
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்
குள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே. ௪

1507 முதலொன்று மானை முதுகுடன் வாலுந்
திதமுறு கொம்பு செவிதுதிக் கைகான்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
யதுகூற லொக்கும் ஆறு சமயமே. ௫

1508 ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனைபுக லாமே. ௬

1509 சிவமல்ல தில்லை யறையே சிவமாந்
தவமல்ல தில்லை தலைப்படு வார்க்கிங்
கவமல்ல தில்லை அறுசம யங்கள்
தவம்வல்ல நந்திதாள் சார்ந்துய்யு நீரே. ௭

1510 அண்ணலை நாடிய ஆறு சமயமும்
விண்ணவ ராக மிகவும் விரும்பியே
முண்ணின் றழிய முயன்றில ராதலான்
மண்ணின் றொழியும் வகையறி யார்களே. ௮

1511 சிவகதி யேகதி மற்றுள்ள எல்லாம்
பவகதி பாசப் பிறவியொன் றுண்டு
தவகதி தன்னொடு நேரொன்று தோன்றில்
அவகதி மூவரும் அவ்வகை யாமே. ௯

1512 நூறு சமயம் உளவா நுவலுங்கால்
ஆறு சமயமவ் வாறுட் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா
ஈறு பரநெறி யில்லா நெறியன்றே. ௧௦

1513 கத்துங் கழுதைகள் போலுங் கலதிகள்
சுத்த சிவனெங்குந் தோய்வுற்று நிற்கின்றான்
குற்றந் தெளியார் குணங்கொண்டு கோதாட்டார்
பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே. ௧௧

1514 மயங்குகின் றாரு மதிதெளிந் தாரும்
முயங்கி யிருவினை முழைமுகப் பாச்சி
இயங்கிப் பெறுவரே லீறது காட்டிற்
பயங்கெட் டவர்க்கோர் பரநெறி யாமே. ௧௨

1515 சேயன் அணியன் பிணியிலன் பேர்நந்தி
தூயன் துளக்கற நோக்கவல் லார்கட்கு
மாயன் மயக்கிய மானுட ராமவர்
காயம் விளைக்குங் கருத்தறி யார்களே. ௧௩

1516 வழியிரண் டுக்குமோர் வித்தது வான
பழியது பார்மிசை வாழ்தல் உறுதல்
சுழியறி வாளன்றன் சொல்வழி முன்னின்
றழிவறி வார்நெறி நாடகில் லாரே. கச

1517 மாதவர் எல்லாம் மாதேவன் பிரானென்பர்
நாதம தாக அறியப் படுநந்தி
பேதஞ்செய் யாதே பிரானென்று கைதொழில்
ஆதியும் அந்நெறி யாகிநின் றானே. கரு

1518 அரனெறி யப்பனை யாதிப் பிரானை
உரநெறி யாகி யுளம்புகுந் தானைப்
பரநெறி தேடிய பத்தர்கள் சித்தம்
பரனறி யாவிடிற் பல்வகைத் தூரமே. கசு

1519 பரிசறி வானவன் பண்பன் பகலோன்
பெரிசறி வானவர் பேற்றில் திகழுந்
துரிசற நீநினை தூய்மணி வண்ணன்
அரிதவன் வைத்த அறநெறி தானே. கஎ

1520 ஆன சமயம் அதுஇது நன்றெனும்
மாய மனிதர் மயக்க மதுவொழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங் கடந்த வுருவது வாமே. கஅ

1521 அந்நெறி நாடி அமரர் முனிவருஞ்
செந்நெறி கண்டார் சிவனெனப் பெற்றார்பின்
முன்னெறி நாடி முதல்வன் அருளிலார்
சென்னெறி செல்லார் திகைக்கின்ற வாறே. கக

1522 உறுமா றறிவதும் உள்நின்ற சோதி
பெறுமா றறியிற் பிணக்கொன்றும் இல்லை
அறுமா றதுவான வங்கியு ளாங்கே
இறுமா றறிகிலர் ஏழைகள் தாமே. உ०

1523 வழிநடக் கும்பரி சொன்றுண்டு வையங்
கழிநடக் குண்டவர் கற்பனை கேட்பர்
சுழிநடக் குந்துய ரம்மது நீக்கிப்
பழிநடப் பார்க்குப் பரவலு மாமே. உக

1524 வழிசென்ற மாதவம் வைகின்ற போது
பழிசெல்லும் வல்வினைப் பற்றறுத் தாங்கே
வழிசெல்லும் வல்வினை யார்திறம் விட்டிட்
டிழிசெல்லில் உம்பர் தலைவன்முன் னாமே. உஉ

## 19. நிராசாரம்

1525 இமையங்க ளாய்நின்ற தேவர்கள் ஆறு
சமயங்கள் பெற்றனர் சாத்திரம் ஓதி
யமையறிந் தோமென்ப ராதிப் பிரானுங்
கமையறிந் தாருட் கலந்துநின் றானே. க

1526 பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி
தாங்கு மனிதர் தரணியில் நேரொப்பர்
நீங்கிய வண்ணம் நினைவுசெய் யாதவர்
ஏங்கி உலகில் இருந்தழு வாரே. உ

1527 இருந்தழு வாரும் இயல்புகெட் டாரும்
அருந்தவ மேற்கொண்டங் கண்ணலை எண்ணில்
வருந்தா வகைசெய்து வானவர் கோனும்
பெருந்தன்மை நல்கும் பிறப்பில்லை தானே. ங

1528 தூரறி வாளர் துணைவர் நினைப்பிலர்
பாரறி வாளர் படுபயன் றுண்பர்
காரறி வாளர் கரந்து பிறப்பார்கள்
நீரறி வார்நெடு மாமுகி லாமே. ச

1529 அறிவுடன் கூடி அழைத்ததோர் தோணி
பறியுடன் பாரம் பழம்பதி சிந்துங்
குறியது கண்டுங் கொடுவினை யாளர்
செறிய நினைக்கிலர் சேவடி தானே. ரு

1530 மன்னும் ஒருவன் மருவு மனோமயன்
என்னின் மனிதர் இகழ்வரிவ் வேழைகள்
துன்னி மனமே தொழுமின் துணையிலி
தன்னையும் அங்கே தலைப்பட லாமே. சு

1531 ஓங்காரத் துள்ளொளி உள்ளே உதயமுற்
றீங்கார மற்ற அனுபவங் கைகூடார்
சாங்கால முன்னார் பிறவாமை சார்வுறார்
நீங்காச் சமயத்துள் நின்றொழிந் தார்களே. எ

## 20. உட்சமயம்

1532 இமையவர் தம்மையும் எம்மையும் முன்னம்
அமைய வகுத்தவன் ஆதி புராணன்
சமையங்க ளாறுந்தன் றாளிணை நாட
அமையங் குழல்கின்ற ஆதிப் பிரானே. க

1533 ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே. உ

1534 சைவப் பெருமைத் தனிநா யகன்தன்னை
உய்ய வுயிர்க்கின்ற ஒண்சுடர் நந்தியை
மெய்ய பெருமையர்க் கன்பனை இன்பஞ்செய்
வையத் தலைவனை வந்தடைந் துய்மினே. ௩

1535 சிவனவன் வைத்ததோர் தெய்வ நெறியிற்
பவனவன் வைத்த பழவழி நாடி
இவனவன் என்ப தறியவல் லார்கட்
கவனவ னங்குள தாங்கட னாமே. ௪

1536 ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்த னொருவனும் என்ப தறிந்திலர்
அத்தன் ஒருவனும் என்ப தறிந்திடின்
முத்தி விளக்கு முதல்வனு மாமே. ௫

1537 ஆமா றுரைக்கும் அறுசம யாதிக்குப்
போமா றதனில்லை புண்ணிய மல்லதங்
காமாம் வழியாக்கும் அவ்வே றுயிர்கட்கும்
போமாறவ் வாதாரப் பூங்கொடி யாளே. ௬

1538 அரநெறி யாவ தறிந்தேனும் நானுஞ்
சிலநெறி தேடித் திரிந்தஅந் நாளும்
உரநெறி யுள்ளக் கடல்கடந் தேறுந்
தரநெறி நின்ற தனிச்சுடர் தானே. ௭

1539 தேர்ந்த அரனை அடைந்த சிவநெறி
பேர்ந்தவர் உன்னிப் பெயர்ந்த பெருவழி
ஆர்ந்தவர் அண்டத்துப் புக்கவ் வருள்நெறி
போந்து புனைந்து புணர்நெறி யாமே. ௮

1540 ஈரு மனத்தை யிரண்டற வீசுமின்
ஊருஞ் சகாரத்தை ஓதுமின் ஓதியே
வாரு மரநெறி மன்னியே முன்னியத்
தூருஞ் சுடரொளி தோன்றலு மாமே. ௯

1541 மறந்துறி யானனை வேதியர் வேதத்
துறந்துறி யானனை ஆதிப் பிரான்தன்னை
நினைந்துறி யானனை ஞானக் கொழுந்தி
னைப்ந்துறி காணில் அரநெறி யாமே. க௦

1542 ஆய்ந்துணை ரார்களின் ஆன்மாச் சதுர்பல
வாய்ந்துண ராவகை நின்ற அரநெறி
பாய்ந்துணர் வார்அரன் சேவடி கைதொழு
தேர்ந்துணர் செய்வதோர் இன்பமு மாமே. கக

1543 இத்தவம் அத்தவம் என்றிரு பேரிடும்
பித்தரைக் காணின் நகுமெங்கள் பேர்நந்தி
எத்தவ மாகிலென் எங்குப் பிறக்கிலென்
ஒத்துணர் வார்க்கொல்லை யூர்புக லாமே. கஉ

1544 ஆமே பிரான்முகம் ஐந்தொடு மாருயிர்
ஆமே பிரானுக் கதோமுக மாறுள
தாமே பிரானுக்குந் தன்சிர மாலைக்கும்
நாமே பிரானுக்கு நரரியல் பாமே. கங

1545 ஆதிப் பிரானுல கேழும் அளந்தவன்
ஓதக் கடலும் உயிர்களு மாய்நிற்கும்
பேதிப் பிலாமையின் நின்ற பராசத்தி
ஆதிக்கட் டெய்வமும் அந்தமு மாமே. கச

1546 ஆய்ந்தறி வார்கள் அமரர்வித் தியாதரர்
ஆய்ந்தறி யாவண்ணம் நின்ற அரனெறி
ஆய்ந்தறிந் தேனவன் சேவடி கைதொழ
ஆய்ந்தறிந் தேனிம்மை அம்மைகண் டேனே. கரு

1547 அறியவொண் ணாதவ் வுடம்பின் பயனை
அறியவொண் ணாத அறுவகை யாக்கி
அறியவொண் ணாத அறுவகைக் கோசத்
தறியவொண் ணாதோர் அண்டம் பதிந்ததே. கசா

ஐந்தாந்தந்திரம் முற்றும்.

# ஆறாந் தந்திரம்

[வியாமளாகமம்]

## 1. சிவகுரு தெரிசனம்

1548 பத்திப் பணித்துப் பரவு மடிநல்கிச்
சுத்த வுரையால் துரிசறச் சோதித்துச்
சத்தும் அசத்துஞ் சதசத்துங் காட்டலாற்
சித்தம் இறையே சிவகுரு வாமே. க

1549 பாசத்தைக் கூட்டியே கட்டிப் பறித்திட்டு
நேசித்த காயம் விடுவித்து நேர்நேரே
கூசற்ற முத்தியிற் கூட்டலா நாட்டத்த
தாசற்ற சற்குரு அம்பல மாமே. உ

1550 சித்திகள் எட்டொடுந் திண்சிவ மாக்கிய
சுத்தியும் எண்சத்தித் தூய்மையும் யோகத்துச்
சத்தியும் மந்திர சாதக போதமும்
பத்தியும் நாதன் அருளிற் பயிலுமே. ௩

1551 எல்லா வுலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக்கொண் டிங்கே அளித்தலாற்
சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே. ௪

1552 தேவனுஞ் சுத்த குருவும் உபாயத்துள்
யாவையும் மூன்று யுனக்கண் டுரையாலே
மூவாப் பசுபாச மாற்றியே முத்திப்பால்
யாவையும் நல்குங் குருபரன் அன்புற்றே. ௫

1553 சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்
தத்தனை நல்கருள் காணா அதிமூடர்
பொய்த்தகு கண்ணான் நமரென்பர் புண்ணியர்
அத்தன் இவனென் றடிபணி வாரே. ௬

1554 உண்மையிற் பொய்மை ஒழித்தலும் உண்மைப்பார்
திண்மையும் ஒண்மைச் சிவமாய அவ்வரன்
வண்மையும் எட்டெட்டுச் சித்தி மயக்கமும்
அண்ணல் அருளன்றி யாரறி வாரே. ௭

1555 சிவனே சிவஞானி யாதலாற் சுத்த
சிவனே யெனஅடி சேரவல் லார்க்கு

நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே. அ

1556 குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே. கூ

1557 சித்தம் யாவையுஞ் சிந்தித் திருந்திடும்
அத்தன் உணர்த்துவ தாகும் அருளாலே
சித்தம் யாவையுந் திண்சிவ மானக்கால்
அத்தனும் அவ்விடத் தேயமர்ந் தானே. கo

1558 தானந்தி சீர்மையுட் சந்தித்த சீர்வைத்த
கோனந்தி யெந்தை குறிப்பறி வாரில்லை
வானந்தி யென்று மகிழும் ஒருவற்குத்
தானந்தி யங்கித் தனிச்சுட ராமே. கக

1559 திருவாய சித்தியும் முத்தியும் சீர்மை
மருளா தருளும் மயக்கறும் வாய்மைப்
பொருளாய வேதாந்த போதமும் நாதன்
உருவாய் அருளா விடிலோர ஒண்ணாதே. கஉ

1560 பத்தியும் ஞானவை ராக்கிய மும்பர
சித்திக்கு வித்தாஞ் சிவோகமே சேர்தலான்
முத்தியின் ஞான முளைத்தலால் அம்முளை
சத்தி யருள்தரில் தாமெளி தாமே. கந

1561 [1]பின்னெய்த வைத்ததோர் இன்பப் பிறப்பினை
முன்னெய்த வைத்த முதல்வனை எம்மிறை
தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படு
மன்னெய்த வைத்த மனமது தானே. கச

1562 சிவமான ஞானந் தெளியவொண் சித்தி
சிவமான ஞானந் தெளியவொண் முத்தி
சிவமான ஞானஞ் சிவபரத் தேயேகச்
சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே. கரு

1563 அறிந்துணர்ந் தேனிவ் வகலிட முற்றுஞ்
செறிந்துணர்ந் தோதித் திருவருள் பெற்றேன்
மறந்தொழிந் தேன்மதி மாண்டவர் வாழ்க்கை
பிறிந்தொழிந் தேனிப் பிறவியை நானே. கசூ

---

பா. வே. 1. இன்னெய்த.

## 2. திருவடிப் பேறு

1564 இசைந்தெழும் அன்பில் எழுந்த படியே
பசைந்தெழும் ஈசரைப் பாசத்துள் ஏகச்
சிவந்த குருவந்து சென்னிகை வைக்க
உவந்த குருபதம் உள்ளத்து வந்ததே. க

1565 தாடந்த போதே தலைதந்த எம்மிறை
வாடந்த ஞான வலியையுந் தந்திட்டு
வீடந்த மின்றியே யாள்கென விட்டருட்
பாடின் முடிவைத்துப் பார்வந்து தந்ததே. உ

1566 தானவ னாகிச் சொரூபத் துவந்திட்டு
ஆன சொரூபங்கள் நான்கும் அகற்றின
ஏனைய முத்திரை யீந்தாண்ட நன்னந்தி
தானடி முற்சூட்டித் தாபித்த துண்மையே. ங

1567 உரையற் றுணர்வற் றுயிர்பர மற்றுத்
திரையற்ற நீர்போல் சிவமாதல் தீர்த்துக்
கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த
சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. ச

1568 குரவன் உயிர்முச் சொரூபமுங் கைக்கொண்
டரிய பொருள்முத் திரையாகக் கொண்டு
பெரிய பிரானடி நந்தி பேச்சற்
றுருகிட என்னையங் குய்யக்கொண் டானே. ரு

1569 பேச்சற்ற இன்பத்துப் பேரானந் தத்திலே
மாச்சற்ற என்னைச் சிவமாக்கி மாள்வித்துக்
காச்சற்ற சோதி கடன்மூன்றுங் கைக்கொண்டு
வாச்ச புகழ்மாளத் தாள்தந்து மன்னுமே. சு

1570 இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும்
பதிவித்த பாதப் பராபரன் நந்தி
கதிவைத்த வாறும்மெய் காட்டிய வாறும்
விதிவைத்த வாறும் விளம்பவொண் ணாதே. எ

1571 திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்
பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்
குருவடி விற்கண்ட கோனையெங் கோவைக்
கருவழி வாற்றிடக் கண்டுகொண் டேனே. அ

1572 திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந்

திருவடி ஞானஞ் சிறைமல மீட்குந்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே. கூ

1573 மேல்வைத்த வாறுசெய் யாவிடின் மேல்வினை
மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும்
பால்வைத்த சென்னிப் படரொளி வானவன்
தாள்வைத்த வாறு தரிப்பித்த வாறே. கய

1574 கழலார் கமலத் திருவடி என்னும்
நிழல்சேரப் பெற்றேன் நெடுமால் அறியா
அழல்சேரும் அங்கியுள் ஆதிப் பிரானுங்
குழல்சேரும் என்னுயிர்க் கூடுங் குலைத்ததே. கக

1575 முடிமன்ன ராகிமூ வுலகம தாள்வர்
அடிமன்னர் இன்பத் தளவில்லை கேட்கின்
முடிமன்ன ராய்நின்ற தேவர்கள் ஈசன்
குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் றாரே. கஉ

1576 வைத்தேன் அடிகள் மனத்தினுள் ளேநான்
பொய்த்தே யெரியும் புலன்வழி போகாமல்
எய்த்தேன் உழலும் இருவினை மாற்றிட்டு
மெய்த்தேன் அறிந்தேனவ் வேதத்தின் அந்தமே. கங

1577 அடிசார லாம்அண்ணல் பாத மிரண்டும்
முடிசார வைத்தனர் முன்னை முனிவர்
படிசார்ந்த இன்பப் பழவடி வெள்ளக்
குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே. கச

1578 மந்திர மாவதும் மாமருந் தாவதுந்
தந்திர மாவதுந் தானங்க ளாவதுஞ்
சுந்தர மாவதுந் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்தன் இணையடி தானே. கரு

## 3. ஞாதுரு ஞான ஞேயம்

1579 நீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப்
பாங்கான பாசம் படரா படரினும்
ஆங்கார நீங்கி யதனிலை நிற்கவே
நீங்கா அமுத நிலைபெற லாமே. க

1580 ஞேயத்தே நின்றோர்க்கு ஞானாதி நின்றிடும்
ஞேயத்தின் ஞாதுரு ஞேயத்தில் வீடாகும்
ஞேயத்தின் ஞேயத்தை ஞேயத்தை யுற்றவர்
ஆயத்தின் நின்ற அறிவறி வாரே. உ

1581 தானென் றவனென் றிரண்டாகுந் தத்துவந்
தானென் றவனென் றிரண்டுந் தனிற்கண்டு
தானென்ற பூவை யவனடி சாத்தினால்
நானென் றவனென்கை நல்லதொன் றன்றே. ௩

1582 வைச்சன வாறாறு மாற்றி யெனைவைத்து
மெச்சப் பரன்றன் வியாத்துவ மேலிட்டு
நிச்சய மாக்கிச் சிவமாக்கி ஞேயத்தால்
அச்சங் கெடுத்தென்னை யாண்டனன் நந்தியே. ௪

1583 முன்னை யறிவறி யாதஅம் மூடர்போற்
பின்னை யறிவறி யாமையைப் பேதித்தான்
தன்னை யறியப் பரனாக்கித் தற்சிவத்
தென்னை யறிவித் திருந்தனன் நந்தியே. ௫

1584 காணாத கண்ணுடன் கேளாத கேள்வியுங்
கோணாத போகமுங் கூடாத கூட்டமும்
நாணாத நாணமும் நாதாந்த போதமுங்
காணா யெனவந்து காட்டினன் நந்தியே. ௬

1585 மோனங்கை வந்தோர்க்கு முத்தியுங் கைகூடும்
மோனங்கை வந்தோர்க்குச் சித்தியும் முன்னிற்கும்
மோனங்கை வந்தூமை யாமொழி முற்றுங்காண்
மோனங்கை வந்தைங் கருமமும் முன்னுமே. ௭

1586 முத்திரை மூன்றின் முடிந்தது மூன்றின்பால்
வைத்த கலைகால் நான்மடங் கான்மாற்றி
உய்த்தவத் தானந்தத் தொண்குரு பாதத்தே
பெத்த மறுத்தோர் பிறந்திற வாரே. ௮

1587 மேலைச் சொரூபங்கள் மூன்று மிகுசத்தி
பாலித்த முத்திரை பற்றும் பரஞானி
ஆலித்த நட்டமே ஞேயம் புகுந்தற்ற
மூலச் சொரூபன் மொழிஞா துருவனே. ௯

## 4. துறவு

1588 இறப்பும் பிறப்பும் இருமையும் நீங்கித்
துறக்குந் தவங்கண்ட சோதிப் பிரானை
மறப்பில ராய்நித்தம் வாய்மொழி வார்கட்
கறப்பதி காட்டும் அமரர் பிரானே. க

1589 பிறந்தும் இறந்தும்பல் பேதைமை யாலே
மறந்து மலஇருள் நீங்க மறைந்து

சிறந்த சிவனருள் சேர்பரு வத்துத்
துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே. ௨

1590 அறவன் பிறப்பிலி யாரும் இலாதான்
உறைவது காட்டகம் உண்பது பிச்சை
துறவனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்
பிறவி யறுத்திடும் பித்தன்கண் டீரே. ௩

1591 நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவின் நெருஞ்சில்முட் பாயும்
நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு
நெறியின் நெருஞ்சில்முட் பாயகி லாவே. ௪

1592 கேடுங் கடமையுங் கேட்டுவந் தைவரும்
நாடி விளைந்தது நான்கட வேனலேன்
ஆடல் விடையுடை அண்ணல் திருவடி
கூடுந் தவஞ்செய்த கொள்கையன் றானே. ௫

1593 உழவன் உழவுழ வானம் வழங்க
உழவன் உழவினிற் பூத்த குவளை
உழவன் உழத்தியர் கண்ணொக்கும் என்றிட்
டுழவன் அதனை யுழவொழிந் தானே. ௬

1594 மேல்துறந் தண்ணல் விளக்கொளி கூறுவன்
நாள்துறந் தார்க்கவன் நண்ப னவாவிலி
கார்துறந் தார்க்கவன் கண்ணுத லாய்நிற்கும்
பார்துறந் தார்க்கே பதஞ்செய லாமே. ௭

1595 நாகமும் ஒன்று படம்ஐந்து நாலது
போகமுட் புற்றிற் பொருந்தி நிறைந்தது
ஆக விரண்டும் படம்விரித் தாட்டொழிந்
தேகப் படஞ்செய் துடம்பிட மாமே. ௮

1596 அகன்றார் வழிமுதல் ஆதிப் பிரானும்
இவன்றா னெனநின் றெளியனும் அல்லன்
சிவன்றாள் பலபல சீவனு மாகும்
நயன்றான் வரும்வழி நாமறி யோமே. ௯

1597 தூம்பு திறந்தன ஒன்பது வாய்தலும்
ஆம்பற் குழலியின் கஞ்சுளிப் பட்டது
வேம்பேறி நோக்கினன் மீகாமன் கூரையிற்
கூம்பேறிக் கோயிலிற் பூக்கின்ற வாறே. ௧௦

## 5. தவம்

1598 ஒடுங்கி நிலைபெற்ற வுத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே. க

1599 எம்மா ருயிரும் இருநிலத் தோற்றமுஞ்
செம்மா தவத்தின் செயலின் பெருமையும்
அம்மான் திருவருள் பெற்றவ ரல்லால்
விம்மா தவத்தின் இயல்பறி யாரே. உ

1600 பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்
சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்
மறப்பில ராகிய மாதவஞ் செய்வார்
பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே. ங

1601 பள்ள முதுநீர் பழகிய மீனினம்
வெள்ளம் புதியவை காண விருப்புறும்
கள்ளவர் கோதையர் காமனோ டாடினும்
உள்ளம் பிரியா ஒருவனைக் காணுமே. ச

1602 கரந்துங் கரந்திலன் கண்ணுக்குந் தோன்றான்
பரந்த சடையன் பசும்பொன் நிறத்தன்
அருந்தவர்க் கல்லால் அணுகலு மாகான்
விரைந்து தொழப்படும் வெண்மதி யானே. ரு

1603 அமைச்சரும் ஆனைக் குழாமும் அரசும்
பகைத்தெழும் பூசலுட் பட்டார் நடுவே
அமைந்ததோர் ஞானமும் ஆத்தமும் நோக்கி
இமைத்தழி யாதிருந் தார்தவத் தாரே. சா

1604 சாத்திரம் ஓதுஞ் சதுர்களை விட்டுநீர்
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்
பார்த்தவப் பார்வை பசுமரத் தாணிபோல்
ஆர்த்த பிறவி அகலவிட் டோடுமே. எ

1605 தவம்வேண்டு ஞானந் தலைப்பட வேண்டில்
தவம்வேண்டா ஞான சமாதிகை கூடில்
தவம்வேண்டா மச்ச கசமார்க்கத் தோர்க்குத்
தவம்வேண்டா மாற்றந் தனையறி யாரே. அ

## 6. தவநிந்தை

1606 ஓதலும் வேண்டாம் உயிர்க்குயி ருள்ளுற்றாற்
காதலும் வேண்டாமெய்க் காய மிடங்கண்டாற்
சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே. க

1607 கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற்
சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
சுத்தமும் வேண்டாந் துடக்கற்று நிற்றலாற்
சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே. உ

1608 விளைவறி வார்பண்டை மெய்த்தவஞ் செய்வார்
விளைவறி வார்பண்டை மெய்யுரை செய்வார்
விளைவறி வார்பண்டை மெய்யறஞ் செய்வார்
விளைவறி வார்விண்ணின் மண்ணின்மிக் காரே. ௩

1609 கூடித் தவஞ்செய்து கண்டேன் குரைகழல்
தேடித் தவஞ்செய்து கண்டேன் சிவகதி
வாடித் தவஞ்செய்வ தேதவம் இவைகளந்
தூடிற் பலவுல கோரெத் தவரே. ௪

1610 மனத்துறை மாகடல் ஏழுங்கை நீந்தித்
தவத்திடை யாளர்தஞ் சார்வத்து வந்தார்
பவத்திடை யாளர் அவர்பணி கேட்கின்
முகத்திடை நந்தியை முந்தலு மாமே. ரு

1611 மனத்திடை நின்ற மதிவாள் உருவி
இனத்திடை நீக்கி இரண்டற வீர்த்துப்
புனத்திடை அஞ்சும்போ காமல் மறித்தால்
தவத்திடை யாமொளி தன்னொளி யாமே. சா

1612 ஒத்து மிகவுநின் றானை யுரைப்பது
பத்தி கொடுக்கும் பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுக்கும் முனிவ னெனும்பதஞ்
சத்தான செய்வது தான்தவந் தானே. எ

1613 இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி
மலர்தொட்டுக் கொண்டேன் வரும்புனல் காணேன்
தலைதொட்ட நூல்கண்டு தாழ்ந்தென் உள்ளந்
தலைதொட்டுக் கண்டேன் தவங்கண்ட வாறே. அ

1614 படர்சடை மாதவம் பற்றிய பத்தர்க்
கிடரடை யாவண்ணம் ஈசன் அருளும்

இடரடை செய்தவர் மெய்த்தவ நோக்கில்
உடரடை செய்வ தொருமனத் தாமே. சு

1615 ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போய்
ஈற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட தன்னொக்கும்
நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்
சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே. க0

1616 பழுக்கின்ற வாறும் பழமுண்ணு மாறுங்
குழக்கன்று துள்ளியக் கோணியைப் பல்காற்
குழக்கன்று கொட்டிலிற் கட்டவல் லார்க்குள்
இழுக்காது நெஞ்சத் திடமொன்று மாமே. கக

1617 சித்தஞ் சிவமாகச் செய்தவம் வேண்டாவால்
சித்தஞ் சிவானந்தஞ் சேர்ந்தோர் உறவுண்டால்
சித்தஞ் சிவமாக வேசித்தி முத்தியாஞ்
சித்தஞ் சிவமாதல் செய்தவப் பேறே. கஉ

## 7. அருளுடைமையின் ஞானம் வருதல்

1618 பிரானருள் உண்டெனில் உண்டுநற் செல்வம்
பிரானருள் உண்டெனில் உண்டுநன் ஞானம்
பிரானரு ளிற்பெருந் தன்மையும் உண்டு
பிரானரு ளிற்பெருந் தெய்வமு மாமே. க

1619 தமிழ்மண் டலம்ஐந்துந் தாவிய ஞானம்
உமிழ்வது போல உலகந் திரிவார்
அவிழு மனமும்எம் ஆதி யறிவுந்
தமிழ்மண் டலம்ஐந்துந் தத்துவ மாமே. உ

1620 புண்ணிய பாவம் இரண்டுள பூமியில்
நண்ணும் பொழுதறி வார்சில ஞானிகள்
எண்ணி இரண்டையும் வேரறுத் தப்புறத்
தண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வீரே. ந

1621 முன்னின் றருளு முடிகின்ற காலத்து
நன்னின் றுலகில் நடுவுயி ராய்நிற்கும்
பின்னின் றருளும் பிறவியை நீக்கிடும்
முன்னின் றெனக்கொரு முத்திதந் தானே. ச

1622 சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்
சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனரு ளால்வினை சேரகி லாவே
சிவனருள் கூடின்அச் சிவலோக மாமே. ரு

1623 புண்ணியன் எந்தை புனிதன் இணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது
மண்ணவ ராவதும் வானவ ராவதும்
அண்ணல் இறைவன் அருள்பெற்ற போதே. ௬

1624 காயத்தே ரேறி மனப்பாகன் கைகூட்ட
மாயத்தே ரேறி மயங்கு மவையுணர்
நேயத்தே ரேறி நிமலன் அருள்பெற்றால்
ஆயத்தே ரேறி யவனிவ னாமே. எ

1625 கதிர்கண்ட காந்தங் கனலின் வடிவாம்
மதிகண்ட காந்தம் மணிநீர் வடிவாஞ்
சதிகொண்ட சாக்கி யெரியின் வடிவாம்
எரிகொண்ட ஈசன் எழில்வடி வாமே. அ

1626 நாடும் உறவுங் கலந்தெங்கள் நந்தியைத்
தேடுவன் தேடிச் சிவபெரு மானென்று
கூடுவன் கூடிக் குரைகழற் கேசெல்ல
வீடு மளவும் விடுகின் றிலேனே. ௯

## 8. அவவேடம்

1627 ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன்
வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகாள்
ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்
தேடியுங் காணீர் சிவனவன் தாள்களே. க

1628 ஞானமில் லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை
ஈனம தேசெய் திரந்துண் டிருப்பினும்
மான நலங்கெடும் அப்புவி யாதலால்
ஈனவர் வேடங் கழிப்பித்தல் இன்பமே. உ

1629 இன்பமுந் துன்பமும் நாட்டா ரிடத்துள்ள
நன்செயல் புன்செய லாலந்த நாட்டிற்காம்
என்ப இறைநாடி நாடோறும் நாட்டினின்
மன்பதை செப்பஞ் செயின்வையம் வாழுமே. ௩

1630 இழிகுலத் தார்வேடம் பூண்பர்மே லெய்த
வழிகுலத் தார்வேடம் பூண்பர்தே வாகப்
பழிகுலத் தாகிய பாழ்சண்ட ராஞர்
கழிகுலத் தார்கள் களையப்பட் டாரே. ௪

1631 பொய்த்தவஞ் செய்வார் புகுவர் நரகத்துப்
பொய்த்தவஞ் செய்தவர் புண்ணிய ராகாரேற்

பொய்த்தவம் மெய்த்தவம் போகத்துட் போக்கியஞ்
சத்திய ஞானத்தால் தங்குந் தவங்களே. ௫

1632 பொய்வேடம் பூண்பர் பொசித்தல் பயனாக
மெய்வேடம் பூண்போர் மிகுபிச்சை கைக்கொள்வர்
பொய்வேடம் மெய்வேடம் போலவே பூணினும்
உய்வேட மாகும் உணர்ந்தறிந் தோர்க்கே. ௬

## 9. தவவேடம்

1633 தவமிக் கவரே தலையான வேடர்
அவமிக் கவரே யதிகொலை வேடர்
அவமிக் கவர்வேடத் தாகாரவ் வேடந்
தவமிக் கவர்க்கன்றித் தாங்கவொண் ணாதே. ௧

1634 பூதி யணிவது சாதன மாதியிற்
காதணி தாம்பிர குண்டலங் கண்டிகை
ஓதி யவர்க்கும் உருத்திர சாதனந்
தீதில் சிவயோகி சாதனந் தேரிலே. ௨

1635 யோகிக் கிடுமது வுட்கட்டுக் கஞ்சுளி
தோகைக்குப் பாசத்துச் சுற்றுஞ் சடையதொன்
றாகத்து நீறணி யங்கக் கபாலஞ்
சீகத்த மாத்திரை திண்பிரம் பாகுமே. ௩

1636 காதணி குண்டலங் கண்டிகை நீறும்
ஊதுநற் சங்கும் உயர்கட்டி கப்பரை
ஏதமில் பாதுகம் யோகாந்த மாதனம்
ஏதமில் யோகபட் டந்தண்டம் ஈரைந்தே. ௪

## 10. திருநீறு

1637 நூலுஞ் சிகையும் உணரார்நின் மூடர்கள்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
பாலொன்றும் அந்தணர் பார்ப்பார் பரமுயிர்
ஓரொன் றிரண்டினில் ஓங்காரம் ஓதிலே. ௧

1638 கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே. ௨

1639 அரசுட னாலத்தி யாகும்அக் காரம்
விரவு கனலில் வியனுரு மாறி

நிரவயன் நின்மலன் தாள்பெற்ற நீதர்
உருவம் பிரமன் உயர்குல மாமே. ௩

## 11. ஞானவேடம்

1640 ஞானமி லார்வேடம் பூண்டும் நரகத்தர்
ஞானமுள் ளார்வேடம் இன்றெனில் நன்முத்தர்
ஞான முளதாக வேண்டுவோர் நக்கன்பால்
ஞான முளவேட நண்ணிநிற் பாரே. ௧

1641 புன்ஞானத் தோர்வேடம் பூண்டும் பயனில்லை
நன்ஞானத் தோர்வேடம் பூண்பர் அருள்நண்ணத்
துன்ஞானத் தோர்சம யத்துரி சுள்ளோர்
பின்ஞானத் தோரொன்றும் பேசகில் லாரே. ௨

1642 சிவஞானி கட்குஞ் சிவயோகி கட்கும்
அவமான சாதனம் ஆகாது தேரில்
அவமா மவர்க்கது சாதன நான்கும்
உவமான மில்பொருள் உள்ளுற லாமே. ௩

1643 கத்தித் திரிவர் கழுவடி நாய்போற்
கொத்தித் திரிவர் குரக்களி ஞானிகள்
ஒத்துப் பொறியும் உடலும் இருக்கவே
செத்துத் திரிவர் சிவஞானி யோர்களே. ௪

1644 அடியா ரவரே யடியா ரலாதார்
அடியாரு மாகாரவ் வேடமு மாகார்
அடியார் சிவஞான மானது பெற்றோர்
அடியா ரலாதார் அடியார்கள் அன்றே. ௫

1645 ஞானிக்குச் சுந்தர வேடமும் நல்லவாந்
தானுற்ற வேடமுந் தற்சிவ யோகமே
ஆனவவ் வேடம் அருண்ஞான சாதனம்
ஆனது மாமொன்றும் ஆகா தவனுக்கே. ௬

1646 ஞானத்தி னற்பத நண்ணுஞ் சிவஞானி
தானத்தில் வைத்த தனியால யத்தனும்
மோனத்த னாதலின் முத்தனுஞ் சித்தனும்
ஏனத் தவசி இவனென லாகுமே. ௭

1647 தானற்ற தன்மையுந் தானவ னாதலும்
ஏனைய வச்சிவ மான இயற்கையுந்
தானுறு சாதக முத்திரை சாத்தந்
மேனமு நந்தி பதமுத்தி பெற்றதே. ௮

## 12. சிவவேடம்

1648 அருளால் அரனுக் கடிமைய தாகிப்
பொருளாந் தனதுடற் பொற்பதி நாடி
இருளான தின்றி யிருஞ்செயல் அற்றோர்
தெருளாம் அடிமைச் சிவவேடத் தோரே. க

1649 உடலில் துவக்கிய வேடம் உயிர்க்காகா
உடல்கழன் றால்வேடம் உடனே கழலும்
உடலுயிர் உண்மையென் றோர்ந்துகொள் ளாதார்
கடலில் அகப்பட்ட கட்டையொத் தாரே. ௨

1650 மயலற் றிருளற்று மாமன மற்றுக்
கயலுற்ற கண்ணியர் கையிணைக் கற்றுத்
தயலற் றவரோடுந் தாமேதா மாகிச்
செயலற் றிருந்தார் சிவவேடத் தாரே. ௩

1651 ஓடுங் குதிரைக் குசைதின்னம் பற்றுமின்
வேடங்கொண் டென்செய்வீர் வேண்டா மனிதரே
நாடுமின் நந்தியை நம்பெரு மான்தன்னைத்
தேடும்இன் பப்பொருள் சென்றெய்த லாமே. ௪

## 13. அபக்குவன்

1652 குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே. க

1653 மனத்தில் எழுந்ததோர் மாயக்கண் ணாடி
நினைப்பின் அதனின் நிழலையுங் காணார்
வினைப்பயன் போக விளக்கியுங் கொள்ளார்
புறக்கடை இச்சித்துப் போகின்ற வாறே. ௨

1654 ஏயெனில் என்னென மாட்டார் பிரசைகள்
வாய்முலை பெய்ய மதுரநின் றூறிடுந்
தாய்முலை யாவ தறியார் தமருளோர்
ஊனிலை செய்யும் உருவிலி தானே. ௩

1655 வாயொன்று சொல்லி மனமொன்று சிந்தித்து
நீயொன்று செய்யல் உறுதி நெடுந்தகாய்
தீயென்றிங் குன்னைத் தெளிவன் தெளிந்தபின்
பேயென்றிங் கென்னைப் பிறர்தெளி யாரே. ௪

1656 பஞ்சத் துரோகத்துப் பாதகர் தம்மை
[1]யஞ்சச் சமயத்தோர் வேந்தன் அருந்தண்டம்
விஞ்சச்செய் திப்புவி வேறே விடாவிடிற்
பஞ்சத்து ளாய்ப்புவி முற்றும்பா ழாகுமே. ரு

1657 தவத்திடை நின்றவர் தாமுண்ணுங் கன்மஞ்
சிவத்திடை நின்றது தேவர் அறியார்
தவத்திடை நின்றறி யாதவர் எல்லாம்
பவத்திடை நின்றதோர் பாடது வாமே. சு

1658 கன்றலுங் கருதலுங் கருமஞ் செய்தலும்
தின்றலுஞ் சுவைத்தலுந் தீமை செய்தலும்
பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலும்
என்றிவை இறைவன்பால் இயற்கை அல்லவே. எ

1659 விடிவ தறியார் வெளிகாண மாட்டார்
விடியில் வெளியில் விழிக்கவு மாட்டார்
கடியதோ ருண்ணிமை கட்டுமின் காண்மின்
விடியாமை காக்கும் விளக்கது வாமே. அ

1660 வைத்த பசுபாச மாற்று நெறிவைகிப்
பெத்த மறமுத்த னாகிப் பிறழ்வுற்றுத்
தத்துவ முன்னித் தலைப்படா தவ்வாறு
பித்தான சீடனுக் கீயப் பெறுதானே. ௯

1661 மன்னும் மலமைந்தும் மாற்றும் வகையோரான்
துன்னிய காமாதி தோயுந் தொழில்நீங்கான்
பின்னிய பொய்யன் பிறப்பிறப் பஞ்சாதான்
அன்னிய னவன் அசற்சீட னாமே. ௧0

## 14. பக்குவன்

1662 தொழிலறி வாளர் சுருதிகண் ணாகப்
பழுதறி யாத பரம குருவை
வழியறி வார்நல் வழியறி வாளர்
அழிவறி வார்மற்றை யல்லா தவரே. ௧

1663 பதைத்தொழிந் தேன்பர மாவுனை நாடி
யதைத்தொழிந் தேன்இனி யாரொடுங் கூடேன்
சிதைத்தடி யேன்வினை சிந்தனை தீர
உதைத்துடை யாயுகந் தாண்டரு ளாயே. உ

---

பா. வே. 1. பஞ்சச்.

1664 பதைக்கின்ற போதே பரமென்னும் வித்தை
விதைக்கின்ற வித்தினை மேல்நின்று நோக்கிச்
சிதைக்கின்ற சிந்தையைச் செவ்வே நிறுத்தி
இசைக்கின்ற அன்பருக் கீயலு மாமே. ௩

1665 கொள்ளினும் நல்ல குருவினைக் கொள்ளுக
உள்ள பொருளுடல் ஆவி யுடனீக
எள்ளத் தனையும் இடைவிடா தேநின்று
தெள்ளி யறியச் சிவபதந் தானே. ௪

1666 சோதி விசாகந் தொடர்ந்திரு தேள்நண்டு
ஓதிய நாளே உணர்வது தானென்று
நீதியுள் நீர்மை நினைந்தவர்க் கல்லது
ஆதியும் ஏதும் அறியகி லானே. ௫

1667 தொழிலார மாமணித் தூய்தான சிந்தை
எழிலால் இறைவன் இடங்கொண்ட போதே
விழலார் விறலாம் வினையது போகக்
கழலார் திருவடி கண்டரு ளாமே. ௬

1668 சாத்திக னாய்ப்பர தத்துவந் தானுன்னி
ஆத்திக பேத நெறிதோற்ற மாகியே
ஆர்த்த பிறவியி னஞ்சி யறநெறி
சாத்தவல் லானவன் சற்சீட னாமே. ௭

1669 சத்தும் அசத்துமெவ் வாறெனத் தானுன்னிச்
சித்தை யுருக்கிச் சிவனருள் கைகாட்டப்
பத்தியின் ஞானம் பெறப்பணிந் தானந்தச்
சத்தியில் இச்சைத் தகுவோன்சற் சீடனே. ௮

1670 அடிவைத் தருளுதி யாசானின் றுன்னா
அடிவைத்த மாமுடி மாயப் பிறவி
அடிவைத்த காய அருட்சத்தி யாலே
அடிபெற்ற ஞானத்த னாசற்று ளோனே. ௯

1671 சீராரு ஞானத்தின் இச்சை செலச்செல்ல
வாராத காதல் குருபரன் பாலாகச்
சாராத சாதக நான்குந்தன் பாலுற்றோன்
ஆராயும் ஞானத்த னாடி வைக்கவே. ௧௦

1672 உணர்த்து மதிபக் குவர்க்கே யுணர்த்தி
இணக்கிற் பராபரத் தெல்லையுள் இட்டுக்
குணக்கொடு தெற்குத் தரபச்சி மங்கொண்
டுணர்த்துமி னாவுடை யாள்தன்னை யுன்னியே. ௧௧

1673 இறையடி தாழ்ந்தை வணக்கமும் எய்திக்
குறையது கூறிக் குணங்கொண்டு போற்றச்
சிறையுடல் நீயறக் காட்டிச் சிவத்தோ
டறிவுக் கறிவிப்போன் சன்மார்க்கி யாமே. ௧௨

1674 வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப் புனல்வழி மாற்றிச்சித் தாந்தத்து
வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே
தாழ்க்குந் தலையினேன் சற்சீட னாமே. ௧௩

1675 சற்குணம் வாய்மை தயாவிவே கந்தண்மை
சற்குரு பாதமே சாயைபோல் நீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்தல்
அற்புத மேதோன்ற லாகுஞ்சற் சீடனே. ௧௪

ஆறந்தந்திரம் முற்றும்.

# ஏழாந் தந்திரம்

[காலோத்தராகமம்]

## 1. ஆறுதாரம்

1676 நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறுங்
கோலிமேல் நின்ற குறிகள் பதினாறும்
மூலங்கண் டாங்கே முடிந்து முதல்இரண்டுங்
காலங்கண் டானடி காணலு மாமே. க

1677 ஈராறு நாதத்தில் ஈரெட்டாம் அந்தத்தின்
மேதாதி நாதாந்த மீதாம் பராசத்தி
போதா லயத்த விகாரந் தனிற்போத
மேதாதி யாதார மீதான உண்மையே. உ

1678 மேலென்றுங் கீழென் றிரண்டறக் காணுங்கால்
தானென்றும் நானென்றுந் தன்மைகள் ஓராறும்
பாரெங்கு மாகிப் பரந்த பராபரங்
காரொன்று கற்பக மாகிநின் றானே. ந

1679 மேதாதி யாலே விடாதோ மெனத்தூண்டி
ஆதார சோதனை [1]அத்துவ சோதனை
தாதார மாகவே தானெழச் சாதித்தால்
ஆதாரஞ் செய்போக மாவது காயமே. ச

1680 ஆறந்த முங்கூடி யாகும் உடம்பினிற்
கூறிய வாதார மற்றுங் குறிக்கொண்மின்
ஆறிய வக்கர மைம்பதின் மேலே
ஊறிய வாதாரத் தோரெழுத் தாமே. ரு

1681 ஆகும் உடம்பும் அழிகின்ற அவ்வுடல்
போகும் உடம்பும் பொருந்திய வாறுதான்
ஆகிய வக்கரம் ஐம்பது தத்துவம்
ஆகும் உடம்புக்கும் ஆறந்த மாமே. சு

1682 ஆயு மலரின் அணிமலர் மேலது
வாய இதழும் பதினாறும் அங்குள
தாய அறிவு சிவானந்த மாகிப்போய்
மேய அறிவாய் விளைந்தது தானே. எ

---

பா. வே. 1. அத்துவா.

## 2. அண்ட லிங்கம்

1683 இலிங்கம தாவ தியாரும் அறியார்
இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவ தெண்ணெண் கலையும்
இலிங்கம தாக எடுத்த துலகே. ௧

1684 உலகில் எடுத்தது சத்தி முதலா
உலகில் எடுத்தது சத்தி வடிவாய்
உலகில் எடுத்தது சத்தி குணமாய்
உலகம் எடுத்த சதாசிவன் தானே. ௨

1685 போகமும் முத்தியும் புத்தியுஞ் சித்தியும்
ஆகமும் ஆறாறு தத்துவத் தப்பாலாம்
ஏகமும் நல்கி யிருக்குஞ் சதாசிவம்
ஆகம வத்துவா வாறுஞ் சிவமே. ௩

1686 ஏத்தினர் எண்ணிலி தேவரெம் ஈசனை
வாழ்த்தினர் வாசப் பசுந்தென்றல் வள்ளலென்
றார்த்தனர் அண்டங் கடந்தப் புறநின்று
காத்தனன் என்னுங் கருத்தறி யாரே. ௪

1687 ஒண்சுட ரோன்அயன் மால்பிர சாபதி
ஒண்சுட ரான இரவியோ டிந்திரன்
கண்சுட ராகிக் கலந்தெங்கும் தேவர்கள்
தண்சுட ராயெங்கும் தற்பர மாமே. ௫

1688 தாபரத் துண்ணின் றருளவல் லான்சிவன்
மாபரத் துண்மை வழிபடு வாரில்லை
மாபரத் துண்மை வழிபடு வாளர்க்கும்
பூவகத் துள்நின்ற பொற்கொடி யாகுமே. ௬

1689 பாய விமானமுந் தூலம தாகுமால்
ஆய சதாசிவ மாகுநற் சூக்குமம்
பாய பலிபீடம் பத்திர லிங்கமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே. ௭

1690 முத்துடன் மாணிக்கம் மொய்த்த பவளமுங்
கொத்துமக் கொம்பு சிலைநீறு கோமளம்
அத்தன்றன் னாகம மன்ன மரிசியாம்
உய்த்ததின் சாதனம் பூமண லிங்கமே. ௮

1691 துன்றுந் தயிர்நெய்பால் துய்ய மெழுகுடன்
கன்றிய செம்பு கனலிர தஞ்சலம்

வன்திறல் செங்கல் வடிவுடை வில்லம்பொன்
றென்றியங் கொன்றை தெளிசிவ லிங்கமே. ௯

1692 அதுவுணர்ந் தோனொரு தன்மையை நாடி
எதுவுண ராவகை நின்றனன் ஈசன்
புதுவுணர் வான புவனங்கள் எட்டும்
இதுவுணர்ந் தென்னுடல் கோயில்கொண் டானே. ௧0

1693 அகலிட மாயறி யாமல் அடங்கும்
உகலிட மாய்நின்ற ஊனத னுள்ளே
பகலிட மாமுனம் பாவ வினாசன்
புகலிட மாய்நின்ற புண்ணியன் றானே. ௧௧

1694 போது புனைகழல் பூமிய தாவது
மாது புனைமுடி வானக மாவது
நீதியுள் ஈசன் உடல்விசும் பாய்நிற்கும்
ஆதி யுறநின்ற தப்பரி சாமே. ௧௨

1695 தரையுற்ற சத்தி தனிலிங்கம் விண்ணாந்
திரைபொரு நீரது மஞ்சன சாலை
வரைதவழ் மஞ்சுநீர் வானுடு மாலை
கரையற்ற நந்தி கலையுந் திக்காமே. ௧௩

## 3. பிண்ட லிங்கம்

1696 மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே. ௧

1697 உலந்திலர் பின்னும் உளரென நிற்பர்
நிலந்தரு நீர்தெளி யூனவை செய்யப்
புலந்தரு பூதங்கள் ஐந்துமொன் றாக
வலந்தரு தேவரை வந்திசெய் யீரே. ௨

1698 கோயில்கொண் டன்றே குடிகொண்ட ஐவரும்
வாயில்கொண் டாங்கே வழிநின் றருளுவர்
தாயில்கொண் டாற்போல் தலைவனென் னுட்புக
வாயில்கொண் டீசனு மாளவந் தானே. ௩

1699 கோயில்கொண் டானடி கொல்லைப் பெருமறை
வாயில்கொண் டானடி நாடிகள் பத்துள
பூசைகொண் டான்புல னைந்தும் பிறகிட்டு
வாயில்கொண் டானெங்கள் மாநந்தி தானே. ௪

## 4. சதாசிவ லிங்கம்

1700 கூடிய பாதம் இரண்டும் படிமிசை
பாடிய கையிரண் டெட்டும் பரந்தெழுந்
தேடு முகம்ஐந்து செங்கணின் மூவைந்து
நாடுஞ் சதாசிவ நல்லொளி முத்தே. க

1701 வேதா நெடுமால் உருத்திரன் மேலீசன்
மீதான ஐம்முகன் விந்துவும் நாதமும்
ஆதார சத்தியு மந்தச் சிவனொடுஞ்
சாதா ரணமாஞ் சதாசிவந் தானே. உ

1702 ஆகின்ற சத்தியின் உள்ளே கலைநிலை
ஆகின்ற சத்தியின் உள்ளே கதிரெழ
ஆகின்ற சத்தியின் உள்ளே அமர்ந்தபின்
ஆகின்ற சத்தியுள் அத்திசை பத்தே. ங

1703 அத்திசைக் குள்ளே அமர்ந்தன ஆறங்கம்
அத்திசைக் குள்ளே அமர்ந்தன நால்வேதம்
அத்திசைக் குள்ளே அமர்ந்த சரியையோ
டத்திசைக் குள்ளே அமர்ந்த சமயமே. ச

1704 சமயத் தெழுந்த அவத்தையீ ரைந்துள
சமயத் தெழுந்த இராசிஈ ராறுள
சமயத் தெழுந்த சரீரமா றெட்டுள
சமயத் தெழுந்த சதாசிவந் தானே. ரு

1705 நடுவு கிழக்குத் தெற்குத் தரமேற்கு
நடுவு படிகநற் குங்கும வன்னம்
அடைவுள வஞ்சனஞ் செவ்வரத் தம்பால்
அடியேற் கருளிய முகமிவை அஞ்சே. சு

1706 அஞ்சு முகமுள ஐம்மூன்று கண்ணுள
அஞ்சினொ டஞ்சு கரதலந் தானுள
அஞ்சுடன் அஞ்சா யுதமுள நம்பியென்
நெஞ்சு புகுந்து நிறைந்துநின் றானே. எ

1707 சத்தி தராதல மண்டஞ் சதாசிவஞ்
சத்தி சிவமிக்க தாபர சங்கமஞ்
சத்தி யுருவம் அருவஞ் சதாசிவஞ்
சத்தி சிவதத் துவமுப்பத் தாறே. அ

1708 தத்துவ மாவ தருவஞ் சராசரந்
தத்துவ மாவ துருவஞ் சுகோதயந்

தத்துவம் எல்லாஞ் சகலமு மாய்நிற்குந்
தத்துவ மாகுஞ் சதாசிவன் தானே. கூ

1709 கூறுமி னூறு சதாசிவன் எம்மிறை
வேறோர் உரைசெய்து மிகைப்பொரு ளாய்நிற்கு
மேறுரை செய்தொழில் வானவர் தம்மொடு
மாறுசெய் வானென் மனம்புகுந் தானே. க0

1710 இருளார்ந்த கண்டமும் ஏந்து மழுவுஞ்
சுருளார்ந்த செஞ்சடைச் சோதிப் பிறையும்
அருளார்ந்த சிந்தையெம் ஆதிப் பிரானைத்
தெருளார்ந்தென் உள்ளே தெளிந்திருந் தேனே. கக

1711 சத்திதான் நிற்கின்ற ஐம்முகஞ் சாற்றிடில்
உத்தரம் வாமம் உரைத்திடும் சத்தி
பச்சிமம் பூருவம் தற்புரு டன்னுரை
தெற்கி லகோரம் தென்கிழக் கீசனே. கஉ

1712 நாணுநல் லீசான நடுவுச்சி தானாகுந்
தாணுவின் றன்முகந் தற்புருட மாகுங்
காணும் அகோரம் இருதயங் குய்யமா
மாணுற வாமமாஞ் சத்திநற் பாதமே. கந

1713 நெஞ்சு சிரஞ்சிகை நீள்கவ சங்கண்ணும்
வஞ்சமில் விந்து வளர்நிறம் பச்சையாஞ்
செஞ்சுறு செஞ்சுடர் சேகரி மின்னாகுஞ்
செஞ்சுடர் போலுந் தெசாயுதந் தானே. கச

1714 எண்ணில் இதயம் இறைஞான சத்தியாம்
விண்ணிற் பரைசிர மிக்க சிகையாதி
வண்ணக் கவசம் வனப்புடை இச்சையாம்
பண்ணுங் கிரியை பரநேத் திரத்திலே. கரு

1715 சத்திநாற் கோணஞ் சலமுற்று நின்றிடுஞ்
சத்தி அறுகோணஞ் சயனத்தை யுற்றிடுஞ்
சத்திநல் வட்டஞ் சலமுற் றிருந்திடுஞ்
சத்தி யுருவாஞ் சதாசிவன் தானே. கசு

1716 மானந்தி எத்தனை காலம் அழைக்கினுந்
தானந்தி யஞ்சின் தனிச்சுட ராய்நிற்குங்
கானந்தி யுந்தி கடந்து கமலத்தின்
மேனந்தி ஒன்பதின் மேவிநின் றானே. கஎ

1717 ஒன்றிய வாறும் உடலி னுடன்கிடந்
தென்றுமெம் மீச னடக்கும் இயல்பது
தென்றலைக் கேறத் திருந்து சிவனடி
நின்று தொழுதேனென் னெஞ்சத்தி னுள்ளே. ௧௮

1718 உணர்ந்தேன் உலகினில் ஒண்பொரு ளானைக்
கொணர்ந்தேன் குவலயங் கோயிலென் னெஞ்சம்
புணர்ந்தேன் புனிதனும் பொய்யல்ல மெய்யே
பணிந்தேன் பகலவன் பாட்டு மொலியே. ௧௯

1719 ஆங்கவை மூன்றினும் ஆரழல் வீசிடத்
தாங்கிடும் ஈரேழு தானடு வானதில்
ஓங்கிய ஆதியும் அந்தமு மாமென
ஈங்கிவை தம்முடல் இந்துவு மாமே. ௨0

1720 தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந்
தன்மேனி தானுஞ் சதாசிவ மாய்நிற்குந்
தன்மேனி தற்சிவன் தற்சிவா னந்தமாந்
தன்மேனி தானாகுந் தற்பரந் தானே. ௨௧

1721 ஆரும் அறியார் அகார மவனென்று
பாரு முகாரம் பரந்திட்ட நாயகி
தாரம் இரண்டுந் தரணி முழுதுமாய்
மாறி யெழுந்திடும் ஓசைய தாமே. ௨௨

1722 இலிங்கநற் பீடம் இசையும்ஓங் காரம்
இலிங்கநற் கண்ட நிறையு மகாரம்
இலிங்கத்துள் வட்ட நிறையும் உகாரம்
இலிங்க மகார நிறைவிந்து நாதமே. ௨௩

## 5. ஆத்ம லிங்கம்

1723 அகார முதலா யனைத்துமாய் நிற்கும்
உகார முதலா யுயிர்ப்பெய்து நிற்கும்
அகார வுகாரம் இரண்டு மறியில்
அகார வுகாரம் இலிங்கம தாமே. ௧

1724 ஆதார மாதேய மாகின்ற விந்துவு
மேதாதி நாதமு மீதே விரிந்தன
ஆதார விந்து அதிபீட நாதமே
போதாவி லிங்கப் புணர்ச்சிய தாமே. ௨

1725 சத்தி சிவமாம் இலிங்கமே தாபரஞ்
சத்தி சிவமாம் இலிங்கமே சங்கமஞ்

சத்தி சிவமாம் இலிங்கஞ் சதாசிவஞ்
சத்தி சிவமாகுந் தாபரந் தானே. ௩

1726 தானே ரெழுகின்ற சோதியைக் காணலாம்
வானே ரெழுகின்ற ஐம்ப தமர்ந்திடம்
பூநே ரெழுகின்ற பொற்கொடி தன்னுடன்
தானே ரெழுகின்ற வகாரம தாமே. ௪

1727 விந்துவும் நாதமும் மேவு மிலிங்கமாம்
விந்துவ தேபீட நாத மிலிங்கமாம்
அந்த இரண்டையும் ஆதார தெய்வமாய்
வந்த கருவைந்துஞ் செய்யு மவையைந்தே. ௫

1728 சத்திநற் பீடந் தருநல்ல ஆன்மா
சத்திநற் கண்டந் தருவித்தை தானாகுஞ்
சத்திநல் லிங்கந் தருஞ்சிவ தத்துவஞ்
சத்திநல் லான்மாச் சதாசிவந் தானே. ௬

1729 மனம்புகுந் தென்னுயிர் மன்னிய வாழ்க்கை
மனம்புகுந் தின்பம் பொழிகின்ற போது
நலம்புகுந் தென்னொடு நாதனை நாடும்
இலம்புகுந் தாதியு மேற்கொண்ட வாறே. ௭

1730 பராபரன் எந்தை பனிமதி சூடி
தராபரன் தன்னடி யார்மனக் கோயிற்
சிராபரன் தேவர்கள் சென்னியின் மன்னு
மராமரன் மன்னி மனத்துறைந் தானே. ௮

1731 பிரானல்ல நாமெனிற் பேதை யுலகங்
குராமிலன்னு மென்மனங் கோயில்கொள் ஈசன்
அராநின்ற செஞ்சடை அங்கியும் நீரும்
பொராநின் றவர்செயப் புண்ணியன் தானே. ௯

1732 அன்றுநின் றான்கிடந் தானவன் என்று
சென்றுநின் றெண்டிசை ஏத்துவர் தேவர்கள்
என்றுநின் றேத்துவன் எம்பெரு மான்தனை
ஒன்றியென் உள்ளத்தின் உள்ளிருந் தானே. ௧௦

## 6. ஞான லிங்கம்

1733 உருவும் அருவும் உருவோ டருவும்
மருவு பரசிவன் மன்பல் லுயிர்க்குங்
குருவு மெனநிற்குங் கொள்கைய னாகுந்
தருமவன நல்குஞ் சதாசிவன் தானே. ௧

1734 நாலான கீழ துருவ நடுநிற்க
மேலான நான்கு மருவு மிகநாப்பண்
நாலான ஒன்று மருவுரு நண்ணலாற்
பாலா மிவையாம் பரசிவன் தானே. ௨

1735 தேவர் பிரானைத் திசைமுக நாதனை
நால்வர் பிரானை நடுவுற்ற நந்தியை
ஏவர் பிரானென் றிறைஞ்சுவா ரவ்வழி
யாவர் பிரானடி அண்ணலு மாமே. ௩

1736 வேண்டிநின் றேதொழு தேன்வினை போயற
ஆண்டொரு திங்களும் நாளும் அளக்கின்ற
காண்டகை யாளொடுங் கன்னி யுணரினு
மூண்டகை மாறினும் ஒன்றது வாமே. ௪

1737 ஆதி பரந்தெய்வம் அண்டத்து நற்றெய்வஞ்
சோதி யடியார் தொடரும் பெருந்தெய்வம்
நீதியுள் மாதெய்வ நின்மலன் எம்மிறை
பாதியுள் மன்னும் பராசத்தி யாமே. ௫

1738 சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே
சுத்த சிவபதந் தோயாத தூவொளி
அத்தன் திருவடிக் கப்பாலைக் கப்பாலாம்
ஒத்தவு மாமீசன் தானான வுண்மையே. ௬

1739 கொழுந்தினைக் காணிற் குவலயந் தோன்றும்
எழுந்திடங் காணில் இருக்கலு மாகும்
பரந்திடங் காணிற் பார்ப்பதி மேலே
திரண்டெழக் கண்டவன் சிந்தையு ளானே. ௭

1740 எந்தை பரமனும் என்னம்மை கூடமும்
முந்த வுரைத்து முறைசொல்லின் ஞானமாஞ்
சந்தித் திருந்த விடம்பெருங் கண்ணியை
உந்தியின் மேல்வைத் துகந்திருந் தானே. ௮

1741 சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவமுமாஞ் சிவன்சத் தியுமாகுஞ்
சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை
சத்திதான் என்றுஞ் சமைந்துரு வாகுமே. ௯

## 7. சிவ லிங்கம்

1742 குரைக்கின்ற வாரிக் குவலய நீரும்
பரக்கின்ற காற்றுப் பயில்கின்ற தீயும்

நிரைக்கின்ற வாறிவை நீண்டகன் றானை
வரைத்து வலஞ்செயு மாறறி யேனே. க

1743 வரைத்து வலஞ்செய்யு மாறிங்கொன் றுண்டு
நிரைத்து வருகங்கை நீர்மல ரேந்தி
உரைத்தவன் நாமம் உணரவல் லார்க்குப்
புரைத்தெங்கும் போகான் புரிசடை யோனே. உ

1744 ஒன்றெனக் கண்டேயெம் ஈசன் ஒருவனை
நன்றென் றடியிணை நானவ னைத்தொழ
வென்றைம் புலனு மிகக்கிடந் தின்புற
அன்றென் றருள்செய்யும் ஆதிப் பிரானே. ங

1745 மலர்ந்த வயன்மால் உருத்திரன் மகேசன்
பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே. ச

1746 மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென்
றாவி எழுமள வன்றே உடலுற
மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும்
பாவித் தடக்கிற் பரகதி தானே. ரு

## 8. சம்பிரதாயம்

1747 உடல்பொருள் ஆவி உலகத்தாற் கொண்டு
படர்வினை பற்றறப் பார்த்துக்கை வைத்து
நொடியின் அடிவைத்து நுண்ணுணர் வாக்கிக்
கடியப் பிறப்பறக் காட்டினன் நந்தியே. க

1748 உயிருஞ் சரீரமும் ஒண்பொரு ளான
வியவார் பரமும்பின் மேவும் பிராணன்
செயலார் சிவமுஞ் சிற்சத்தி யாதிக்கே
உயலார் குருபரன் உய்யக்கொண் டானே. உ

1749 பச்சிம திக்கிலே வைத்தஆ சாரியன்
நிச்சலும் என்னை நினையென்ற வப்பொருள்
உச்சிக்குங் கீழது வுண்ணாக்கு மேலது
வைச்ச பதமிது வாய்திற வாதே. ங

1750 பொட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனைப்
பொட்டடித் துள்ளமர் மாசெலாம் வாங்கிப்பின்
தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்
வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே. ச

1751 தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவன்
இருக்கின்ற தன்மையை யேதும் உணரார்
பிரிக்கின்ற விந்து பிணக்கறுத் தெல்லாங்
கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே. ரு

1752 கூடும் உடல்பொருள் ஆவி குறிக்கொண்டு
நாடி யடிவைத் தருண்ஞான சத்தியால்
பாடல் உடலினிற் பற்றற நீக்கியே
கூடிய தானவ னுங்குளிக் கொண்டே. சு

1753 கொண்டா னடியேன் அடிமை குறிக்கொள்ளக்
கொண்டான் உயிர்பொருள் காயக் குழாத்தினைக்
கொண்டான் பலமுற்றுந் தந்தவன் கோடலாற்
கொண்டா னெனவொன்றுங் கூறகி லேனே. எ

1754 குறிக்கின்ற தேகமுந் தேகியுங் கூடி
நெறிக்கும் பிராணன் நிலைபெற்ற சீவன்
பறிக்கின்ற காயத்தைப் பற்றிய நேர்மை
பிறக்க அறியாதார் பேயுடன் ஒப்பரே. அ

1755 உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்
உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்கள் உணர்ந்தவக் காலம்
உணர்வுடை யார்கள் உணர்ந்துகண் டாரே. கூ

1756 காயப் பரப்பில் அலைந்து துரியத்துச்
சால விரிந்து குவிந்து சகலத்தில்
ஆயவவ் வாறு றடைந்து திரிந்தோர்க்குந்
தூய அருள்தந்த நந்திக்கென் சொல்வதே. க0

1757 நானென நீயென வேறில்லை நண்ணுதல்
ஊனென வூனுயிர் என்ன வுடனின்று
வானென வானவர் நின்று மனிதர்கள்
தேனென இன்பந் திளைக்கின்ற வாறே. கக

1758 அவனும் அவனும் அவனை யறியார்
அவனை யறியில் அறிவானும் இல்லை
அவனும் அவனும் அவனை யறியில்
அவனும் அவனும் அவனிவ னாமே. கஉ

1759 நானிது தானென நின்றவ னாடோறும்
ஊனிது தானுயிர் போலுணர் வானுளன்
வானிரு மாமுகில் போற்பொழி வானுளன்
நானிது வம்பர நாதனு மாமே. கஙு

1760 பெருந்தன்மை தானென யானென வேறாய்
இருந்தது மில்லைய தீசன் அறியும்
பொருந்தும் உடலுயிர் போலுமை மெய்யே
திருந்தமுன் செய்கின்ற தேவர் பிரானே. கசு

## 9. திருவருள் வைப்பு

1761 இருபத மாவ திரவும் பகலும்
உருவது வாவ துயிரும் உடலும்
அருளது வாவ தறமுந் தவமும்
பொருளது வுள்நின்ற போகம தாமே. க

1762 காண்டற் கரியன் கருத்திலன் நந்தியுந்
தீண்டற்குஞ் சார்தற்குஞ் சேயனுத் தோன்றிடும்
வேண்டிக் கிடந்து விளக்கொளி யானெஞ்சம்
ஈண்டிக் கிடந்தங் கிருளறு மாமே. உ

1763 குறிப்பினின் உள்ளே குவலயந் தோன்றும்
வெறுப்பிருள் நீங்கில் விகிர்தனும் நிற்குஞ்
செறிப்புறு சிந்தையைச் சிக்கென நாடில்
அறிப்புறு காட்சி அமரரு மாமே. ங

1764 தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்
பேர்ந்தறி வானெங்கள் பிஞ்ஞகன் எம்மிறை
ஆர்ந்தறி வாரறி வேதுணை யாமெனச்
சார்ந்தறி வான்பெருந் தன்மைவல் லானே. ச

1765 தானே யறியும் வினைகள் அழிந்தபின்
நானே யறிகிலன் நந்தி யறியுங்கொல்,
ஊனே யுருகி யுணர்வை யுணர்ந்தபின்
தேனே யனையனந் தேவர் பிரானே. ரு

1766 நானறிந் தன்றே யிருக்கின்ற வீசனை
வானறிந் தாரறி யாது மயங்கினர்
ஊனறிந் துள்ளே யுயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறி யான்பின்னை யாரறி வாரே. சு

1767 அருளெங்கு மான அளவை யறியார்
அருளை நுகரமு தானதுந் தேரார்
அருளின் கருமத் ததிசூக்க முன்னோர்
அருளெங்குங் கண்ணான தாரறி வாரே. எ

1768 அறிவில் அணுக அறிவது நல்கிப்
பொறிவழி யாசை புகுத்திப் புணர்ந்திட்

டறிவது வாக்கி அடியருள் நல்குஞ்
செறிவொடு நின்றார் சிவமாயி னாரே. ௮

1769 அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
டருளில் அழிந்திளைப் பாறி மறைந்திட்
டருளான ஆனந்தத் தாரமு தூட்டி
அருளால் என்நந்தி யகம்புகுந் தானே. ௯

1770 அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி
அருளால் அடிபுனைந் தார்வமுந் தந்திட்
டருளான ஆனந்தத் தாரமு தூட்டி
அருளால்என் நந்தி யகம்புகுந் தானே. ௧௦

1771 பாசத்தி விட்ட தருளந்தப் பாசத்தின்
நேசத்தை விட்ட தருளந்த நேசத்திற்
கூசற்ற முத்தி யருளந்தக் கூட்டத்தின்
நேசத்துத் தோன்றா நிலையரு ளாமே. ௧௧

1772 பிறவா நெறிதந்த பேரரு ளாளன்
மறவா அருள்தந்த மாதவன் நந்தி
அறவாழி அந்தணன் ஆதிப் பராபரன்
உறவாகி வந்தென் உளம்புகுந் தானே. ௧௨

1773 அகம்புகுந் தானடி யேற்கரு ளாலே
அகம்புகுந் தந்தெரி யானரு ளில்லோர்க்
ககம்புகுந் தானந்த மாக்கிச் சிவமாய்
அகம்புகுந் தானந்தி யானந்தி யாமே. ௧௩

1774 ஆயும் அறிவோ டறியாத மாமாயை
ஆய கரணம் படைக்குமைம் பூதமு
மாய பலவிந் திரிய மவற்றுடன்
ஆய வருளைந்து மாமருட் செய்கையே. ௧௪

1775 அருளே சகலமு மாய பவுதிகம்
அருளே சராசர மாய அகிலம்
இருளே வெளியே யெனுமெங்கும் ஈசன்
அருளே சகளத்த னன்றியின் றாமே. ௧௫

1776 சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து
தவமான ஐம்முகன் ஈசன் அரனும்
பவமுறு மாலும் பதுமத்தோன் ஈறு
நவமவை யாகி நடிப்பவன் தானே. ௧௬

1777 அருட்கண் ணிலாதார்க் கரும்பொருள் தோன்றா
அருட்கண் ணுளோர்க்கெதிர் தோன்றும் அரனே
இருட்கண்ணி னோர்க்கங் கிரவியுந் தோன்றா
தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளி யாமே. கஎ

1778 தானே படைத்திடுந் தானே அளித்திடுந்
தானே துடைத்திடுந் தானே மறைத்திடுந்
தானே யிவைசெய்து தான்முத்தி தந்திடுந்
தானே வியாபித் தலைவனு மாமே. கஅ

1779 தலையான நான்குந் தனதரு வாகும்
அலையா வருவுரு வாகுஞ் சதாசிவம்
நிலையான கீழ்நான்கு நீடுரு வாகுந்
துலையா இவைமுற்று மாயல்ல தொன்றே. ககூ

1780 ஒன்றது வாலே உலப்பிலி தானாகி
நின்றது தான்போல் உயிர்க்குயி ராய்நிலை
துன்றி யவையல்ல வாகுந் துணையென்ன
நின்றது தான்விளை யாட்டென்னுள் நேயமே. உ0

1781 நேயத்தே நின்றிடும் நின்மலன் சத்தியோ
டாயக் குடிலையுள் நாதம் அடைந்திட்டுப்
போயக் கலைபல வாகப் புணர்ந்திட்டு
வீயத் தகாவிந்து வாக விளையுமே. உக

1782 விளையும் பரவிந்து தானே வியாபி
விளையுந் தனிமாயை மிக்கமா மாயை
கிளையொன்று தேவர் கிளர்மனு வேதம்
அளவொன் றிலாவண்ட கோடிக ளாமே. உஉ

## 10. அருளொளி

1783 அருளிற் றலைநின் றறிந்தழுந் தாதார்
அருளிற் றலைநில்லார் ஐம்பாச நீங்கார்
அருளிற் பெருமை யறியார் செறியார்
அருளிற் பிறந்திட் டறிந்தறி வாரே. க

1784 வாரா வழிதந்த மாநந்தி பேர்நந்தி
ஆரா அமுதளித் தானந்தி பேர்நந்தி
பேரா யிரமுடைப் பெம்மான்பே ரொன்றினில்
ஆரா அருட்கடல் ஆடிகென் றேனே. உ

1785 ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்
தேடியுங் கண்டேன் சிவன்பெருந் தன்மையைக்

கூடிய வாறே குறியாக் குறித்தபின்
ஊடிநின் றானவன் தன்னரு ளுற்றே. ௩

1786 உற்ற பிறப்பும் உறுமல மானதும்
பற்றிய மாயாப் படலமெனப் பண்ணி
அத்தனை நீயென் றடிவைத்தான் பேர்நந்தி
கற்றன விட்டேன் கழல்பணிந் தேனே. ௪

1787 விளக்கினை யேற்றி வெளியை அறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே. ௫

1788 ஒளியும் இருளும் ஒருகாலுந் தீரா
ஒளியுளோர்க் கன்றோ ஒழியா தொளியும்
ஒளியிருள் கண்டகண் போலவே றாயுள்
ஒளியிருள் நீங்க வுயிர்சிவ மாமே. ௬

1789 புறமே திரிந்தேனைப் பொற்கழல் சூட்டி
நிறமே புகுந்தென்னை நின்மல னாக்கி
அறமே புகுந்தெனக் காரமு தீந்த
திறமேதென் றெண்ணித் திகைத்திருந் தேனே. ௭

1790 அருளது வென்ற அகலிடம் ஒன்றும்
பொருளது வென்ற புகலிடம் ஒன்றும்
மருளது நீங்க மனம்புகுந் தானைத்
தெருளுறும் பின்னைச் சிவகதி யாமே. ௮

1791 கூறுமின் னீர்முன் பிறந்திங் கிறந்தமை
வேறொரு தெய்வத்தின் மெய்ப்பொருள் நீக்குமின்
பாறணி யும்முடல் வீழவிட் டாருயிர்
தேறணி வோமிது செப்பவல் லீரே. ௯

## 11. சிவபூசை

1792 உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே. ௧

1793 வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவும் நாமிலங் காலையும் மாலையும்
ஊட்டவி யாவன உள்ளங் குளிர்விக்கும்
பாட்டவி காட்டுதும் பாலவி யாமே. ௨

1794 பான்மொழி பாகன் பராபரன் தானாகு
மான சதாசிவன் தன்னையா வாகித்து
மேன்முகம் ஈசான மாகவே கைக்கொண்டு
சீன்முகஞ் செய்யச் சிவனவ னாகுமே. ௩

1795 நினைவதும் வாய்மை மொழிவது மல்லாற்
கனைகழல் ஈசனைக் காண வரிதாங்
கனைகழல் ஈசனைக் காண்குற வல்லார்
புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே. ௪

1796 மஞ்சன மாலை நிலாவிய வானவர்
நெஞ்சினுள் ஈசன் நிலைபெறு காரணம்
அஞ்சமு தாம்உப சாரம்எட் டெட்டொடும்
அஞ்சலி யோடுங் கலந்தர்ச்சித் தார்களே. ௫

1797 புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே. ௬

1798 மறப்புற் றிவ்வழி மன்னிநின் றாலுஞ்
சிறப்பொடு பூநீர் திருந்தமுன் ஏந்தி
மறப்பின்றி யுன்னை வழிபடும் வண்ணம்
அறப்பெற வேண்டும் அமரர் பிரானே. ௭

1799 ஆரா தனையும் அமரர் குழாங்களுந்
தீராக் கடலும் நிலத்தும தாய்நிற்கும்
பேரா யிரமும் பிரான்திரு நாமமும்
ஆரா வழியெங்கள் ஆதிப் பிரானே. ௮

1800 ஆனைந்தும் ஆட்டி அமரர் கணந்தொழத்
தானந்த மில்லாத் தலைவன் அருளது
தேனுந்து மாமலர் உள்ளே தெளிந்ததோர்
பாரைங் குணமும் படைத்துநின் றானே. ௯

1801 உழைக்கொண்ட பூநீர் ஒருங்குடன் ஏந்தி
மழைக்கொண்ட மாமுகில் மேற்சென்று வானோர்
தழைக்கொண்ட பாசந் தயங்கிநின் றேத்தப்
பிழைப்பின்றி எம்பெரு மானரு ளாமே. ௧௦

1802 வெள்ளக் கடலுள் விரிசடை நந்திக்கு
உள்ளக் கடற்புக்கு வார்சுமை பூக்கொண்டு
கள்ளக் கடல்விட்டுக் கைதொழ மாட்டாதார்
அள்ளற் கடலுள் அழுந்துகின் றாரே. ௧௧

1803 கழிப்படுந் தண்கடற் கவ்வை யுடைத்து
வழிப்படு வார்மலர் மொட்டறி யார்கள்
பழிப்படு வார்பல ரும்பழி வீழ
வெளிப்படு வோருச்சி மேவிநின் றானே. ௧௨

1804 பயனறி வொன்றுண்டு பன்மலர் தூவிப்
பயனறி வார்க்கரன் தானே பயிலும்
நயனங்கள் மூன்றுடை யானடி சேர
வயனங்க ளாலென்றும் வந்துநின் றானே. ௧௩

1805 ஏத்துவர் மாமலர் தூவித் தொழுதுநின்
றார்த்தெம தீசன் அருட்சே வடியென்றன்
மூர்த்தியை மூவா முதலுரு வாய்நின்ற
தீர்த்தனை யாருந் துதித்துண ராரே. ௧௪

1806 தேவர்க ளோடிசை வந்துமண் ணோடும்
பூவொடு நீர்சுமந் தேத்திப் புனிதனை
மூவரிற் பன்மை முதல்வனாய் நின்றருள்
நீர்மையை யாவர் நினைக்கவல் லாரே. ௧௫

1807 உழைக்கவல் லோர்நடு நீர்மல ரேந்திப்
பிழைப்பின்றி யீசன் பெருந்தவம் பேணி
இழைக்கொண்ட பாதத் தினமலர் தூவி
மழைக்கொண்டல் போலவே மன்னிநில் லீரே. ௧௬

1808 வென்று விரைந்து விரைப்பணி யென்றனர்
நின்று பொருந்த இறைபணி நேர்படத்
துன்று சலமலர் தூவித் தொழுதிடு
கொண்டிடு நித்தலுங் கூறிய வன்றே. ௧௭

1809 சாத்தியும் வைத்துஞ் சயம்புவென் றேத்தியும்
ஏத்தியு நாளு மிறையை யறிகிலார்
ஆத்தி மலக்கிட் டகத்திழுக் கற்றக்கான்
மாத்திக்கே செல்லும் வழியது வாமே. ௧௮

1810 ஆவிக் கமலத்தின் அப்புறத் தின்புற
மேவித் திரியும் விரிசடை நந்தியைக்
கூவிக் கருதிக் கொடுபோய்ச் சிவத்திடைத்
தாவிக்கு மந்திரந் தாமறி யாரே. ௧௯

1811 சாணாகத் துள்ளே அழுந்திய மாணிக்கங்
காணு மளவுங் கருத்தறி வாரில்லை
பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு
மாணிக்க மாலை மனம்புகுந் தானே. ௨௦

1812 பெருந்தன்மை நந்தி பிணங்கிருள் நேமி
இருந்தன்மை யாலுமென் நெஞ்சிடங் கொள்ள
வருந்தன்மை யாளனை வானவர் தேவர்
தருந்தன்மை யாளனைத் தாங்கிநின் றாரே. ௨௧

## 12. குருபூசை

1813 ஆகின்ற நந்தி யடித்தா மரைபற்றிப்
போகின் றுபதேசம் பூசிக்கும் பூசையும்
ஆகின்ற ஆதார மாறா றதனின்மேற்
போகின்ற பொற்பையும் போற்றுவன் யானே. ௧

1814 மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்
ஆவயின் ஞான நெறிநிற்றல் அர்ச்சனை
ஓவற வுட்பூ சனைசெய்யில் உத்தமஞ்
சேவடி சேரல் செயலறல் தானே. ௨

1815 உச்சியுங் காலையும் மாலையும் ஈசனை
நச்சுமின் நச்சி நமவென்று நாமத்தை
விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்
நச்சுமின் பேர்நந்தி நாயக னாகுமே. ௩

1816 புண்ணிய மண்டலம் பூசைநூ றாகுமாம்
பண்ணிய மேனியும் பத்துநூ றாகுமாம்
எண்ணிலிக் கைய மிடிற்கோடி யாகுமாற்
பண்ணிடல் ஞானிபூண் பார்க்கில் விசேடமே. ௪

1817 இந்துவும் பானுவும் இலங்குந் தலத்திடை
வந்தித்த தெல்லாம் அசுரர்க்கு வாரியாம்
இந்துவும் பானுவும் இலங்காத் தலத்திடை
வந்தித்தல் நந்திக்கு மாபூசை யாமே. ௫

1818 இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்
விந்துவும் நாதமு மாகிமீ தானத்தே
சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு
நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே. ௬

1819 மனபவ னங்களை மூலத்தான் மாற்றி
அனித உடற்பூத மாக்கி யகற்றிப்
புனிதன் அருள்தனிற் புக்கிருந் தின்பத்
தனிபுரு பூசை சதாசிவற் காமே. ௭

1820 பகலும் இரவும் பயில்கின்ற பூசை
இடம்படை யீசர்க் கிணைமல ராகப்

பகலும் இரவும் பயிலாத பூசை
சகலமுந் தான்கொள்வன் தாழ்சடை யோனே. ௮

## 13. மகேசுவர பூசை

1821 [1]படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்
[2]நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
[3]நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
[4]படமாடக் கோயிற் பகவற்க தாமே. ௧

1822 தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமும் உண்டது
கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்
றெண்டிசை நந்தி எடுத்துரைத் தானே. ௨

1823 மாத்திரை யொன்றினின் மன்னி யமர்ந்துறை
யாத்தனுக் கீந்த அரும்பொரு ளானது
மூர்த்திகள் மூவர்க்கு மூவேழ் குரவர்க்குந்
தீர்த்தம தாமது தேர்ந்துகொள் வீரே. ௩

1824 அகரம் ஆயிரம் ஆரியர்க் கீயிலென்
சிகரம் ஆயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரிலை என்பது நிச்சயந் தானே. ௪

1825 ஆடடும் வேள்வி அவிகொளும் நூலவர்
கூறிடும் விப்பிரர் கோடிபே ருண்பதில்
நீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை
பேறெனில் ஓர்பிடி பேறது வாகுமே. ௫

1826 ஏறுடை யாயிறை வாஎம்பி ரானென்று
நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்கள்
ஆறணி செஞ்சடை யண்ண லிவரென்று
வேறணி வார்க்கு வினையில்லை தானே. ௬

1827 சீர்நந்தி கொண்டு திருமுக மாய்விட்ட
பேர்நந்தி யென்னும் பிறங்கு சடையனை
நானொந்து நொந்து வருமள வுஞ்சொல்லப்
பேர்நந்தி யென்னும் பிதற்றொழி யேனே. ௭

1828 அழிதக வில்லா அரனடி யாரைத்
தொழுதகை ஞாலத்துத் தூங்கிருள் நீங்கும்

---

பா. வே. 1. படமாடுங் கோவிற். 2. நடமாடுங். 3. நடமாடுங். 4. படமாடுங் கோவிற்.

பழுது படாவண்ணம் பண்பனை நாடித்
தொழுதெழ வையகத் தோரின்ப மாமே. அ

1829 பகவற்கே தாகிலும் பண்பில ராகிப்
புகுமத்த ராய்நின்று பூசனை செய்யும்
முகமத்தோ டொத்துநின் றூழிதோ றூழி
அகமத்த ராகிநின் றுய்ந்தொழிந் தாரே. கூ

1830 தாழ்விலர் பின்னும் முயல்வ ரருந்தவம்
ஆழ்வினை யாழ அவர்க்கே அறஞ்செய்யும்
ஆழ்வினை நீக்கி அருவினை தன்னொடும்
போழ்வினை தீர்க்கும்அப் பொன்னுல காமே. க0

## 14. அடியார் பெருமை

1831 திகைக்குரி யாரொரு தேவனை நாடும்
வகைக்குரி யாரொரு வாதி யிருக்கிற்
பகைக்குரி யாரில்லை பார்மழை பெய்யும்
அகக்குறை கேடில்லை யவ்வுல குக்கே. க

1832 அவ்வுல கத்தே பிறந்தவ் வுடலொடும்
அவ்வுல கத்தே அருந்தவ நாடுவர்
அவ்வுல கத்தே அரனடி கூடுவர்
அவ்வுல கத்தே அருள்பெறு வாரே. உ

1833 கொண்ட குறியுங் குலவரை யுச்சியும்
அண்டரும் அண்டத் தமரரும் ஆதியும்
எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்தினுள்
உண்டெனில் நாமினி உய்ந்தொழிந் தோமே. ங

1834 அண்டங்கள் ஏழும் அகண்டமும் ஆவியுங்
கொண்ட சராசர முற்றுங் குணங்களும்
பண்டை மறையும் படைப்பளிப் பாதியுங்
கண்ட சிவனுமென் கண்ணன்றி யில்லையே. ச

1835 பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல மூடத்துள்
உள்நின்ற சோதி ஒருவர்க் கறியொணாக்
கண்ணின்றிக் காணுஞ் செவியின்றிக் கேட்டிடும்
அண்ணல் பெருமையை ஆய்ந்தது மூப்பே. ரு

1836 இயங்கும் உலகினில் ஈசன் அடியார்
மயங்கா வழிசெல்வர் வானுல காள்வர்
புயங்களு மெண்டிசை போதுபா தாள
மயங்காப் பகிரண்ட மாமுடி தானே. சா

1837 அகம்படி கின்றநம் ஐயனை யோரும்
அகம்படி கண்டவர் அல்லலிற் சேரார்
அகம்படி யுட்புக் கறிகின்ற நெஞ்சம்
அகம்படி கண்டாம் அழிக்கலும் எட்டே. ௭

1838 கழிவு முதலுங் காதற் றுணையும்
அழிவும தாய்நின்ற ஆதிப் பிரானைப்
பழியும் புகழும் படுபொருள் முற்றும்
ஒழியுமென் னாவி யுழவுகொண் டானே. ௮

1839 என்தாயோ டென்னப்பன் ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக் கெழுதிய ஆவணம்
ஒன்றா யுலகம் படைத்தான் எழுதினான்
நின்றான் முகில்வண்ணன் நேரெழுத் தாயே. ௯

1840 துணிந்தா ரகம்படி துன்னி உறையும்
பணிந்தா ரகம்படி பாற்பட் டொழுகும்
அணிந்தா ரகம்படி யாதிப் பிரானைக்
கணிந்தா ரொருவர்க்குக் கைவிட லாமே. ௧௦

1841 தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி
மிலைமிசை வைத்தனன் மெய்ப்பணி செய்யப்
புலைமிசை நீங்கிய பொன்னுல காளும்
பலமிசை செய்யும் படர்சடை யோனே. ௧௧

1842 அறியாப் பருவத் தரனடி யாரைக்
குறியால் அறிந்தின்பங் கொண்ட தடிமை
குறியார் சடைமுடி கட்டி நடப்பார்
மறியார் புனல்மூழ்க மாதவ மாமே. ௧௨

1843 அவன்பால் அணுகியே அன்புசெய் வார்கள்
சிவன்பால் அணுகுதல் செய்பவும் வல்லன்
அவன்பால் அணுகியே நாடு மடியார்
இவன்பாற் பெருமை இலயம தாமே. ௧௩

1844 முன்னிருந் தார்முழு தெண்கணத் தேவர்கள்
எண்ணிறந் தன்பால் வருவர் இருநிலத்
தெண்ணிரு நாலு திசையந் தரமொக்கப்
பன்னிரு காதம் பதஞ்செய்யும் பாரே. ௧௪

1845 சிவயோகி ஞானி செறிந்தஅத் தேசம்
அவயோகம் இன்றி அறிவோருண் டாகும்
நவயோகங் கைகூடு நல்லியல் காணும்
பவயோகம் இன்றிப் பரலோக மாமே. ௧௫

1846 மேலுணர் வான்மிகு ஞாலம் படைத்தவன்
மேலுணர் வான்மிகு ஞாலம் கடந்தவன்
மேலுணர் வார்மிகு ஞாலத் தமரர்கள்
மேலுணர் வார்சிவன் மெய்யடி யார்களே. ௧௬

## 15. போசன விதி

1847 எட்டுத் திசையும் இறைவ னடியவர்க்
கட்ட அடிசில் அமுதென் றெதிர்கொள்வர்
ஒட்டி யொருநிலம் ஆள்பவர் அந்நிலம்
விட்டுக் கிடக்கில் விருப்பறி யாரே. ௧

1848 அச்சிவன் உள்நின்ற அருளை அறிந்தவர்
உச்சியம் போதாக வுள்ளமர் கோவிற்குப்
பிச்சை பிடித்துண்டு பேத மறநினைந்
திச்சைவிட் டேகாந்தத் தேறி யிருப்பரே. ௨

## 16. பிட்சா விதி

1849 விச்சுக் கலமுண்டு வேலிச்செய் ஒன்றுண்டு
உச்சிக்கு முன்னே யுழவு சமைந்தது
அச்சங்கெட் டச்செய் அறுத்துண்ண மாட்டாதார்
இச்சைக்குப் பிச்சை இரக்கின்ற வாறே. ௧

1850 பிச்சைய தேற்றான் பிரமன் தலைதன்னில்
பிச்சைய தேற்றான் பிரியா அறஞ்செய்யப்
பிச்சைய தேற்றான் பிரமன் சிரங்காட்டிப்
பிச்சைய தேற்றான் பிரமன் பரமாகவே. ௨

1851 பரந்துல கேழும் படைத்த பிரானை
இரந்துணி என்பர்கள் எற்றுக் கிரக்கும்
நிரந்தர மாக நினையும் அடியார்
இரந்துண்டு தன்கழல் எட்டச்செய் தானே. ௩

1852 வரவிருந் தான்வழி நின்றிடும் ஈசன்
தரவிருந் தான்தன்னை நல்லவர்க் கின்பம்
பொரவிருந் தான்புக லிடமு மாக
வரவிருந் தானறி யானென்ப தாமே. ௪

1853 அங்கார் பசியும் அவாவும் வெகுளியுந்
தங்கார் சிவனடி யார்சரீ ரத்திடைப்
பொங்கார் புலனைந்தும் புண்ணிய லோகத்துந்
தங்கார் சிவனைத் தலைப்படு வாரே. ௫

1854 மெய்யக ஞான மிகத்தெளிந் தார்களுங்
கையக நீண்டார் கடைத்தலைக் கேசெல்வர்
ஐயம் புகாமல் இருந்த தவசியார்
வையகம் எல்லாம் வரவிருந் தாரே. ௬

## 17. முத்திரை பேதம்

1855 நாலேழு மாறவே நண்ணிய முத்திரை
பாலான மோன மொழியிற் பதிவித்து
மேலான நந்தி திருவடி மீதுய்யக்
கோலா கலங்கெட்டுக் கூடுநன் முத்தியே. ௧

1856 துரியங்கண் மூன்றுஞ் சொருகிட னாகி
அரிய வுரைத்தார மங்கே யடக்கி
மருவிய சாம்பவி கேசரி யுண்மை
பெருகிய ஞானம் பிறழ்முத் திரையே. ௨

1857 சாம்பவி நந்தி தன்னருட் பார்வையாம்
ஆம்பவ மில்லா அருட்பாணி முத்திரை
ஓம்பயில் ஓங்கிய வுண்மைய கேசரி
நாம்பயில் நாதன்மெய்ஞ் ஞானமுத் திரையே. ௩

1858 தானத்தி னுள்ளே சதாசிவ னயிடும்
ஞானத்தி னுள்ளே நற்சிவ மாதலாய்
ஏனைச் சிவமாஞ் சொரூப மறைந்திட்ட
மோனத்து முத்திரை முத்தாந்த முத்தியே. ௪

1859 வாக்கு மனமும் இரண்டு மவுனமாம்
வாக்கு மவுனத்து வந்தாலு மூங்கையாம்
வாக்கு மனமும் மவுனமாஞ் சுத்தரே
யாக்குமச் சுத்தத்தை யாரறி வார்களே. ௫

1860 யோகத்தின் முத்திரை யோரட்ட சித்தியாம்
ஏகத்த ஞானத்து முத்திரை என்னுங்கால்
ஆகத் தகுவேத கேசரி சாம்பவி
யோகத்துக் கேசரி யோகமுத் திரையே. ௬

1861 யோகியெண் சித்தி அருளொளி வாதனை
போகிதன் புத்தி புருடார்த்த நன்னெறி
யாகுநன் சத்தியும் ஆதார சோதனை
ஏகமுங் கண்டொன்றில் எய்திநின் றானே. ௭

1862 துவாதச மார்க்கமென் சோடச மார்க்கமாம்
அவாவறு மீரை வகையங்க மாறுங்

தவாவறு வேதாந்த சிந்தாந்தத் தன்மை
நவாவக மோடுன்ன னற்சுத்த சைவமே. அ

1863 மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை
ஞானத்து முத்திரை நாதர்க்கு முத்திரை
தேனிக்கு முத்திரை சித்தாந்த முத்திரை
கானிக்கு முத்திரை கண்ட சமயமே. கூ

1864 தூநெறி கண்ட சுவடு நடுவெழும்
பூநெறி கண்டது பொன்னக மாய்நிற்கும்
மேனெறி கண்டது வெண்மதி மேதினி
நீனெறி கண்டுளா நின்மல னுமே. க0

## 18. பூரணகுகைநெறிச் சமாதி

1865 வளர்பிறை யிற்றேவர் தம்பாலின் மன்னி
உளரொளி பானுவின் உள்ளே யொடுங்கித்
தளர்விற் பிதிர்பதந் தங்கிச் சசியுள்
உளதுறும் யோகி யுடல்விட்டாற் றுனே. க

1866 தானிவை யொக்குஞ் சமாதிகை கூடாது
போன வியோகி புகலிடம் போந்துபின்
ஆனவை தீர நிரந்தர மாயோகம்
ஆனவை சேர்வார் அருளின்சார் வாகியே. உ

1867 தானிவ் வகையே புவியோர் நெறிதங்கி
ஆன சிவயோகத் தாமாறு மவ்விந்து
தானதி லந்தச் சிவயோகி யாகுமுன்
ஊனத்தோர் சித்திவந் தோர்காய மாகுமே. ங

1868 சிவயோகி ஞானி சிதைந்துடல் விட்டால்
தவலோகஞ் சேர்ந்துபின் றன்வந்து கூடிச்
சிவயோக ஞானத்தாற் சேர்ந்தவர் நிற்பர்
புவலோகம் போற்றுநர் புண்ணியத் தோரே. ச

1869 ஊனமின் ஞானிநல் யோகி யுடல்விட்டால்
தானற மோனச் சமாதியுள் தங்கியே
தானவ னுகும் பரகாயஞ் சாராதே
ஊனமின் முத்தராய் மீளார் உணர்வுற்றே. ரு

1870 செக்கார் பெரும்பய னுவது எதேனில்
செக்குநீர் சேர்வது சித்தினைக் கூடிடில்
செக்கா ரிருந்தார் செகத்தில் திரிமலஞ்
செக்கார் சிவமாகி யேசித்தர் தாமே. சா

1871 உன்னக் கருவிட் டுரவோ னரனருள்
பன்னப் பரனே யருட்குலம் பாலிப்பன்
என்னப் புதல்வர்க்கும் வேண்டி யிடுஞானி
தன்னிச்சைக் கீச னுருச்செய்யுந் தானே. எ

1872 எங்குஞ் சிவமா யருளா மிதயத்துத்
தங்குஞ் சிவஞானிக் கெங்குமாந் தற்பரம்
அங்காங் கெனநின்று சகமுண்ட வான்றோய்தல்
இங்கே யிறந்தெங்கு மாய்நிற்கும் ஈசனே. அ

## 19. சமாதிக் கிரியை

1873 அந்தமின் ஞானிதன் னாகந் தீயினில்
வெந்திடி னாடெலாம் வெம்பும் தீயினில்
நொந்தது நாய்நரி நுகரி னுண்செறு
வந்துநாய் நரிக்குண வாகும்வை யகமே. க

1874 எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடில்
அண்ணல்தங் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமாம்
எண்ணரு மன்னர் இழப்பார் அரசே. உ

1875 புண்ணிய மாமவர் தம்மைப் புதைப்பது
நண்ணி யனல்கொக்கில் நாட்டில் அழிவாகும்
மண்ணி லழியில் அலங்கார பங்கமாம்
மண்ணுல கெல்லா மயங்குமனல் மண்டியே. ந

1876 அந்தமில் ஞானி அருளை அடைந்தக்கால்
அந்த வுடல்தான் குகைசெய் திருத்திடில்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும்
அந்தமில் இன்ப அருள்பெறு வாரே. ச

1877 நவமிகு சாலை நல்லாழஞ் செய்து
குவைமிகு சூழவைஞ் சாணகக் கோட்டித்
தவமிகு குகைமுக் கோணமுச் சாணக்கிப்
பவமறு நற்குகை பத்மா சனமே. ரு

1878 தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை
நன்மலர்ச் சோலை நகர்னற் பூமி
உன்னருங் கானம் உயர்ந்த மலைச்சாரல்
இந்நிலந் தான்குகைக் கெய்தும் இடங்களே. சு

1879 நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்
நிற்கின்ற பாத நவபாத நேர்விழுப்

பொற்பம ரோசமும் மூன்றுக்கு மூன்றணி
நிற்பவர் தாஞ்செயும் நேர்மைய தாமே. எ

1880 பஞ்சலோ கங்கள் நவமணி பாரித்து
விஞ்சப் படுத்ததன் மேலா சனமிட்டு
முஞ்சி படுத்துவெண் ணீறிட் டதன்மேலே
பொன்செய்நற் சுண்ணம் பொதியலு மாமே. அ

1881 நள்குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக்
கள்ளவிழ் தாமங் களபங்கத் தூரியுந்
தெள்ளிய சாந்து புழுகுபன் னீர்சேர்த்து
ஒள்ளிய தூபம் உவந்திடு வீரே. கூ

1882 ஓதிடும் வெண்ணீற்றால் உத்தூளங் குப்பாய
மீதினி லிட்டா சனத்தினின் மேல்வைத்துப்
போதறு சுண்ணமும் நீறும் பொலிவித்து
மீதி லிருத்தி விரித்திடு வீரே. க0

1883 விரித்தபின் றற்சாரு மேவுதல் செய்து
பொரித்த கறிபோ னகமிள நீருங்
குருத்தலம் வைத்தோர் [1]குழைமுகம் பார்வை
தரித்தபின் மேல்வட்டஞ் சாத்திடு வீரே. கக

1884 மீது சொரிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும்
போது பலகொண்டு தர்ப்பைபுல் வில்வமும்
பாத வுதகத்தான் மஞ்சனஞ் செய்துபார்
மீதுமூன் றுக்குமூன் றணிநிலஞ் செய்யுமே. கஉ

1885 ஆதன மீதில் அரசு சிவலிங்கம்
போது மிரண்டினில் ஒன்றைத்தா பித்து
மேதகு சந்நிதி மேவுத் தரம்பூர்வங்
காதலிற் சோடசங் காணுப சாரமே. கங

## 20. விந்துற்பனம்

1886 உதயத்தில் விந்துவில் ஓங்குகுண் டலியும்
உதயக் குடிலில் வயிந்தவம் ஒன்பான்
விதியிற் பிரமாதி கள்மிகு சத்தி
கதியிற் கரணங் கலைவை கரியே. க

1887 செய்திடும் விந்துபே தத்திறன் ஐயைந்துஞ்
செய்திடு நாதபே தத்திற னாலாறுஞ்

பா. வே. 1. குகைமுகம்.

செய்திடு மற்றவை யீரிரண் டிற்றிறஞ்
செய்திடு மாறுறு சேர்தத் துவங்களே. உ

1888 வந்திடு பேத மெலாம்பர விந்து
தந்திடு மாமாயை வாகேசி தற்பரை
உந்து குடிலையோ டேமுறு குண்டலி
விந்துவில் இந்நான்கு மேவா விளங்குமே. ௩

1889 விளங்கு நிவிர்த்தாதி மேவக ராதி
வளங்கொள் உகார மகாரத் துள்விந்து
களங்கமில் நாதாந்தங் கண்ணி னுள் நண்ணி
உளங்கொள் மனோதியுள் அந்தமு மாமே. ச

1890 அந்தமும் ஆதியு மாகிப் பராபரன்
வந்த வியாபி யெனலாய வந்நெறி
கந்தம தாகிய காரண காரியந்
தந்தைங் கருமமுந் தான்செய்யும் வீயமே. ரு

1891 வீயம தாகிய விந்துவின் சத்தியால்
ஆய வகண்டமும் அண்டமும் பாரிப்பக்
காயஐம் பூதமுங் காரிய மாயையில்
ஆயிட விந்து அகம்புற மாகுமே. சு

1892 புறமகம் எங்கும் புகுந்தொளிர் விந்து
நிறமது வெண்மை நிகழ்நாதஞ் செம்மை
உறமகிழ் சத்தி சிவபாத மாயுட்
டிறனொடு வீடளிக் குஞ்செயற் கொண்டே. எ

1893 கொண்டஇவ் விந்து பரமம்போற் கோதற
நின்ற படங்கட மாய்நிலை நிற்றலிற்
கண்டக லாதியின் காரண காரியத்
தண்டம் அனைத்துமாய் மாமாயை யாகுமே. அ

1894 அதுவித்தி லேநின்றங் கண்ணிக்கு நந்தி
இதுவித்தி லேயுள வாற்றை யுணரார்
மதுவித்தி லேமல ரன்னம தாகிப்
பொதுவித்தி லேநின்ற புண்ணியன் தானே. கூ

1895 வித்தினி லன்றி முளையில்லை அம்முளை
வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை
வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல
அத்தன்மை யாகும் அரனெறி காணுமே. கo

1896 அருந்திய வன்ன மவைமூன்று கூறும்
பொருந்து முடன்மனம் போமல மென்னத்
திருந்து முடன்மன மாங்கூறு சேர்ந்திட்
டிருந்தன முன்னாள் இரதம தாகுமே. கக

1897 இரத முதலான ஏழ்தாது மூன்றின்
உரிய தினத்தின் ஒருபுற் பனிபோல்
அரிய துளிவிந்து வாகுமேழ் மூன்றின்
மருவிய விந்து வளருங்கா யத்திலே. க௨

1898 காயத்தி லேமூன்று நாளிற் கலந்திட்டுக்
காயத்துட் டன்மன மாகுங் கலாவிந்து
நேயத்தே நின்றோர்க்கு நீங்கா விடாமையின்
மாயத்தே செல்வோர் மனத்தோ டழியுமே. க௩

1899 அழிகின்ற விந்து அளவை யறியார்
கழிகின்ற தன்னையுட் காக்கலுந் தேரார்
அழிகின்ற காயத் தழிந்தயர் வுற்றோர்
அழிகின்ற தன்மை யறிந்தொழி யாரே. க௪

## 21. விந்துஜயம் - போகசரவோட்டம்

1900 பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்றுபோய்
ஓர்க்கின்ற வுள்ளம் உருக அழல்மூட்டிப்
பார்க்கின்ற கண்ணைசை பாழ்பட மூலத்தே
சேர்க்கின்ற யோகி சிவயோகி தானே. க

1901 தானே யருளாற் சிவயோகந் தங்காது
தானேயக் காமாதி தங்குவோ னும்முட்குந்
தானே யதிகாரந் தங்கிற் சடங்கெடும்
ஊனே யவற்றுள் ளுயிரோம்பா மாயுமே. உ

1902 மாயாள் வசத்தே சென்றிவர் வேண்டில்
ஓயா இருபக்கத் துள்வளர் பக்கத்துள்
ஏயாவெண் ணுளின்ப மேற்பனி மூன்றிரண்
டாயா அபரத்து ளாதிநாள் ஆறுமே. ௩

1903 ஆறைந்து பன்னொன்று மன்றிச் சகமார்க்கம்
வேறன்பு வேண்டுவோர் பூவரிற் பின்னந்தோ
டேறும் இருபத் தொருநா ளிடைத்தோங்கும்
ஆறின் மிகுத்தோங்கும் அக்காலஞ் செய்யவே. ௪

1904 செய்யும் அளவில் திருநாள் முகூர்த்தமே
எய்யுங் கலைகாலம் இந்து பருதிகால்

நையு மிடத்தோடி னன்காம நூல்நெறி
செய்க வலமிடந் தீர்ந்து விடுக்கவே. ரு

1905 விடுங்காண் முனைந்திந் திரியங்க ளைப்போல்
நடுங்கா திருப்பானும் ஐயைந்து நண்ணப்
படுங்காதன் மாதின்பாற் பற்றற விட்டுக்
கடுங்காற் கரணங் கருத்துறக் கொண்டே. ௬

1906 கொண்ட குணனே நலனேநற் கோமளம்
பண்டை யுருவே பகர்வாய் பவளமே
மிண்டு தனமே மிடைய விடும்போதிற்
கண்ட கரணமுட் செல்லக்கண் டேவிடே. ௭

1907 விட்டபின் கர்ப்பவுற் பத்தி விதியிலே
தொட்டுறுங் காலங்கள் தோன்றக் கருதிய
கட்டிய வாணுள்சா நாள்குணங் கீழ்மைசீர்ப்
பட்ட நெறியிதென் றெண்ணியும் பார்க்கவே. அ

1908 பார்த்திட்டு [1]வைத்துப் பரப்பற் றுருப்பெற்று
வார்ச்செற்ற கொங்கை மடந்தையை நீக்கியே
சேர்த்துற் றிருதிங்கள் சேரா தகலினும்
மூப்புற்றே பின்னுளி லாமெல்லா முள்ளவே. ௯

1909 வித்திடு வோர்க்கன்றி மேலோர் விளைவில்லை
வித்திடு வோர்க்கன்றி மிக்கோ ரறிவில்லை
வித்தினில் வித்தை விதற வுணர்வரேல்
மத்தி லிருந்ததோர் மாங்கனி யாமே. ௧0

1910 கருத்தினில் அக்கர மாயுவு மியாவுங்
கருத்துளன் ஈசன் கருவுயி ரோடுங்
கருத்தது வித்தாய்க் காரண காரியங்
கருத்துற மாறிவை கற்பனை தாமே. ௧௧

1911 ஒழியாத விந்து வுடன்நிற்க நிற்கும்
அழியாப் பிராணன் அதிபலஞ் சத்தி
ஒழியாத புத்தி தபஞ்செப மோனம்
அழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே. ௧௨

1912 வற்ற அனலைக் கொளுவி மறித்தேற்றித்
துற்ற சுழியனல் சொருகிச் சுடருற்று
முற்று மதியத் தமுதை முறைமுறை
செற்றுண் பவரே சிவயோகி யாரே. ௧௩

---

பா. வே. 1. வையத்துப்.

1913 யோகியும் ஞானியும் உத்தம சித்தனும்
யோகியும் ஞான புரந்தர னாவோனும்
மோக முறினு முரையமிர் துண்போனும்
ஆகிய விந்து அழியாத அண்ணலே. கச

1914 அண்ணல் உடலாகி யவ்வனல் விந்துவும்
மண்ணிடை மாய்க்கும் பிராணனும் விந்துவுங்
கண்ணுங் கனலிடைக் கட்டிக் கலந்தெரித்
துண்ணில் அமிர்தாகி யோகிக் கறிவாமே. கரு

1915 அறியா தழிகின்ற வாதலால் நாளும்
பொறியால் அழிந்து புலம்புகின் றார்கள்
அறிவாய் நனவி லதீதம் புரியச்
செறிவா யிருந்து சேரவே மாயுமே. கசு

1916 மாதரை மாய வருங்கூற்ற மென்றுன்னக்
காதல தாகிய காமங் கழிந்திடுஞ்
சாதலு மில்லை சதகோடி யாண்டினுஞ்
சோதியி னுள்ளே துரிசறுங் காலமே. கஎ

1917 காலங் கடந்தவன் காண்விந்து செற்றவன்
காலங் கடந்தழிந் தான்விந்து செற்றவன்
காலங் களின்விந்து செற்றுற்ற காரிகை
காலின்கண் வந்த கலப்பறி யாரே. கஅ

1918 கலக்குநாள் முன்னாள் தன்னிடைக் காதல்
நலத்தக வேண்டில்அந் நாரி யுதரக்
கலத்தின் மலத்தைத்தண் சீதத்தைப் பித்தை
விலக்கு வனசெய்து மேலணை வீரே. ககூ

1919 மேலா நிலத்தெழு விந்துவும் நாதமுங்
கோலால் நடத்திக் குறிவழி யேசென்று
பாலாம் அமிர்துண்டு பற்றறப் பற்றினால்
மாலா னதுமாள மாளுமவ் விந்துவே. உ0

1920 விந்து விளைவும் விளைவின் பயன்முற்றும்
அந்த வழிவும் அடக்கத்தில் ஆக்கமும்
நந்திய நாசமும் நாதத்தாற் பேதமுந்
தந்துணர் வோர்க்குச் சயமாகும் விந்துவே. உக

1921 விந்துவென் வீசத்தை மேவிய மூலத்து
நந்திய அங்கியி னாலே நயந்தெரித்
தந்தமில் பானு அதிகண்ட மேலேற்றிச்
சந்திரன் சார்புறத் தண்ணமு தாமே. உஉ

1922 அமுதச் சசிவிந்து வாம்விந்து மாள
அமுதப் புனலோடி அங்கியின் மாள
அமுதச் சிவபோகம் ஆதலாற் சித்தி
அமுதப் பலாவன மாங்குறும் யோகிக்கே. உ௩

1923 யோகமவ் விந்து ஒழியா வகைபுணர்ந்
தாகம் இரண்டுங் கலந்தாலு மாங்குறப்
போகஞ் சிவபோகம் போகிநற் போகமா
மோகங் கெடமுயங் கார்மூடர் மாதர்க்கே. உ௪

1924 மாத ரிடத்தே செலுத்தினும் அவ்விந்து
காதலி னல்விடார் யோகங் கலந்தவர்
மாதர் உயிராசை கைக்கொண்டே வாடுவர்
காதலர் போன்றங்ஙன் காதலாஞ் சாற்றிலே. உ௫

1925 சாற்றிய விந்து சயமாகுஞ் சத்தியால்
ஏற்றிய மூலத் தழலை யெழமூட்டி
நாற்றிசை யோடா நடுநாடி நாதத்தோ
டாற்றி யமுதம் அருந்தவிந் தாமே. உ௬

1926 விந்துவும் நாதமும் மேவக் கனல்மூல
வந்த வனன்மயிர்க் கால்தோறும் மன்னிடச்
சிந்தனை மாறச் சிவமக மாகவே
விந்துவு மாளுமெய்க் காயத்தில் வித்திலே. உ௭

1927 வித்துக்குற் றுண்பான் விளைவறி யாதவன்
வித்துக்குற் றுண்ணாமல் வித்துச்சுட் டுண்பவன்
வித்துக்குற் றுண்பானில் வேறல னீற்றவன்
வித்துக்குற் றுண்ணாமல் வித்துவித் தானன்றே. உ௮

1928 அன்னத்தில் விந்து அடங்கும் படிகண்டு
மன்னப் பிராணனும் விந்து மறித்திட்டு
மின்னொத்த விந்துநா தாந்தத்து விட்டிட
வன்னத் திருவிந்து மாயுங்கா யத்திலே. உ௯

1929 அன்னம் பிராணனென் றூர்க்கு மிருவிந்து
தன்னை யறிந்துண்டு சாதிக்க வல்லார்க்குச்
சொன்ன மாமூதத் தோன்றும்என் சித்தியாம்
அன்னவ ரெல்லாம் அழிவற நின்றதே. ௩0

1930 நின்ற சிகாரம் நினைக்கும் பிராணனும்
ஒன்று மகாரம் ஒருமூன்றோ டொன்றவை
சென்று பராசத்தி விந்து சயந்தன்னை
ஒன்ற வுரைக்க வுபதேசந் தானே. ௩௧

1931 தானே யுபதேசந் தானல்லா தொன்றில்லை
வானே யுயர்விந்து வந்த பதினான்கு
மானே ரடங்க அதன்பின்பு புத்தியுந்
தானே சிவகதி தன்மையு மாமே. ௫௨

1932 விந்துவும் நாதமும் விளைய விளைந்தது
வந்தஇப் பல்லுயிர் மன்னுயி ருக்கெலாம்
அந்தமும் ஆதியு மாமந் திரங்களும்
விந்து அடங்க விளையுஞ் சிவோகமே. ௫௩

1933 வறுக்கின்ற வாறு மனத்துலா வெற்றி
நிறுக்கின்ற வாறுமந் நீள்வரை யொட்டிப்
பொறிக்கின்ற வாறுமப் பொல்லா வினையை
அறுக்கின்ற நாள்வரும் அத்திப் பழமே. ௫௪

1934 விந்துவும் நாதமும் மேவி யுடன்கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடில்
அந்தர வானத் தமுதம்வந் தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதி யாகுமே. ௫௫

1935 மனத்தொடு சத்து மனஞ்செவி யென்ன
இனத்தெழு வார்கள் இசைந்தன நாடி
மனத்தில் எழுகின்ற வாக்கு வசனங்
கனத்த இரதமக் காமத்தை நாடிலே. ௫௬

1936 சத்தமுஞ் சத்த மனமும் மனக்கருத்
தொத்தறி கின்ற விடமும் அறிகிலர்
மெய்த்தறி கின்ற விடமறி வாளர்க்கு
அத்தன் இருப்பிடம் அவ்விடந் தானே. ௫௭

1937 உரமடி மேதினி யுந்தியி லப்பாம்
விரவிய தன்முலை மேவியகீ ழங்கி
கரமுலை மீமிசை கைக்கிழிற் காலாம்
விரவிய கந்தர மேல்வெளி யாமே. ௫௮

## 22. ஆதித்த நிலை

### அண்டாதித்தன்

1938 செஞ்சுட ரோன்முத லாகிய தேவர்கள்
மஞ்சுடை மேரு வலம்வரு காரணம்
எஞ்சுட ரீசன் இறைவன் இணையடி
தஞ்சுட ராக வணங்குந் தவமே. ௧

1939 பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம்
புகலவ னய்நின்ற புண்ணிய நாதன்
இகலற ஏழுல கும்முற வோங்கும்
பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே. உ

1940 ஆதித்தன் அன்பினோ டாயிர நாமமுஞ்
சோதியி னுள்ளே சுடரொளி யாய்நிற்கும்
வேதியர் வேண்டிலும் விண்ணவர் சொல்லினும்
ஆதியில் அன்பு பழுக்கின்ற வாறே. ௩

1941 தானே யுலகுக்குத் தத்துவ னய்நிற்குந்
தானே யுலகுக்குத் தையலு மாய்நிற்குந்
தானே யுலகுக்குச் சம்புவு மாய்நிற்குந்
தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே. ச

1942 வலையமுக் கோணம் [1]வட்டம் அறுகோணந்
துலையிரு வட்டந் துய்ய விதமெட்டில்
அலையுற்ற வட்டத்தில் ஈரெட் டிதழா
மலைவற் றுதித்தனன் ஆதித்த னமே. ரு

1943 ஆதித்த னுள்ளி லானமுக் கோணத்திற்
சோதித் திலங்குநற் சூரிய னலாங்
கேத முறுங்கேணி சூரிய னெட்டிற்
சோதிதன் னீட்டிற் சோடசந் தானே. ௬

1944 ஆதித்த னோடே அவனி யிருண்டது
பேதித்த நாலும் பிதற்றிக் கழிந்தது
சோதிக்குள் நின்று துடியிடை செய்கின்ற
வேதப் பொருளை விளங்குகி லீரே. எ

1945 பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி
யாருக்குங் காணவொண் ணத அரும்பொருள்
நீருக்குந் தீக்கு நடுவே யுதிப்பவன்
ஆருக்கும் எட்டாதவ் வாதித்தன் தானே. அ

1946 மண்ணை யிடந்ததின் கீழோடும் ஆதித்தன்
விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடுங்
கண்ணை யிடந்து களிதந்த வானந்தம்
எண்ணுங் கிழமைக் கிசைந்துநின் றானே. ௯

1947 பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரும் அறியார் அருங்கடை நாலவர்

பா. வே. 1. விட்டம்.

தீரன் இருந்த திருமலை சூழென்பர்
ஊரை யுணர்ந்தார் உணர்ந்திருந் தாரே. கo

### பிண்டாதித்தன்

1948 நின்றும் இருந்துங் கிடந்தும் நடந்தும்
கன்றாய நந்திக் கருத்துள் இருந்தனன்
கொன்று மலங்கள் குழல்வழி யோடிட
வென்று விளங்கும் விரிசுடர் காணுமே. கக

1949 ஆதித்தன் ஓடி யடங்கும் இடங்கண்டு
சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர்
பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெல்லாம்
ஆதித்த னோடே யடங்குகின் றாரே. கஉ

1950 உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து
சொருகிக் கிடக்குந் துறையறி வாரில்லை
சொருகிக் கிடக்குந் துறையறி வாளர்க்
குருகிக் கிடக்குமென் னுள்ளன்பு தானே. கங

### மண்வாதித்தன்

1951 எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரும்
எறிகதிர் சோமன் எதிர்நின் றெறிப்ப
விரிகதி ருள்ளே வியங்குமென் ஆவி
ஒருகதி ராகில் உவாவது வாமே. கச

1952 சந்திரன் சூரியன் தான்வரிற் பூசனை
முந்திய பானுவில் இந்துவந் தேய்முறை
அந்த இரண்டும் உபய நிலத்திற்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே. கரு

1953 ஆகுங் கலையோ டருக்கன் அனல்மதி
ஆகுங் கலையிடை நான்கென லாமென்பார்
ஆகும் அருக்கன் அனல்மதி யோடொன்ற
ஆகுமப் பூரணை யாமென் றறியுமே. கசு

1954 ஈரண்டத் தப்பால் இயங்கிய வவ்வொளி
ஓரண்டத் தார்க்கும் உணரா வுணர்வது
பேரண்டத் தூடே பிறங்கொளி யாய்நின்ற
தாரண்டத் தக்கா ரறியத்தக் காரே. கஎ

1955 ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரும்
ஒன்பது மீசன் இயலறி வாரில்லை
முன்பதின் மேவி முதல்வன் அருளிலார்
இன்ப மிலாரிருள் சூழநின் றாரே. கஅ

## ஞானாதித்தன்

1956 விந்து அபரம் பரமிரண் டாய்விரிந்
தந்த அபரம் பரநாத மாகியே
வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்
துந்தும் அருணோ தயமென்ன வுள்ளத்தே. ௧௯

1957 உள்ள அருணோ தயத்தெழும் ஓசைதான்
தெள்ளும் பரநாதத் தின்செய லென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்
குள்ளன ஐங்கலைக் கொன்றும் உதயமே. உ०

1958 தேவர் பிரான்திசை பத்துத யஞ்செய்யும்
மூவர் பிரானென முன்னொரு காலத்து
நால்வர் பிரான்நடு வாயுரை யாநிற்கும்
மேவு பிரான்என்பர் விண்ணவர் தாமே. உ௧

1959 பொய்யிலன் மெய்யன் புவனா பதியெந்தை
மையிருள் நீக்கு மதியங்கி ஞாயிறு
செய்யிருள் நீக்குந் திருவுடை நந்தியென்
கையிருள் நீங்கக் கலந்தெழுந் தானே. உ௨

1960 தனிச்சுட ரெற்றித் தயங்கிருள் நீங்க
அனித்திடு மேலை யருங்கனி யூறல்
கனிச்சுட ராய்நின்ற கயிலையில் ஈசன்
நனிச்சுடர் மேல்கொண்ட வண்ணமு மாமே. உ௩

1961 நேரறி வாக நிரம்பிய பேரொளி
போரறி யாது புவனங்கள் போய்வருந்
தேரறி யாத திசையொளி யாயிடும்
ஆரறி வாரிது நாயக மாமே. உ௪

1962 மண்டலத் துள்ளே மலர்ந்தெழும் ஆதித்தன்
கண்டிடத் துள்ளே கதிரொளி யாயிடுஞ்
சென்றிடத் தெட்டுத் திசையெங்கும் போய்வரும்
நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கே. உ௫

1963 நாபிக்கண் ணாசி நயன நடுவினுந்
தூபியோ டைந்துஞ் சுடர்விடு சோதியைத்
தேவர்கள் ஈசன் திருமால் பிரமனும்
மூவரு மாக வுணர்ந்திருந் தாரே. உ௬

## சிவாதித்தன்

1964 அன்றிய பாச இருளுமஞ் ஞானமுஞ்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்

ஒன்று மிருசுட ராமரு ணுதயந்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே. உ௭

1965 கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்
தடங்கிட நின்றதும் அப்பரி சாமே. உஅ

1966 தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே. உ௯

1967 தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனல்அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாமே. ௩௦

## 23. பசு விலக்கணம்

### பிராணன்

1968 உன்னும் அளவில் உணரும் ஒருவனைப்
பன்னு மறைகள் பயிலும் பரமனை
என்னுள் இருக்கும் இளையா விளக்கினை
அன்ன மயமென் றறிந்துகொண் டேனே. க

1969 அன்ன மிரண்டுள ஆற்றங் கரையினில்
துன்னி யிரண்டுந் துணைப்பிரி யாதன்னந்
தன்னிலை யன்னந் தனியொன்ற தென்றக்கால்
பின்ன மடவன்னம் பேறணு காதே. உ

### புருடன்

1970 வைகரி யாதியு மாயா மலாதியும்
பொய்கரி யான புருடாதி பேதமும்
மெய்கரி ஞானங் கிரியா விசேடத்துச்
செய்கரி யீசன் அருதியே செய்ததே. ௩

1971 அணுவில் அணுவினை ஆதிப் பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்
டணுவில் அணுவை அணுகவல் லார்கட்
கணுவில் அணுவை அணுகலு மாமே. ௪

1972 படர்கொண்ட ஆலதின் வித்தது போலச்
சுடர்கொண் டணுவினைத் தூவழி செய்ய
இடர்கொண்ட பாச இருளற வோட்டி
நடர்கொண்ட நல்வழி நாட லு மாமே. ௫

1973 அணுவுள் அவனும் அவனுள் அணுவுங்
கணுவற நின்ற கலப்ப துணரார்
இணையிலி யீச னவனெங்கு மாகித்
தணிவற நின்றான் சராசரந் தானே. ௬

## சீவன்

1974 மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது ஆயிர மாயினால்
ஆவியின் கூறுநூ றாயிரத் தொன்றே. ௭

1975 உண்டு தெளிவன் உரைக்க வியோகமே
கொண்டு பயிலுங் குணமில்லை யாயினும்
பண்டு பயிலும் பயில்சிவ னார்பின்னைக்
கண்டு சிவனுருக் கொள்வர் கருத்துளே. ௮

1976 மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதனத்
தாய குருவரு ளாலே யதில்தூண்ட
ஓயும் உபாதியோ டொன்றினொன் றாதுயிர்
ஆய துரியம் புகுந்தறி வாகவே. ௯

## பசு

1977 கற்ற பசுக்கள் கதறித் திரியினுங்
கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினு
முற்ற பசுக்கள் ஒருகுடம் பால்போது
மற்றைப் பசுக்கள் வறள்பசு தானே. ௧௦

1978 கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்வதென்
எல்லை கடப்பித் திறைவ னடிகூட்டி
வல்லசெய் தாற்ற மதித்தபின் அல்லது
கொல்லைசெய் நெஞ்சங் குறிப்பறி யாதே. ௧௧

## போதன்

1979 சிவ னெனச்சிவ னென்னவே றில்லை
சிவ னார்சிவ னாரை யறிகிலர்

சிவ னார்சிவ னாரை யறிந்தபின்
சிவ னார்சிவ னாயிட் டிருப்பரே. கஉ

1980 குணவிளக் காகிய கூத்தப் பிரானும்
மனவிளக் காகிய மன்னுயிர்க் கெல்லாம்
பணவிளக் காகிய பல்தலை நாகங்
கணவிளக் காகிய கண்காணி யாகுமே. கந

1981 அறிவாய் அறியாமை நீங்கி யவனே
பொறிவாய் ஒழிந்தெங்குந் தானான போதன்
அறிவா யவற்றினுட் டானா யறிவன்
செறிவாகி நின்றஅச் சீவனு மாகுமே. கச

1982 ஆறாறின் தன்மை அறியா திருந்தேனுக்
காறாறின் தன்மை அறிவித்தான் பேர்நந்தி
ஆறாறின் தன்மை அருளால் அறிந்தபின்
ஆறாறுக் கப்புற மாகிநின் றானே. கரு

1983 சிவமா கியஅருள் நின்றறிந் தோரார்
அவமா மலமைந்து மாவ [1] தறியா
தவமான செய்து தலைப்பறி கின்றார்
நவமான தத்துவ நாடகி லாரே. கசா

1984 நாடோறும் ஈசன் நடத்துந் தொழில்உன்னார்
நாடோறும் ஈசன் நயந்தூட்டல் நாடிடார்
நாடோறும் ஈசன்நல் லோர்க்கருள் நல்கலால்
நாடோறும் நாடார்கள் நாள்வினை யாளரே. கஎ

## 24. ஐந்திந்திரிய மடக்கும் அருமை

1985 ஆக மதத்தன ஐந்து களிறுள
ஆக மதத்தறி யோடணை கின்றில
பாகனு மெய்த்தவை தாமும் இளைத்தபின்
யோகு திருந்துதல் ஒன்றறி யோமே. க

1986 கருத்தினன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன்
திருத்தலும் பாய்மாத் திகைத்தன்றிப் பாயா
எருத்துற வேறி யிருக்கினு மாங்கே
வருத்தினும் அம்மா வழிநட வாதே. உ

1987 புலமைந்து புள்ளைந்து புட்சென்று மேயும்
நிலமைந்து நீரைந்து நீர்மையும் ஐந்து

பா. வே. 1. தறியார்.

குலமொன்று கோல்கொண்டு மேய்ப்பான் ஒருவன்
உலம்வந்து போம்வழி யொன்பது தானே. ௩

1988 அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன
அஞ்சும்போய் மேய்ந்துதம் அஞ்சக மேபுகும்
அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்
எஞ்சா திறைவனை எய்தலு மாமே. ௪

1989 ஐவர் அமைச்சருள் தொண்ணூற் றறுவர்கள்
ஐவரு மைந்தரு மாளக் கருதுவர்
ஐவரு மைந்து சினத்தொடே நின்றிடில்
ஐவர்க் கிறையிறுத் தாற்றகி லோமே. ௫

1990 சொல்லகில் லேன்சுடர்ச் சோதியை நாடொறுஞ்
சொல்லகில் லேன்திரு மங்கையும் அங்குள
வெல்லகில் லேன்புலன் ஐந்துடன் தன்னையுங்
கொல்லநின் றோடுங் குதிரையொத் தேனே. ௬

1991 எண்ணிலி யில்லி யுடைத்தவ் விருட்டறை
எண்ணிலி யில்லியோ டேகிற் பிழைதரும்
எண்ணிலி யில்லியோ டேகாமை காக்குமேல்
எண்ணிலி யில்லதோர் இன்பம தாமே. ௭

1992 விதியின் பெருவலி வேலைசூழ் வையந்
துதியின் பெருவலி தொல்வான் உலகம்
மதியின் பெருவலி மானுடர் வாழ்க்கை
நிதியின் பெருவலி நீர்வலி தானே. ௮

## 25. ஐந்திந்திரியம் அடக்கு முறைமை

1993 குட்ட மொருமுழ முள்ள தரைமுழம்
வட்டம் அமைந்ததோர் வாவியுள் வாழ்வன
பட்டன மீன்பல பரவன் வலைகொணர்ந்
திட்டனன் யாமினி யேதமி லோமே. ௧

1994 கிடக்கும் உடலிற் கிளரிந் திரியம்
அடக்க வுறுமவன் தானே யமரன்
விடக்கிரண் டின்புற மேவுறு சிந்தை
நடக்கின் நடக்கும் நடக்கு மளவே. ௨

1995 அஞ்சு மடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சு மடக்கும் அமரரும் அங்கில்லை
அஞ்சு மடக்கில் அசேதன மாமென்றிட்
டஞ்சு மடக்கா அறிவறிந் தேனே. ௩

1996 முழக்கி யெழுவன மும்மத வேழம்
அடக்க அறிவென்னுந் [1]தோட்டியை வைத்தேன்
பிழைத்தன வோடிப் பெருங்கேடு மண்டிக்
கொழுத்தன வேழங் குலைக்கின்ற வாறே. ச

1997 ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே. ரு

1998 பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென்
விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்
பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருக்கும்
அருத்தமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே. சா

1999 இளைக்கின்ற வாறறிந் தின்னுயிர் வைத்த
கிளைக்கொன்று மீசனைக் கேடில் புகழோன்
தளைக்கொன்ற நாகமஞ் சாடல் ஒடுக்கத்
துளைக்கொண்ட தவ்வழி தூங்கும் படைத்தே. எ

2000 பாய்ந்தன பூதங்கள் ஐந்தும் படரொளி
சார்ந்திடு ஞானத் தறியினிற் பூட்டிட்டு
வாய்ந்துகொள் ஆனந்த மென்னும் அருள்செய்யில்
வேய்ந்துகொள் மேலை விதியது தானே. அ

2001 நடக்கின்ற நந்தியை நாடோறு முன்னில்
படர்க்கின்ற சிந்தையைப் பைய வொடுக்கிக்
குறிக்கொண்ட சிந்தை குறிவழி நோக்கில்
வடக்கொடு தெற்கு மனக்கோயி லாமே. சு

2002 சென்றன நாழிகை நாள்கள் சிலபல
நின்றது நீள்பொருள் நீர்மேல் எழுத்தொத்து
வென்று புலன்கள் விரைந்து விடுமின்கள்
குன்று விழுவதில் தாங்கலு மாமே. கய

2003 போற்றிசைத் துப்புனி தன்திரு மேனியைப்
போற்றிசெய் மீட்டே புலனைந்தும் புத்தியால்
நாற்றிசைக் கும்பின்னை யாருக்கு நாதனை
ஊற்றுகை யுள்ளத் தொருங்கலு மாமே. கக

2004 தரிக்கின்ற நெஞ்சஞ் சகளத்தி னுள்ளே
அரிக்கின்ற ஐவரை யாரும் உணரார்

---

பா. வே. 1. கோட்டையை.

சிரிக்கின்ற வாறு சிலபல பேசில்
வரிக்கொண்ட மைசூழ் வரையது வாமே. கஉ

2005 கைவிட லாவதொன் றில்லை கருத்தினுள்
எய்தி யவனை யிசையினால் ஏத்துமின்
ஐவ ருடைய அவாவினில் தோன்றிய
பொய்வ ருடைய புலன்களும் ஐந்தே. கங

## 26. அசற்குரு நெறி

2006 உணர்வொன் றிலாமூடன் உண்மையோ ராதோன்
கணுவின்றி வேதா கமநெறி காணான்
பணிவொன் றிலாதோன் பரநிந்தை செய்வோன்
அணுவின் குணத்தோன் அசற்குரு வாமே. க

2007 மந்திர தந்திர மாயோக ஞானமும்
பந்தமும் வீடுந் தரிசித்துப் பார்ப்பவர்
சிந்தனை செய்யாத் தெளிவியா தூண்பொருட்
டந்தக ராவோர் அசற்குரு வாமே. உ

2008 ஆமா றறியாதோன் மூடன் அதிமூடன்
காமாதி நீங்காக் கலதி கலதிகட்
காமா றசத்தறி விப்போன் அறிவிலோன்
கோமா [1]னலசனத் தாகுங் குரவனே. ந

2009 கற்பாய கற்பங்கள் நீக்காமற் கற்பித்தால்
தற்பாவங் குன்றுந் தனக்கே பகையாகும்
நற்பால் அரசுக்கு நாட்டுக்கும் கேடென்றே
முற்பாலே நந்தி மொழிந்துவைத் தானே. ச

2010 குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
முரணும் பழங்குழி வீழ்வர்கள் முன்பின்
குருடரும் வீழ்வர்கள் முன்பின் அறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகிலே. டு

## 27. சற்குரு நெறி

2011 தாடந் தளிக்குந் தலைவனே சற்குரு
தாடந்து தன்னை யறியத் தரவல்லோன்
தாடந்து தத்துவா தீதத்துச் சார்சிவன்
தாடந்து பாசந் தணிக்கு மவன்சத்தே. க

பா. வே. 1. னலனசத்.

2012 தவிரவைத் தான்வினை தன்னடி யார்கோள்
தவிரவைத் தான்சிரத் தோடுதன் பாதந்
தவிரவைத் தான்நமன் தூதுவர் கூட்டந்
தவிரவைத் தான்பிற வித்துயர் தானே. உ

2013 கறுத்த இரும்பே கனகம தானால்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தஅப் போதே குருவருள் பெற்றால்
மறித்துப் பிறவியில் வந்தணு காவே. ௩

2014 பாசத்தை நீக்கிப் பரனோடு தன்னையும்
நேசத்து நாடி மலமற நீக்குவோர்
ஆசற்ற சற்குரு வாவோர் அறிவற்றுப்
பூசற் கிரங்குவோர் போதக் குருவன்றே. ௪

2015 நேயத்தே நிற்கும் நிமலன் மலமற்ற
நேயத்தை நல்கவல் லோனித்தன் சுத்தனே
ஆயத்த வர்தத் துவமுணர்ந் தாங்கற்ற
நேயர்க் களிப்பவன் நீடுங் குரவனே. ௫

2016 பரிசன வேதி பரிசித்த தெல்லாம்
வரிசை தரும்பொன் வகையாகு மாபோற்
குருபரி சித்த குவலயம் எல்லாந்
திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே. ௬

2017 தானே யெனநின்ற சற்குரு சந்நிதி
தானே யெனநின்ற தன்மை வெளிப்படில்
தானே தனைப்பெற வேண்டுஞ் சதுர்பெற
ஊனே யெனநினைந் தோர்ந்துகொள் உன்னிலே. ௭

2018 வரும்வழி போம்வழி மாயா வழியைக்
கருவழி கண்டவர் காணா வழியைப்
பெரும்வழி யாநந்தி பேசும் வழியைக்
குருவழி யேசென்று கூடலு மாமே. ௮

2019 குருவென் பவனே வேதாக மங்கூறும்
பரவின்ப னாகிச் சிவயோகம் பாவித்
தொருசிந்தை யின்றி உயர்பாச நீக்கி
வருநல் குரவன்பால் வைக்கலு மாமே. ௯

2020 சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்காட்டிச்
சித்தும் அசித்துஞ் சிவபரத் தேசேர்த்துச்
சுத்த மசுத்த மறச்சுக மானசொல்
அத்தன் அருட்குரு வாமவன் கூறிலே. ௧௦

2021 உற்றிடும் ஐம்மலம் பாச வுணர்வினாற்
பற்றறு நாதன் அடியிற் பணிதலாற்
சுற்றிய பேதந் துரியமூன் றால்வாட்டித்
தற்பர மேவுவோர் சாதக ராமே. கக

2022 எல்லாம் இறைவன் இறைவி யுடனின்பம்
வல்லார் புலனும் வருங்கால் உயிர்தோன்றிச்
சொல்லா மலமைந் தடங்கிவிட் டோங்கியே
செல்லாச் சிவகதி சேர்தல் விளையாட்டே. கஉ

2023 ஈனப் பிறவியில் இட்டது மீட்டூட்டித்
தானத்து விட்டுத் தனையூட்டித் தாழ்த்தலும்
ஞானத்தின் மீட்டலும் நாட்டலும் வீடுற்று
மோனத்துள் வைத்தலும் முத்தன்றன் செய்கையே. கங

2024 அத்த னருளின் விளையாட் டிடஞ்சடஞ்
சித்தொ டசித்தறத் தெளிவித்த சிவனைச்
சுத்தனு மாக்கித் துடைத்து மலத்தினைச்
சத்துட னாங்கரு மத்திடுந் தன்மையே. கச

2025 ஈசத்து வங்கடந் தில்லையென் றப்புறம்
பாசத்து ளேயென்றும் பாவியும் அண்ணலை
நேசத்து ளேநின்ற நின்மலன் எம்மிறை
தேசத்தை யெல்லாந் தெளியவைத் தானே. கரு

2026 மாணிக்க மாலை மலர்ந்தெழு மண்டலம்
ஆணிப்பொ னின்றங் கமுதம் விளைந்தது
பேணிக்கொண் டுண்டார் பிறப்பற் றிருந்தார்கள்
ஊணுக் கிருந்தார் உணரா தமாக்களே. கசு

2027 அசத்தொடு சத்தும் அசத்சத்து நீங்க
இசைத்திடு பாசப்பற் றீங்கறு மாறே
அசைத்திரு மாயை அணுத்தானு மாங்கே
இசைத்தானு மொன்றறி விப்பான் இறையே. கஎ

2028 ஏறு நெறியே மலத்தை எரித்தலால்
ஈறில் உரையால் இருளை யறுத்தலான்
மாறில் பசுபாசம் வாட்டலால் வீடுக
கூறு பரனே குருவாம் இயம்பிலே. கஅ

## 28. கூடாவொழுக்கம்

2029 கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்
கண்காணி யில்லா விடமில்லை காணுங்கால்

கண்காணி யாகக் கலந்தெங்கு நின்றானைக்
கண்காணி கண்டார் களவொழிந் தாரே. க

2030 செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்தான் மிகவும் புலம்பும் மனிதர்கள்
மெய்தான் உரைக்கில்விண் ணோர்தொழச் செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே. உ

2031 பத்திவிற் றுண்டு பகலைக் கழிவிடு
மத்தகர்க் கன்றே மறுபிறப் புள்ளது
வித்துக்குற் றுண்டு விளைபுலம் பாழ்செய்யும்
பித்தர்கட் கென்றும் பிறப்பில்லை தானே. ௩

2032 வடக்கு வடக்கென்பர் வைத்ததொன் றில்லை
நடக்க வுறுவரே ஞான மிலாதார்
வடக்கில் அடங்கிய வையகம் எல்லாம்
அகத்தில் அடங்கும் அறிவுடை யோர்க்கே. ச

2033 காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்து ளேயெங்குந் தேடித் திரிவர்கள்
காயத்துள் நின்ற கருத்தறி யாரே. ரு

2034 கண்காணி யாகவே கையகத் தேயெழுங்
கண்காணி யாகக் கருத்து ளிருந்திடுங்
கண்காணி யாகக் கலந்து வழிசெய்யுங்
கண்காணி யாகிய காதலன் தானே. சு

2035 கன்னி யொருசிறை கற்றோர் ஒருசிறை
மன்னிய மாதவஞ் செய்வோர் ஒருசிறை
தன்னியல் புன்னி யுணர்ந்தோர் ஒருசிறை
என்னிது ஈசன் இயல்பறி யாரே. எ

2036 காணாத கண்ணிற் படலமே கண்ணொளி
காணாத வர்கட்குங் காணாத வவ்வொளி
காணாத வர்கட்குங் கண்ணாம் பெருங்கண்ணைக்
காணாது கண்டார் களவொழிந் தாரே. அ

2037 பித்தன் மருந்தால் தெளிந்து பிரகிருதி
உய்த்தொன்று மாபோல் விழியுந்தன் கண்ணொளி
அத்தன்மை யாதல்போல் நந்தி அருள்தரச்
சித்தந் தெளிந்தேன் செயலொழிந் தேனே. கூ

2038 பிரான்மய மாகப் பெயர்ந்தன எட்டும்
பராமய மென்றெண்ணிப் பள்ளி யுணரார்
சுராமய முன்னிய சூழ்வினை யாளர்
நிராமய மாக நினைப்பொழிந் தாரே. ௧௦

2039 ஒன்றிரண் டாகிநின் றொன்றியொன் றாயினோர்க்
கொன்றும் இரண்டும் ஒருகாலும் கூடிடா
ஒன்றிரண் டென்றே யுரைதரு வோர்க்கெலாம்
ஒன்றிரண் டாய்நிற்கும் ஒன்றோடொன் றானதே. ௧௧

2040 உயிரது நின்றால் உணர்வெங்கு நிற்கும்
அயரறி வில்லையா லாருடல் வீழும்
உயிரும் உடலும் ஒருங்கிக் கிடக்கும்
பயிருங் கிடந்துள்ளப் பாங்கறி யாரே. ௧௨

2041 உயிரது வேறா யுணர்வெங்கு மாகும்
உயிரை யறியில் உணர்வறி வாகும்
உயிரன் றுடலை விழுங்கு முணர்வை
அயரும் பெரும்பொரு ளாங்கறி யாரே. ௧௩

2042 உலகாணி யொண்சுடர் உத்தம சித்தன்
நிலவாணி ஐந்தினுள் நேருற நிற்குஞ்
சிலவாணி யாகிய தேவர் பிரானைத்
தலைவாணி செய்வது தன்னை யறிவதே. ௧௪

2043 தானந்த மாமென நின்ற தனிச்சுடர்
ஊனந்த மாயுல காய்நின்ற வொண்சுடர்
தேனந்த மாய்நின்ற சிற்றின்ப நீயொழி
கோனந்த மில்லாக் குணத்தரு ளாமே. ௧௫

2044 உன்முத லாகிய வூனுயிர் உண்டெனுங்
கன்முத லீசன் கருத்தறி வாரில்லை
நன்முத லேறிய நாம மறநின்றால்
தன்முத லாகிய தத்துவ மாமே. ௧௬

2045 இந்தியம் அந்தக் கரண மிவையுயிர்
வந்தன சூக்க வுடலன்று மானது
தந்திடும் ஐவிதத் தால்தற் புருடனு
முந்துள மன்னு மாறாறு முடிவிலே. ௧௭

## 29. கேடுகண் டிரங்கல்

2046 வித்துப் பொதிவார் விரைவிட்டு நாற்றுவார்
அற்றதம் வாணாள் அறிகிலாப் பாவிகள்

உற்ற வினைத்துயர் ஒன்றும் அறிகிலார்
முற்றொளி தீயின் முனிகின்ற வாறே. க

2047 போது சடக்கெனப் போகின் றதுகண்டும்
வாதுசெய் தென்னோ மனிதர் பெறுவது
நீதியு ளேநின்று நின்மலன் தாள்பணிந்
தாதியை அன்பில் அறியகில் லார்களே. உ

2048 கடன்கொண்டு நெற்குத்துக் கையரை யூட்டி
உடம்பினை யோம்பி உயிராத் திரிவார்
தடங்கொண்ட சாரல் தழல்முரு டேறி
இடங்கொண் டுடலார் கிடக்கின்ற வாறே. ந

2049 விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து
புரந்தகல் லால்நிழற் புண்ணியன் சொன்ன
பரந்தன்னை யோராப் பழிமொழி யாளர்
உரந்தன்மை யாக வொருங்கிநின் றார்களே. ச

2050 நின்ற புகழும் நிறைதவத் துண்மையும்
என்றும்எம் மீசன் அடியவர்க் கேநல்கும்
அன்றி யுலக மதுவிது தேவென்று
குன்றுகை யாலே குறைப்பட்ட வாறே. ரு

2051 இன்பத்து ளேபிறந் தின்பத்து ளேவளர்ந்
தின்பத்து ளேநினைக் கின்ற திதுமறந்
துன்பத்து ளேசிலர் சோறொடு கூறையென்
றுன்பத்து ளேநின்று தூங்குகின் றார்களே. சு

2052 பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே. எ

2053 ஆர்வ மனமும் அளவில் இளமையும்
ஈரமும் நல்லவென் றின்புறு காலத்துத்
தீர வருவதோர் காமத் தொழில்நின்று
மாதவன் இன்ப மறந்தொழிந் தார்களே. அ

2054 இப்பரி சேயிள ஞாயிறு போலுரு
அப்பரி சங்கியின் உள்ளுறை யம்மானை
இப்பரி சேகட லொத்துறை யீசனை
மெய்ப்பரி சேவின வாதிருந் தோமே. கூ

2055 கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு
நாடகில் லார்நயம் பேசித் திரிவர்கள்
பாடகில் லாரவன் செய்த பரிசறிந்
தாடவல் லாரவர் பேறெது வாமே. க௦

2056 நெஞ்சு நிறைந்தங் கிருந்த நெடுஞ்சுடர்
நஞ்செம் பிரானென்று நாதனை நாடொறுந்
துஞ்சு மளவுந் தொழுமின் தொழாவிடில்
அஞ்சற்று விட்டதோர் ஆனையு மாமே. கக

2057 மிருக மனிதர் மிக்கோர் பறவை
ஒருவர்செய் தன்புவைத் துன்னுத தில்லை
பருகுவ ரோடுவர் பார்ப்பயன் கொள்வர்
திருமரு மாதவஞ் சேர்ந்துணர்ந் தாரே. கஉ

2058 நீதியி லோர்பெற்ற பொன்போல் இறைவனைச்
சோதியி லாருந் தொடர்ந்தறி வாரில்லை
ஆதி [1]பயனென் றமரர் பிரானென்று
நாதியே வைத்தது நாடுகின் றேனே. கங

2059 இருந்தேன் மலரளைந் தின்புற வண்டு
பெருந்தேன் இழைக்கின்ற பெற்றிமை யோரார்
வருந்தேன் நுகராது வாய்புகு தேனை
அருந்தேனை யாரும் அறியகி லாரே. கச

2060 கருத்தறி யாது கழிந்தன காலம்
அருத்தியுள் ளானமு தாபதி நாதன்
ஒருத்தனுள் ளானுல கத்துயிர்க் கெல்லாம்
வருத்திநில் லாது வழுக்குகின் றாரே. கரு

2061 குதித்தோடிப் போகின்ற கூற்றமுஞ் சார்வாய்
விதித்தன நாட்களும் வீழ்ந்து கழிந்த
வதித்திருந் தென்செய்தி ராறுதி ராகிற்
கொதிக்கின்ற கூழில் துடுப்பிட லாமே. கசு

2062 கரையரு காறுக் கழனி விளைந்த
திரையரு காமுன்னம் சேர்ந்தின்பம் எய்தும்
வரையரு கூறிய மாதவ நோக்கின்
நரையுரு வாச்செல்லு நாளில வாமே. கஎ

2063 வரவறி வானை மயங்கிருண் ஞாலத்
திரவறி வானை யெழுஞ்சுடர்ச் சோதியை

---

பா. வே. 1. யயனென்.

அரவறி வார்முன் னொருதெய்வ மென்று
விரவறி யாமலே மேல்வைத்த வாறே. கஅ

## 30. இதோபதேசம்

2064 மறந்தொழி மண்மிசை மன்னப் பிறவி
இறந்தொழி காலத்தும் ஈசனை உள்கும்
பறந்தல மந்து படுதுயர் தீர்ப்பான்
சிறந்த சிவநெறி சிந்தைசெய் யீரே. க

2065 செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை
இல்லை யெனினும் பெரிதுளன் எம்மிறை
நல்ல வரனெறி நாடுமி னீரே. உ

2066 ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணுமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே. ங

2067 போற்றிசெ யந்தண் கயிலைப் பொருப்பனை
நாற்றிசைக் குந்நடு வாய்நின்ற நம்பனைக்
காற்றிசைக் குங்கமழ் ஆக்கையைக் கைக்கொண்டு
கூற்றுதைத் தான்றன்னைக் கூறிநின் றுய்மினே. ச

2068 இக்காய நீங்கி யினியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி நாடுமின்
எக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்
றக்கால முன்ன அருள்பெற லாமே. ரு

2069 போகின்ற வாறே புகுகின்ற அப்பொருள்
ஆகின்ற போது மரனறி வானுளன்
சாகின்ற போதுந் தலைவனை நாடுமின்
ஆகின்ற அப்பொருள் அக்கரை யாகுமே. சா

2070 பறக்கின்ற வொன்று பயனுற வேண்டின்
இறக்கின்ற காலத்தும் ஈசனை யுள்குஞ்
சிறப்பொடு சேருஞ் சிவகதி பின்னைப்
பிறப்பொன் றிலாமையும் பேறுல காமே. எ

2071 கூடியும் நின்றுந் தொழுதெம் மிறைவனைப்
பாடியு ளேநின்று பாதம் பணிமின்கள்
ஆடியு ளேநின் றறிவுசெய் வார்கட்கு
நீடிய வீற்றுப் பசுவது வாமே. அ

2072 விடுகின்ற சீவனார் மேலெழும் போது
நடுநின்று நாடுமின் நாதன்தன் பாதங்
கெடுகின்ற வல்வினை கேடில் புகழோன்
இடுகின்றான் உம்மை இமையவ ரோடே. கூ

2073 இன்புறு வீர்அறிந் தேயெம் இறைவனை
அன்புறு வீர்தவஞ் செய்யுமெய்ஞ் ஞானத்துப்
பண்புறு வீர்பிற விததொழி லேநின்று
துன்புறு பாசத் துழைத்தொழிந் தீரே. கo

2074 மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவம் ஒன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்த்தாளும் ஒன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்ந்நெறி ஒன்றுண்டு
மேற்கொள்ள லாம்வண்ணம் வேண்டிநின் றோர்க்கே. கக

2075 சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ணன்
பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடுங்
கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடுஞ்
சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரே. கஉ

2076 முத்தியை ஞானத்தை முத்தமிழ் ஓசையை
எத்தனை காலமும் ஏத்துவர் ஈசனை
நெய்த்தலைப் பால்போல் நிமலனும் அங்குளன்
அத்தகு சோதி யதுவிரும் பாரே. கங

2077 நியமத்த னாகிய நின்மலன் வைத்த
உகமெத் தனையென் றொருவருந் தேறார்
பவமத்தி லேவந்து பாய்கின்ற தல்லாற்
சிவமத்தை யொன்றுந் தெளியகில் லாரே. கச

2078 இங்கித்தை வாழ்வு மெனைத்தோ ரகிதமுந்
துஞ்சொத்த காலத்துத் தூய்மணி வண்ணனை
விஞ்சத் துறையும் விகிர்தா எனநின்னை
நஞ்சற் றவர்க்கன்றி நாடவொண் ணாதே. கரு

2079 பஞ்சமு மாம்புவி சற்குரு பால்முன்னி
வஞ்சக ரானவர் வைகில் அவர்தம்மை
அஞ்சுவன் நாதன் அருநர கத்திடுஞ்
செஞ்சநிற் போரைத் தெரிசிக்கச் சித்தியே. கசா

2080 சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்
அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே. கஎ

2081 நரருஞ் சுரரும் பசுபாச நண்ணிக்
கருமங்க ளாலே கழிதலிற் கண்டு
குருவென் பவன்ஞானி கோதில னுறும்
பரமென்றல் அன்றிப் பகர்வொன்று மின்றே. கரு

2082 ஆட்கொண் டவர்தனி நாயகன் அன்புற
மேற்கொண் டவர்வினை போயற நாடொறும்
நீர்க்கின்ற செஞ்சடை நீளன் உருவத்தின்
மேற்கொண்ட வாறலை வீவித்து ளானே. ககூ

ஏழாந் தந்திரம் முற்றும்.

---

# எட்டாந் தந்திரம்

[சுப்பிராகமம்]

## 1. உடலிற் பஞ்சபேதம்

2083 காயப்பை யொன்று சரக்குப் பலவுள
மாயப்பை யொன்றுண்டு மற்றுமோர் பையுண்டு
காயப்பைக் குள்நின்ற கள்வன் புறப்பட்டால்
மாயப்பை மண்ணா மயங்கிய வாறே. க

2084 அத்தன் அமைத்த உடலிரு கூறினிற்
சுத்தம தாகிய சூக்குமஞ் சொல்லுங்காற்
சத்த பரிச ரூப ரசகந்தம்
புத்திமா னாங்காரம் புரியட்ட காயமே. ௨

2085 எட்டினில் ஐந்தாகும் இந்திரி யங்களுங்
கட்டிய மூன்று கரணமு மாயிடும்
ஒட்டிய பாசம் உணர்வது வாகவே
கட்டி யவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. ௩

2086 இரதம் உதிரம் இறைச்சிதோல் மேதை
மருவிய வத்தி வழும்பொடு மச்சை
பரவிய சுக்கிலம் பாழாம் உபாதி
உருவம லாவுடல் ஒன்றென லாமே. ௪

2087 ஆரே அறிவார் அடியின் பெருமையை
யாரே அறிவார் அங்கவர் நின்றது
யாரே அறிவார் அறுபத்தெட் டாக்கையை
யாரே அறிவார் அடிக்காவ லானதே. ௫

2088 எண்சா ணளவால் எடுத்த வுடம்புக்குட்
கண்கால் உடலிற் கரக்கின்ற கைகளிற்
புண்கால் அறுபத்தெட் டாக்கை புணர்க்கின்ற
நண்பால் உடம்புதன் னாலுடம் பாமே. ௬

2089 உடம்புக்கும் நாலுக்கும் உயிராய சிவன்
ஒடுங்கும் பரனோ டொழியாப் பிரமன்
கடந்தொறு நின்ற கணக்கது காட்டி
அடங்கியே அற்றது ஆரறி வாரே. ௭

2090 ஆறந்த மாகி நடுவுடன் கூடினுல்
தேறிய மூவாறுஞ் சிக்கென் றிருந்திடுங்
கூறுங் கலைகள் பதினெட்டுங் கூடியே
ஊறும் உடம்பை உயிருடம் பெண்ணுமே. அ

2091 மெய்யினில் தூல மிகுத்த முகத்தையும்
பொய்யினிற் சூக்கம் பொருந்தும் உடலையுங்
கையினில் துல்லியங் காட்டும் உடலையும்
ஐயன் அடிக்குள் அடங்கும் உடம்பே. கூ

2092 காயுங் கடும்பரி கால்வைத்து வாங்கல்போற்
சேய விடமண்மை செல்லவும் வல்லது
காயத் துகிர்போர்வை யொன்றுவிட் டாங்கொன் றிட்
டேயு மவரென்ன ஏய்ந்திடுங் காயமே. க௦

2093 நாக முடலுரி போலுநல் லண்டச
மாக நனுவிற் கனுமறந் தல்லது
போகலு மாகும் அரனரு ளாலேசென்
றேகு மிடஞ்சென் றிருபயன் உண்ணுமே. கக

2094 உண்டு நரக சுவர்க்கத்தில் உள்ளன
கண்டு விடுஞ்சூக்கங் காரண மாச்செலப்
பண்டு தொடரப் பரகாய யோகிபோற்
பிண்டம் எடுக்கும் பிறப்பிறப் பெய்தியே. கஉ

2095 தானவ னுகிய தற்பரந் தாங்கினேன்
ஆனவை மாற்றிப் பரமத் தடைந்திடும்
ஏனை யுயிர்வினைக் கெய்து மிடஞ்சென்றும்
வானும் நிலனும் புகுந்தும் வருந்துமே. கங

2096 ஞானிக்குக் காயஞ் சிவமே தனுவாமஞ்
ஞானிக்குக் காயம் உடம்பே யதுவாகும்
மேனிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும்
மோனிக்குக் காயமுப் பாழ்கெட்ட முத்தியே. கச

2097 விஞ்ஞானத் தோர்க்கா ணவமே மிகுதனு
எஞ்ஞானத் தோர்க்குத் தனுமாயை தானென்ப
அஞ்ஞானத் தோர்க்குக் கன்மந் தனுவாகும்
மெஞ்ஞானத் தோர்க்குச் சிவதனு மேவுமே. கரு

2098 மலமென் றுடம்பை மதியாத ஊமர்
தலமென்று வேறு தரித்தமை கண்டீர்
நலமென் றிதனையே நாடி யிருக்கிற்
பலமுள்ள காயத்திற் பற்றுமிவ் வண்டத்தே. கசு

2099 நல்ல வசனத்து வாக்கு மனாதிகள்
மெல்ல விளையாடும் விமலன் அகத்திலே
அல்ல செவிசத்த மாதி மனத்தையும்
மெல்லத் தரித்தார் முகத்தார் பகுத்தே. கஎ

## 2. உடல் விடல்

2100 பண்ணாகுங் காமம் பயிலும் வசனமும்
விண்ணாம் பிராணன் விளங்கிய சத்தமும்
புண்ணாம் உடலிற் பொருந்து மனத்தையும்
அண்ணாந்து பார்க்க அழியும் உடம்பே. க

2101 அழிகின்ற வோருடம் பாகுஞ் செவிகண்
கழிகின்ற காலவ் விரதங்கள் தானம்
மொழிகின்ற வாக்கு முடிகின்ற நாடி
ஒழிகின்ற ஊனுக் குறுதுணை யில்லையே. உ

2102 இலையா மிடையில் எழுகின்ற காம
முலைவாய நெஞ்சத்து மூழ்கும் உளத்துத்
தலையாய மின்னுடல் தாங்கித் திரியுஞ்
சிலையாய சித்தஞ் சிவமுன் னிடைக்கே. ௩

## 3. அவத்தைபேதம்

கீழாலவத்தை

2103 ஐயைந்து மத்திமை யானது சாக்கிரங்
கைகண்ட பன்னான்கிற் கண்டங் கனவென்பர்
பொய்கண் டிலாத புருட னிதயஞ் சுழுனை
மெய்கண் டவனுந்தி யாகுந் துரியமே. க

2104 முப்பதோ டாறின் முதல்நனா ஐந்தாகச்
செப்பதி னான்காய்த் திகழ்ந்திரண் டொன்றாகி
அப்பதி யாகும் நியதி முதலாகச்
செப்புஞ் சிவமீறாய்த் தேர்ந்துகொள் ளீரே. உ

2105 இந்திய மீரைந் திரைந்து மாத்திரை
மந்திர மாய்நின்ற மாருதம் ஈரைந்தும்
அந்தக் கரணம் ஒருநான்கும் ஆன்மாவும்
பந்தவச் சக்கரப் பாலது வாகுமே. ௩

2106 பாரது பொன்மை பசுமை யுடையது
நீரது வெண்மை செம்மை நெருப்பது
காரது மாருதங் கறுப்பை யுடையது
வானகந் தூம மறைந்துநின் றாரே. ௪

2107 பூதங்கள் ஐந்தும் பொறியவை ஐந்துளும்
ஏதம் படஞ்செய் திருந்த புறநிலை
ஓது மலங்குண மாகுமா தாரமோ
டாதி யவத்தைக் கருவிதொண் ணூற்ருறே. ரு

2108 இடவகை சொல்லில் இருபத்தஞ் சானை
படுபர சேனையும் பாய்பரி ஐந்தும்
உடையவன் மத்திமை யுள்ளுறு நால்வர்
அடைய நெடுங்கடை ஐங்கொடு நான்கே. சு

2109 உடம்பும் உடம்பும் உடம்பைத் தழுவி
உடம்பிடை நின்ற உயிரை அறியார்
உடம்பொ டுயிரிடை நட்பறி யாதார்
மடம்புகு நாய்போல் மயங்குகின் ருரே. எ

2110 இருக்கின்ற வாறொன் றறிகிலர் ஏழைகள்
முருக்கு மசபையை மாற்றி முகந்து
கருக்கொண்டு காமாரி சார முகந்தேர்ந்
துருக்கொண்டு தொக்க உடலொழி யாதே. அ

2111 ஒளித்திட் டிருக்கும் ஒருபதி னாலை
அளித்தனன் என்னுள்ளே ஆரியன் வந்து
அளிக்குங் கலைகளி னாலறு பத்து
ஒளித்திட்டு வைத்தான் ஒடுங்கிய சித்தே. கூ

2112 மண்ணினில் ஒன்று மலர்நீரு மங்காகும்
பொன்னினில் அங்கி புகழ்வளி யாகாயம்
மன்னு மனோபுத்தி யாங்காரம் ஓரொன்ருய்
உன்னின் முடிந்த தொருபூத சயமே. க௦

2113 முன்னிக் கொருமகன் மூர்த்திக் கிருவர்
வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர்
கன்னிக்குப் பிள்ளைகள் ஐவர்மு னளில்லை
கன்னியைக் கன்னியே காதலித் தானே. கக

2114 கண்டகன வைந்துங் கலந்தனதா னைந்துஞ்சென்
றுண்டன நான்கும் ஒருங்கே உணர்ந்தபின்
பண்டைய தாகிப் பரந்த வியாக்கிரத்
தண்டமுந் தானும் அமர்ந்துநின் ருனே. கஉ

2115 நின்றவன் நிற்கப் பதினலிற் பத்துநீத்
தொன்றிய அந்தக் கரணங்கள் நான்குடன்
மன்று கலந்த மனவாழ்க்கை வாதனை
கன்றிய கண்டத்திற் கண்டான் கனவதே. கங

2116 தான மிழந்து தனிபுக் கிதயத்து
மான மழிந்து மதிகெட்டு மாலாகி
ஆன விரிவறி யாவவ் வியத்தத்தின்
மேனி யழிந்து சுழுத்திய தாமே. ௧௪

2117 சுழுனையைச் சேர்ந்துள மூன்றுடன் காட்சி
கெழுமிய சித்தம் பிராணன்றன் காட்சி
ஒழுகக் கமலத்தின் உள்ளேயிருந்து
விழுமப் பொருளுடன் மேவிநின் றானே. ௧௫

2118 தானத் தெழுந்து கருக்குந் துரியத்தின்
வானத் தெழுந்துபோய் வையம் பிறகிட்டுக்
கானத் தெழுந்த கருத்தின் தலையிலே
ஊனத் தவித்தைவிட் டுமனின் றானே. ௧௬

2119 ஊமை யெழுத்தொடு பேசும் எழுத்துறில்
ஆமை யகத்தினில் அஞ்சும் அடக்கிடும்
ஓமய முற்றது வுள்ளொளி பெற்றது
நாமய மற்றது நாமறி யோமே. ௧௭

2120 துரிய மிருப்பதுஞ் சாக்கிரத் துள்ளே
நரிகள் பதினாலு நஞ்சுண்டு செத்தன
பரிய புரவியும் பாறிப் பறந்தது
துரிய மிறந்திடஞ் சொல்லவொண் ணாதே. ௧௮

2121 மாறா மலமைந்தான் மன்னு மவத்தையின்
வேறாய மாயா தநுகர ணாதிக்கிங்
கீறாகா தேளவ் வுயிரும் பிறந்திறந்
தாறாத வல்வினை யாலடி யுண்ணுமே. ௧௯

2122 உண்ணுந்தன் னூடாடா தூட்டிடு மாயையும்
அண்ணல் அருள்பெற்ற முத்திய தாவது
நண்ணா விலாவுயிர் ஞானத்தி னுற்பிறந்
தெண்ணுறு ஞானத்தின் நேர்முத்தி எய்துமே. ௨௰

2123 அதிமூட நித்திரை யாணவ நந்த
அதனா லுணர்வோ னருங்கன்ம முன்னித்
திதமான கேவல மித்திறஞ் சென்று
பரமாகா வையவத் தைப்படு வானே. ௨௧

2124 ஆசான்முன் னேதுயில் மாண வகரைத்
தேசாய தண்டால் எழுப்புஞ் செயல்போல்
நேசாய வீசனு நீடாண வத்தரை
ஏசாத மாயாடன் னாலே எழுப்புமே. ௨௨

2125 மஞ்சொடு மந்தா கினிகுட மாமென
விஞ்சறி வில்லோன் விளம்பு மிகுமதி
எஞ்சலி லொன்றெனு மாறென இவ்வுடல்
அஞ்சுனு மன்னனன் றேபோ மளவே. உக

2126 படியுடை மன்னவன் பாய்பரி ஏறி
வடிவுடை மாநகர் தான்வரும் போது
அடியுடை ஐவரும் அங்குறை வோருந்
துடியில்லம் பற்றித் துயின்றனர் தாமே. உச

2127 நேரா மலத்தை நீடைந் தவத்தையின்
நேரான வாறுன்னி நீடு நனவினில்
நேரா மலமைந்து நேரே தரிசித்து
நேராம் பரத்துடன் நிற்பது நித்தமே. உரு

மத்திய சாக்கிராவத்தை

2128 சாக்கிர சாக்கிரந் தன்னில் திரோதாயி
சாக்கிர சொப்பனந் தன்னிடை மாமாயை
சாக்கிரந் தன்னிற் சுழுத்திதற் காமியஞ்
சாக்கிரந் தன்னில் துரியத்து மாயையே. க

2129 மாயை எழுப்புங் கலாதியை மற்றதின்
நேய விராகாதி ஏய்ந்த துரியத்துத்
தோயுஞ் சுழுனை கனாநன வுந்துன்னி
ஆயின னந்தச் சகலத்து ளானே. உ

2130 மேவிய அந்தகன் விழிகட் குருடனு
மாவயின் முன்னடி காணு மதுகண்டு
மேவுந் தடிகொண்டு [1]சொல்லும் விழிபெற
மூவயி னுன்மா முயலுங் கருமமே. ங

2131 மத்திம மொத்த சிலந்தி வலயத்துள்
ஒத்தங் கிருந்து உயிருண்ணு மாறுபோல்
அத்தனும் ஐம்பொறி யாடகத் துள்நின்று
சத்த முதல்ஐந்துந் தானுண்ணு மாறே. ச

2132 வைச்சன வச்சு வகையிரு பத்தஞ்சு
முச்சு முடனணை வானொரு வன்னுளன்
பிச்சன் பெரியன் பிறப்பிலி என்றென்று
நச்சி யவனருள் நானுய்ந்த வாறே. ரு

---

பா. வே. 1. செல்லும்.

2133 நாலா றுடன்புருட னற்றத் துவமுடன்
வேறான ஐயைந்து மெய்ப்புரு டன்பரங்
கூறா வியோமம் பரமெனக் கொண்டனன்
வேறான நாலேழு வேதாந்த தத்வமே. ௬

2134 ஏலங்கொண் டாங்கே இடையொடு பிங்கலை
கோலங்கொண் டாங்கே குணத்தி னுடன்புக்கு
மூலங்கொண் டாங்கே முருக்கிமுக் கோணினுங்
காலங்கொண் டானடி காணலு மாமே. ௭

2135 நாடிகள் பத்தும் நலந்திகழ் வாயுவும்
ஓடிய காலில் ஒடுங்கி யிருந்திடுங்
கூடிய காமங் குளிக்கும் இரதமும்
நாடிய நல்ல மனமும் உடலிலே. ௮

2136 பத்தொடு பத்துமோர் மூன்றும் பகுதியும்
உய்த்த துரியமும் உள்ளுணர் காலமும்
மெய்த்த வியோமமு மேலைத் துரியமுந்
தத்துவ நாலே ழெனவுன்னத் தக்கதே. ௯

2137 விளங்கிடு முந்நூற்று முப்பதோ டொருபான்
தளங்கொ ளிரட்டிய தாறு நடந்தால்
வணங்கிடு மைம்மலம் வாயு வெழுந்து
விளங்கிடு மவ்வழி தத்துவ நின்றே. ௧௦

2138 நாலொரு கோடியே நாற்பத்தெண் ணாயிர
மேலுமோ ரைந்நூறு வேறா யடங்கிடும்
பாலவை தொண்ணூறொ டாறுட் படுமவை
கோலிய ஐயைந்து ளாகுங் குறிக்கிலே. ௧௧

2139 ஆகின்ற தொண்ணூறொ டாறும் பொதுவென்பர்
ஆகின்ற வாறா றருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி வயிணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே. ௧௨

2140 தத்துவ மானது தன்வழி நின்றிடில்
வித்தக னாகி விளங்கி யிருக்கலாம்
பொய்த்தவ மாமவை போயிடு மவ்வழி
தத்துவ மாவ தகார எழுத்தே. ௧௩

2141 அறிவொன் றிலாதன ஐயேழு மொன்றும்
அறிகின்ற என்னை அறியா திருந்தேன்
அறிகின்றாய் நீயென் றருள்செய்தான் நந்தி
அறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே; ௧௪

2142 சாக்கிர சாக்கிர மாதி தனில்ஐந்தும்
ஆக்கு மலாவத்தை யைந்து நனவாதி
போக்கி யிவற்றொடும் பொய்யான வாறாறு
நீக்கி நெறிநின்றோன் றாகியே நிற்குமே. கடு

2143 ஆணவ மாதி மலமைந் தலரோனுக்
காணவ மாதிநான் காமாற் கரனுக்கு
ஆணவ மாதிமூன் றீசர்க் கிரண்டென்ப
ஆணவ மொன்றே சதாசிவற் காவதே. கசு

### அத்துவாக்கள்

2144 தத்துவம் ஆறாறு தன்மனு வேழ்கோடி
மெய்த்தகு வன்னம்ஐம் பானொன்று மேதினி
ஒத்திரு நூற்றிரு பான்நான்கெண் பானொன்று
வைத்த பதங்கலை யோரைந்தும் வந்தவே. க

2145 நாடிய மண்டல மூன்று நலந்தெரிந்
தோடு மவரோ டுள்ளிரு பத்தைஞ்சுங்
கூடுவர் கூடிக் குறிவழி யேசென்று
தேடிய பின்னர்த் திகைத்திருந் தார்களே. உ

2146 சாக்கிர சாக்கிர மாதித் தலையாக்கி
ஆக்கிய தூல மளவாக்கி அதீதத்துத்
தாக்கிய வன்பான தாண்டவஞ் சார்ந்தது
தேக்குஞ் சிவமாதல் ஐந்துஞ் சிவாயமே. ௩

### சுத்த நனவாதி பருவம்

2147 நனவாதி தூலமே சூக்கப் பகுதி
அனதான வைஐந்தும் விந்துவின் சத்தி
தனதா முயிர்விந்து தானின்று போந்து
கனவா நனவிற் கலந்ததிவ் வாறே. க

2148 நனவில் அதீதம் பிறந்தார் கிடந்தார்
நனவில் துரியம் [1] நிகழ்ந்தார் தவழ்ந்தார்
நனவிற் சுழுத்தி நடந்தார் வளர்ந்தார்
நனவிற் கனவோட னன்செய்தி யானதே. உ

2149 செறியுங் கிரியை சிவதத் துவமாம்
பிறிவிற் சுகயோகம் பேரருள் கல்வி
குறிகற் றிருமேனி குணம்பல வாகும்
அறிவில் சராசரம் அண்டத் தளவே. ௩

பா. வே. 1. நகர்ந்தார்.

2150 தேசு திகழ்சிவஞ் சத்தி சதாசிவம்
ஈசன் அனல்வித்தை இராகங் கலைகால
மாசகல் வித்தை நியதி மகாமாயை
ஆசில் புருடாதி ஆன்மாவி [1]னாறே. ௪

2151 ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்
காணு முளைக்குத் தவிடுமி யான்மாவுந்
தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே. ௫

2152 பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயனொரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன்கோல் போடிற்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே. ௬

2153 பருவூசி ஐந்துமோர் பையினுள் வாழும்
பருவூசி ஐந்தும் பறக்கும் விருகம்
பருவூசி ஐந்தும் பணித்தலைப் பட்டாற்
பருவூசிப் பையும் பறக்கின்ற வாறே. ௭

2154 உடலிந் திரியமனம் ஒண்புத்தி சித்தம்
அடலொன் றகந்தை அறியாமை மன்னிக்
கெடுமவ் வுயிர்மயல் மேலுங் கிளைத்தால்
அடைவது தானெழ் நரகத்து ளாமே. ௮

2155 தற்றெரி யாத வதீதந்தற் காணவஞ்
சொற்றெரி கின்ற துரியஞ்சொற் காமியம்
பெற்ற சுழுத்திப்பின் பேசுறுங் காதலா
மற்றது வுண்டிக் கனாநன வாதலே. ௯

2156 நனவிற் கனவில்லை ஐந்து நனவிற்
கனவிலாச் சூக்குமங் காணுஞ் சுழுத்தி
தனவுண் பகுதியே தற்கூட்டு மாயை
நனவிற் றுரிய மதீதந் தலைவந்தே. ௧௦

2157 ஆறாறில் ஐயைந் தகல நனாநனா
வாறா மவைவிட வாகு நனாக்கனா
வேறான ஐந்தும் விடவே நனவினில்
ஈறாஞ் சுழுத்தி யிதின்மாயை தானே. ௧௧

2158 மாயையில் வந்த புருடன் துரியத்தில்
ஆய முறைவிட் டதுவந்தா னன்றிச்

---

பா. வே. 1. ராறே.

சேயகே வலவிந் துடன் செல்லச் சென்றக்கால்
ஆய தனுவின் பயனில்லை யாமே. கஉ

2159 அதீதத் துரியத் தறிவனும் ஆன்மா
அதீதத் துரிய மதனுற் புரிந்தால்
அதீதத் தெழுந்தறி வாகிய மானன்
முதிய அனலிற் றுரியத்து முற்றுமே. கங

2160 ஐயைந்து பத்துடன் ஆனது சாக்கிரங்
கைகண்ட ஐயைந்திற் கண்டங் கனவென்பர்
பொய்கண்ட மூவர் புருடன் சுழுனையின்
மெய்கண் டவனுந்தி மேவல் இருவரே. கச

2161 புரியட் டகமே பொருந்தல் நனவு
புரியட் டகந்தன்னின் மூன்று கனவு
புரியட் டகத்தில் இரண்டு சுழுத்தி
புரியட் டகத்தொன்று புக்கல் துரியமே. கரு

2162 நனவின் நனவு புலனில் வழக்கம்
நனவிற் கனவு நினைத்தல் மறத்தல்
நனவிற் சுழுத்தியுன் னுடல் இலாமை
நனவில் துரிய மதீதத்து நந்தியே. கசு

2163 கனவின் நனவுபோற் காண்டல் நனவாங்
கனவினிற் கண்டு மறத்தல் கனவாங்
கனவிற் சுழுத்தியுங் காணாமை காணல்
அனுமாதி செய்தலி லான துரியமே. கஎ

2164 சுழுத்தி நனவொன்றுந் தோன்றாமை தோன்றல்
சுழுத்தி கனவதன் உண்மை சுழுத்தியிற்
சுழுத்தி யறிவறி வாலே [1]யழிகை
சுழுத்தித் துரியமாஞ் சொல்லறும் பாழே. கஅ

2165 துரிய நனவா [2]மிதமுணர் போதந்
துரியக் கனவா மகமுணர் போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியந்
துரியம் பரமெனத் தோன்றிடுந் தானே. ககூ

2166 அறிவறி கின்ற அறிவு நனவாம்
அறிவறி யாமை யடையக் கனவாம்
அறிவறி யவ்வறி யாமை சுழுத்தி
அறிவறி வாகு மான துரியமே. உ0

பா. வே. 1. யறிகை. 2. மிதமுரை.

2167 தானெங்கு மாயவ னைம்மலம் தான்விட்டு
ஞானந் தனதுரு வாகி நயந்தபின்
தானெங்கு மாய்நெறி நின்றது தான்விட்டு
மேனந்தச் சூக்க மவைவன்ன மேலிட்டே. உக

2168 ஐயைந்து மாறுமோ ரைந்து நனவினில்
எய்யு நனவு கனவு சுழுத்தியா
மெய்யும்பின் சூக்கமும் மெய்ப்பகுதி மாயை
ஐயமுந் தானவ னத்துரி யத்தனே. உஉ

2169 ஈதென் றறிந்திலன் இத்தனை காலமும்
ஈதென் றறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
ஈதென் றறியும் அறிவை அறிந்தபின்
ஈதென் றறியும் இயல்புடை யோனே. உரு

2170 உயிர்க்குயி ராகிய வுருவா யருவாய்
அயற்புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சத்தியும் நாதன் உலகாதி
இயற்பின்றி யெல்லாம் இருள்மூட மாமே. உச

2171 சத்தி யிராகத்திற் றூனல் லுயிராகி
ஒத்துறு பாச மலமைந்தோ டாறுறு
தத்துவ பேதஞ் சமைத்துக் கருவியும்
வைத்தனன் ஈசன் மலமறு மாறே. உரு

2172 சாக்கிரா தீதத்தி லாணவந் தன்னுண்மை
சாக்கிரா தீதந் துரியத்திற் றூனுறச்
சாக்கிரா தீதத்தில் ஆணவந் தான்விடாச்
சாக்கிரா தீதம் பரனுண்மை தங்குமே. உசு

2173 மலக்கலப் பாலே மறைந்தது சத்தி
மலக்கலப் பாலே மறைந்தது ஞானம்
மலக்கலப் பாலே மறைந்தனன் தானும்
மலக்கலப் பற்றூன் மதியொளி யாமே. உஎ

2174 திகைக்கின்ற சிந்தையுள் சிந்தைகள் மூன்று
நகைக்கின்ற நெஞ்சுள் நரிக்குட்டி நான்கு
வகைக்கின்ற நெஞ்சினுள் ஆனைக்கன் றைந்து
பகைக்கின்ற நெஞ்சுக்குப் பாலிரண் டாமே. உஅ

2175 கதறு பதினெட்டுக் கண்களும் போகச்
சிதறி எழுந்திடுஞ் சிந்தையை நீரும்
விதறு படாமுன்னம் மெய்வழி நின்றால்
அதிர வருவதோர் ஆனையு மாமே. உகூ

2176 நனவகத் தேயொரு நாலைந்தும் வீடக்
கனவகத் தேயுட் கரணங்க ளோடு
முனவகத் தேநின் றுதறியுட் புக்கு
நினைவகத் தின்றிச் சுழுத்திநின் றானே. ௩௦

2177 நின்றவன் ஆசான் நிகழ்துரி யத்தனாய்
ஒன்றி யுலகின் நியமாதிக ளூற்றுச்
சென்று துரியாதீ தத்தே சிலகாலம்
நின்று பரனாய் நின்மல னாமே. ௩௧

2178 ஆனவவ் வீசன் அதீதத்தில் வித்தையாத்
தானுல குண்டு சதாசிவ மாசத்தி
மேனிகள் ஐந்தும்போய் விட்டுச் சிவமாகி
மோன மடைந்தொளி மூலத்த னாமே. ௩௨

2179 மண்டல மூன்றினுள் மாயநன் னாடனைக்
கண்டுகொண் டுள்ளே கருதிக் கழிகின்ற
விண்டலர் தாமரை மேலொன்றுங் கீழாகத்
தண்டமுந் தானா யகத்தினுள் ளாமே. ௩௩

2180 போதறி யாது புலம்பின புள்ளின
மாதறி யாவகை நின்று மயங்கின
வேதறி யாவணம் நின்றனன் எம்மிறை
சூதறி வாருச்சி சூடிநின் றாரே. ௩௪

2181 கருத்தறிந் தொன்பது கண்டமும் ஆங்கே
பொருத்தறிந் தோன்புவ னாபதி நாடித்
திருத்தறிந் தேன்மிகு தேவர் பிரானை
வருத்தறிந் தேன்மன மன்னிநின் றானே. ௩௫

2182 ஆன விளக்கொளி தூண்டு மவனென்னத்
தான விளக்கொளி யாமூல சாதனத்
தான விதிமூலத் தானத்தில் அவ்விளக்
கேனை மதிமண்ட லங்கொண் டெரியுமே. ௩௬

2183 உண்ணாடும் ஐவர்க்கு மண்டை யொதுங்கிய
விண்ணாட நின்ற வெளியை வினவுறில்
அண்ணாந்து பார்த்தைவர் கூடிய சந்தியிற்
கண்ணாடி காணுங் கருத்ததென் றானே. ௩௭

2184 அறியாத வற்றை அறிவான் அறிவான்
அறிவான் அறியாதான் தன்னறி வாகான்
அறியா தவத்தை அறிவானைக் கூட்டி
அறியா தறிவானை யாரறி வாரே. ௩௮

2185 துரிய தரிசனஞ் சொற்றோம் வியோமம்
அரியன தூடணை மந்நன வாதி
பெரியன கால பரம்பிற் றுரியம்
அரிய அதீதம் அதீதத்த தாமே. ௩௯

2186 மாயையிற் சேதனன் மன்னும் பகுதியோன்
மாயையின் மற்றது நீவுதன் மாயையாங்
கேவல மாகுஞ் சகலமா யோனியுள்
தோயும் மனிதர் துரியத்துட் சிவனே. ௪0

கேவல சகல சுத்தம்

2187 தன்னை யறிசுத்தன் றற்கேவ லன்றானும்
பின்ன முறநின்ற பேத சகலனும்
மன்னிய சத்தசத் துச்சத சத்துடன்
துன்னுவர் தத்தந் தொழிற்கள வாகவே. க

2188 தானே தனக்குப் பகைவனும் நட்டானுந்
தானே தனக்கு மறுமையும் இம்மையுந்
தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானுந்
தானே தனக்குத் தலைவனு மாமே. உ

2189 பாசம தாகும் பழமலம் பற்றற
நேசம தாய்நின்ற வாறுறு திக்கிடக்
காசமி லாத குணங்கே வலசுத்த
மாசற நிற்ற லதுசுத்த சைவமே. ௩

2190 ஆமுயிர் கேவல மாமாயை இன்னடச்
தாமுயிர் மாயை எறிப்ப அறிவுற்றுக்
காமிய மாயேய முங்கல வாகிற்பத்
தாமுறு பாசஞ் சகலத்த தாமே. ௪

2191 சகல அவத்தையிற் சார்ந்தோர் சகலர்
புகலு மலமூ வகையும் புணர்ந்தோர்
நிகரின் மலரோன்மா னீடுபல் தேவர்கள்
நிகழ்நரர் கீட மந்தமு மாமே. ரு

2192 தாவிய மாயையில் தங்கும் பிரளய
மேவிய மற்ற துடம்பாம்மிக் குள்ளன
ஓவல் இலக்கணர் ஒன்றிய சீகண்டர்
ஆவயி னூற்றெட் டுருத்திர ராமே. சு

2193 ஆகின்ற கேவலத் தாணவத் தானவ
ராகின்ற வித்தேச ராமனந் தாதிய

ராகின்ற எண்மர் எழுகோடி மந்திர
ராகின்ற ஈசர் அநேகரு மாமே. எ

2194 ஆமவ ரிற்சிவ னாருள் பெற்றுளோர்
போமலந் தன்னாற் புகழ்விந்து நாதம்விட்
டோமய மாகி யொடுங்கலி னின்மலந்
தோமறு சுத்தா வவத்தைத் தொழிலே. அ

2195 ஓரினு மூவகை நால்வகை யும்முள
தேரி லிவைகே வலமாயை சேரிச்சை
சாரிய லாயவை தாமே தணப்பவை
வாரிவைத் தீசன் மலமறுத் தானே. கூ

2196 பொய்யான போதாந்த மாறாறும் விட்டகன்
றெய்யாமை நீங்கவே எய்தவன் தானாகி
மெய்யாஞ் சராசர மாய்வெளி தன்னுட்புக்
கெய்தாம லெய்துஞ்சுத் தாவத்தை யென்பதே. க0

2197 அனாதி பசுவியாத்தி யாகு மிவனை
அனாதியில் வந்த மலம்ஐந்தால் ஆட்டி
அனாதியிற் கேவல மச்சக லத்திட்டு
அனாதி பிறப்பறச் சுத்தத்து ளாகுமே. கக

2198 அந்தரஞ் சுத்தாவத் தைகே வலத்தாறு
தந்தோர்தஞ் சுத்தகே வலத்தற்ற தற்பரத்
தின்பால் துரியத் திடையே யறிவுறத்
தன்பால் தனையறி தத்துவந் தானே. கஉ

2199 ஐயைந் தொடுங்கும் ஆன்மாவில் ஆன்மாவும்
மெய்கண்டு சுத்த அவத்தையில் வீடாகுந்
துய்யவவ் வித்தை முதன்மூன்றுந் தொல்சத்தி
ஐய சிவஞ்சித்தி யாந்தோற்ற மவ்வாறே. கங

2200 ஐயைந்து மான்மாவில் ஆறோ டடங்கிடு
மெய்கண்ட மேன்மூன்று மேவுமெய் யோகத்தில்
கைகண்ட சத்தி சிவபாகத் தேகாண
எய்யும் படியடங் குந்நாலேழ் எய்தியே. கச

2201 ஆணவத் தாரொன் றறியாத கேவலர்
பேணிய மாயைப் பிரளயா கலராகுங்
காணும் உருவினர் காணாமை காண்பவே
பூணுஞ் சகலர்முப் பாசமும் புக்கோரே. கரு

2202 ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப்
பேணிய மாயை பிரளயா கலருக்கே

ஆணவ மாயையுங் கன்ம மூன்றுமே
காணுஞ் சகலர்க்குக் காட்டு மலங்களே. கசு

2203 கேவலந் தன்னிற் கிளர்ந்தவி ஞாகலர்
கேவலந் தன்னிற் கிளர்விந்து சத்தியால்
ஆவயிற் கேவலத் தச்சக லத்தையும்
மேவிய மந்திர மாமாயை மெய்ம்மையே. கஎ

2204 மாயையின் மன்னும் பிரளயா கலர்வந்து
மாயையுந் தோன்று வகையிற்க ஆணவ
மாய சகலத்துக் காமிய மாமாயை
ஏயமன் னூற்றெட்டு ருத்திரர் என்பவே. கஅ

2205 மும்மலங் கூடி முயங்கி மயங்குவோர்
அம்மெய்ச் சகலத்தர் தேவர் சுரர்நரர்
மெய்ம்மையில் வேதா விரிமிகு கீடாந்தத்
தம்முறை யோனிபுக் கார்க்குஞ் சகலரே. ககூ

2206 சுத்த அவத்தையில் தோய்ந்தவர் மும்மலச்
சத்தசத் தோடத் தனித்தனி பாசமு
மத்த இருள்சிவ னான கதிராலே
தொத்தற விட்டிடச் சுத்தரா வார்களே. உ௦

2207 தற்கே வலமுத்தி தானே தனிமையாம்
பிற்பாற் சகலங் கலாதிப் பிறிவதாஞ்
சொற்பாற் புரிசுத்த கேவலஞ் சாக்கிரந்
தற்பாற் புரிவது தற்சுத்த மாமே. உக

2208 அறிவின்றி [1]முத்தன் அராகாதி சேரான்
குறியொன்றி [2]லாநித்தன் கூடான் கலாதி
செறியுஞ் செயலிலான் றினங்கற்ற வல்லோன்
கிறியன் மலவியாபி கேவலந் தானே. உஉ

2209 விந்துவும் மாயையும் மேவுங் கிரியையுஞ்
சந்தத ஞான பரையுந் தனுச்சத்தி
விந்துவின் மெய்ஞ்ஞான மேவும் பிரளயர்
வந்த சகலசுத் தான்மாக்கள் வையத்தே. உ௩

2210 கேவல மாதியிற் பேதங் கிளக்குறிற்
கேவல மூன்றுங் கிளருஞ் சகலத்துள்
ஆவயின் மூன்று மதிசுத்த மூடவே
ஓவலில் லாவொன்பா னுற்றனர் வோர்கட்கே. உ௪

பா. வே. 1. மூத்தோன். 2. லாதித்தன்.

2211 கேவலத்திற் கேவலம் அதீதா தீதங்
கேவலத் திற்சக லங்கள் வயிந்தவங்
கேவலத் திற்சுத்தங் கேடில்விஞ் ஞாகலர்க்
காவயி ஞதன் அருண்மூர்த்தி தானே. உரு

2212 சகலத்திற் கேவலஞ் சாக்கிரா தீதஞ்
சகல சகலமே சாக்கிர சாக்கிரஞ்
சகலத்திற் சுத்தமே தற்பரா வத்தை
சகலத்தில் இம்மூன்று தன்மையு மாமே. உசு

2213 சுத்தத்திற் சுத்தமே தொல்சிவ மாகுதல்
சுத்தத்திற் கேவலந் தொல்லுப சாந்தமாஞ்
சுத்த சகலந் துரிய விலாசமாஞ்
சுத்தத்தில் இம்மூன்றுஞ் சொல்லலு மாமே. உஎ

2214 சாக்கிர சாக்கிரந் தன்னிற் கனவொடுஞ்
சாக்கிரந் தன்னிற் சுழுத்தி துரியமே
சாக்கிரா தீதந் தனிற்சுகா னந்தமே
ஆக்கு மறையாதி ஐம்மல பாசமே. உஅ

2215 சாக்கிரா தீதத்திற் றூனறு மாணவஞ்
சாக்கிரா தீதம் பராவத்தை தங்காது
ஆக்கு பரோபாதி யாஉப சாந்தத்தை
நோக்கு மலங்குண நோக்குத லாகுமே. உகூ

2216 பெத்தமும் முத்தியும் பேணுந் துரியமுஞ்
சுத்த வதீதமுந் தோன்றாமற் றூனும்
அத்தன் அருளென் றருளால் அறிந்தபின்
சித்தமும் இல்லை செயலில்லை தானே. ௩௦

2217 எய்திய பெத்தமும் முத்தமும் என்பன
எய்தும் அரனரு ளேவிளை யாட்டோ
டெய்தி டுயிர்சுத்தத் திடுநெறி என்னவே
எய்தும் உயிரிறை பாலறி வாமே. ௩க

2218 ஐம்மலத் தாரு மதித்த சகலத்தர்
ஐம்மலத் தாரு மருவினைப் பாசத்தார்
ஐம்மலத் தார்சுவர்க் கந்நெறி யாள்பவர்
ஐம்மலத் தாரா ஞர்க்கறி வோரே. ௩உ

2219 கருவி லதீதங் கலப்பிக்கு மாயை
அரிய துரிய மதிலுண் ணூம் ஆசையும்
உரிய சுழுனை முதலெட்டுஞ் சூக்கத்
தரிய கனத்தூலம் அந்நன வாமே. ௩௩

2220 ஆணவ மாகும் அதீதமேன் மாயையும்
பூணுந் துரியஞ் சுழுத்திபொய்க் காமியம்
பேணுங் கனவும் மாமாயை திரோதாயி
காணு நனவில் மலக்கலப் பாகுமே. ௩௪

2221 அரன்முத லாக அறிவோன் அதீதத்தன்
அரன்முத லாமாயை தங்கிச் சுழுனை
கருமம் உணர்ந்து மாமாயை கைக்கொண்டோர்
அருளு மறைவார் சகலத்துற் றோரே. ௩௫

2222 உருவுற்றுப் போகமே போக்கியந் துற்று
மருவுற்றுப் பூதம னாதியான் மன்னி
வருமச் செயல்பற்றிச் சத்தாதி வைகிக்
கருவுற் றிடுஞ்சீவன் காணுஞ் சகலத்தே. ௩௬

2223 இருவினை யொத்திட இன்னருட் சத்தி
மருவிட ஞானத்தில் ஆதன மன்னிக்
குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்
பெருமல நீங்கிப் பிறவாமை சுத்தமே. ௩௭

2224 ஆறாறு மாறதின் ஐயைந் தவத்தையோ
டீறா மதீதத் துரியத் திவனெய்தப்
பேறான ஐவரும் போம்பிர காசத்து
நீறார் பரஞ்சிவ மாதேய மாகுமே. ௩௮

2225 தன்னை யறியா துடலைமுன் தானென்றான்
தன்னைமுன் கண்டான் துரியந் தனைக்கண்டான்
உன்னுந் துரியமும் ஈசனோ டொன்றாக்கால்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே. ௩௯

2226 சாக்கிரந் தன்னில் அதீதந் தலைப்படில்
ஆக்கிய வந்த வயிந்தவ மானந்த
நோக்கும் பிறப்பறு நோன்முத்தி சித்தியாம்
வாக்கும் மனமும் மருவல்செய் யாவே. ௪0

2227 அப்பும் அனலும் அகலத்து ளேவரும்
அப்பும் அனலும் அகலத்து ளேவாரா
அப்பும் அனலும் அகலத்து ளேதெனில்
அப்பும் அனலுங் கலந்ததவ் வாறே. ௪௧

2228 [1] அறுநான் கசுத்தம் அதிசுத்தா சுத்தம்
உறுமேழு மாயை உடனைந்தே சுத்தம்

பா. வே. 1. அறுநான்கு சுத்தம்.

பெறுமா றிவைமூன்றுங் கண்டத்தாற் பேதித்
தறுமாயை மாமாயை யான்மாவி னோடே. ௪உ

2229 மாயைகைத் தாயாக மாமாயை யீன்றிட
வாய பரசிவன் தந்தையாய் நிற்கவே
ஏயும் உயிர்கே வலசகலத் தெய்தி
ஆய்தரு சுத்தமுந் தான்வந் தடையுமே. ௪௩

## பராவத்தை

2230 அஞ்சுங் கடந்த அனாதி பரந்தெய்வ
நெஞ்சம தாய நிமலன் பிறப்பிலி
விஞ்சும் உடலுயிர் வேறு படுத்திட
வஞ்சத் திருந்த வகையறிந் தேனே. ௧

2231 சத்தி பராபரஞ் சாந்தி தனிலான
சத்தி பரானந்தந் தன்னிற் சுடர்விந்து
சத்திய மாயை தனுச்சத்தி ஐந்துடன்
சத்தி பெறுமுயிர் தானங்கத் தாறுமே. உ

2232 ஆறாறுக் கப்பால் அறிவார் அறிபவர்
ஆறாறுக் கப்பால் அருளார் பெறுபவர்
ஆறாறுக் கப்பால் அறிவாம் அவர்கட்கே
ஆறாறுக் கப்பால் அரனினி தாமே. ௩

2233 அஞ்சொடு நான்குங் கடந்தக மேபுக்குப்
பஞ்சணி காலத்துப் பள்ளி துயில்கின்ற
விஞ்சையர் வேந்தனும் மெல்லிய லாளொடு
நஞ்சற நாடி நயஞ்செய்யு மாறே. ௪

2234 உரிய நனாத்துரி யத்தி லிவனாம்
அரிய துரிய நனவாதி மூன்றிற்
பரிய பரதுரி யத்திற் பரனாந்
திரிய வருந்துரி யத்திற் சிவமே. ௫

2235 பரமாம் அதீதமே பற்றறப் பற்ற
பரமாம் அதீதம் பயிலப் பயில
பரமாம் அதீதம் பயிலாத் தபோதனர்
பரமாகார் பாசமும் பற்றொன் றறாதே. ௬

2236 ஆயும்பொய்ம் மாயை யகம்புற மாய்நிற்கும்
வாயு மனமுங் கடந்த மயக்கறின்
தூய அறிவு சிவானந்த மாகிப்போய்
வேயும் பொருளாய் விளைந்தது தானே. ௭

2237 துரியப் பரியில் இருந்தஅச் சிவனைப்
பெரிய வியாக்கிரத் துள்ளே புகவிட்டு
நரிகளை யோடத் துரத்திய நாதர்க்
குரிய வினைகள்நின் றுலமிட் டன்றே. ௮

2238 நின்றஇச் சாக்கிர நீள்துரி யத்தினின்
மன்றனு மங்கே மணஞ்செய்ய நின்றிடும்
மன்றன் மணஞ்செய்ய மாயை மறைந்திடும்
அன்றே யிவனும் அவன்வடி வாமே. ௯

2239 விரிந்திடிற் சாக்கிர மேவும் விளக்காய்
இருந்த விடத்திடை யீடான மாயை
பொருந்துந் துரியம் புரியிற்ற றொருந்
தெரிந்த துரியத் தீதக லாதே. ௧0

2240 உன்னை யறியா துடலைமுன் நானென்றாய்
உன்னை யறிந்து துரியத் துறநின்றாய்
தன்னை யறிந்தும் பிறவி தணவாதால்
அன்ன வியாத்தன் அமலனென் றறிதியே. ௧௧

2241 கருவரம் பாகிய காயந் துரியம்
இருவருங் கண்டீர் பிறப்பிறப் புற்றார்
குருவரம் பெற்றவர் கூடிய பின்னை
இருவரு மின்றியொன் றாகிநின் றாரே. ௧௨

2242 அணுவின் துரியத்தி லான நனவும்
அணுவசை யின்கண் ணான கனவும்
அணுவசை விற்பரா தீதஞ் சுழுத்தி
பணியிற் பரதுரி யம்பர மாமே. ௧௩

2243 பரதுரி யத்து நனவும் பரந்து
விரிசக முண்ட கனவுமெய்ச் சாந்தி
உருவுறு கின்ற சுழுத்தியும் ஓவத்
தெரியுஞ் சிவதுரி யத்தனு மாமே. ௧௪

2244 பரமா நனவின்பின் பாற்சக முண்ட
திரமார் கனவுஞ் சிறந்த சுழுத்தி
உரமாம் உபசாந்த முற்றல் துறவே
தரனுஞ் சிவதுரி யத்தனு மாமே. ௧௫

2245 சிவன் துரிய முதலாகச் சீரான
ஆவ சிவன்துரி யாந்தம் அவத்தைபத்
தோவும் பராநந்தி யுண்மைக்குள் வைகியே
மேவிய காலேழ் விடுத்துநின் றானே. ௧௬

2246 பரஞ்சிவன் மேலாம் பரமம் பரத்திற்
பரம்பரன் மேலாம் பரநன வாக
விரிந்த கனவிடர் வீட்டுஞ் சுழுனை
உரந்தகு மாநந்தி யாமுண்மை தானே. கஎ

2247 சார்வாம் பரசிவஞ் சத்தி பரநாதம்
மேலாய விந்து சதாசிவ மிக்கோங்கிப்
பாலாய்ப் பிரமன் அரியம ராபதி
தேவாம் உருத்திரன் ஈசனுங் காணிலே. சஅ

2248 கலப்பறி யார்கடல் சூழுல கேழும்
உலப்பறி யாருட லோடுயிர் தன்னை
அலப்பறிந் திங்கர சாளகி லாதார்
குறிப்பது கோல மடலது வாமே. கக

2249 பின்னை யறியும் பெருந்தவத் துண்மைசெய்
தன்னை யறியில் தயாபரன் எம்மிறை
முன்னை யறிவு முடிகின்ற காலமும்
என்னை யறியலுற் றின்புற்ற வாறே. உ0

2250 பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கர ணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கர ணங்களே. உக

2251 மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. உஉ

2252 ஆறு றகன்று நமவிட் டறிவாகி
வேறான தானே யகாரமாய் மிக்கோங்கி
ஈறார் பரையின் இருளற்ற தற்பரன்
பேறார் சிவாய அடங்கும்பின் முத்தியே. உந

2253 துரியத்தில் ஓரைந்துஞ் சொல்லக ராதி
விரியப் பரையின் மிகுநாத மந்தம்
புரியப் பரையின் பராவத்தா போதந்
திரியப் பரமந் துரியந் தெரியவே. உச

2254 ஐந்துஞ் சகலத் தருளாற் [1] புரிவற்றுப்
பந்திடுஞ் சுத்த அவத்தைப் பதைப்பினில்

பா. வே. 1. புரிவுற்றுப்.

நந்தி பராவத்தை நாடச் சுடர்முனம்
அந்தி யிருள்போலும் ஐம்மல மாறுமே. உரு

2255 ஐயைந்து மட்டுப் பகுதியும் மாயையும்
பொய்கண்ட மாமாயை தானும் புருடன்கண்
டெய்யும் படியாய் எவற்றுமாய் அன்றாகி
உய்யும் பராவத்தை யுள்ளுறல் சுத்தமே. உசு

2256 நின்றான் அருளும் பரமுமுன் னேயும்
ஒன்றாய் மருவும் உருவும் உபாதியுந்
சென்றா னெனைவிடத் தாக்கிற்செல் லாமையும்
நன்றான ஞானத்தின் நாதப் பிரானே. உஎ

## முக்குண நிர்க்குணம்

2257 சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்
வாய்த்த இராசத மன்னுங் கனவென்ப
ஓய்த்திடுந் தாமதம் உற்ற சுழுத்தியாம்
மாய்த்திடு நிர்க்குண மாசில் துரியமே. க

## அண்டாதி பேதம்

2258 பெறுபகி ரண்டம் பேதித்த அண்டம்
எறிகடல் ஏழின் மணல்அள வாகப்
பொறியொளி பொன்னணி யென்ன விளக்கிச்
செறியும்அண் டாசனத் தேவர் பிரானே. க

2259 ஆனந்த தத்துவம் அண்டா சனத்தின்மேல்
மேனிஐந் தாக வியாத்தமுப் பத்தாறுந்
தானந்த மில்லாத தத்துவ மானவை
ஈனமி லாஅண்டத் தெண்மடங் காமே. உ

## பதினோராந்தானமும் அவத்தையெனக்காணல்

2260 அஞ்சில் அமுதமோ ரேழின்கண் ஆனந்த
முஞ்சிலோங் காரமோ ரொன்பான் பதினொன்றில்
வஞ்சக மேநின்று வைத்திடுங் காயமாக்
கிஞ்சுகச் செவ்வாய்க் கிளிமொழி கேளே. க

2261 புருட னுடனே பொருந்திய சித்தம்
அருவமொ டாறும் அதீதத் துரியம்
விரியுஞ் சுழுத்தியின் மிக்குள்ள எட்டும்
அரிய பதினொன்று மாமவ் வவத்தையே. உ

2262 காட்டும் பதினொன்றுங் கைகலந் தாலுடல்
நாட்டி யழுத்திடின் நந்தியல் லாலில்லை

ஆட்டஞ்செய் யாத வதுவிதி யேயினை
ஈட்டு மதுதிடம் எண்ணலு மாமே. ௩

## கலவு செலவு

2263 கேவலந் தன்னிற் கலவச் சகலத்தின்
மேவுஞ் செலவு விடவரு நீக்கத்துப்
பாவுந் தனைக்காண்டன் மூன்றும் படர்வற்ற
தீதறு சாக்கிரா தீதத்திற் சுத்தமே. க

2264 வெல்லும் அளவில் விடுமின் வெகுளியைச்
செல்லும் அளவுஞ் செலுத்துமின் சிந்தையை
அல்லும் பகலும் அருளுடன் தூங்கினாற்
கல்லும் பிளந்து கடுவெளி யாமே. உ

## நின்மலாவத்தை

2265 ஊமைக் கிணற்றகத் துள்ளே யுறைவதோர்
ஆமையின் உள்ளே யமுவைகள் ஐந்துள
வாய்மையி னுள்ளே வழுவா தொடுங்குமேல்
ஆமையின் மேலுமோ ராயிரத் தாண்டே. க

2266 காலங்கி நீர்பூக் கலந்தஆ காயம்
மாலங்கி யீசன் பிரமன் சதாசிவன்
மேலஞ்சும் ஓடி விரவவல் லார்கட்குக்
காலனும் இல்லை கருத்தில்லை தானே. உ

2267 ஆன்மாவே மைந்த னாபினன் என்பது
தான்மா மறையறை தன்மை யறிகிலர்
ஆன்மாவே மைந்தன் அரனுக் கிவனென்றல்
ஆன்மாவும் இல்லையால் ஐயைந்தும் இல்லையே. ௩

2268 உதய மழுங்கல் ஒடுங்கலிம் மூன்றின்
கதிசாக் கிரங்கன வாதி சுழுத்தி
பதிதரு சேதனன் பற்றுந் துரியத்
ததிசுப னயனந் தானந்தி யாகுமே. ௪

2269 எல்லாந்தன் னுட்புக யாவுளுந் தானாகி
நல்லாந் துரியம் புரிந்தக்கால் நல்லுயிர்
பொல்லாத வாறாறுட் போகாது போதமாய்ச்
செல்லாச் சிவகதி சென்றெய்து மன்றே. ரு

2270 காய்ந்த இரும்பு கனலை யகன்றாலும்
வாய்ந்த கனலென்ன வாதனை நின்றாற்போல்

ஏய்ந்த காரணம் இறந்த துரியத்துத்
தோய்ந்த கருமத் துரிசக லாதே. சு

2271 ஆன மறையாதி யாமுரு நந்திவந்
தேனை யருள்செய் தெரிநனு வத்தையில்
ஆன வகையை விடுமடைந் தாய்விட
ஆன மலாதீதம் அப்பரந் தானே. எ

2272 சுத்த அதீதஞ் சகலத்தில் தோய்வுறில்
அத்தன் அருள்நீங்கா வாங்கனிற் றனுகச்
சித்த சுகத்தைத் தீண்டாச் சமாதிசெய்
தத்தனோ டொன்றற் கருள்முத லாமே. அ

2273 வேறுசெய் தானிரு பாதியின் மெய்த்தொகை
வேறுசெய் தானென்னை எங்கனும் விட்டுய்த்தான்
வேறுசெய் யாவருட் கேவலத் தேவிட்டு
வேறுசெய் யாவத்தன் மேவிநின் றானே. கூ

2274 கறங்கோலை கொள்ளிவட் டங்கட லில்திரை
நிறஞ்சேர் ததிமத்தின் மலத்தினில் நின்றங்
கறங்காண் சுவர்க்க நரகம் புவிசேர்ந்
[1] திறங்கா வுயிரரு ளாலேவை நிற்குமே. கo

2275 தானே சிவமான தன்மை தலைப்பட
ஆன மலமுமப் பாச பேதமு
மான குணமும் பரான்மா வுபாதியும்
பானுவின் முன்மதி போற்பட ராவே. கக

2276 நெருப்புண்டு நீருண்டு வாயுவும் உண்டங்
கருக்கனுஞ் சோமனும் அங்கி அமருந்
திருத்தக்க மாலுந் திசைமுகன் தானும்
உருத்திர சோதியும் உள்ளத்து ளாரே. கஉ

2277 ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்
ஞானத் திரியைக் கொளுவி அதனுட்புக்
கூனை யிருளற நோக்கும் ஒருவற்கு
வானக மேற வழிஎளி தாமே. கங

2278 ஆடிய காலில் அசைக்கின்ற வாயுவுந்
தாடித் தெழுந்த தமருக ஓசையும்
பாடி யெழுகின்ற வேதா கமங்களும்
நாடியி னுள்ளாக நான்கண்ட வாறே. கச

பா. வே. 1. திரங்கா.

2279 [1]முன்னைப் பிறவியிற் செய்த முதுதவம்
[2]பின்னைப் பிறவியிற் பெற்றால் அறியலாந்
தன்னை யறிவ தறிவாமஃ தன்றிப்
பின்னை யறிவது பேயறி வாகுமே. கரு

2280 செயலற் றிருக்கச் சிவானந்த மாகுஞ்
செயலற் றிருப்பார் சிவயோகந் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தொடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்தியுண் டாமே. கசு

2281 தானவ னாகுஞ் சமாதிகை கூடினால்
ஆன மலமறும் அப்பசுத் தன்மைபோம்
ஈனமில் காயம் இருக்கும் இருநிலத்
தூனங்கள் எட்டு மொழித்தொன்று வோர்கட்கே. கஎ

2282 தொலையா அரனடி [3]தோன்றுமஞ் சத்தி
தொலையா இருளொளி தோற்ற அணுவுந்
தொலையாத் தொழின்ஞானந் தொன்மையில் நண்ணித்
தொலையாத பெத்தமுத் திக்கிடை தோயுமே. கஅ

2283 தோன்றிய பெத்தமும் முத்தியுஞ் சூழ்சத்தி
மான்றுந் தெருண்டு முயிர்பெறு மற்றவை
தான்தரு ஞானந்தன் சத்திக்குச் சாதனு
மூன்றலில் லாவுள் ளொளிக்கொளி யாமே. ககூ

2284 அறிகின்றி லாதன ஐயேழும் ஒன்றும்
அறிகின்ற என்னை யறியா திருந்தேன்
அறிகின்றாய் நீயென் றருள்செய்தான் நந்தி
அறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே. உ0

2285 தானவ னாகிய ஞானத் தலைவனை
வானவ ராதியை மாமணிச் சோதியை
ஈனமின் ஞானத்தி னின்னருட் சத்தியை
ஊனமி லாள்தன்னை யூனிடைக் கண்டதே. உக

2286 ஒளியும் இருளும் பரையும் பரையுள்
அளிய தெனலாகும் ஆன்மாவை யன்றி
அளியும் அருளுந் தெருளுங் கடந்து
தெளிய அருளே சிவானந்த மாமே. உஉ

2287 ஆனந்த மாகும் அரனருட் சத்தியிற்
றானந்த மாமுயிர் தானே சமாதிசெய்

---

பா. வே. 1. முன்னை யறிவினிற். 2. பின்னை யறிவினைப். 3. தோன்றுமைஞ் சத்தி.

தானந்த மாயுணர் வாயுள் ளுணர்வுறிற்
கோனந்தம் வாய்க்கு மகாவாக் கியமாமே. உ௩

2288 அறிவிக்க வேண்டாம் அறிவுற் றயர்வோர்க்கும்
அறிவிக்க வேண்டாம் அறிவிற் செறிவோர்க்கும்
அறிவுற் றறியாமை எய்தநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வாரறி வோரே. உ௪

2289 சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்கூடிச்
சித்தும் அசித்துஞ் சிவசித்த தாய்நிற்குஞ்
சுத்தம் அசுத்தந் தொடங்காத் துரியத்துச்
சுத்தரா மூன்றுடன் சொல்லற் றவர்களே. உ௫

2290 தானே யறியான் அறிவிலோன் தானல்லன்
தானே யறிவான் அறிவு சதசத்தென்
றூனே இரண்டும் அரனரு ளாய்நிற்கத்
தானே யறிந்து சிவத்துடன் தங்குமே. உ௬

2291 தத்துவ ஞானந் தலைப்பட் டவர்கட்கே
தத்துவ ஞானந் தலைப்பட லாய்நிற்குந்
தத்துவ ஞானத்துத் தானவ னாகவே
தத்துவ ஞானனந் தந்தான் தொடங்குமே. உஎ

2292 தன்னை யறிந்து சிவனுடன் தானாக
மன்னு மலங்குணம் மாளும் பிறப்பறும்
பின்னது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி
நன்னது ஞானத்து முத்திரை நண்ணுமே. உஅ

2293 ஞானந்தன் மேனி கிரியை நடுவங்கம்
தானுறும் இச்சை உயிராகத் தற்பரன்
மேனிகொண் டைங்கரு மத்துவித் தாதலான்
மோனிகள் ஞானத்து முத்திரைப் பேற்றரே. உ௯

2294 உயிர்க்கறி வுண்மை உயிர்இச்சை மான
உயிர்க்குக் கிரியை யுயிர்மாயை சூக்கம்
உயிர்க்கிவை யூட்டுவோன் ஊட்டு மலமே
உயிர்ச்செய லன்றிவ் வுயிர்த்தன் னாலே. ௩௦

2295 தொழிலிச்சை ஞானங்கள் தொல்சிவ சீவர்
கழிவற்ற மாமாயை மாயையி னாகும்
பழிபற்ற காரண காரியம் பாழ்விட்
டழிவற்ற சாந்தாதி தன்சிவ னாமே. ௩௧

2296 இல்லதும் உள்ளதும் யாவையுந் தானாகி
இல்லதும் உள்ளது மாயன்றாம் அண்ணலைச்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமென்
றொல்லை யுணர்ந்தால் உயிர்க்குயி ராகுமே. ௩உ

2297 உயிரிச்சை யூட்டி யுழிதருஞ் சத்தி
உயிரிச்சை வாட்டி யொழித்திடு ஞானம்
உயிரிச்சை யூட்டி யுடனுற லாலே
உயிரிச்சை வாட்டி யுயர்பதஞ் சேருமே. ௩௩

2298 சேருஞ் சிவமானார் ஐம்மலந் தீர்ந்தவர்
ஓரொன்றி லாரைம் மலவிருள் உற்றவர்
பாரின்கண் விண்ண ரகம்புகும் பான்மையர்
ஆருங்கண் டோரார் அவையருள் என்றே. ௩௪

2299 எய்தினர் செய்யு மிருமாயா சத்தியின்
எய்தினர் செய்யும் இருஞான சத்தியின்
எய்தினர் செய்யும் இருஞால சத்தியின்
எய்தினர் செய்யும் இறையருள் தானே. ௩௫

2300 திருந்தனர் விட்டார் திருவி னரகந்
திருந்தனர் விட்டார் திருவார் சுவர்க்கந்
திருந்தனர் விட்டார் செறிமலக் கூட்டந்
திருந்தனர் விட்டார் சிவமா யவமே. ௩௬

2301 அவமுஞ் சிவமும் அறியார் அறியார்
அவமுஞ் சிவமும் அறிவார் அறிவார்
அவமுஞ் சிவமும் அருளால் அறிந்தால்
அவமுஞ் சிவமும் அவனரு ளாமே. ௩௭

2302 அருளான சத்தி யனல்வெம்மை போலப்
பொருளவ னாகத்தான் போதம் புணரும்
இருளொளி யாய்மீண்டு மும்மல மாகுந்
திருவரு ளானந்தி செம்பொரு ளாமே. ௩௮

2303 ஆதித்தன் தோன்ற வரும்பது மாதிகள்
பேதித்த தவ்வினை யாற்செயல் சேதிப்ப
ஆதித்தன் றன்கதி ரால்வை சேட்டிப்பப்
பேதித்துப் பேதியா வாறருட் பேதமே. ௩௯

2304 பேதம் அபேதம் பிறழ்பேதா பேதமும்
போதம் புணர்போதம் போதமும் நாதமும்
நாத முடனாத நாதாதி நாதமும்
ஆதன் அருளின் அருளிச்சை யாமே. ௪0

2305 மேவிய பொய்க்கரி யாட்டும் வினையெனப்
பாவிய பூதங்கொண் டாட்டிப் படைப்பாதி
பூவியல் கூட்டத்தாற் போதம் புரிந்தருள்
ஆவியை நாட்டும் அரனரு ளாமே. ௪௧

2306 ஆறு றகன்று தனையறிந் தானவன்
ஈறுகி யாவினு மியாவுந் தனிலெய்த
வேறாய் வெளிபுக்கு வீடற்று னம்மருள்
தேறாத் தெளிவுற்றுத் தீண்டச் சிவமாமே. ௪௨

2307 தீண்டற் கரிய திருவடி நேயத்தை
மீண்டுற் றருளால் விதிவழி யேசென்று
தூண்டிச் சிவஞான மாவினைத் தானேறித்
தாண்டிச் சிவனுடன் சாரலு மாமே. ௪௩

2308 சார்ந்தவர் சாரணர் சித்தர் சமாதியர்
சார்ந்தவர் மெய்ஞ்ஞான தத்துவ சாத்தியர்
சார்ந்தவர் நேயந் தலைப்பட்ட ஆனந்தர்
சார்ந்தவர் சத்த அருட்டன்மை யாரே. ௪௪

2309 தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவந்
தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்
தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்
தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே. ௪௫

2310 தன்னினில் தன்னை யறியுந் தலைமகன்
தன்னினில் தன்னை யறியத் தலைப்படுந்
தன்னினில் தன்னைச் சார்கில னாகில்
தன்னினில் தன்னையுஞ் சார்தற் கரியவே. ௪௬

2311 அறியகி லேனென் றரற்றாதே நீயும்
நெறிவழி யேசென்று நேர்பட்ட பின்னை
இருசுட ராகி இயற்றவல் லானும்
ஒருசுட ராவந்தென் உள்ளத்துள் ளாமே. ௪௭

2312 ஓம்புகின் றானுல கேழையும் உள்நின்று
கூம்புகின் றார்குணத் தின்னொடுங் கூறுவர்
தேம்புகின் றார்சிவஞ் சிந்தைசெய் யாதவர்
கூம்பகில் லார்வந்து கொள்ளலு மாமே. ௪௮

2313 குறியறி யார்கள் குறிகாண மாட்டார்
குறியறி யார்கடங் கூடல் பெரிது
குறியறி யாவகை கூடிமின் கூடி
அறிவறி யாவிருந் தானமு மாமே. ௪௯

2314 ஊனோ வுயிரோ வுறுகின்ற தேதின்பம்
வானோர் கலவி மயக்கத் துறநிற்கத்
தானோ பெரிதறி வோமென்னு மானுடர்
தானே பிறப்போ டிறப்பறி யாரே. ௫௦

## 4. அறிவுதயம்

2315 தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை யறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே. ௧

2316 அங்கே யடற்பெருந் தேவரெல் லாந்தொழச்
சிங்கா சனத்தே சிவனிருந் தானென்று
சங்கார் வளையுஞ் சிலம்புஞ் சரேலெனப்
பொங்கார் குழலியும் போற்றிஎன் றாளே. ௨

2317 அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள்செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே. ௩

2318 அறிவுக் கழிவில்லை யாக்கமும் இல்லை
அறிவுக் கறிவல்ல தாதாரம் இல்லை
அறிவே யறிவை யறிகின்ற தென்றிட்
டறைகின் றனமறை யீறுகள் தாமே. ௪

2319 மன்னிநின் றாரிடை வந்தருள் மாயத்து
முன்னிநின் றானை மொழிந்தேன் முதல்வனும்
பொன்னின்வந் தானோர் புகழ்திரு மேனியைப்
பின்னிநின் றேனே பெரியையென் றானே. ௫

2320 அறிவறி வாக அறிந்தன்பு செய்மின்
அறிவறி வாக அறியுமிவ் வண்ணம்
அறிவறி வாக அணிமாதி சித்தி
அறிவறி வாக அறிந்தனன் நந்தியே. ௬

2321 அறிவறி வென்றங் கரற்றும் உலகம்
அறிவறி யாமை யாரும் அறியார்
அறிவறி யாமை கடந்தறி வானால்
அறிவறி யாமை யழகிய வாறே. ௭

2322 அறிவறி யாமையை நீவி யவனே
பொறிவா யொழிந்தெங்குந் தானான போது

அறிவா யவற்றினுள் தானு யறிவின்
செறிவாகி நின்றவன் சிவனு மாமே. ௮

2323 அறிவுடை யார்நெஞ் சகலிட மாவ
தறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவ
தறிவுடை யார்நெஞ்சொ [1]டாதி பகவனும்
அறிவுடை யார்நெஞ்சத் தங்குநின் றானே. ௯

2324 மாயனு மாகி மலரோன் இறையுமாய்க்
காயநன் னாடுக் கருமுத லானவன்
சேயன் அணியன் தித்திக்குந் தீங்கரும்
பாயமு தாகிநின் றண்ணிக்கின் றானே. ௧௦

2325 என்னை யறிந்திலேன் இத்தனை காலமும்
என்னை யறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
என்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடா
தென்னையிட் டென்னை உசாவுகின் றானே. ௧௧

2326 மாய விளக்கது நின்று மறைந்திடுந்
தூய விளக்கது நின்று சுடர்விடுங்
காய விளக்கது நின்று கனன்றிடுஞ்
சேய விளக்கினைத் தேடுகின் றேனே. ௧௨

2327 தேடுகின் றேன்திசை யெட்டோ டிரண்டையும்
நாடுகின் றேனல மேபுடை யானடி
பாடுகின் றேன்பர மேதுணை யாமெனக்
கூடுகின் றேன்குறை யாமனத் தாலே. ௧௩

2328 முன்னை முதல்வினை யாட்டத்து புன்வங்கொர்
பின்னைப் பெருமலம் வந்தவர் போர்த்திட்டுத்
தன்னைத் தெரிந்துதன் பண்டைத் தலைவன்தாள்
மன்னிச் சிவமாக வாரா பிறப்பே. ௧௪

## 5. ஆநந்தம்

2329 வேதத்தின் அந்தமும் மிக்கசித் தாந்தமும்
நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்
ஓதத் தகுமெட் டியோகாந்த அந்தமும்
ஆதிக்க லாந்தமும் ஆநந்த மாமே. ௧

2330 அந்தமோ ராறும் அறிவார் அதிசுத்தர்
அந்தமோ ராறும் அறிவார் அமலத்தர்

பா. வே. 1. ஆதிப்பிரானும்.

அந்தமோ ராறும் அறியார் அவர்தமக்
கந்தமோ டாதி அறியவொண் ணாதே. உ

2331 தானான வேதாந்தந் தானென்னுஞ் சித்தாந்த
மானாந் துரியத் தணுவன் றனைக்கண்டு
தேனார் பராபரஞ் சேர்சிவ யோகமாய்
ஆனா மலமற் றருஞ்சித்தி யாதலே. ௩

2332 நித்தம் பரனோ டுயிருற்று நீள்மனஞ்
சத்த முதல்ஐந்துந் தத்துவத் தால்நீங்கிச்
சுத்த மசுத்தந் தொடரா வகைநினைந்
தத்தன் பரன்பால் அடைதல்சித் தாந்தமே. ௪

2333 மேவும் பிரமனே விண்டு உருத்திரன்
மேவுசெய் யீசன் சதாசிவன் மிக்கப்பால்
மேவும் பரவிந்து நாதம் விடாவாறு
ரோவும் பொழுதணு வொன்றுள தாமே. ௫

2334 உள்ள வுயிராறா றாகும் உபாதியைத்
தெள்ளி யகன்றுநா தாந்தத்தைச் செற்றுமேல்
உள்ள இருள்நீங்க வோருணர் வாகுமேல்
எள்ளலின் நாதாந்தத் தெய்திடும் போதமே. ௬

2335 தேடும் இமய நியமாதி சென்றகன்
றாடுஞ் சமாதியில் உற்றுப் படர்சிவன்
பாடுறச் சீவன் பரமாகப் பற்றறக்
கூடும் உபசாந்தம் யோகாந்தக் கொள்கையே. ௭

2336 கொள்கையி லான கலாந்தங் குறிக்கொள்ளில்
விள்கையி லான நிவிர்த்தாதி மேதாதிக்
குள்ளன வாம்விந்து வுள்ளே யொடுங்கலுந்
தெள்ளி யதனைத் தெளிதலு மாமே. ௮

2337 தெளியு மிவையன்றித் தேரைங் கலைவே
றொளியுள் அமைத்துள்ள தோரவல் லார்கட்
களியவ னாகிய மந்திரந் தந்திரந்
தெளிவுப தேச ஞானத்தொ டைந்தாமே. ௯

2338 ஆகும் அனாதி கலையா கமவேதம்
ஆகுமத் தந்திர மந்நூல் வழிநிற்றல்
ஆகு மனாதி யுடலல்லா மந்திரம்
ஆகுஞ் சிவபோ தகம்உப தேசமே. ௧0

2339 தேசார் சிவமாகுந் தன்ஞானத் தின்கலை
ஆசார நேய மறையுங் கலாந்தத்துப்
பேசா வுரையுணர் வற்ற பெருந்தகை
வாசா மகோசர மாநந்தி தானே. கக

2340 தானவ னாகுஞ் சமாதி தலைப்படில்
ஆன கலாந்தநா தாந்தயோ காந்தமும்
ஏனைய போதாந்தம் சித்தாந்த மானது
ஞான மெனநேய ஞாதுரு வாகுமே. கஉ

2341 ஆறந்த முஞ்சென் றடங்குமந் நேயத்தே
ஆறந்த ஞேயம் அடங்கிடு ஞாதுரு
கூறிய ஞானக் குறியுடன் வீடவே
தேறிய மோனஞ் சிவானந்த வுண்மையே. கங

2342 உண்மைக் கலையாறோ டைந்தான் அடங்கிடும்
உண்மைக் கலாந்தம் இரண்டைந்தோ டேழந்தம்
உண்மைக் கலையொன்றில் ஈறாய நாதாந்தத்
துண்மைக் கலைசொல்ல வோரந்த மாமே. கச

2343 ஆவுடை யானை யரன்வந்து கொண்டபின்
தேவுடை யான்எங்கள் சீர்நந்தி தாடந்து
வீவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி யருளிய கோனைக் கருதுமே. கரு

2344 கருது மவர்தங் கருத்தினுக் கொப்ப
அரனுரை செய்தருள் ஆகமந் தன்னில்
வருசமய யப்புற மாயைமா மாயை
உருவிய வேதாந்த சித்தாந்த வுண்மையே. கசா

2345 வேதாந்தங் கேட்க விருப்பொடு முப்பதப்
போதாந்த மான பிரணவத் துள்புக்கு
நாதாந்த வேதாந்த போதாந்த நாதனை
[1]ஈதாம் எனுதுகண் டின்புறு வோர்களே. கஎ

2346 வேதாந்தஞ் சித்தாந்தம் வேறிலா முத்திரை
போதாந்த ஞானம் யோகாந்தம் பொதுநேய
நாதாந்தம் ஆனந்தஞ் சீரோ தயமாகும்
மூதாந்த முத்திரை மோனத்து மூழ்கவே. கஅ

2347 வேதாந்தந் தன்னில் உபாதிமே லேழ்விட
நாதாந்த பாசம் விடுநல்ல தொம்பதம்

---

பா. வே. 1. ஈதாந்தம்.

நீதாந்த காரணே பாதியேழ் மெய்ப்பரன்
போதாந்த தற்பதம் போமசி என்பவே. கக

2348 வேதாந்த ஞானம் விளங்க விதியிலோர்
நாதாந்த போதம் நணுகிய போக்கது
போதாந்த மாம்பரன் பாற்புகப் புக்கதால்
நாதாந்த முத்தியுஞ் சித்தியும் நண்ணுமே. உ0

2349 அண்டங்கள் ஏழுங் கடந்தகன் றப்பாலும்
உண்டென்ற பேரொளிக் குள்ளா முளவொளி
பண்டுறு நின்ற பராசத்தி யென்னவே
கொண்டவ னன்றிநின் றுன்எங்கள் கோவே. உக

2350 கோவுணர்த் துஞ்சத்தி யாலே குறிவைத்துத்
தேவுணர்த் துங்கரு மஞ்செய்தி செய்யவே
பாவனைத் தும்படைத் தர்ச்சனை பாரிப்ப
ஓவனைத் துண்டொழி யாத ஒருவனே. உஉ

2351 ஒருவனை யுன்னார் உயிர்தனை யுன்னார்
இருவினை யுன்னார் இருமாயை யுன்னார்
ஒருவனு மேயுள் ளுணர்த்திநின் றூட்டி
அருவனு மாகிய ஆதாரத் தானே. உங

2352 அரனன்பர் தானம தாகிச் சிவத்து
வருமவை சத்திகள் முன்னு வகுத்திட்
டரனுறு சந்நிதி சேட்டிப்ப என்றுந்
திரனுறு தோயாச் சிவாநந்தி யாமே. உச

2353 வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டயிக்கியஞ்
சாதா ரணஞ்சிவ சாயுச்சிய மாமே. உரு

2354 சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்
அவமவ மாகு மவ்வவ் விரண்டுஞ்
சிவமாஞ் சதாசிவன் செய்தொன்று ஞானல்
நவமான வேதாந்த ஞானசித் தாந்தமே. உசா

2355 சித்தாந்தத் தேசிவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே. உஎ

2356 சிவனைப் பரமனுட் சீவனுட் காட்டும்
அவமற்ற வேதாந்த சித்தாந்த மானன்
நவமுற் றவத்தையில் ஞானஞ் சிவமாந்
தவமிக் குணர்ந்தவர் தத்துவத் தாரே. உஅ

2357 தத்துவ மாகுஞ் சகள வகளங்கள்
தத்துவ மாம்விந்து நாதஞ் சதாசிவந்
தத்துவ மாகுஞ் சிவன்றன் தற்பரந்
தத்துவ மாஞ்சிவ சாயுச் சியமே. உகூ

2358 வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே. ௩0

2359 பரானந்தி மன்னுஞ் சிவானந்தம் எல்லாம்
பரானந்த மேன்மூன்றும் பாழுறு னந்தம்
விராமுத்தி ரானந்த மெய்ந்நட னந்தம்
பொராநின்ற வுள்ளமே பூரிப்பி யாமே. ௩க

2360 ஆகுங் கலாந்தம் இரண்டந்த நாதாந்தம்
ஆகும் பொழுதிற் கலையந்த மாதலால்
ஆகும் அரனேபஞ் சாந்தக னாமென்ன
ஆகு மறையா கமமொழிந் தானன்றே. ௩உ

2361 அன்றாகு மென்னுமை வகையந்தந் தன்னை
ஒன்றான வேதாந்த சித்தாந்த முள்ளிட்டு
நின்ற வியோகாந்த நேர்படு நேர்பட்டான்
மன்றாடி பாத மருவலு மாமே. ௩௩

2362 அறுதி சிவனைம் மலமற்றப் பாலாட்
அறுதி யடக்கித் தனைக்கண் டானுக்
கறுதி மலங்கெடத் தத்துவா தீதம்
விறுவுகிர் பாலாதல் வேதாந்த உண்மையே. ௩௪

2363 உயிரைப் பரனை யுயர்சிவன் தன்னை
அயர்வற் றறிதொந் தத்தசி யதனுந்
செயலற் றறிவாகி யுஞ்சென் றடங்கி
அயுர்வற்ற வேதாந்த சித்தாந்த மாமே. ௩௫

2364 மன்னிய சோகமா மாமறை யாளர்தஞ்
சென்னிய தான [1]சிவயோகமாம் ஈதென்ன

பா. வே. 1. சிவோகமாம்.

அன்னது சித்தாந்த மாமறை யாய்பொருள்
துன்னிய ஆகம நூலெனத் தோன்றுமே. ௩௬

2365 முதலாகும் வேத முழுதா கமமப்
பதியான ஈசன் பகர்ந்த திரண்டு
முதிதான வேத முறைமுறை யாலமர்ந்
ததிகாதி வேதாந்த சித்தாந்த மாகவே. ௩௭

## 6. பதிபசுபாசம் வேறின்மை

2366 அறிவறி வென்ற அறிவு மனாதி
அறிவுக் கறிவாம் பதியும் அனாதி
அறிவினைக் கட்டிய பாசம் அனாதி
அறிவு பதியிற் பிறப்பறுந் தானே. ௧

2367 பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு
பசுத்தன்மை நீக்கிப் பாசம் அறுத்தாற்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே. ௨

2368 கிடக்கின்ற வாறே கிளர்பயன் மூன்று
நடக்கின்ற ஞானத்தை நாடோறு நோக்கித்
தொடக்கொன்றும் இன்றித் தொழுமின் தொழுதாற்
குடக்குன்றி விட்ட விளக்கது வாமே. ௩

2369 பாசஞ்செய் தானைப் படர்சடை நந்தியை
நேசஞ்செய் தாங்கே நினைப்பர் நினைத்தலுங்
கூசஞ்செய் துன்னிக் குறிக்கொள்வ தெவ்வண்ணம்
வாசஞ்செய் பாசத்துள் வைக்கின்ற வாறே. ௪

2370 விட்ட [1]விடமேறா வாறுபோல் வேறாகி
விட்ட பசுபாச மெய்கண்டோன் மேவுறான்
கட்டிய கேவலங் காணுஞ் சகலத்தைச்
சுட்டு நனவில் அதீதத்துள் தோன்றுமே. ௫

2371 நாடும் பதியுடன் நற்பசு பாசமும்
நீடுமா நித்தன் நிலையறி வாரில்லை
நீடிய நித்தம் பசுபாச நீக்கமும்
நாடிய சைவர்க்கு நந்தி யளித்ததே. ௬

2372 ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலே றெனநிற்கும்

---

பா. வே. 1. விடமேறு.

ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய அரனிலை யாய்ந்துகொள் வார்கட்கே. ஏ

2373 பதிபசு பாசம் பயில்வியா நித்தம்
பதிபசு பாசம் பகர்வோர்க் காறுக்கிப்
பதிபசு பாசத்தைப் பற்றற நீக்கும்
பதிபசு பாசம் பயில நிலாவே. அ

2374 பதியும் பசுவொடு பாசமும் மேலைக்
கதியும் பசுபாச நீக்கமுங் காட்டி
மதிதந்த வானந்த மாநந்தி காணுந்
துதிதந்து வைத்தனன் சுத்தசை வத்திலே. கூ

2375 அறிந்தணு மூன்றுமே யாங்கணு மாகும்
அறிந்தணு மூன்றுமே யாங்கணு மாக
அறிந்த அணுதி வியாத்தனு மாவன்
அறிந்த பதிபடைப் பானங் கவற்றையே. க0

2376 படைப்பாதி யாவது பரஞ்சிவஞ் சத்தி
இடைப்பால் உயிர்கட் கடைத்திவை தாங்கல்
படைப்பாதி சூக்கத்தைத் தற்பரஞ் செய்யப்
படைப்பாதி தூய மலயப் பரத்திலே. கக

2377 ஆகிய சூக்கத்தை யவ்விந்து நாதமும்
ஆகிய சத்தி சிவபர மேலேந்தால்
ஆகிய சூக்கத்தில் ஐங்கரு மஞ்செய்வோன்
ஆகிய தூயவீ சானனு மாமே. கஉ

2378 மேவும் பரசிவ மேற்சத்தி நாதமும்
மேவும் பரவிந்து ஐம்முகன் வேறீசன்
மேவும் உருத்திரன் மால்வேதா மேதினி
ஆகும் படிபடைப் போனர னாமே. கங

2379 படைப்பு மளிப்பும் பயிலிளைப் பாற்றுந்
துடைப்பு மறைப்புமுன் தோன்ற அருளுஞ்
சடத்தை விடுத்த அருளுஞ் சகலத்
தடைத்த அணுதியை யுந்தென லாமே. கச

2380 ஆற்று குண்டலி தன்னின் அகத்திட்டு
வேறுகு மாயையின் மூப்பான் மிகுத்திட்டங்
கீறுங் கருவி யிவற்றால் வகுத்திட்டு
வேறும் பதிபசு பாசம்வீ டாகுமே. கரு

2381 வீட்கும் பதிபசு பாசமும் மீதுற
வாட்கும் இருவினை யாங்கவற் றுணர்ந்
தாட்கு நரக சுவர்க்கத்திற் றுனிட்டு
நாட்குற நான்தங்கு நற்பாச நண்ணுமே. ௧௬

2382 நண்ணிய பாசத்தில் நானெனல் ஆணவம்
பண்ணிய மாயையில் ஊட்டற் பரிந்தனன்
கண்ணிய சேதனன் கண்வந்த பேரருள்
அண்ணல் அடிசேர் உபாயம தாகுமே. ௧௭

2383 ஆகும் உபாயமே யன்றி யழுக்கற்று
மோக மறச்சுத்த ஞ்தற்கு மூலமே
ஆகு மறுவை யழுக்கேற்றி யேற்றல்போல்
ஆகுவ தெல்லாம் அருட்பாச மாகுமே. ௧௮

2384 பாசம் பயிலுயிர் தானே பரமுதல்
பாசம் பயிலுயிர் தானே பசுவென்ப
பாசம் பயிலப் பதிபர மாதலாற்
பாசம் பயிலப் பதிபசு வாகுமே. ௧௯

2385 அத்தத்தில் உத்தரங் கேட்ட அருந்தவர்
அத்தத்தில் உத்தர மாகும் அருள்மேனி
அத்தத்தி னூலே யணையப் பிடித்தலும்
அத்தத்தில் தம்மை யடைந்துநின் றாரே. ௨௦

## 7. அடி தலை யறியுந் திறங்கூறல்

2386 காலுந் தலையும் அறியார் கலதிகள்
காலந்தச் சத்தி யருளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்டவீ டாகுமே. ௧

2387 தலையடி யாவ தறியார் காயத்தில்
தலையடி யுச்சியில் உள்ளது மூலந்
தலையடி யான அறிவை யறிந்தோர்
தலையடி யாகவே தானிருந் தாரே. ௨

2388 நின்றான் நிலமுழு தண்டமும் மேலுற
வன்றாள் அசுரர் அமரரும் உய்ந்திடப்
பின்றான் உலகம் படைத்தவன் பேர்நந்தி
தன்றா ளிணையென் தலைமிசை யானதே. ௩

2389 சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது

எந்தையும் என்னை யறியகி லானாகில்
எந்தையை யானும் அறியகி லேனே. ௪

2390 பன்னாத பாரொளிக் கப்புறத் தப்பால்
என்னா யகனார் இசைந்தங் கிருந்திட
முன்னா ஒளியு முறைசெய்யா மந்திரஞ்
சொன்னான் கழலிணை சூடிநின் றேனே. ௫

2391 பதியது தோற்றும் பதமது வைம்மின்
மதியது செய்து மலர்ப்பத மோது
நதிபொதி யுஞ்சடை நாரியோர் பாகன்
கதிசெயுங் காலங்கள் கண்டுகொ ளீரே. ௬

2392 தரித்துநின் றானடி தன்னிட நெஞ்சில்
தரித்துநின் றானம ராபதி நாதன்
கரித்துநின் றான்கரு தாதவர் சிந்தை
பரித்துநின் றானப் பரிபாகத் தானே. ௭

2393 ஒன்றுண்டு தாமரை யொண்மலர் மூன்றுள
தன்றாதை தாளும் இரண்டுள காயத்துள்
நன்றாகக் காய்ச்சிப் பதஞ்செய வல்லார்கட்
கின்றேசென் றீசனை யெய்தலு மாமே. ௮

2394 கால்கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற
மால்கொண்ட நெஞ்சின் மயக்கிற் றுயக்கறப்
பால்கொண்ட வென்னைப் பரன்கொள்ள நாடினான்
மேல்கொண்டென் செம்மை விளம்பவொண் ணாதே. ௯

2395 பெற்ற புதல்வர்போற் பேணிய நாற்றமுங்
குற்றமுங் கண்டு குணங்குறை செப்பவோர்
பற்றைய வீச னுயிரது பான்மைக்குச்
செற்றமி லாச்செய்கைக் கெய்தின செப்புமே. ௰

## 8. முக் குற்றம்

2396 மூன்றுள குற்ற முழுதும் நலிவன
மான்றிருள் தூங்கி மயங்கிக் கிடந்தன
மூன்றினை நீங்கினர் நீக்கினர் நீங்காதார்
மூன்றினுட் பட்டு முடிகின்ற வாறே. ௧

2397 காமம் வெகுளி மயக்க மிவைகடிந்
தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
ஓமெனும் ஓசையி னுள்ளே யுறைவதோர்
தாம மதனைத் தலைப்பட்ட வாறே. ௨

## 9. முப் பதம்

2398 தோன்றிய தொம்பதந் தற்பதஞ் சூழ்தர
ஏன்ற அசிபதம் இம்மூன்றே டெய்தினேன்
ஆன்ற பராபர மாகும் பிறப்பற
வேன்றனன் மாளச் சிவமா யிருக்குமே. க

2399 போதந் தனையுன்னிப் பூதாதி பேதமும்
ஓதுங் கருவிதொண் ணூறுடன் ஓராறு
பேதமும் நாதாந்தப் பெற்றியிற் கைவிட்டு
வேதஞ்சொல் தொம்பத மாகுதன் மெய்ம்மையே. உ

2400 தற்பதம் என்றுந் தொம்பதந் தானென்றும்
நிற்ப தசியத்துள் நேரிழை யாள்பதஞ்
சொற்பதத் தாலுந் தொடரவொண் ணாச்சிவன்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. ங

2401 அணுவும் பரமும் அசிபதத் தேய்ந்து
கணுவொன் றிலாத சிவமுங் கலந்தால்
இணையறு பால்தேன் அமுதென இன்பத்
துணையது வாயுரை யற்றிடத் தோன்றுமே. ச

2402 தொம்பதந் தற்பதந் தோன்றும் அசிபதம்
நம்பிய சீவன் பரன்சிவ னாய்நிற்கும்
அம்பத மேலைச் சொரூபமா வாக்கியஞ்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே. ரு

2403 ஐம்ப தறியா தவரு மவர்சிலர்
உம்பனை நாடி யுரைமுப்ப தத்திடைச்
செம்பர மாகிய வாசி செலுத்திடத்
தம்பர யோகமாய்த் தானவ னாகுமே. சா

2404 நந்தி யறிவும் நழுவில் அதீதமாம்
இந்தியஞ் சத்தாதி விடவிய னாகும்
நந்திய மூன்றிரண் டொன்று நலமைந்து
நந்தி னனவாதி மூட்டும் அநாதியே. எ

2405 பரதுரி யத்து நனவு படியுண்ட
விரிவிற் கனவும் இதனுப சாந்தத்
துரிய சுழுனையு மோவுஞ் சிவன்பால்
அரிய துரியம் அசிபத மாமே. அ

## 10. முப் பரம்

2406 தோன்றியென் னுள்ளே சுழன்றெழு கின்றதோர்
மூன்று மடிமண் டலத்து முதல்வனை
ஏன்றெய்தி யின்புற் றிருந்தே யிளங்கொடி
நான்று நலஞ்செய் நலந்தரு மாறே. ௧

2407 மன்று நிறைந்தது மாபர மாயது
நின்று நிறைந்தது நேர்தரு நந்தியுங்
கன்று நினைந்தெழு தாயென வந்தபின்
குன்று நிறைந்த குணவிளக் காமே. ௨

2408 ஆறாறு தத்துவத் தப்புறத் தப்பரங்
கூறா வுபதேசங் கூறிற் சிவபரம்
வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனார்
பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே. ௩

2409 பற்றறப் பற்றிற் பரம்பதி யாவது
பற்றறப் பற்றிற் பரனறி வேபரம்
பற்றறப் பற்றினிற் பற்றவல் லோர்கட்கே
பற்றறப் பற்றிற் பரம்பர மாமே. ௪

2410 பரம்பர மான பதிபாசம் பற்றாப்
பரம்பர மாகும் பரஞ்சிவ மேவப்
பரம்பர மான பரசிவா னந்தம்
பரம்பர மாகப் படைப்ப தறிவே. ௫

2411 நனவிற் கலாதியா நாலொன் றகன்று
தனியுற்ற கேவலந் தன்னில் தானாகி
நினைவுற் றகன்ற அதீதத்துள் நேயந்
தனையுற் றிடத்தானே தற்பர மாமே. ௬

2412 தற்கண்ட தூயமுந் தன்னில் விலாசமும்
பிற்காணுந் தூடணந் தானும் பிறழ்வுற்றுத்
தற்பரன் கால பரமுங் கலந்தற்ற
நற்பரா தீதமு நாடக ராதியே. ௭

## 11. பரலட்சணம்

2413 அதீதத்து ளாகி யகன்றவன் நந்தி
அதீதத்து ளாகி யறிவிலோன் ஆன்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயிர் ஒன்றாம்
பதியிற் பதியும் பரவுயிர் தானே. ௧

2414 ஆதியும் அந்தமும் இல்லா வரும்பதி
சோதிப் பரஞ்சுடர் தோன்றத்தோன் றுமையின்
நீதிய தாய்நிற்கும் நீடிய வப்பர
போதம் உணர்ந்தவர் புண்ணியத் தோரே. உ

2415 துரியங் கடந்து துரியா தீதத்தே
அரிய வியோகங்கொண் டம்பலத் தாடும்
பெரிய பிரானைப் பிரணவக் கூபத்தே
துரியவல் லார்க்குத் துரிசில்லை தானே. ௩

2416 செம்மைமுன் னிற்பச் சுவேதந் திரிவபோல்
[1]அம்மெய்ப் பரத்தோ டணுவனுள் ளாயிடப்
பொய்ம்மைச் சகமுண்ட போத வெறும்பாழிற்
செம்மைச் சிவமேரு சேர்கொடி யாகுமே. ௪

2417 வைச்ச கலாதி வருதத்து வங்கெட
வெச்ச இருமாயை வேறாக வேரறுத்
துச்ச பரசிவ மாமுண்மை யொன்றவே
அச்சம் அறுத்தென்னை யாண்டனன் நந்தியே. ௫

2418 என்னை யறிய இசைவித்த என்னந்தி
என்னை யறிந்தறி யாத விடத்துய்த்துப்
பின்னை யொளியிற் சொரூபம் புறப்பட்டுத்
தன்னை யளித்தான் தற்பர மாகவே. ௬

2419 பரந்துஞ் சுருங்கியும் பார்புனல் வாயு
நிரந்த வளியொடு ஞாயிறு திங்கள்
அரந்த அரனெறி யாயது வாகித்
தரந்த விசும்பொன்று தாங்கிநின் றானே. ௭

2420 சத்தின் நிலையினில் தானான சத்தியுந்
தற்பரை யாய்நிற்குந் தானும் பரற்குடல்
உய்த்தகு மிச்சையில் ஞானாதி பேதமாய்
நித்த நடத்து நடிக்குமா நேயத்தே. ௮

2421 மேலொடு கீழ்பக்க மெய்வாய்கண் ணாசிகள்
பாலிய விந்து பரையுட் பரையாகக்
கோலிய நான்கவை ஞானங் கொணர்விந்து
சீலமி லாவணுச் செய்திய தாமே. ௯

2422 வேறா மதன்தன்மை போலுமிக் காயத்தில்
ஆறாம் உபாதி யனைத்தாகுந் தத்துவம்

பா. வே. 1. அம்மைப்.

பேரும் பரவொளி தூண்டும் பிரகாசமாய்
ஊறு யுயிர்த்துண் டுறங்கிடு மாயையே. ௧௦

2423 தற்பர மன்னுந் தனிமுதற் பேரொளி
சிற்பரந் தானே செகமுண்ணும் போதமுந்
தொற்பதந் தீர்பாழிற் சுந்தரச் சோதிபுக்
கப்புற மற்றதிங் கொப்பில்லை தானே. ௧௧

2424 பண்டை மறைகள் பரவான் உடலென்னுந்
துண்ட மதியோன் துரியாதி தந்தன்னைக்
கண்டு பரனுமக் காரணோ பாதிக்கே
மிண்டி னவன்சுத்த னாகான் வினவிலே. ௧௨

2425 வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற
தளியா கியதற் பரங்கா ணவன்றான்
வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற
வெளியாய சத்தி யவன்வடி வாமே. ௧௩

2426 மேருவி னோடே விரிகதிர் மண்டலம்
ஆர நினையும் அருந்தவ யோகிக்குச்
சீரார் தவஞ்செய்யிற் சிவனருள் தானாகும்
பேரவும் வேண்டாம் பிறிதில்லை தானே. ௧௪

## 12. முத் துரியம்

2427 நனவாதி மூன்றினிற் சீவ துரியந்
தனதாதி மூன்றினிற் பரதுரி யந்தான்
நனவாதி மூன்றி னிற்சிவ துரியமா
மினதாகுந் தொந்தத் தசிபதத் தீடே. ௧

2428 தானா நனவில் துரியந்தன் தொம்பதந்
தானுந் துரிய நனவாதி தான்மூன்றில்
ஆனாப் பரபத மற்ற தருநனா
வானன மேன்மூன்றுந் துரியம் அணுகுமே. ௨

2429 அணுவின் துரியத்து நான்கும தாகிப்
பணியும் பரதுரி யம்பயி னன்குந்
தணிவிற் பரமாகிச் சார்முத் துரியக்
கணுவிலிந் நான்குங் கலந்தவீ ரைந்தே. ௩

2430 ஈரைந் தவத்தை யிசைமுத் துரியத்துள்
நேரந்த மாக நெறிவழி யேசென்று
பாரந்த மான பராபரத் தயிக்கியத்
தோரந்த மாமிரு பாதியைச் சேர்த்திடே. ௪

2431 தொட்டே யிருமின் துரிய நிலத்தினை
எட்டா தெனினின் றெட்டும் இறைவனைப்
பட்டாங் கறிந்திடிற் பன்னு வுதடுகள்
தட்டா தொழிவதோர் தத்துவந் தானே. ரு

2432 மனவு நனவு கனவது புந்தி
நினைவி லகந்தை சுழினையுள் நிற்றல்
அதனை அறிசித்தந் துரியமிம் மூன்றின்
நினைவறல் மற்றது நேயத் தளவே. சு

2433 நனவின் நனவாதி நாலாந் துரியந்
தனதுயிர் தொம்பத மாமாறு போல
வினையறு சீவன் நனவாதி யாகத்
தனைய பரதுரி யந்தற் பதமே. எ

2434 தொம்பதந் தற்பதஞ் சொன்முத் துரியம்போல்
நம்பிய மூன்றாந் துரியத்து நன்றாகும்
அம்புவி யுன்னு அதிசூக்க மப்பாலைச்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே. அ

## 13. மும் முத்தி

2435 சீவன்றன் முத்தி யதீதம் பரமுத்தி
ஓயுப சாந்தஞ் சிவமுத்தி யானந்த
மூவயின் முச்சொருப முத்திமுப் பாலதாய்
ஓவுறு தாரத்தில் உள்ளுநா தாந்தமே. க

2436 ஆவ தறியார் உயிர்பிறப் பாலுறும்
ஆவ தறியும் உயிரருட் பாலுறும்
ஆவதொன் றில்லை யகம்புறத் தென்றகன்
றோவு சிவனுடன் ஒன்றாதன் முத்தியே. உ

2437 சிவமாகி மும்மல முக்குணஞ் செற்றுத்
தவமான மும்முத்தி தத்துவத் தயிக்கியத்
துவமா கியநெறி சோகமென் போர்க்குச்
சிவமாம் அமலன் சிறந்தனன் தானே. ௩

2438 சித்தியும் முத்தியுந் திண்சிவ மாகிய
சுத்தியும் முத்தீ தொலைக்குஞ் சுகானந்த
சத்தியும் மேலைச் சமாதியு மாயிடும்
பெத்தம் அறுத்த பெரும்பெரு மானே. ச

## 14. முச் சொரூபம்

2439 ஏறிய வாறே மலம்ஐந் திடைஅடைத்
தாறிய ஞானச் சிவோக மடைந்திட்டு
வேறு மெனமுச் சொரூபத்து வீடுற்றங்
கீறதிற் பண்டைப் பரனுண்மை செய்யுமே. க

2440 மூன்றுள மாளிகை மூவர் இருப்பிடம்
மூன்றினின் முப்பத் தாறு முதிப்புள
மூன்றினி னுள்ளே முளைத்தெழுஞ் சோதியைக்
காண்டலுங் காயக் கணக்கற்ற வாறே. உ

2441 உலகம் புடைபெயர்ந் தூழியும் போன
நிலவு சுடரொளி மூன்றுமொன் றாய
பலவும் பரிசொடு பான்மையுள் ஈசன்
அளவும் பெருமையு மாரறி வாரே. ௩

2442 பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்
தருவா யுருவாய் அருவுரு வாகிக்
குருவாய் வருஞ்சத்தி கோனுயிர்ப் பன்மை
உருவா யுடனிருந் தொன்றாயன் றாமே. ௪

2443 மணியொளி சோபை யிலக்கணம் வாய்த்து
மணியென லாய்நின்ற வாறது போலத்
தணிமுச் சொருபாதி சத்தியாதி சாரப்
பணிவித்த பேர்நந்தி பாதம்பற் றாயே. ௫

2444 கல்லொளி மாநிறஞ் சோபைக் கதிர்தட்ட
நல்ல மணியொன்றி னுடியொண் முப்பதம்
சொல்லறு முப்பாழிற் சொல்லறு பேருரைத்
தல்லறு முத்திராந் தத்தனு பூதியே. ௬

2445 உடந்தசெந் தாமரை யுள்ளுறு சோதி
நடந்தசெந் தாமரை நாதந் தகைந்தால்
அடைந்த பயோதரி யட்டி யடைத்தவ்
விடந்தரு வாசலை மேல்திற வீரே. ௭

## 15. முக் கரணம்

2446 இடமொரு மூன்றி லியைந்த வொருவன்
கடனுறு மவ்வுரு வேறெனக் காணுந்
திடமது போலச் சிவபர சீவர்
உடனுறை பேதமும் ஒன்றென லாமே. க

2447 ஒளியை யொளிசெய்து வோமென் றெழுப்பி
வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி
வெளியை வெளிசெய்து மேலெழ வைத்துத்
தெளியத் தெளியுஞ் சிவபதந் தானே. உ

2448 முக்கா ணங்களின் மூர்ச்சைதீர்த் தாவதக்
கைக்கா ரணமென்னத் தந்தனன் காணந்தி
மிக்க மனோன்மணி வேறே தனித்தேக
ஒக்கும துன்மனி யோதுட் சமாதியே. ௩

## 16. முச் சூனிய தொந்தத்தசி

2449 தற்பதந் தொம்பதந் தானும் அசிபதந்
தொற்பத மூன்றுந் துரியத்துத் தோற்றவே
நிற்ப துயிர்பா னிகழ்சிவ மும்மூன்றின்
சொற்பத மாகுந் தொந்தத் தசியே. க

2450 தொந்தத் தசிமூன்றில் தொல்கா மியமாதி
தொந்தத் தசிமூன்றில் தொல்தா மதமாதி
வந்த மலங்குண மாளச் சிவந்தோன்றின்
இந்துவின் முன்னிருள் ஏகுதல் ஒக்குமே. உ

2451 தொந்தத் தசியையவ் வாசியில் தோற்றியே
அந்த முறையீரைந் தாக மதித்திட்டு
அந்த மிலாத அவத்தையவ் வாக்கியந்
துந்து முறையிற் சிவமுன்வைத் தோதிடே. ௩

2452 வைத்துச் சிவத்தை மதிசொரு பானந்தத்
துய்த்துப் பிரணவ மாம்உப தேசத்தை
மெய்த்த இதயத்து விட்டிடு மெய்யுணர்ந்
தத்தற் கடிமை யடைந்துநின் றானே. ௪

2453 தொம்பத மாயையுள் தோன்றிடுந் தற்பதம்
அம்பரை தன்னில் உதிக்கும் அசிபதம்
நம்புறு சாந்தியில் நண்ணுமவ் வாக்கியம்
உம்பர் உரைதொந்தத் தசிவாசி யாமே. ௫

2454 ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய வைவிட்டாற் காயம் உபாதானம்
ஏகிய தொந்தத் தசியென்ப மெய்யறி
வாகிய சீவன் [1]பாசிவ னாமே. ௬

---

பா. வே. 1. பரன்சிவ.

2455 தாமத காமிய மாகித் தருகுண
மாமல மூன்றும் அகார வுகாரத்தோ
டாமறு மவ்வுமவ் வாயுடன் மூன்றில்
தாமாந் துரியமுந் தொந்தத் தசியதே. எ

## 17. முப்பாழ்

2456 காரிய மேழ்கண் டறுமாயப் பாழ்விடக்
காரண மேழ்கண் டறும்போதப் பாழ்விடக்
காரிய காரண வாதனை கண்டறுஞ்
சீருப சாந்தமுப் பாழ்விடத் தீருமே. க

2457 மாயப்பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பரன்
சேயமுப் பாழெனச் சிவசத்தி யிற்சீவன்
ஆய வியாப்த மெனுமுப்பா ழாம்அந்தத்
தூய சொரூபத்திற் சொல்முடி வாகுமே. உ

2458 எதிரற நாளும் எருதுவந் தேறும்
பதியெனும் நந்தி பதமது கூடக்
கதியெனப் பாழைக் கடந்தந்தக் கற்பனை
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே. ௩

2459 துரியம் அடங்கிய சொல்லறும் பாழை
அரிய பரம்பரம் என்பர்கள் ஆதர்
அரிய பரம்பரம் என்றே துதிக்கும்
அருநிலம் என்பதை யாரறி வாரே. ௪

2460 ஆறுறு நீங்க நமவாதி யகன்றிட்டு
வேறு கியபரை யாவென்று மெய்ப்பரன்
ஈறுன வாசியிற் கூட்டு மதுவன்றே
தேறுச் சிவாய நமவெனத் தேறிலே. ௫

2461 உள்ளம் உருவென்றும் உருவம் உளமென்றும்
உள்ள பரிசறிந் தோரு மவர்கட்குப்
பள்ளமும் இல்லை திடரில்லை பாழில்லை
உள்ளமும் இல்லை உருவில்லை தானே. ௬

## 18. காரிய காரண வுபாதி

2462 செற்றிடுஞ் சீவ வுபாதித் திறனேழும்
பற்றும் பரோபாதி ஏழும் பகருரை
உற்றிடுங் காரிய காரணத் தோடற
அற்றிட வச்சிவ மாகும் அணுவனே. க

2463 ஆறாறு காரியோ பாதி யகன்றிட்டு
வேறாய் நனவு மிகுத்த கனாநனா
ஆறா றகன்ற சுழுத்தி யதில்எய்தாப்
பேறா நிலத்துயிர் தொம்பதம் பேசிலே. உ

2464 உயிர்க்குயி ராகி யொழிவற் றழிவற்
றயிர்ப்பறு காரணோ பாதி விதிரேகத்
துயிர்ப்புறும் ஈசன் உபமிதத் தாலன்றி
வியர்ப்புறும் ஆணவம் வீடல்செய் யாவே. ந

2465 காரியம் ஏழிற் கலக்கும் கடும்பசு
காரணம் ஏழிற் கலக்கும் பரசிவன்
காரிய காரணங் கற்பனை சொற்பதப்
பாராறும் பாழில் பராபரத் தானே. ச

## 19. உபசாந்தம்

2466 முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே
பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் பற்றலே
சித்திக்கு வித்துச் சிவபரந் தானுதல்
சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே. க

2467 காரியம் ஏழுங் கரந்திடு மாயையுள்
காரணம் ஏழுங் கரக்குங் கடுவெளி
காரிய காரண வாதனைப் பற்றறப்
பாரண வும்முப சாந்தப் பரிசிதே. உ

2468 அன்ன துரியமே யாத்தும சுத்தியும்
முன்னிய சாக்கிரா தீதத் துறுபுரி
மன்னு பரங்காட்சி யாவ துடனுற்றுத்
தன்னின் வியாத்தி தனின்உப சாந்தமே. ந

2469 ஆறா றமைந்தாண வத்தையுள் நீக்குதற்
பேறான தன்னை யறிதற்பின் நீர்சுத்தி
கூறாத சாக்கிரா தீதங் குருபரன்
பேறாம் வியாத்தம் பிறழுப சாந்தமே. ச

2470 வாய்ந்த வுபசாந்த வாதனை யுள்ளப்போய்
ஏய்ந்த சிவமாத லின்சிவா னந்தத்துத்
தோய்ந்தறல் மோனச் சுகானு பவத்தோடே
ஆய்ந்ததில் தீர்க்கை யானதீ ரைந்துமே. ரு

2471 பரையின் பரவப ரத்துடன் ஏகமாய்த்
திரையினின் றாகிய தெண்புனல் போலவுற்

றுரையுணர்ந் தாரமு தொக்க வுணர்ந்துளோன்
கரைகண் டானுரை யற்ற கணக்கிலே. சு

## 20. புறங்கூறாமை

2472 பிறையுள் கிடந்த முயலை எறிவான்
அறைமணி வாட்கொண் டவர்தமைப் போலக்
கறைமணி கண்டனைக் காண்குற மாட்டார்
நிறையறி வோமென்பர் நெஞ்சிலர் தாமே. க

2473 கருந்தாட் கருடன் விசும்பூ டிறப்பக்
கருந்தாட் கயத்திற் கரும்பாம்பு நீங்கப்
பெருந்தன்மை பேசுதி நீயொழி நெஞ்சே
அருந்தா அலைகட லாறுசென் றூலே. உ

2474 கருதலர் மாளக் கருவாயில் நின்ற
பொருதலைச் செய்வது புல்லறி வாண்மை
மருவலர் செய்கின்ற மாதவம் ஒத்தால்
தருவலர் கேட்ட தனியும்ப ராமே. ந

2475 பிணங்கவும் வேண்டாம் பெருநில முற்றும்
இணங்கியெம் மீசனே யீசனென் றுன்னிற்
கணம்பதி னெட்டுங் கழலடி காண
வணங்கெழு நாடியங் கன்புற லாமே. ச

2476 என்னிலும் என்னுயி ராய இறைவனைப்
பொன்னிலு மாமணி யாய புனிதனை
மின்னிய வெவ்வுயி ராய விகிர்தனை
உன்னிலும் உன்னும் உறும்வகை யாலே. ரு

2477 நின்றும் இருந்துங் கிடந்தும் நிமலனை
ஒன்றும் பொருள்கள் உரைப்பவ ராகிலும்
வென்றைம் புலனும் விரைந்து பிணக்கறுத்
தொன்று யுணரும் ஒருவனு மாமே. சு

2478 நுண்ணறி வாயுல காயுல கேழுக்கும்
எண்ணறி வாய்நின்ற எந்தை பிரான்றனைப்
பண்ணறி வாளனைப் பாவித்த மாந்தரை
விண்ணறி வாளர் விரும்புகின் றாரே. எ

2479 விண்ணவ ராலும் அறிவறி யான்றனைக்
கண்ணற வுள்ளே கருதிடிற் காலையில்
எண்ணுற வாகமுப் போது மியற்றிநீ
பண்ணிடில் தன்மை பராபர னாமே. அ

2480 ஒன்று யுலகுடன் ஏழும் பரந்தவன்
பின்று னருள்செய்த பேரரு ளாளவன்
கன்று மனத்தார்தங் கல்வியுள் நல்லவன்
பொன்றுத போது புனைபுக ழானே. ௯

2481 போற்றியென் றேன்எந்தை பொன்னன சேவடி
ஏற்றியே [1]தென்றும் எறிமணி தானகக்
காற்றின் விளக்கது காய மயக்குறு
மாற்றலுங் கேட்டது மன்றுகண் டேனே. ௧௦

2482 நேடிக்கொண் டென்னுள்ளே நேர்தரு நந்தியை
ஊடுபுக் காரும் உணர்ந்தறி வாரில்லை
கூடுபுக் கேறலுற் றேனவன் கோலங்கண்
மூடிக்கண் டேனுல கேழுங்கண் டேனே. ௧௧

2483 ஆன புகழும் அமைந்ததோர் ஞானமுந்
தேனு மிருக்குஞ் சிறுவரை யொன்றுகண்
டூனமொன் றின்றி யுணர்வுசெய் வார்கட்கு
வானகஞ் செய்யு மறவனு மாமே. ௧௨

2484 மாமதி யாமதி யாய்நின்ற மாதவர்
தூய்மதி யாகுஞ் சுடர்பர மானந்தந்
தாமதி யாகச் சகமுணச் சாந்திபுக்
காமல மற்றார் அமைவுபெற் றாரே. ௧௩

2485 பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்
டிதமுற்ற பாச இருளைத் துரந்து
மதமற் றெனதியான் மாற்றிவிட் டாங்கே
இதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே. ௧௪

2486 சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தாசுத் தத்துடன் தோய்ந்துந்தோ யாதவர்
முத்தரம் முத்திக்கு மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே. ௧௫

## 21. எட்டிதழ்க்கமல முக்குண அவத்தை

2487 உதிக்கின்ற இந்திரன் அங்கி யமனுந்
துதிக்கும் நிருதி வருணன்நல் வாயு
மதிக்குங் குபேரன் வடதிசை யீசன்
நிதித்தெண் டிசையு நிறைந்துநின் றாரே. ௧

பா. வே. 1. சென்றும்.

2488 ஒருங்கிய பூவுமோ ரெட்டித ழாகும்
மருங்கிய மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுனையி னூடே
ஒருங்கிய சோதியை ஓர்ந்தெழும் உய்ந்தே. ௨

2489 மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர் கின்றனன் சோதி விரிசுடர்
எட்டல ருள்ளே இரண்டலர் உள்ளுறிற்
பட்டலர் கின்றதோர் பண்டங் கனுவே. ௩

2490 ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு
நாறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொருள் தானே. ௪

2491 திகையெட்டுந் தேரெட்டுந் தேவதை யெட்டும்
வகையெட்டு மாய்நின்ற ஆதிப் பிரானை
வகையெட்டு நான்குமற் றுங்கே நிறைந்து
முகையெட்டும் உள்நின் றுதிக்கின்ற வாறே. ௫

2492 ஏழுஞ் சகளம் இயம்புங் கடந்தெட்டில்
வாழும் பரமென் றதுகடந் தொன்பதில்
ஊழி பராபரம் ஓங்கிய பத்தினில்
தாழ்வது வான தனித்தன்மை தானே. ௬

2493 பல்லூழி பண்பன் பகலோன் இறையவன்
நல்லூழி ஐந்தினுள் ளேநின்ற வூழிகள்
செல்லூழி யண்டத்துச் சென்றவவ் வூழியுள்
அவ்வூழி யுச்சியு ளொன்றிற் பகவனே. ௭

2494 புரியும் உலகினிற் பூண்டவெட் டானை
திரியுங் களிற்றொடு தேவர் குழாமும்
எரியு மழையும் இயங்கும் வெளியும்
பரியுமா காசத்திற் பற்றது தானே. ௮

2495 ஊறு மருவி யுயர்வரை யுச்சிமேல்
ஆறின்றிப் பாயும் அருங்குளம் ஒன்றுண்டு
சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்
பூவின்றிச் சூடான் புரிசடை யோனே. ௯

2496 ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலத்து
நின்றும் இருந்தும் நிலம்பல பேசினும்
வென்று மிருந்து விகிர்தனை நாடுவர்
சென்றும் இருந்துந் திருவுடை யோரே. ௧௦

## 22. ஒன்பான் அவத்தை ஒன்பான் அபிமானி

2497 தொற்பத விசுவன் றைசதன் பிராஞ்ஞன்
நற்பத விராட்டன்பொன் கர்ப்பனவ் யாகிர்தன்
பிற்பதஞ் [1]சொலிதையன் பிரசா பத்தியன்
பொற்புவி சாந்தன் பொருதபி மானியே. ௧

2498 நவமா மவத்தை நனவாதி பற்றிற்
பவமா மலங்குணம் பற்றறப் பற்றுத்
தவமான சத்திய ஞானப் பொதுவிற்
றுவமார் துரியஞ் சொரூபம தாமே. ௨

2499 சிவமான சிந்தையிற் சீவன் சிதைய
பவமான மும்மலம் பாறிப் பறிய
நவமான அந்தத்தின் நற்சிவ போதந்
தவமா மவ்வயாகித் தானல்ல வாகுமே. ௩

2500 முன்சொன்ன வொன்பானின் முன்னுறு தத்துவந்
தன்சொல்லில் எண்ணத் தகாவொன்பான் வேறுள
பின்சொல்ல லாகுமிவ் வீரொன்பான் பேர்த்திட்டுத்
தன்செய்த வாண்டவன் றன்சிறந் தானே. ௪

2501 உகந்தன ஒன்பதும் ஐந்தும் உலகம்
பகர்ந்த பிரானென்னும் பண்பினை நாடி
அகந்தெம் பிரானென்பன் அல்லும் பகலு
மிகந்தன வல்வினை யோடறுத் தானே. ௫

2502 நலம்பல காலந் தொகுத்தன நீளங்
குலம்பல வண்ணங் குறிப்பொடுங் கூடும்
பலம்பல பன்னிரு கால நினையும்
நிலம்பல வாறின னீர்மையன் றானே. ௬

2503 ஆதி பராபர மாகும் பராபரை
சோதி பரமுயிர் சொல்லுநற் றத்துவம்
ஓதுங் கலைமாயை யோரிரண் டோர்முத்தி
நீதியாம் பேதமொன் பானுடன் ஆதியே. ௭

2504 தேறுத சிந்தை தெளியத் தெளிவித்து
வேறு நரக சுவர்க்கமும் மேதினி
ஆறுப் பிறப்பும் உயிர்க்கரு ளால்வைத்தான்
வேறுத் தெளியார் வினையுயிர் பெற்றதே. ௮

---

பா. வே. 1. சிற்சொலிதை.

2505 ஒன்பான் அவத்தையுள் ஒன்பான் அபிமானி
நன்பாற் பயிலு நவதத் துவமாதி
ஒன்பானில் நிற்பதோர் முத்துரி யத்துறச்
செம்பாற் சிவமாதல் சித்தாந்த சித்தியே. ௯

## 23. சுத்தாசுத்தம்

2506 நாசி நுனியினின் நான்குமூ விரலிடை
ஈசன் இருப்பிடம் யாரும் அறிகிலர்
பேசி யிருக்கும் பெருமறை யம்மறை
கூசி யிருக்குங் குணமது வாமே. ௧

2507 கருமங்கள் [1]ஒன்று கருதுங் கருமத்
துரிமையுங் கன்மமு முன்னும் பிறவிக்
கருவினை யாவது கண்டகன் றன்பிற்
புரிவன கன்மக் கயத்துட் புகுமே. ௨

2508 மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாயை மறைய வெளிப்படும் அப்பொருள்
மாயை மறைய மறையவல் லார்கட்குக்
காயமும் இல்லை கருத்தில்லை தானே. ௩

2509 மோழை யடைந்து முழைதிறந் துள்புக்குக்
கோழை யடைக்கின்ற தண்ணற் குறிப்பினில்
ஆழ அடைத்தங் கனலிற் புறஞ்செய்து
தாழ அடைப்பது தன்வலி யாமே. ௪

2510 ஆசூசம் ஆசூசம் என்பார் அறிவிலார்
ஆசூச மாமிடம் ஆரும் அறிகிலார்
ஆசூச மாமிடம் ஆரும் அறிந்தபின்
ஆசூச மானிடம் ஆசூச மாமே. ௫

2511 ஆசூச மில்லை அருநிய மத்தருக்
காசூச மில்லை அரனைஅர்ச் சிப்பவர்க்
காசூச மில்லையாம் அங்கி வளர்ப்போருக்
காசூச மில்லை அருமறை ஞானிக்கே. ௬

2512 வழிபட்டு நின்று வணங்கு மவர்க்குச்
சுழிபட்டு நின்றதோர் தூய்மை தொடங்குங்
குழிபட்டு நின்றவர் கூடார் குறிகள்
கழிபட் டவர்க்கன்றிக் காணவொண் ணாதே. ௭

பா. வே. 1. ஒன்றுட்.

2513 தூய்மணி தூயனல் தூய ஒளிவிடுந்
தூய்மணி தூயனல் தூரறி வாரில்லை
தூய்மணி தூயனல் தூரறி வார்கட்குத்
தூய்மணி தூயனல் தூயவு மாமே. அ

2514 தூயது வாளா வைத்தது தூநெறி
தூயது வாளா நாதன் திருநாமந்
தூயது வாளா அட்டமா சித்தியுந்
தூயது வாளாத் தூயடிச் சொல்லே. கூ

2515 பொருளது வாய்நின்ற புண்ணியன் எந்தை
அருளது போற்றும் அடியவ ரன்றிச்
சுருளது வாய்நின்ற துன்பச் சுழியின்
மருளது வாச்சிந்தை மயங்குகின் றாரே. க0

2516 வினையா மசத்து விளைவ துணரார்
வினைஞானந் தன்னில் வீடலுந் தேரார்
வினைவிட வீடென்னும் வேதமும் ஓதார்
வினையாளர் மிக்க விளைவறி யாரே. கக

## 24. முத்திநிந்தை

2517 பரகதி யுண்டென இல்லையென் போர்கள்
நரகதி செல்வது ஞாலம் அறியும்
இரகதி செய்திடு வார்கடை தோறுந்
துரகதி யுண்ணத் தொடங்குவர் தாமே. க

2518 புறப்பட்டுப் போகும் புகுதுமென் னெஞ்சில்
திறப்பட்ட சிந்தையைத் தெய்வமென் றெண்ணி
அறப்பட்ட மற்றப் பதியென் றழைத்தேன்
இறப்பற்றி னேன்இங் கிதென்னென்கின் றானே. உ

2519 திடரிடை நில்லாத நீர்போல ஆங்கே
உடலிடை நில்லா உறுபொருள் காட்டிக்
கடலிடை நில்லாக் கலஞ்சேரு மாபோல்
அடலெரி வண்ணனும் அங்குநின் றானே. ௩

2520 தாமரை நூல்போல் தடுப்பார் பரத்தொடும்
போம்வழி வேண்டிப் புறமே யுழிதர்வர்
காண்வழி காட்டக்கண் காணக் கலதிகள்
தீநெறி செல்வான் திரிகின்ற வாறே. ௪

2521 மூடுதல் இன்றி முடியும் மனிதர்கள்
கூடுவர் நந்தி யவனைக் குறித்துடன்

காடும் மலையுங் கழனி கடந்தோறும்
ஊடும் உருவினை யுன்னகி லாரே. ௫

2522 ஆவது தெற்கும் வடக்கும் அமரர்கள்
போவர் குடக்குங் குணக்குங் குறிவழி
நாவினின் மந்திர மென்று நடுவங்கி
வேவது செய்து விளங்கிடு வீரே. ௬

2523 மயக்குற நோக்கினும் மாதவஞ் செய்வார்
தமக்குறப் பேசின தாரணை கொள்ளார்
சினக்குறப் பேசின தீவினை யாளர்
தமக்குற வல்வினை தாங்கிநின் றாரே. ௭

## 25. இலக்கணாத் திரயம்

2524 விட்ட விலக்கணை தான்போம் வியோமத்துத்
தொட்டு விடாத துபசாந்தத் தேதொகும்
விட்டு விடாதது மேவுஞ்சத் தாதியிற்
சுட்டு மிலக்கணா தீதஞ் சொரூபமே. ௧

2525 வில்லின் விசைநாணிற் கோத்திலக் கெய்தபின்
கொல்லுங் களிறைந்துங் கோலொடு சாய்ந்தன
வில்லு ளிருந்தெறி கூரும் ஒருவற்குக்
கல்கலன் என்னக் கதிரெதி ராமே. ௨

## 26. தத்துவமசி வாக்கியம்

2526 சீவ துரியத்துத் தொம்பதஞ் சீவனார்
தாவு பரதுரி யத்தினில் தற்பதம்
மேவு சிவதுரி யத்தசி மெய்ப்பத
மோவி விடுந்தத் துவமசி உண்மையே. ௧

2527 ஆறா றகன்ற அணுத்தொம் பதஞ்சுத்தம்
ஈறான தற்பதம் எய்துப சாந்தத்துப்
பேறா கியசீவன் நீங்கிப்பிர சாதத்து
வீறான தொந்தத் தசிதத்வ மசியே. ௨

2528 துவந்தத் தசியே தொந்தத் தசியும்
அவைமன்னா வந்து வயத்தேக மான
தவமுறு தத்துவ மசிவே தாந்த
சிவமா மதுஞ்சித் தாந்தவே தாந்தமே. ௩

2529 தொம்பதந் தற்பதஞ் சொல்லும் அசிபதம்
நம்பிய முத்துரி யத்துமே னாடவே

யும்பத [1]மும்பத மாகும் உயிர்பரன்
செம்பொரு ளான சிவமென லாமே. ௪

2530 வைத்த துரிய மதிற்சொரு பானந்தத்
துய்த்த பிரணவ மாமுப தேசத்தை
மெய்த்த விதயத்து விட்டிடு மெய்யுணர்
வைத்த படியே யடைந்துநின் றுனே. ௫

2531 நனவாதி ஐந்தையும் நாதாதி யில்வைத்துப்
பினமா மலத்தைப் பின்வைத்துப் பின்சுத்தத்
தனதாஞ் சிவகதி சத்தாதி சாந்தி
மனவா சகங்கெட்ட மன்னனை நாடே. ௬

2532 பூரணி யாது புறம்பொன் றிலாமையின்
பேரணி யாதது பேச்சொன் றிலாமையில்
ஓரணை யாதது வொன்றுமி லாமையிற்
காரண மின்றியே காட்டுந் தகைமைத்தே. ௭

2533 நீயது வானா யெனநின்ற பேருரை
ஆயது நானானேன் என்னச் சமைந்தறச்
சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரருள்
ஆயது வாயனந் தானந்தி யாகுமே. ௮

2534 உயிர்பர மாக உயர்பர சிவன்
அரிய சிவமாக அச்சிவ வேதத்
திரியிலுஞ் சீராம் பராபரன் என்ன
உரிய உரையற்ற வோமய மாமே. ௯

2535 வாய்நாசி யேபுரு மத்தகம் உச்சியில்
ஆய்நாசி யுச்சி முதல்வை யாய்நிற்குந்
தாய்நாடி யாதிவாக் காதி சகலாதி
சேய்நா டொளியெனச் சிவகதி யைந்துமே. ௧௦

2536 அறிவறி யாமை இரண்டு மகற்றிச்
செறிவறி வாய்எங்கும் நின்ற சிவனைப்
பிறிவறி யாது பிரானென்று பேணுங்
குறியறி யாதவர் கொள்ளறி யாரே. ௧௧

2537 அறிவார் அறிவன அப்பும் அனலும்
அறிவார் அறிவன அப்புங் கலப்பும்
அறிவான் இருந்தங் கறிவிக்கி னல்லால்
அறிவான் அறிந்த அறிவறி யோமே. ௧௨

---

பா. வே. 1. முப்பத.

2538 அடிதொழ முன்னின் றமரர்க ளத்தன்
முடிதொழ ஈசனும் முன்னின் றருளிப்
படிதொழ நீபண்டு பாவித்த தெல்லாங்
கடிதொழக் காணென்னுங் கண்ணுத லானே. ௧௩

2539 நின்மல மேனி நிமலன் பிறப்பிலி
என்னுளம் வந்திவன் என்னடி யானென்று
பொன்வளர் மேனி புகழ்கின்ற வானவன்
நின்மல மாகென்று நீக்கவல் லானே. ௧௪

2540 துறந்துபுக் கொள்ளொளி சோதியைக் கண்டு
பறந்ததென் உள்ளம் பணிந்து கிடந்தே
மறந்தறி யாவென்னை வானவர் கோனும்
இறந்து பிறவாமல் ஈங்குவைத் தானே. ௧௫

2541 மெய்வாய்கண் மூக்குச் செவியென்னும் மெய்த்தோற்றத்
தவ்வாய அந்தக் கரணம் அகிலமும்
எவ்வா யுயிரும் இறையாட்ட ஆடலாற்
கைவா யிலாநிறை எங்குமெய் கண்டதே. ௧௬

## 27. விசுவக் கிராசம்

2542 அழிகின்ற சாயா புருடனைப் போலக்
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே. ௧

2543 உடலும் உயிரும் ஒழிவற ஒன்றிற்
படருஞ் சிவசத்தி தாமே பரமாம்
உடலைவிட் டிந்த உயிரெங்கு மாகிக்
கடையுந் தலையுங் கரக்குஞ் சிவத்தே. ௨

2544 செவிமெய்வாய் கண்மூக்குச் சேரிந் திரியம்
அவியின் றியமன மாதிகள் ஐந்துங்
குவிவொன் றிலாமல் விரிந்து குவிந்து
தவிர்வொன் றிலாத சராசரந் தானே. ௩

2545 பரனெங்கு மாரப் பரந்துற்று நிற்குந்
திரனெங்கு மாகிச் செறிவெங்கு மெய்தும்
உரனெங்கு மாயுல குண்டுமிழ் செய்யும்
வரமிங்ஙன் கண்டியான் வாழ்ந்துற்ற வாறே. ௪

2546 அளந்து துரியத் தறிவினை வாங்கி
உளங்கொள் பரஞ்சகம் உண்ட தொழித்துக்

கிளர்ந்த பரஞ்சிவஞ் சேரக் கிடைத்தால்
விளங்கிய வெட்ட வெளியனு மாமே. ௫

2547 இரும்பிடை நீரென என்னையுள் வாங்கிப்
பரம்பர மான பரமது விட்டே
உரம்பெற முப்பாழ் ஒளியை விழுங்கி
இருந்தஎன் நந்தி இதயத்து ளானே. ௬

2548 கரியுண் விளவின் கனிபோல் உயிரும்
உரிய பரமுமுன் னேதுஞ் சிவமும்
அரிய துரியமேல் அகிலமும் எல்லாந்
திரிய விழுங்குஞ் சிவபெரு மானே. ௭

2549 அந்தமும் ஆதியும் ஆகும் பராபரன்
தந்தம் பரம்பரன் தன்னிற் பரமுடன்
நந்தமை யுண்டுமெய்ஞ் ஞானநே யாந்தத்தே
நந்தி யிருந்தனன் நாமறி யோமே. ௮

## 28. வாய்மை

2550 அற்ற துரைக்கில் அருளுப தேசங்கள்
குற்ற மறுத்தபொன் போலுங் கனலிடை
அற்றற வைத்திறை மாற்றற ஆற்றிடில்
செற்றம் அறுத்த செழுஞ்சுட ராகுமே. ௧

2551 எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டு
எல்லாம் அறிந்தும் இலாபமங் கில்லை
எல்லாம் அறிந்த அறிவினை நானென்னில்
எல்லாம் அறிந்த இறையென லாமே. ௨

2552 தானே யுலகில் தலைவ னெனத்தகுந்
தானே யுலகுக்கோர் தத்துவ மாய்நிற்கும்
வானே மழைபொழி மாமறை கூர்ந்திடும்
ஊனே யுருகிய வுள்ளமொன் றாமே. ௩

2553 அருள்பெற்ற காரணம் என்கொல் அமரில்
இருளற்ற சிந்தை இறைவனை நாடி
மருளுற்ற சிந்தையை மாற்றி அருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே. ௪

2554 மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்தன்னைப்
பொய்கலந் தார்முன் புகுதா ஒருவனை
உய்கலந் தூழித் தலைவனு மாய்நிற்கும்
மெய்கலந் தின்பம் விளைந்திடும் மெய்யர்க்கே. ௫

2555 மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்மிகப்
பொய்கலந் தாருட் புகுதாப் புனிதனை
கைகலந் தாவி எழும்பொழு தண்ணலைக்
கைகலந் தார்க்கே கருத்துற லாமே. ௬

2556 எய்திய காலத் திருபொழு துஞ்சிவன்
மெய்செயின் மேலை விதியது வாய்நிற்கும்
பொய்யும் புலனும் புகலொன்று நீத்திடில்
ஐயனும் அவ்வழி யாகிநின் றானே. ௭

2557 எய்துவ தெய்தா தொழிவ திதுவருள்
உய்ய அருள்செய்தான் உத்தமன் சீர்நந்தி
பொய்செய் புலன்நெறி யொன்பதுந் தாட்கொளின்
மெய்யென் புரவியை மேற்கொள்ள லாமே. ௮

2558 கைகலந் தானைக் கருத்தினுள் நந்தியை
மெய்கலந் தான்தன்னை வேத முதல்வனைப்
பொய்கலந் தார்முன் புகுதாப் புனிதனைப்
பொய்யொழிந் தார்க்கே புகலிட மாமே. ௯

2559 மெய்த்தாள் அகம்படி மேவிய நந்தியைக்
கைத்தாள்கொண் டாருந் திறந்தறி வாரில்லை
பொய்த்தாள் இடும்பையைப் பொய்யற நீவிட்டங்
கத்தாள் திறக்கில் அரும்பேற தாமே. ௧0

2560 உய்யும் வகையால் உணர்வினுல் ஏத்துமின்
மெய்யன் அரனெறி மேலுண்டு திண்ணெனப்
பொய்யொன்று மின்றிப் புறம்பொலி வார்நடு
ஐயனும் அங்கே அமர்ந்துநின் றானே. ௧௧

2561 வம்பு பழுத்த மலர்ப்பழம் ஒன்றுண்டு
தம்பாற் பறவை புகுந்துணத் தானொட்டா
அம்புகொண் டெய்திட் டகலத் துரத்திடிற்
செம்பொற் சிவகதி சென்றெய்த லாமே. ௧௨

2562 மயக்கிய ஐம்புலப் பாசம் அறுத்துத்
துயக்கறுத் தானைத் தொடர்மின் தொடர்ந்தால்
தியக்கஞ்செய் யாதே சிவனெம் பெருமான்
உயப்போ எனமனம் ஒன்றுவித் தானே. ௧௩

2563 மனமது தானே நினையவல் லாருக்
கினமெனக் கூறு மிருங்காய மேவற்
றனிவினி னுதன்பால் தக்கன செய்யில்
புனிதன் செயலாகும் போதப் புவிக்கே. ௧௪

## 29. ஞானிசெயல்

2564 முன்னை வினைவரின் முன்னுண்டே நீங்குவர்
பின்னை வினைக்கணார் பேர்ந்தறப் பார்ப்பர்கள்
தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
நன்மையில் ஐம்புலன் நாடலி னாலே. ௧

2565 தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே. ௨

2566 மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும்
மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னா
மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்னால்
தனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே. ௩

2567 நிற்ற லிருத்தல் கிடத்தல் நடையோடல்
பெற்றவக் காலுந் திருவருள் பேராமற்
சற்றியன் ஞானந்தந் தானந்தந் தங்கவே
உற்ற பிறப்பற் றொளிர்ஞான நிட்டையே. ௪

## 30. அவாவறுத்தல்

2568 வாசியு மூசியும் பேசி வகையினால்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை
ஆசையும் அன்பும் அறுமின் அறுத்தபின்
ஈசன் இருந்த இடம்எளி தாமே. ௧

2569 மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன்
வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சில்
மூடத்து ளேநின்று முத்திதந் தானே. ௨

2570 ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே. ௩

2571 அடுவன பூதங்கள் ஐந்தும் உடனே
படுவழி செய்கின்ற பற்றற வீசி
விடுவது வேட்கையை மெய்ந்நின்ற ஞானந்
தொடுவது தம்மைத் தொடர்தலு மாமே. ௪

2572 உவாக்கடல் ஒக்கின்ற வூழியும் போன
துவாக்கட லுட்பட்டுத் துஞ்சினர் வானோர்
அவாக்கட லுட்பட் டழுந்தினர் மண்ணோர்
தவாக்கடல் ஈசன் தரித்துநின் றானே. ரு

2573 நின்ற வினையும் பிணியும் நெடுஞ்செயல்
[1]உன்தொழி லற்றுச் சுத்தம தாகலும்
பின்றைநங் கருமமும் பேர்த்தருள் நேர்பெற்றுத்
துன்ற அழுத்தலும் ஞானிகள் தூய்மையே. சா

2574 உண்மை யுணர்ந்துற ஒண்சித்தி முத்தியாம்
பெண்மயற் கெட்டறப் பேறட்ட சித்தியாந்
திண்மையின் ஞானி சிவகாயங் கைவிட்டால்
வண்மை யருள்தான் அடைந்தன்பில் ஆறுமே. எ

2575 அவனிவன் ஈசனென் றன்புற நாடிச்
சிவனிவன் ஈசனென் றுண்மையை யோரார்
பவனிவன் பல்வகை யாமிப் பிறவி
புவனிவன் போவது பொய்கண்ட போதே. அ

2576 கொதிக்கின்ற வாறுங் குளிர்கின்ற வாறும்
பதிக்கின்ற வாறிந்தப் பாரக முற்றும்
விதிக்கின்ற ஐவரை வேண்டா துலகம்
நொதிக்கின்ற காயத்து நூலொன்று மாமே. கூ

## 31. பத்தியுடைமை

2577 முத்திசெய் ஞானமுங் கேள்வியு மாய்நிற்கும்
அத்தனை மாயா அமரர் பிரான்தனைச்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற சோதியைப்
பத்தர் பரசும் பசுபதி தானென்றே. க

2578 அடியார் அடியார் அடியார்க் கடிமைக்
கடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்
அடியார் அருளால் அவனடி கூட
அடியா னிவனென் றடிமைகொண் டானே. உ

2579 நீரிற் குளிரும் நெருப்பினிற் சுட்டிடும்
ஆரிக் கடலந்தி யாமா றறிபவர்
பாரிற் பயனாரைப் பார்க்கிலும் நேரியர்
ஊரில் உமாபதி யாகிநின் றானே. ௩

பா. வே. 1. தூன்தொழி.

2580 ஓத்துல கேழும் அறியா ஒருவனென்
றத்தன் இருந்திடம் ஆரறி வார்சொல்லப்
பத்தர்தம் பத்தியிற் பாற்படில் அல்லது
முத்தினை யார்சொல்ல முந்துகின் றாரே. ௪

2581 ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல்
நான்கன்றாய் நாடி யழைத்தேனென் நாதனை
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொருள்
ஊன்கன்றா னுடிவந் துள்புகுந் தானே. ௫

2582 பெத்தத்துந் தன்பணி இல்லை பிறத்தலான்
முத்தத்துந் தன்பணி இல்லை முறைமையால்
அத்தற் கிரண்டும் அருளால் அளித்தலாற்
பத்திப்பட் டோர்க்குப் பணியொன்றும் இல்லையே. ௬

2583 பறவையிற் கற்பமும் பாம்புமெய் யாகக்
குறவஞ் சிலம்பக் குளிர்வரை யேறி
நறவார் மலர்கொண்டு நந்தியை யல்லால்
இறைவனென் றென்மனம் ஏத்தகி லாவே. ௭

2584 உறுதுணை நந்தியை உம்பர் பிரானைப்
பெறுதுணை செய்து பிறப்பறுத் துய்மின்
செறிதுணை செய்து சிவனடி சிந்தித்
துறுதுணை யாயங்கி யாகிநின் றானே. ௮

2585 வானவர் தம்மை வலிசெய் திருக்கின்ற
தானவர் முப்புரஞ் செற்ற தலைவனைக்
கானவன் என்றுங் கருவரை யானென்றும்
ஊனத னுள்நினைந் தொன்றுபட் டாரே. ௯

2586 நிலைபெறு கேடென்று முன்னே படைத்த
தலைவனை நாடித் தயங்குமென் உள்ளம்
மலையுளும் வானகத் துள்ளும் புறத்தும்
உலையுளும் உள்ளத்து மூழ்கிநின் றேனே. ௧௦

## 32. முத்தியுடைமை

2587 முத்தியில் அத்தன் முழுத்த அருள்பெற்றுத்
தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி
மெய்த்தவஞ் செய்கை வினைவிட்ட மெய்யுண்மைப்
பத்தியி னுற்றோர் பரானந்த போதரே. ௧

2588 வளங்கனி தேடிய வன்றாட் பறவை
உளங்கனி தேடி யுழிதரும் போது

களங்கனி யங்கியிற் கைவிளக் கேற்றி
நலங்கொண்ட நால்வரும் நாடுகின் றாரே.　　௨

## 33. சோதனை

2589 பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்
தம்மா னடிதந் தருட்கடல் ஆடினேம்
எம்மாய மும்விடுத் தெம்மைக் காந்திட்டுச்
சும்மா திருந்திடஞ் சோதனை யாகுமே.　　௧

2590 அறிவுடை யானரு மாமறை யுள்ளே
செறிவுடை யான்மிகு தேவர்க்குந் தேவன்
பொறியுடை யான்புலன் ஐந்துங் கடந்த
குறியுடை யானொடுங் கூடுவன் நானே.　　௨

2591 குறியாக் குறியினிற் கூடாத கூட்டத்
தறியா அறிவில் அவிழ்ந்தேக சித்தமாய்
நெறியாம் பராநந்தி நீடருள் ஒன்றுஞ்
செறியாச் செறிவே சிவமென லாமே.　　௩

2592 காவினில் ஊறுங் கரும்பினிற் கட்டியும்
பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்
பூவினுள் நாற்றமும் போலுளன் எம்மிறை
காவலன் எங்குங் கலந்துநின் றானே.　　௪

2593 விருப்பொடு கூடி விகிர்தனை நாடிப்
பொருப்பகஞ் சேர்தரு பொற்கொடி போல
விருப்பர் மனத்திடை எங்கள் பிரானார்
நெருப்புரு வாகி நிகழ்ந்துநின் றாரே.　　௫

2594 நந்தி பெருமான் நடுவுள் வியோமத்து
வந்தென் அகம்படி கோயில்கொண் டான்[1]சொன்ன
எந்தைவந் தானென் றெழுந்தேன் எழுதலுஞ்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே.　　௬

2595 தன்மைவல் லோனைத் தவத்துள் நலத்தினை
நன்மைவல் லோனை நடுவுறை நந்தியைப்
புன்மைபொய் யாதே புனிதனை நாடுமின்
பன்மையில் உம்மைப் பரிசுசெய் வானே.　　௭

2596 தொடர்ந்துநின் றானென்னைச் சோதிக்கும் போது
தொடர்ந்துநின் றானல்ல நாதனும் அங்கே

---

பா. வே. 1. கொள்ள.

படர்ந்துநின் றாதிப் பராபரன் எந்தை
கடந்துநின் றவ்வழி காட்டுகின் றானே. ௮

2597 அவ்வழி காட்டும் அமரர்க் கரும்பொருள்
இவ்வழி தந்தைதாய் கேளியான் ஒக்கும்
செவ்வழி சேர்சிவ லோகத் திருந்திடும்
இவ்வழி நந்தி இயல்பது தானே. ௯

2598 எறிவது ஞானத் துறைவாள் உருவி
அறிவத னோடேயவ் வாண்டகை யானைச்
செறிவது தேவர்க்குந் தேவர் பிரானைப்
பறிவது பல்கணப் பற்றுவி டாரே. ௧௦

2599 ஆதிப் பிரான்தந்த வாளங்கைக் கொண்டபின்
வேதித்து என்னை விலக்கவல் லாரில்லை
சோதிப்பன் அங்கே சுவடு படாவண்ணம்
ஆதிக்கட் டெய்வ மவனிவ னாமே. ௧௧

2600 அந்தக் கருவை யருவை வினைசெய்தற்
பந்தம் பணியச்சம் பல்பிறப் பும்வாட்டிச்
சிந்தை திருத்தலுஞ் சேர்ந்தாரச் சோதனை
சந்திக்கத் தற்பர மாகுஞ் சதுரர்க்கே. ௧௨

எட்டாந் தந்திரம் முற்றும்.

# ஒன்பதாந் தந்திரம்

[மகுடாகமம்]

## 1. குருமட தரிசனம்

2601 பலியும் அவியும் பரந்து புகையும்
ஒலியும்எம் ஈசன் தனக்கென்றே யுள்கிக்
குவியுங் குருமடங் கண்டவர் தாம்போய்த்
தளிரு மலரடி சார்ந்துநின் றாரே. க

2602 இவனில்ல மல்ல தவனுக்கங் கில்லை
அவனுக்கும் வேறில்லம் உண்டா அறியின்
அவனுக் கிவனில்ல மென்றென் றறிந்தும்
அவனைப் புறம்பென் றரற்றுகின் றாரே. உ

2603 நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்
கூடுஞ் சிவனது கொய்மலர்ச் சேவடி
தேட வரியன் சிறப்பிலி எம்மிறை
ஓடும் உலகுயி ராகிநின் றானே. ங

2604 இயம்புவன் ஆசனத் தோடு மலையும்
இயம்புவன் சித்தக் குகையும் இடமும்
இயம்புவன் ஆதாரத் தோடு வனமும்
இயம்புவன் ஈரா றிருநிலத் தோர்க்கே. ச

2605 முகம்பீட மாமட முன்னிய தேயம்
அகம்பர வர்க்கமே யாசில்செய் காட்சி
அகம்பர மாதனம் எண்ணெண் கிரியை
சிதம்பரந் தற்குகை யாதாரந் தானே. ரு

2606 அகமுக மாம்பீடம் ஆதார மாகுஞ்
சகமுக மாஞ்சத்தி யாதன மாகுஞ்
செகமுக மாந்தெய்வ மேசிவ மாகும்
அகமுகம் ஆய்ந்த அறிவுடை யோர்க்கே. சா

2607 மாயை யிரண்டு மறைக்க மறைவுறுங்
காயமோ ரைந்துங் கழியத்தா னாகியே
தூய பரஞ்சுடர் தோன்றச் சொரூபத்துள்
ஆய்பவர் ஞானாதி மோனத்த ராமே. எ

## 2. ஞானகுரு தரிசனம்

2608 ஆறாறு முப்பதும் அங்கே யடங்கிடிற்
கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்
வேறே சிவபத மேலாய் அளித்திடும்
பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே. ௧

2609 துரியங்கள் மூன்றுங் கடந்தொளிர் சோதி
அரிய பரசிவம் யாவையு மாகி
விரிவு குவிவற விட்ட நிலத்தே
பெரிய குருபதம் பேசவொண் ணாதே. ௨

2610 ஆயன நந்தி யடிக்கென் றலைபெற்றேன்
வாயன நந்தியை வாழ்த்தவென் வாய்பெற்றேன்
காயன நந்தியைக் காணவென் கண்பெற்றேன்
சேயன நந்திக்கென் சிந்தைபெற் றேனே. ௩

2611 கருடன் உருவங் கருதும் அளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவங் குறித்தஅப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. ௪

2612 தோன்ற அறிதலுந் தோன்றல்தோன் றாமையு
மான்ற வறிவு மறிநன வாதிகள்
மூன்றவை நீங்குந் துரியங்கள் மூன்றற
ஊன்றிய நந்தி யுயர்மோனந் தானே. ௫

2613 சந்திர பூமிக் குடன்புரு வத்திடைக்
கந்த மலரில் இரண்டிதழ்க் கன்னியும்
பந்த மிலாத பளிங்கின் உருவினள்
பந்தம் அறுத்த பரங்குரு பற்றே. ௬

2614 மனம்புகுந் தானுல கேழு மகிழ
நிலம்புகுந் தானெடு வானிலந் தாங்கிச்
சினம்புகுந் தான்திசை எட்டும் நடுங்க
வனம்புகுந் தானூர் வடக்கென்ப தாமே. ௭

2615 தானான வண்ணமுங் கோசமுஞ் சார்தருந்
தானம் பறவை வனமெனத் தக்கன
தானான சோடச மார்க்கந்தான் நின்றிடில்
தானாந் தசாங்கமும் வேறுள்ள தானே. ௮

2616 மருவிப் பிரிவறி யாஎங்கள் மாநந்தி
உருவ நினைக்கநின் றுள்ளே யுருக்கும்

கருவிற் கரந்துள்ளங் காணவல் லார்க்கிங்
கருவினை கண்சோரும் அழிவார் அகத்தே. ௯

2617 தலைப்பட லாமெங்கள் தத்துவன் தன்னைப்
பலப்படு பாசம் அறுத்தறுத் திட்டு
நிலைப்பெற நாடி நினைப்பற வுள்கில்
தலைப்பட லாகுந் தருமமுந் தானே. ௧௦

2618 நினைக்கின் நினைக்கு நினைப்பவர் தம்மைச்
சுனைக்குள் விளைமலர்ச் சோதியி னானைத்
தினைப்பிளந் தன்ன சிறுமைய ரேனுங்
கனைத்த மனத்தடைந் தாலுயர்ந் தாரே. ௧௧

2619 தலைப்படுங் காலத்துத் தத்துவன் தன்னை
விலக்குறின் மேலை விதியென்றுங் கொள்க
அனைத்துல காய்நின்ற ஆதிப் பிரானை
நினைப்புறு வார்பத்தி தேடிக்கொள் வாரே. ௧௨

2620 நகழ்வொழிந் தாரவர் நாதனை யுள்கி
நிகழ்வொழிந் தாரெம் பிரானொடுங் கூடித்
திகழ்வொழிந் தார்தங்கள் சிந்தையி னுள்ளே
புகழ்வழி காட்டிப் புகுந்துநின் றானே. ௧௩

2621 வந்த மரகத மாணிக்க ரேகைபோற்
சந்திடு மாமொழிச் சற்குரு சன்மார்க்கம்
இந்த இரேகை யிலாடத்தின் மூலத்தே
சுந்தரச் சோதியுட் சோதியு மாமே. ௧௪

2622 உண்ணும் வாயும் உடலும் உயிருமாய்க்
கண்ணுமா யோகக் கடவுள் இருப்பது
மண்ணு நீரனல் காலொடு வானுமாய்
விண்ணு மின்றி வெளியானோர் மேனியே. ௧௫

2623 பரசு பதியென்று பார்முழு தெல்லாம்
பரசிவ னாணை நடக்கும் பாதியாற்
பெரிய பதிசெய்து பின்னும் அடியார்க்
குரிய பதியும்பா ராக்கிநின் றானே. ௧௬

2624 அம்பர நாதன் அகலிட நீள்பொழில்
தம்பர மல்லது தாமறி யோமென்பர்
உம்பருள் வானவர் தானவர் கண்டிலர்
எம்பெரு மானருள் பெற்றிருந் தாரே. ௧௭

2625 கோவணங் கும்படி கோவண மாகிப்பின்
நாவணங் கும்படி நந்தி யருள்செய்தான்
தேவணங் கோமினிச் சித்தந் தெளிந்தனம்
போய்வணங் கும்பொரு ளாயிருந் தோமே. கஅ

## 3. பிரணவசமாதி

2626 தூலப் பிரணவஞ் சொரூபானந் தப்[1]பேர்
பாலித்த சூக்கும மேலைச் சொரூபப்பெண்
ஆலித்த முத்திரை யாங்கதிற் காரணம்
மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே. க

2627 ஓமெனும் ஓங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே. உ

2628 ஓங்காரத் துள்ளே யுதித்தஐம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்கார தீதத் துயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே. ௩

2629 வருக்கஞ் சுகமாம் பிரமமு மாகும்
[2]அருக்கஞ் சராசர மாகும் உலகில்
தருக்கிய வாதார மெல்லாந்தன் மேனி
சுருக்கமின் ஞானந் தொகுத்துணர்ந் தோரே. ச

2630 மலையு மனேபவ மருள்வன வாவன
நிலையிற் றரிசனம் தீப நெறியாங்
தலமுங் குலமுந் தவஞ்சித்த மாகும்
நலமுஞ்சன் மார்க்கத் துபதேசந் தானே. ரு

2631 சோடச மார்க்கமுஞ் சொல்லுஞ்சன் மார்க்கிகட்
காடிய வீராறின் அந்தமும் ஈரேழிற்
கூடிய அந்தமுங் கோதண்ட முங்கடந்
தேறியே ஞானஞே யாந்தத் திருக்கவே. சா

## 4. ஒளி

2632 ஒளியை யறியில் உருவும் ஒளியும்
ஒளியும் உருவம் அறியில் உருவாம்
ஒளியின் உருவம் அறியில் ஒளியே
ஒளியும் உருக வுடனிருந் தானே. க

பா. வே. 1. பேருரை. 2. வருக்கஞ்.

2633 புகலொளி தாகும் புவனங்கள் எட்டும்
அகலொளி தாயிரு ளாசற வீசும்
பகலொளி செய்தது மத்தா மரையிலே
இகலொளி செய்தெம் பிரானிருந் தானே. உ

2634 விளங்கொளி யங்கி விரிகதிர் சோமன்
துளங்கொளி பெற்றன சோதி யருளா
வளங்கொளி பெற்றதே பேரொளி வேறு
களங்கொளி செய்து கலந்துநின் றானே. ௩

2635 இளங்கொளி யீசன் பிறப்பொன்று மில்லி
துளங்கொளி ஞாயிறுந் திங்களுங் கண்கள்
வளங்கொளி யங்கியு மற்றைக்கண் நெற்றி
விளங்கொளி செய்கின்ற மெய்கா யமாமே. ௪

2636 மேலொளி கீழதன் மேவிய மாருதம்
[1]பாலொளி யங்கி பரந்தொளி யாகாசம்
நீரொளி செய்து நெடுவிசும் பொன்றிலும்
மேலொளி யைந்தும் ஒருங்கொளி யாமே. ௫

2637 மின்னிய தூவொளி மேதக்க செவ்வொளி
பன்னிய ஞானம் பரந்த பரத்தொளி
துன்னிய வாறொளி தூய்மொழி நாடொறும்
உன்னிய வாறொளி யொத்தது தானே. ௬

2638 விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து
துளங்கொளி யீசனைச் சொல்லுமெப் போதும்
உளங்கொளி யூனிடை நின்றுயிர்க் கின்ற
வளங்கொளி எங்கும் மருவிநின் றானே. ௭

2639 விளங்கொளி யவ்வொளி யவ்விருள் மன்னுந்
துளங்கொளி யான்தொழு வார்க்கும் ஒளியான்
அளங்கொளி யாரமு தாகஞ் சாருங்
களங்கொளி யீசன் கருத்தது தானே. ௮

2640 இலங்கிய தெவ்வொளி யவ்வொளி யீசன்
துலங்கொளி போல்வது தூங்கருட் சத்தி
விளங்கொளி மூன்றே விரிசுடர் தோன்றி
உளங்கொளி யுள்ளே யொருங்குகின் றானே. ௯

2641 உளங்கொளி யாவதென் உள்நின்ற சீவன்
வளங்கொளி யாநின்ற மாமணிச் சோதி

---

பா. வே. 1. பாரொளி.

விளங்கொளி யாய்மின்னி விண்ணில் ஒடுங்கி
வளங்கொளி யாயத்து ளாகிநின் றானே. ௧௦

2642 விளங்கொளி யாய்நின்ற விகிர்தன் இருந்த
துளங்கொளி பாசத்துள் தூங்கிருள் சேராக்
களங்கிருள் நட்டமே கண்ணுத லாட
விளங்கொளி யுன்மனத் தொன்றிநின் றானே. ௧௧

2643 போது கருங்குழற் போனவர் தூதிடை
ஆதி பரத்தை அமரர் பிரானொடுஞ்
சோதியும் அண்டத்தப் பாலுற்ற தூவொளி
நீதியி னல்லிருள் நீக்கிய வாறே. ௧௨

2644 உண்டில்லை யென்னும் உலகத் தியல்வது
பண்டில்லை யென்னும் பரங்கதி யுண்டுகொல்
கண்டில்லை மானிடர் கண்ட கருத்துறில்
விண்டில்லை யுள்ளே விளக்கொளி யாமே. ௧௩

2645 சுடருற ஓங்கிய ஒள்ளொளி யாங்கே
படருறு காட்சிப் பகலவன் ஈசன்
அடருறு மாயையி னாரிருள் வீசில்
உடலுறு ஞானத் துறவிய னாமே. ௧௪

2646 ஒளிபவ ளத்திரு மேனிவெண் ணீற்றன்
அளிபவ ளச்செம்பொன் ஆதிப் பிரானுங்
களிபவ ளத்தினன் காரிருள் நீங்கி
ஒளிபவ ளத்தெண்ணே டீசன்நின் றானே. ௧௫

2647 ஈசன்நின் றானிமை யோர்கள்நின் றார்நின்ற
தேசமொன் றின்றித் திகைத்திழைக் கின்றனர்
பாசமொன் றாகப் பழவினைப் பற்றற
வாசமொன் றாமலர் போன்றது தானே. ௧௬

2648 தானே யிருக்கும் அவற்றில் தலைவனுந்
தானே யிருக்கும் அவனென நண்ணிடும்
வானா யிருக்குமிம் மாயிரு ஞாலத்துப்
பானா யிருக்கப் பரவலு மாமே. ௧௭

## 5. தூல பஞ்சாக்கரம்

2649 ஒன்றுகண் டேனிவ் வுலகுக் கொருகனி
நன்றுகண் டாயது நமச்சிவா யக்கனி
மென்றுகண் டாலது மெத்தென் றிருக்குந்
தின்றுகண் டாலது தித்திக்குந் தானே. ௧

2650 அகார முதலாக ஐம்பத்தொன் ருகி
உகார முதலாக வோங்கி யுதித்து
மகார இறுதியாய் மாய்ந்துமாய்ந் தேறி
நகார முதலாகும் நந்திதன் நாமமே. ௨

2651 அகராதி யீரெண் கலந்த பரையும்
உகராதி தன்சத்தி யுள்ளொளி யீசன்
சிகராதி தான்சிவ வேதமே கோண
நகராதி தான்மூல மந்திர நண்ணுமே. ௩

2652 வாயொடு கண்டம் இதய மருவுந்தி
ஆய இலிங்க மவற்றின்மே லேயவ்வாய்த்
தூயதோர் துண்ட மிருமத் தகஞ்செல்லல்
ஆயதீ ருமைந்தோ டாமெழுத் தஞ்சுமே. ௪

2653 கிரணங்கள் ஏழுங் கிளர்ந்தெரி பொங்கிக்
கரணங்கள் விட்டுயிர் தானெழும் போது
மரணங்கை வைத்துயிர் மாற்றிடும் போது
மரணங்கை கூட்டுவ தஞ்செழுத் தாமே. ௫

2654 ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்
ஆயுறு மந்திர மாரும் அறிகிலர்
சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும்
வாயுற வோதி வழுத்தலு மாமே. ௬

2655 குருவழி யாய குணங்களி னின்று
கருவழி யாய கணக்கை யறுக்க
வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்
கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே. ௭

2656 வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது
செறிக்கின்ற நந்தி திருவெழுத் தோதுங்
குறிப்பது வுன்னிற் குரைகழல் கூட்டுங்
குறிப்பறி வான்றவங் கோனுரு வாமே. ௮

2657 நெஞ்சு நினைந்துதம் வாயாற் பிரானென்று
துஞ்சும் பொழுதுன் துணைத்தாள் சரணென்று
மஞ்சு தவழும் வடவரை மீதுறை
அஞ்சில் இறைவன் அருள்பெற லாமே. ௯

2658 பிரான்வைத்த ஐந்தின் பெருமை யுணரா
திராமாற்றஞ் செய்வார்கொல் ஏழை மனிதர்
பராமுற்றுங் கீழொடு பல்வகை யாலும்
அராமுற்றுஞ் சூழ்ந்த அகலிடந் தானே. ௧௦

## 6. சூக்கும பஞ்சாக்கரம்

2659 எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை
ஒளியை யுன்னி யுருகு மனத்தராய்த்
தெளிய வோதிச் சிவாய நமவென்னுங்
குளிகை யிட்டுப்பொன் னாக்குவன் கூட்டையே. ௧

2660 சிவன்சத்தி சீவன் செறுமல மாயை
அவஞ்சேர்த்த பாச மலமைந் தகலச்
சிவன்சத்தி தன்னுடன் சீவனார் சேர
அவஞ்சேர்த்த பாசம் அணுககி லாவே. ௨

2661 சிவனரு ளாய சிவன்திரு நாமஞ்
சிவனரு ளான்மாத் திரோத மலமாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவ னாமே. ௩

2662 ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டவ்
வாதி தனைவிட் டிறையருட் சத்தியால்
தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்
ஓதுஞ் சிவாய மலமற்ற உண்மையே. ௪

2663 தெள்ளமு தூறச் சிவாய நமவென்று
உள்ளமு தூற வொருகால் உரைத்திடும்
வெள்ளமு தூறல் விரும்பியுண் ணாதவர்
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே. ௫

2664 நமாதி நனாதி திரோதாயி யாகித்
தமாதிய தாய்நிற்கத் தானந்தத் தூற்றுச்
சமாதித் துரியந் தமதாக மாகவே.
நமாதி சமாதி சிவவாதல் எண்ணவே. ௬

2665 அருட்டரு மாயமும் அத்தனுந் தம்மில்
ஒருவனை யீன்றவர் உள்ளுறு மாயை
திரிமல நீங்கிச் சிவாயவென் றோதும்
அருவினை தீர்ப்பதும் அவ்வெழுத் தாமே. ௭

2666 சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் அடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்
சிவசிவ வாகும் திருவரு ளாமே. ௮

2667 சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளுஞ்

சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே. ௯

2668 நமவென்னு நாமத்தை நாவில் ஒடுக்கிச்
சிவவென்னு நாமத்தைச் சிந்தையு ளேற்றப்
பவமது தீரும் பரிசும தற்றால்
அவமதி தீரும் அறும்பிறப் பன்றே. ௧௦

## 7. அதிசூக்கும பஞ்சாக்கரம்

2669 சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே. ௧

2670 செஞ்சுடர் மண்டலத் தூடுசென் றப்புற
மஞ்சண வும்முறை யேறி வழிக்கொண்டு
துஞ்சு மவன்சொன்ன காலத் திறைவனை
நெஞ்சென நீங்கா நிலைபெற லாகுமே. ௨

2671 அங்கமும் ஆகம வேதம தோதினும்
எங்கள் பிரானெழுத் தொன்றில் இருப்பது
சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையுஞ் சாதித்தால்
அங்கரை சேர்ந்த அருங்கல மாமே. ௩

2672 நாயோட்டு மந்திரம் நான்மறை வேத
நாயோட்டு மந்திரம் நாத னிருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த சோதி
நாயோட்டு மந்திரம் நாமறி யோமே. ௪

2673 பழுத்தன ஐந்தும் பழமறை யுள்ளே
விழித்தங் குறங்கும் வினையறி வாரில்லை
எழுத்தறி வோமென் றுரைப்பர்கள் ஏதர்
எழுத்தை யழுத்தும் எழுத்தறி யாரே. ௫

## 8. திருக்கூத்துத் தரிசனம்

2674 எங்குந் திருமேனி எங்குஞ் சிவசத்தி
எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்
எங்குஞ் சிவமா யிருத்தலால் எங்கெங்குந்
தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே. ௧

2675 சிற்பரஞ் சோதி சிவானந்தக் கூத்தனைச்
சொற்பத மாம்அந்தச் சுந்தரக் கூத்தனைப்

பொற்பதிக் கூத்தனைப் பொற்றில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யாரறி வாரே. ௨

2676 திருமந் திரமே சிதம்பரந் தானும்
திருமந் திரமே சிறந்த உபாங்கந்
திருமந் திரமே திருக்கூத்தின் செய்கை
திருமந் திரமே திருமேனி தானே. ௩

2677 திருமேனி தானே திருவரு ளாகுந்
திருமேனி தானே திருஞான மாகுந்
திருமேனி தானே சிவநேய மாகுந்
திருமேனி தானே தெளிந்தார்க்குச் சித்தியே. ௪

சிவானந்தக் கூத்து

2678 தானந்தம் இல்லாச் சதானந்த சத்திமேல்
தேனுந்தும் ஆனந்த மாநடங் கண்டீர்
ஞானங் கடந்து நடஞ்செய்யும் நம்பிக்கங்
கானந்தக் கூத்தாட ஆடரங் கானதே. ௫

2679 ஆனந்தம் ஆடரங் கானந்தம் பாடல்கள்
ஆனந்தம் பல்லியம் ஆனந்த வாச்சியம்
ஆனந்த மாக அகில சராசரம்
ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே. ௬

2680 ஒளியாம் பரமும் உளதாம் பரமும்
அளியார் சிவகாமி யாகுஞ் சமயக்
களியார் பரமுங் கருதுறை யந்தத்
தெளிவாஞ் சிவானந்த நட்டத்தின் சித்தியே. ௭

2681 ஆன நடமைந் தகள சகளத்தர்
ஆன நடமாடி ஐங்கரு மத்தாக
ஆன தொழிலரு ளாலைந் தொழிற்செய்தே
தேன்மொழி பாகன் திருநட மாடுமே. ௮

2682 பூதாண்ட பேதாண்ட போகாண்ட யோகாண்ட
மூதாண்ட முத்தாண்ட மோகாண்ட தேகாண்ட
தாகாண்ட மைங்கரு மத்தாண்ட தற்பரத்
தேகாந்த மாம்பிர மாண்டத்த என்பவே. ௯

2683 வேதங்க ளாட மிகுஆ கமமாடக்
கீதங்க ளாடக் கிளரண்டம் ஏழாடப்
பூதங்க ளாடப் புவன முழுதாட
நாதங்கொண் டாடினான் ஞானனந் தக்கூத்தே. ௧௦

2684 பூதங்கள் ஐந்திற் பொறியிற் புலனைந்தில்
வேதங்கள் ஐந்தின் மிகுமா கமந்தன்னில்
ஓதுங் கலைகாலம் ஊழி யுடன்அண்டப்
போதங்கள் ஐந்திற் புணர்ந்தாடுஞ் சித்தனே. ௧௧

2685 தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர்
மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே. ௧௨

சுந்தரக் கூத்து

2686 அண்டங்கள் ஏழினுக் கப்புறத் தப்பால்
உண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேற்
கண்டங் கரியான் கருணை திருவுருக்
கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே. ௧௩

2687 கொடுகொட்டி பாண்டங் கோடுசங் கார
நடமெட்டோ டைந்தாறு நாடியுள் நாடுந்
திடமுற் றெழுந்தேவ தாருவாந் தில்லை
வடமுற்ற மாவன மன்னவன் தானே. ௧௪

2688 பரமாண்டத் தூடே பராசத்தி பாதம்
பரமாண்டத் தூடே படரொளி ஈசன்
பரமாண்டத் தூடே படர்தரு நாதம்
பரமாண்டத் தூடே பரன்நட மாடுமே. ௧௫

2689 அங்குச மென்ன எழுமார்க்கம் போதத்தில்
தங்கிய தொந்தி எனுந்தாள ஒத்தினில்
சங்கரன் மூலநா டிக்குள் தரித்தாடல்
பொங்கிய காலம் புகும்போகல் இல்லையே. ௧௬

2690 ஆனத்தி யாடிப் பின்னவக் கூத்தாடிக்
கானத்தி யாடிக் கருத்தில் தரித்தாடி
மோனச் சுழுனையுள் ஆடி முடிவில்லா
ஞானத்துள் ஆடி முடித்தான்என் நாதனே. ௧௭

2691 சத்திகள் ஐந்துஞ் சிவபேதந் தானைந்தும்
முத்திகள் எட்டும் முதலாம் பதமெட்டுஞ்
சித்திகள் எட்டுஞ் சிவபதந் தானெட்டுஞ்
சுத்திகள் எட்டீசன் தொல்நட மாடுமே. ௧௮

2692 மேகங்கள் ஏழும் விரிகடல் தீவேழுந்
தேகங்கள் ஏழுஞ் சிவபாற் கரன்ஏழுந்

தாகங்கள் ஏழுஞ் சாந்திகள் ஏழும்
ஆகின்ற நந்தி யடிக்கீழ் அடங்குமே. ௧௯

## பொற்பதிக் கூத்து

2693 தெற்கு வடக்குக் கிழக்குமேற் குச்சியில்
அற்புத மானதோர் அஞ்சு முகத்திலும்
ஒப்பில்பே ரின்பத் துபய உபயத்துள்
தற்பரன் நின்று தனிநடஞ் செய்யுமே. ௨௦

2694 அடியார் அரனடி யானந்தங் கண்டோர்
அடியா ரானவ ரத்தரு ளுற்றோர்
அடியார் பவரே யடியவ ராமால்
அடியார்பொன் னம்பலத் தாடல்கண் டாரே. ௨௧

2695 அடங்காத என்னை அடக்கி அடிவைத்
திடங்காண் பரானந்தத் தேஎன்னை இட்டு
நடந்தான் செயுந்நந்தி நன்ஞானக் கூத்தன்
படந்தான்செய் துள்ளுட் படிந்திருந் தானே. ௨௨

2696 உம்பரிற் கூத்தனை உத்தமக் கூத்தனைச்
செம்பொற் றிருமன் றுட் சேவகக் கூத்தனைச்
சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை
இன்புற நாடிஎன் அன்பில்வைத் தேனே. ௨௩

2697 மாணிக்கக் கூத்தனை வண்தில்லைக் கூத்தனைப்
பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனைச்
சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை
ஆணிப்பொற் கூத்தனை யாருரைப் பாரே. ௨௪

2698 விம்மும் வெருவும் விழும்எழும் மெய்சோருந்
தம்மையுந் தாமறி யார்கள் சதுர்கெடுஞ்
செம்மை சிறந்த திருஅம் பலக்கூத்துள்
அம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே. ௨௫

2699 தேட்டறுஞ் சிந்தை திகைப்பறும் பிண்டத்துள்
வாட்டறுங் கால்புந்தி யாகி வரும்புலன்
ஓட்டறு மாசை அறுமுளத் தானந்த
நாட்ட முறுக்குறு நாடகங் காணவே. ௨௬

2700 காளியோ டாடிக் கனகா சலத்தாடிக்
கூளியோ டாடிக் குவலயத் தேயாடி
நீடிய நீர்தீக்கால் நீள்வா னிடையாடி
நாளுற அம்பலத் தேயாடும் நாதனே. ௨௭

2701 மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூருமிவ் வானின் இலங்கைக் குறியுறுஞ்
சாருந் திலைவனத் தண்மா மலயத்தூ
டேறுஞ் சுழுனை இவைசிவ பூமியே. ௨௮

2702 பூதல மேருப் புறத்தான தெக்கணம்
ஓதும் இடைபிங் கலையொண் சுழுனையாம்
பாதி மதியோன் பயில்திரு வம்பலம்
ஏதமில் பூதாண்டத் தெல்லையி னீறே. ௨௯

போற்றில்லைக் கூத்து

2703 அண்டங்கள் ஓரேழும் அம்பொற் பதியாகப்
பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத்
தெண்டினிற் சத்தி திருஅம் பலமாகக்
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே. ௩௦

2704 குரானந்த ரேகையாய்க் கூர்ந்த குணமாஞ்
சிரானந்தம் பூரித்துத் தென்திசை சேர்ந்து
புரானந்த போகனாய்ப் பூவையுந் தானும்
நிரானந்த மாகி நிருத்தஞ்செய் தானே. ௩௧

2705 ஆதி பரன்ஆட அங்கைக் கனலாட
ஓதுஞ் சடையாட உன்மத்த முற்றாடப்
பாதி மதியாடப் பாரண்ட மீதாட
நாதமோ டாடினான் நாதாந்த நட்டமே. ௩௨

2706 கும்பிட அம்பலத் தாடிய கோனடம்
அம்பரன் ஆடும் அகிலாண்ட நட்டமாஞ்
செம்பொரு ளாகுஞ் சிவலோகஞ் சேர்ந்துற்றால்
உம்பர மோனஞா னந்தத்தில் உண்மையே. ௩௩

2707 மேதினி மூவேழ் மிகுமண்டம் ஓரேழு
சாதக மாகுஞ் சமயங்கள் நூற்றெட்டு
நாதமோ டந்த நடானந்த நாற்பதப்
பாதியோ டாடிப் பரனிரு பாதமே. ௩௪

2708 இடைபிங் கலையிம வானோ டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுனை
கடவுந் திலைவனங் கைகண்ட மூலம்
படர்வொன்றி யென்னும் பரமாம் பரமே. ௩௫

2709 ஈறான கன்னி குமரியே காவிரி
வேறா நவதீர்த்த மிக்குள்ள வெற்பேழுள்

பேறான வேதா கமமே பிறத்தலான்
மாறாத தென்திசை வையகஞ் சுத்தமே. ௩௬

2710 நாதத் தினிலாடி நாற்பதத் தேயாடி
வேதத்தி லாடித் தழலந்த மீதாடி
போதத்தி லாடிப் புவன முழுதாடுந்
தீதற்ற தேவாதி தேவர் பிரானே. ௩௭

2711 தேவரோ டாடித் திருவம் பலத்தாடி
மூவரோ டாடி முனிசனத் தோடாடிப்
பாவினுள் ஆடிப் பராசத் தியிலாடிக்
கோவினுள் ஆடிடுங் கூத்தப் பிரானே. ௩௮

2712 ஆறு முகத்தில் அதிபதி நானென்றுங்
கூறு சமயக் குருபரன் நானென்றுந்
தேறினர் தெற்குத் திருஅம்ப லத்துளே
வேறின்றி யண்ணல் விளங்கிநின் றானே. ௩௯

2713 அம்பலம் ஆடரங் காக அதன்மீதே
எம்பரன் ஆடும் இருதாளி னீரொளி
உம்பர மாம்ஐந்து நாதத்து ரேகையுள்
தம்பத மாய்நின்று தான்வந் தருளுமே. ௪௦

2714 ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமுங்
கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்
தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. ௪௧

2715 இருதயந் தன்னில் எழுந்த பிராணன்
கரசர ணாதி கலக்கும் படியே
அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்
குரவனாய் எங்கணுங் கூத்துகந் தானே. ௪௨

அற்புதக் கூத்து

2716 குருவுரு வன்றிக் குனிக்கும் உருவம்
அருவுரு வாவது அந்த அருவே
திரிபுரை யாகித் திகழ்தரு வாளும்
உருவரு வாகும் உமையவள் தானே. ௪௩

2717 திருவழி யாவது சிற்றம் பலத்தே
குருவடி வுள்ளாக் குனிக்கும் உருவே
உருவரு வாவது முற்றுணர்ந் தோர்க்கு
அருள்வழி யாவதும் அவ்வழி தானே. ௪௪

2718 நீருஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்
ஓடும் உயிரெழுந் தோங்கி யுதித்திட
நாடுமின் நாதாந்த நம்பெரு மான்உகந்
தாடும் இடந்திரு அம்பலந் தானே. ௪௫

2719 வளிமேக மின்வில்லு வானக வோசை
தெளிய விசும்பில் திகழ்தரு வாறுபோல்
களியொளி யாறுங் கலந்துடன் வேறாய்
ஒளியுரு வாகி ஒளித்துநின் றானே. ௪௬

2720 தீமுதல் ஐந்துந் திசையெட்டுங் கீழ்மேலும்
ஆயும் அறிவினுக் கப்புறம் ஆனந்தம்
மாயைமா மாயை கடந்துநின் றார்காண
நாயகன் நின்று நடஞ்செய்யும் வாறே. ௪௭

2721 கூத்தன் கலந்திடுங் கோல்வளை யாளொடுங்
கூத்தன் கலந்திடுங் கோதிலா ஆனந்தங்
கூத்தன் கலந்திடுங் கோதிலா ஞானத்துக்
கூத்தனுங் கூத்தியுங் கூத்ததின் மேலே. ௪௮

2722 இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்
படங்கொடு நின்றஇப் பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலுந் தாமாய்நின் றாடுகின் றாரே. ௪௯

2723 சத்தி வடிவு சகல ஆனந்தமும்
ஒத்த ஆனந்தம் உமையவள் மேனியாஞ்
சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்
டொத்த ஆனந்தம் ஒருநட மாமே. ௫0

2724 நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடஞ்
சிற்றம் பலமென்று தேர்ந்துகொண் டேனே. ௫௧

2725 அண்டங்கள் தத்துவ மாகிச் சதாசிவந்
தண்டினிற் சாத்தவி சாம்பவி யாதனந்
தெண்டினில் ஏழுஞ் சிவாசன மாகவே
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே. ௫௨

2726 மன்று நிறைந்த விளக்கொளி மாமலர்
நன்றிது தானிதழ் நாலொடு நூறவை
சென்றது தானொரு பத்திரு நூறுள
நின்றது தானெடு மண்டல மாமே. ௫௩

2727 அண்டம் எழுகோடி பிண்டம் எழுகோடி
தெண்டிரை சூழ்ந்த திசைகள் எழுகோடி
எண்டிசை சூழ்ந்த இலிங்கம் எழுகோடி
அண்டன் நடஞ்செயும் ஆலயந் தானே. ௫௪

2728 ஆகாச மாமுட லங்கார் முயலகன்
ஏகாச மாந்திசை யெட்டுந் திருக்கைகண்
மோகாய முக்கண்கள் மூன்றொளி தானாக
மாகாய மன்றுள் நடஞ்செய்கின் றானே. ௫௫

2729 அம்பல மாவ தகில சராசரம்
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புத்தீ மண்டலம்
அம்பல மாவது அஞ்செழுத் தாமே. ௫௬

2730 கூடிய திண்முழ வங்குழ லோமென்று
ஆடிய மானுடர் ஆதிப் பிரானென்ன
நாடிய நற்கண மாரம்பல் பூதங்கள்
பாடிய வாறொரு பாண்டரங் காமே. ௫௭

2731 அண்டத்தில் தேவர்கள் அப்பாலைத் தேவர்கள்
தெண்டிரை சூழ்புவிக் குள்ளுள்ள தேவர்கள்
புண்டரி கப்பதப் பொன்னம் பலக்கூத்துக்
கண்டுசே வித்துக் கதிபெறு வார்களே. ௫௮

2732 புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
துளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்
ஒளிக்குளா னந்தத் தமுதூறும் உள்ளத்தே. ௫௯

2733 திண்டாடி வீழ்கை சிவானந்த மாவது
உண்டார்க் குணவுண்டால் உன்மத்தஞ் சித்திக்குங்
கொண்டாடு மன்றுட் குனிக்குந் திருக்கூத்துக்
கண்டார் வருங்குணங் கேட்டார்க்கும் ஒக்குமே. ௬௦

2734 அங்கி தமருகம் அக்குமா லைபாசம்
அங்குசஞ் சூலங் கபால முடன்ஞானந்
தங்கு பயந்தரு நீல மும்முடன்
மங்கையோர் பாகமாய் மாநட மாடுமே. ௬௧

2735 ஆடல் பதினொ ருறுப்பும் அடைவாகக்
கூடிய பாதஞ் சிலம்புகைக் கொள்துடி
நீடிய நாதம் பராற்பர னேயத்தே
ஆடிய நந்தி புறமகத் தானே. ௬௨

2736 ஒன்பதும் ஆட ஒருபதி னாற்ட
அன்புறு மார்க்கங்கள் ஆறும் உடனாட
இன்புறும் ஏழினும் ஏழைம்பத் தாறாட
அன்பது மாடினான் ஆனந்தக் கூத்தே. ௬௩

2737 ஏழினில் ஏழாய் இகழ்ந்தெழுத் தேழதாய்
ஏழினில் ஒன்றாய் இழிந்தமைந் தொன்றாகி
ஏழினிற் சன்மார்க்கம் எங்கள் பரஞ்சோதி
ஏழிசை நாடகத் தேஇசைந் தானே. ௬௪

2738 மூன்றினில் அஞ்சாகி மூந்நூற் றறுபதாய்
மூன்றினில் ஆறாய் முதற்பன்னீர் மூலமாய்
மூன்றினில் அக்க முடிவாகி மூந்தியே
மூன்றிலும் ஆடினான் மோகாந்தக் கூத்தே. ௬௫

2739 தாமுடி வானவர் தம்முடி மேலுறை
மாமணி ஈசன் மலரடித் தாளிணை
வாமணி யன்புடை யார்மனத் துள்ளெழுங்
காமணி ஞாலங் கடந்துநின் றானே. ௬௬

2740 புரிந்தவன் ஆடிற் புவனங்க ளாடுந்
தெரிந்தவன் ஆடும் அளவெங்கள் சிந்தை
புரிந்தவ னாடிற்பல் பூதங்கள் ஆடும்
எரிந்தவன் ஆடல்கண் டின்புற்ற வாறே. ௬௭

2741 ஆதி நடஞ்செய்தான் என்பர்கள் ஆதர்கள்
ஆதி நடஞ்செய்கை யாரும் அறிகிலர்
ஆதி நடமாட லாரும் அறிந்தபின்
ஆதி நடமாட லாமருட் சத்தியே. ௬௮

2742 ஒன்பதோ டொன்பதாம் உற்ற இருபதத்
தன்புறு கோணம் அசிபதத் தாடத்
துன்புறு சத்தியுள் தோன்றிநின் றாடவே
அன்புறு எந்தைநின் றாடலுற் றானே. ௬௯

2743 தத்துவம் ஆடச் சதாசிவந் தானாடச்
சித்தமும் ஆடச் சிவசத்தி தானாட
வைத்த சராசரம் ஆட மறையாட
அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே. ௭௦

2744 இருவரும் காண எழில்அம் பலத்தே
உருவோ டருவோ டுருபர ரூபமாய்த்
திருவருட் சத்திக்குள் சித்தன னந்தன்
அருளுரு வாகநின் றாடலுற் றானே. ௭௧

2745 சிவமாடச் சத்தியும் ஆடச் சகத்தில்
அவமாட ஆடாத அம்பரம் ஆட
நவமான தத்துவ நாதாந்த மாடச்
சிவமாடும் வேதாந்தச் சித்தாந்தத் துள்ளே. எஉ

2746 நாதத்தின் அந்தமும் நாற்போத அந்தமும்
வேதத்தின் அந்தமும் மெய்ச்சிவா னந்தமுந்
தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து
நாதப் பிரமஞ் சிவநட மாமே. எங

2747 சிவமாதி ஐவர்திண் டாட்டமுந் தீரத்
தவமார் பசுபாசம் ஆங்கே தனித்துத்
தவமாம் பரனெங்குந் தானாக ஆடுந்
தவமாஞ் சிவானந்தத் தோர்ஞானக் கூத்தே. எச

2748 கூடிநின் றொருகாலத்துத் தேவர்கள்
வீடநின் றன்விகிர் தாவென்னு நாமத்தைத்
தேடநின் றன்திக ழுஞ்சுடர் மூன்றொளி
ஆடநின் றன்என்னை ஆட்கொண்ட வாறே. எரு

2749 நாதத் துவங்கடந் தாதி மறைநம்பி
பூதத் துவத்தே பொலிந்தின்பம் எய்தினர்
நேதத் துவமும் அவற்றொடு நேதியும்
பேதப் படாவண்ணம் பின்னிநின் றனே. எசு

2750 ஆனந்தம் ஆனந்தம் என்பர் அறிவிலர்
ஆனந்த மாநட மாரும் அறிகிலர்
ஆனந்த மாநட மாரும் அறிந்தபின்
தானந்தம் அற்றிடம் ஆனந்த மாமே. எஎ

2751 திருந்துநற் சீயென் றுதறிய கையும்
அருந்தவர் வாவென் றணைத்த மலர்க்கையும்
பொருந்தில் இமைப்பிலி யவ்வென்ற பொற்கையுந்
திருந்தத்தீ யாகுந் திருநிலை மவ்வே. எஅ

2752 மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையுங்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமவென வோதே. எகூ

2753 அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன்அங்கி தன்னில் அறையிற்சங் காரம்
அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிரகம் என்னே. அ0

2754 தீத்திரட் சோதி திகழொளி யுள்ளொளி
கூத்தனைக் கண்டஅக் கோமளக் கண்ணினள்
மூர்த்திகள் மூவர் முதல்வ னிடைசெல்லப்
பார்த்தனள் வேதங்கள் பாடினள் தானே. ௮௧

2755 நந்தியை எந்தையை ஞானத் தலைவனை
மந்திர மொன்றுள் மருவி யதுகடந்
தந்தர வானத்தின் அப்புறத் தப்பர
சுந்தரக் கூத்தனை என்சொல்லும் வாறே. ௮௨

2756 சீய குருநந்தி திருஅம்ப லத்திலே
ஆயுறு மேனியை யாரும் அறிகிலர்
தீயுறு செம்மை வெளுப்பொடு மத்தன்மை
ஆயுறு மேனி அணைபுக லாமே. ௮௩

2757 தானான சத்தியுந் தற்பரை யாய்நிற்குந்
தானாம் பரற்கும் உயிர்க்குந் தருமிச்சை
ஞானாதி பேத நடத்து நடித்தருள்
ஆனால் அரனடி நேயத்த தாமே. ௮௪

2758 பத்தி விதையிற் பயிரொன்று நாணத்தைச்
சித்தி தருவயி ராக்கத்தாற் செய்தறுத்து
உய்த்த சமாதி சிவானந்த முண்டிடச்
சித்தி திகழ்முத்தி யானந்தஞ் சித்தியே. ௮௫

## 9. ஆகாசப் பேறு

2759 உள்ளது ளோமென ஈசன் ஒருவனை
உள்ளத்து ளேயங்கி யாய வொருவனை
உள்ளத்து ளேநீதி யாய வொருவனை
உள்ளத்து ளேயுடல் ஆகாய மாமே. ௧

2760 பெருநில மாயண்ட மாயண்டத் தப்பால்
குருநில மாய்நின்ற கொள்கையன் ஈசன்
பெருநில மாய்நின்று தாங்கிய தாளோன்
அருநிலை யாய்நின்ற ஆதிப் பிரானே. ௨

2761 அண்ட வொளியும் அகண்ட வொளியுடன்
பிண்ட வொளியாற் பிதற்றும் பெருமையை
உண்ட வெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது
கொண்ட குறியைக் குலைத்தது தானே. ௩

2762 பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே
பயனுறு மாதி பரஞ்சுடர்ச் சோதி

அயனொடு மாலறி யாவகை நின்றிட்
டுயர்நெறி யாயொளி யொன்றது வாமே. ௪

2763 அறிவுக் கறிவாம் அகண்ட வொளியும்
பிறியா வலத்தினிற் பேரொளி மூன்றும்
அறியா தடங்கிடில் அத்தன் அடிக்குட்
பிறியா திருக்கிற் பெருங்கால மாமே. ௫

2764 ஆகாச வண்ணன் அமரர் [1]குலக்கொழுந்
தேகாச மாசுண மிட்டங் கிருந்தவன்
ஆகாச வண்ணம் அமர்ந்துநின் றப்புறம்
ஆகாச மாயங்கி வண்ண னு மாமே. ௬

2765 உயிர்க்கின்ற வாறும் உலகமும் ஒக்க
உயிர்க்கின்ற உள்ளொளி சேர்கின்ற போது
குயிற்கொண்ட பேதை குலாவி யுலாவி
வெயிற்கொண்டென் உள்ளம் வெளியது வாமே. ௭

2766 நணுகி லகல்கில னுதன் உலகத்
தணுகில் அகன்ற பெரும்பதி நந்தி
நணுகிய மின்னொளி சோதி வெளியைப்
பணியின் அமுதம் பருகலு மாமே. ௮

2767 புறத்துளா காசம் புவனம் உலகம்
அகத்துளா காசமெம் மாதி யறிவு
சிவத்துளா காசஞ் செழுஞ்சுடர்ச் சோதி
சகத்துளா காசந் தானஞ்ச மாதியே. ௯

## 10. ஞானோதயம்

2768 மனசந் தியிற்கண்ட மன்னன வாகுங்
கனவுற ஆனந்தங் காண்டல் அதனை
வினவுற ஆனந்த மீதொழி வென்ப
இனமுற்று னந்தியா னந்த மிரண்டே. ௧

2769 கரியட்ட கையன் கபாலங்கை ஏந்தி
எரியும் இளம்பிறை சூடும்எம் மானை
அரியன் பெரியனென் றுட்பட்ட தல்லால்
கரியன்கொல் சேயன்கொல் காண்கின்றி லேனே. ௨

2770 உண்ணல் உறங்கல் உலாவல் உயிர்போத
நண்ணல் நரக சுவர்க்கத்து நாட்டிடப்

பா. வே. 1. தவக்கொழுந்.

பண்ணல் அவன்பணி யாலிவன் பாலிடை
திண்ணிதிற் செய்கை சிவன்பணி யாமே. ௩

2771 ஓடும் இருக்கும் கிடக்கும் உடனெழுந்து
ஆடும் பறக்கும் அகண்டமும் பேசிடும்
பாடும் புறத்தெழும் பல்லுயிர் ஆனந்தம்
கூடும் பொழுதிற் குறிப்பிவை தானே. ௪

2772 மிக்கா ரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்
தக்கார் உரைத்த தவநெறி யேசென்று
புக்கா லருளும் பொன்னுரை ஞானத்தை
நக்கார் கழல்வழி நாடுமின் நீரே. ௫

2773 விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே. ௬

2774 தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு
தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை
தத்துவ ஞானத்தின் தன்மை யறிந்தபின்
தத்துவன் அங்கே தலைப்படுந் தானே. ௭

2775 விசும்பொன்று தாங்கிய மெய்ஞ்ஞானத் துள்ளே
அசும்பினின் றூறிய தாரமு தாகும்
பசும்பொன் திகழும் படர்சடை மீதே
குசும்ப மலர்க்கந்தங் கூடிநின் றானே. ௮

2776 முத்தின் வயிரத்தின் முந்நீர்ப் பவளத்தின்
கொத்தும் பசும்பொன்னின் தூவொளி மாணிக்க
மொத்துயர் அண்டத் துள்ளமர் சோதியை
எத்தன்மை வேறென்று கூறுசெய் வீரே. ௯

2777 நானென்றுந் தானென்றும் நாடினேன் நாடலும்
நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது
நானென்ற ஞான முதல்வனே நல்கினன்
நானென்று நானும் நினைப்பொழிந் தேனே. ௧௦

2778 ஞானத்தின் நன்னெறி நாதாந்த நன்னெறி
ஞானத்தின் நன்னெறி நானென் றறிவோர்தல்
ஞானத்தின் நல்யோக நன்னிலை யேநிற்றல்
ஞானத்தின் நன்மோன நாதாந்த வேதமே. ௧௧

2779 உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே
உய்யவல் லார்கட் குயிர்சிவ தெய்வமே
உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம்
உய்யவல் லாரறி வுள்ளறி வாமே. ௧௨

2780 காணவல் லார்க்கவன் கண்ணின் மணியொக்கும்
காணவல் லார்க்குக் கடலின் அமுதொக்கும்
பேணவல் லார்க்குப் பிழைப்பிலன் பேர்நந்தி
ஆணவல் லார்க்கே அவன்துணை யாமே. ௧௩

2781 ஓமெனும் ஓரெழுத் துள்நின்ற ஓசைபோல்
மேனின்ற தேவர் விரும்பும் விழுப்பொருள்
சேய்நின்ற செஞ்சுடர் எம்பெரு மானடி
ஆய்நின்ற தேவர் அகம்படி யாமே. ௧௪

## 11. சத்திய ஞானனந்தம்

2782 எப்பாழும் பாழும் யாவுமாய் அன்றாகி
முப்பாழுங் கீழுள முப்பாழும் முன்னியே
இப்பாழும் இன்னவா றென்பதி லாவின்பத்
தற்பர ஞானனந்தந் தானது வாகுமே. ௧

2783 மன்னுஞ் சத்தியாதி மணியொளி மாசோபை
அன்னதோ டொப்ப மிடலொன்று மாறது
இன்னிய வுற்பலம் ஒண்சீர் நிறமணம்
பன்னிய சோபை பகரா று மானதே. ௨

2784 சத்தி சிவன்பர ஞானமுஞ் சாற்றுங்கால்
உய்த்த அனந்தஞ் சிவமுயர் ஆனந்தம்
வைத்த சொருபத்த சத்தி வருகுரு
உய்த்த வுடலிவை யுற்பலம் போலுமே. ௩

2785 உருவுற் பலநிறம் ஒண்மணஞ் சோபை
தரநிற்ப போலுயிர் தற்பரந் தன்னின்
மருவச் சிவமென்ற மாமுப் பதத்தின்
சொருபத்தன் சத்தியாதி தோன்றநின் றானே. ௪

2786 நினையும் அளவின் நெகிழ வணங்கிப்
புனையில் அவனைப் பொதியலு மாகும்
எனையுமெங் கோன்நந்தி தன்னருள் கூட்டி
நினையும் அளவில் நினைப்பித் தனனே. ௫

2787 பாலொடு தேனும் பழத்துள் இரதமும்
வாலிய பேரமு தாகும் மதுரமும்

போலுங் துரியம் பொடிபட வுள்புகச்
சீல மயிர்க்கால் தொறுந்தேக் கிடுமே. ௬

2788 அமரத் துவங்கடந் தண்டங் கடந்து
தமரத்து நின்ற தனிமையன் ஈசன்
பவளத்து முத்தும் பனிமொழி மாதர்
துவளற்ற சோதி தொடர்ந்துநின் றானே. ௭

2789 மத்திமம் ஆறாறு மாற்றி மலநீக்கிச்
சுத்தம தாகுந் துரியத் துரிசற்றுப்
பெத்த மறச்சிவ மாகிப் பிறழ்வுற்றுச்
சத்திய [1]ஞானானந்தஞ் சார்ந்தனன் ஞானியே. ௮

2790 சிவமா யவமான மும்மலந் தீரப்
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானானந் தத்தே
துவமார் துரியஞ் சொரூபம தாமே. ௯

## 12. சொரூப உதயம்

2791 பரம குரவன் பரமெங்கு மாகித்
திரமுற எங்கணுஞ் சேர்ந்தொழி வற்று
நிரவு சொரூபத்துள் நீடுஞ் சொரூபம்
அரிய துரியத் தணைந்துநின் றானே. ௧

2792 குலைக்கின்ற நீரிற் குவலய நீரும்
அலைக்கின்ற காற்றும் அனலொடா காச
நிலத்திடை வானிடை நீண்டகன் றானை
வரைத்து வலஞ்செயு மாறறி யேனே. ௨

2793 அங்குநின் றானயன் மால்முதல் தேவர்கள்
எங்குநின் றாரும் இறைவனென் றேத்துவர்
தங்கிநின் றான்தனி நாயகன் எம்மிறை
பொங்கிநின் றான்புவ னாபதி தானே. ௩

2794 சமையச் சுவடுந் தனையறி யாமற்
கமையற்ற காமாதி காரணம் எட்டுந்
திமிரச் செயலுந் தெளிவுடன் நின்றோர்
அமரர்க் கதிபதி யாகிநிற் பாரே. ௪

2795 மூவகைத் தெய்வத் தொருவன் முதலுரு
வாயது வேறா மதுபோல் அணுப்பரன்

---

பா. வே. 1. ஞானந்தஞ்

சேய சிவமுத் துரியத்துச் சீர்பெற
ஏயும் நெறியென் றிறைநூல் இயம்புமே. ரு

2796 உருவன்றி யேநின் றுருவம் புணர்க்குங்
கருவன்றி யேநின்று தான்கரு வாகும்
அருவன்றி யேநின்ற மாயப் பிரானைக்
குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே. சு

2797 உருவ நினைப்பவர்க் குள்ளுறுஞ் சோதி
உருவ நினைப்பவர் ஊழியுங் காண்பர்
உருவ நினைப்பவர் உம்பரு மாவர்
உருவ நினைப்பவர் உலகத்தில் யாரே. எ

2798 பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றுப்
பரஞ்சோதி என்னுட் படிந்ததற் பின்னைப்
பரஞ்சோதி யுண்ணுண் படியப் படியப்
பரஞ்சோதி தன்னைப் பறையக்கண் டேனே. அ

2799 சொரூபம் உருவங் குணங்தொல் விழுங்கி
அரியன வுற்பல மாமாறு போல
மருவிய சத்தியாதி நான்கு மதித்த
சொரூபக் குரவன் சுகோதயத் தானே. கூ

2800 உரையற்ற ஆனந்த மோன சொரூபத்தன்
கரையற்ற சத்தியாதி காணில் அகார
மருவுற் றுகார மகாரம தாக
உரையற்ற தாரத்தில் உள்ளொளி யாமே. க0

2801 தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து
முலைநின்ற மாதறி மூர்த்தியை யானும்
புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து
கலைநின்ற கள்வனிற் கண்டுகொண் டேனே. கக

2802 ஆமா றறிந்தேன் அகத்தின் அரும்பொருள்
போமா றறிந்தேன் புகுமாறு மீதென்றே
ஏமாப்ப தில்லை இனியோ ரிடமில்லை
நாமா முதல்வனும் நானென லாமே. கஉ

## 13. ஊழ்

2803 செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென்
மத்தகத் தேபுளி நாட்டி மறிக்கிலென்
வித்தகன் நந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிகள் தன்மைகுன் றாரே. க

2804 தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்
வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை
கோன்முன்னஞ் சென்னி குறிவழி யேசென்று
நான்முன்னஞ் செய்ததே நன்னில மானதே. ௨

2805 ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை
நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்
பேறிட்டென் னுள்ளம் பிரியகி லாவே. ௩

2806 வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்
கானின்ற செந்தீக் கலந்துடன் வேகிலென்
தானொன்றி மாருதஞ் சண்டம் அடிக்கிலென்
நானொன்றி நாதனை நாடுவன் நானே. ௪

2807 ஆனை துரக்கிலென் அம்பூ டறுக்கிலென்
கானத் துழுவை கலந்து வளைக்கிலென்
ஏனைப் பதியினில் எம்பெரு மான்வைத்த
ஞானத் துழவினை நானுழு வேனே. ௫

2808 கூடு கெடின்மற்றோர் கூடுசெய் வானுளன்
நாடு கெடினும் நமர்கெடு வாரில்லை
வீடு கெடின்மற்றோர் வீடுபுக் கால்ஒக்கும்
பாடது நந்தி பரிசறி வார்க்கே. ௬

## 14. சிவதரிசனம்

2809 சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படுஞ்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. க

2810 வாக்கு மனமு மறைந்த மறைப்பொருள்
நோக்குமின் நோக்கப் படும்பொருள் நுண்ணிது
போக்கொன்று மில்லை வரவில்லை கேடில்லை
யாக்கமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே. ௨

2811 பரனைப் பராபர னாகியப் பாற்சென்
றரனை வழக்கற வொண்சுடர் தானைத்
தரனைத் தனதென வாறறி வொண்ணா
அரனை யுலகில் அருள்புரிந் தானே. ௩

## 15. சிவசொரூப தரிசனம்

2812 ஓதும் மயிர்க்கால் தொறும்அமு தூறிய
பேதம் அபேதம் பிறழாத ஆனந்த
மாதி சொரூபங்கள் மூன்றகன் றப்பாலை
வேதம்ம் ஓதுஞ் சொரூபிதன் மேன்மையே. க

2813 உணர்வும் அவனே உயிரும் அவனே
புணரும் அவனே புலவி யவனே
இணரும் அவன்தன்னை எண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. உ

2814 இணங்க வேண்டா இனியுல கோருடன்
நுணங்கு கல்வியும் நூல்களும் என்செயும்
வணங்க வேண்டா வடிவை யறிந்தபின்
பிணங்க வேண்டா பிதற்றை யொழியுமே. ௩

2815 துன்னிநின் றான்தன்னை யுன்னிமுன் னாவிரு
முன்னி யவர்தங் குறையை முடித்திடும்
மன்னிய கேள்வி மறையவன் மாதவன்
சென்னியுள் நின்றதோர் தேற்றத்த னாமே. ௪

2816 மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலுந்
தன்னுற்ற சோதி தலைவன் இணையிலி
பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியும்
என்னுற் றறிவனான் என்விழித் தானே. ௫

2817 சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தஞ்
சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியந் துரியத்துள்
உய்த்த துரியத் துறுபே ரொளியே. ௬

2818 பரனல்ல நீடும் பராபர னல்ல
உரனல்ல மீதுணர் ஒண்சுட ரல்ல
தரனல்ல தானவை யாயல்ல வாகும்
அரனல்ல ஆனந்தத் தப்புறத் தானே. ௭

2819 முத்தியுஞ் சித்தியும் முற்றிய ஞானத்தோன்
பத்தியுள் நின்று பரந்தன்னுள் நின்றுமா
சத்தியுள் நின்றோர்க்குத் தத்துவங் கூடலாற்
சுத்தி யகன்றோர் சுகானந்த போதரே. ௮

2820 துரிய அதீதஞ் சொல்லறும் பாழாம்
அரிய துரியம் அதீதம் புரியில்

விரியுங் குவியும் விள்ளா மிளிருந்தன்
உருவுந் திரியும் உரைப்பதெவ் வாறே. சுo

## 16. முத்தி பேதம், கரும நிருவாணம்

2821 ஓதிய முத்தி யடைவே உயிர்பர
பேதமி லச்சிவம் எய்துந் துரியமோ
டாதி சொரூபஞ் சொரூபத்த தாகவே
ஏதமி லாநிரு வாணம் பிறந்ததே. க

2822 பற்றறற் றவர்பற்றி நின்ற பரம்பொருள்
கற்றறற் றவர்கற்றுக் கருதிய கண்ணுதல்
சுற்றறற் றவர்சுற்றி நின்றஎன் சோதியைப்
பெற்றுற் றவர்கள் பிதற்றொழிந் தாரே. உ

2823 சித்தஞ் சிவமாம் சிவஞானி சேர்விடம்
சுத்தச் சிவாலயம் தொல்பாவ நாசமாம்
அத்த மழையக மானந்த மேலிடும்
முத்தம் பெருகும் முழுப்பொரு ளாகுமே. ௩

2824 ஆணவ மூலத் தகார முதித்திடப்
பேணி யுகாரங் கலாதி பிறிவிக்கத்
தாணு மகாரஞ் சதாசிவ மாகவே
ஆணவ பாச மடர்தல்செய் யாவே. ௪

2825 நெற்றி நடுவுள் நினைவெழு கண்டமும்
உற்ற விதையமு மோதிய நாபிக்கீழ்ப்
பெற்ற துரியமும் பேசிய மூலத்தே
உற்ற அதீதம் ஒடுங்கும் உடனே. ரு

## 17. மறைபொருட் கூற்று

2826 காயம் பலகை கவறைந்து கண்மூன்றாய்
ஆயம் பொருவதோர் ஐம்பத்தோ ரக்கரம்
ஏய பெருமா னிருந்து பொருகின்ற
மாயக் கவற்றின் மறைப்பறி யேனே. க

2827 தூறு படர்ந்து கிடந்தது தூநெறி
மாறிக் கிடக்கும் வகையறி வாரில்லை
மாறிக் கிடக்கும் வகையறி வாளர்க்கு
ஊறிக் கிடந்ததென் உள்ளன்பு தானே. உ

2828 ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியிற்
சாறு படுவன நான்கு பனையுள

ஏறற் கரியதோர் ஏணியிட் டப்பனை
ஏறலுற் றேன்கடல் ஏழுங்கண் டேனே. ௩

2829 வழுதலை வித்திடப் பாகன் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுதுகொண் டோடினார் தோட்டக் குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே. ௪

2830 ஐயென்னும் வித்தினில் ஆனை விளைப்பதோர்
செய்யுண்டு செய்யின் தெளிவறி வாரில்லை
மையணி கண்டன் மனம்பெறின் அந்நிலம்
பொய்யொன்று மின்றிப் புகளி தாமே. ௫

2831 பள்ளச்செய் ஒன்றுண்டு பாழ்ச்செய் இரண்டுள
கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது
உள்ளச்செய் யங்கே உழவுசெய் வார்கட்கு
வெள்ளச்செய் யாகி விளைந்தது தானே. ௬

2832 மூவணை யேறு முழுவது முக்காணி
தாமணி கோலித் தறியுறப் பாய்ந்திடு
நாவணை கோலி நடுவிற் செறுவுழார்
காலணை கோலிக் களருழு வாரே. ௭

2833 ஏற்றம் இரண்டுள ஏழு துரவுள
மூத்தான் இறைக்க இளையான் படுத்தநீர்
பாத்தியிற் பாயாது பாழ்ப்பாய்ந்து போயிடிற்
கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாமே. ௮

2834 பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள
குட்டிப் பசுக்களோ ரேழுள ஐந்துள
குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே. ௯

2835 ஈற்றுப் பசுக்கள் இருபத்து நாலுள
ஊற்றுப் பசுக்கள் ஒருகுடம் பால்போதும்
காற்றுப் பசுக்கள் கறந்துண்ணுங் காலத்து
மாற்றுப் பசுக்கள் வரவறி யோமே. ௧௦

2836 தட்டான் அகத்தில் தலையான மச்சின்மேல்
மொட்டா யெழுந்தது செம்பால் மலர்ந்தது
வட்டம் படவேண்டி வாய்மை மடித்திட்டுத்
தட்டான் அதனைத் தகைந்துகொண் டானே. ௧௧

2837 அரிக்கின்ற நாற்றங்கால் அல்லற் கழனி
திரிக்கின்ற வொட்டஞ் சிக்கெனக் கட்டி
வரிக்கின்ற நல்லான் கறவையைப் பூட்டில்
விரிக்கின்ற வெள்ளரி வித்துவித் தாமே. ௧௨

2838 இடாக்கொண்டு தூவி எருவிட்டு வித்திக்
கிடாக்கொண்டு பூட்டிக் களறி முளையை
மிடாக்கொண்டு சோறட்டு மெள்ள விழுங்கார்
[1]கிடாக்கொண்டு செந்நெல் அறுக்கின்ற வாறே. ௧௩

2839 விளைந்து கிடந்தது மேலைக்கு வித்தது
விளைந்து கிடந்தது மேலைக்குக் காதம்
விளைந்து விளைந்து விளைந்துகொள் வார்க்கு
விளைந்து கிடந்தது மேவுமுக் காதமே. ௧௪

2840 களருழு வார்கள் கருத்தை யறியோங்
களருழு வார்கள் கருதலு மில்லை
களருழு வார்கள் களரின் முளைத்த
வளரிள வஞ்சியின் மாய்தலு மாமே. ௧௫

2841 கூப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத்
தாப்பிடு பாசத்தை அங்கியுள் வைத்திட்டு
நாட்பட நின்று நலம்புகுந் தாயிழை
ஏற்பட இல்லத் தினிதிருந் தானே. ௧௬

2842 மலைமேல் மழைபெய்ய மான்கன்று துள்ளக்
குலைமேல் இருந்த கொழுங்கனி வீழ
உலைமேல் இருந்த உறுப்பெனக் கொல்லன்
முலைமேல் அமிர்தம் பொழியவைத் தானே. ௧௭

2843 பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாச் சொரியுமே. ௧௮

2844 ஆமாக்கள் ஐந்தும் அரியேறு முப்பதுந்
தேமா இரண்டொடு திப்பிலி யொன்பதுந்
தாமாக் குரங்கொளிற் றம்மனத் துள்ளன
மூவாக் கடாவிடின் மூட்டுகின் றாரே. ௧௯

2845 எழுதாத புத்தகத் தேட்டின் பொருளைத்
தெருளாத கன்னி தெளிந்திருந் தோத

பா. வே. 1. அடர்க்கொண்டு.

மலராத பூவின் மணத்தின் மதுவைப்
பிறவாத வண்டு மணமுண்ட வாறே. ௨௦

2846 போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்துங்
கூகின்ற நாவலின் கூழைத் தருங்கனி
ஆகின்ற பைங்கூழ் அவையுண்ணும் ஐவரும்
வேகின்ற கூரை விருத்திபெற் றாரே. ௨௧

2847 மூங்கின் முளையில் எழுந்ததோர் வேம்புண்டு
வேம்பினிற் சார்ந்து கிடந்த பனையிலோர்
பாம்புண்டு பாம்பைத் துரத்தித்தின் பாரின்றி
வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே. ௨௨

2848 பத்துப் பரும்புலி யானை பதினைந்து
வித்தகர் ஐவர் வினோதகர் ஈரெண்மர்
அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்
அத்தலை ஐவர் அமர்ந்துநின் றாரே. ௨௩

2849 இரண்டு கடாவுண்டு இவ்வூரி னுள்ளே
இரண்டு கடாவுக்கும் ஒன்றே தொழும்பன்
இரண்டு கடாவும் இருத்திப் பிடிக்கில்
இரண்டு கடாவும் ஒருகடா வாமே. ௨௪

2850 ஒத்த மனக்கொல்லை யுள்ளே சமன்கட்டிப்
பத்தி வலையிற் பருத்தி நிறுத்தலால்
முத்தக் கயிறாக மூவர்கள் ஊரினுள்
நித்தம் பொருது நிரம்பநின் றாரே. ௨௫

2851 கூகையும் பாம்புங் கிளியொடு பூனையும்
நாகையும் பூழும் நடுவில் உறைவன
நாகையைக் கூகை நணுக லுறுதலுங்
கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறே. ௨௬

2852 குலைக்கின்ற நன்னகை யாங்கொங் குழக்கின்
நிலைக்கின்ற வெள்ளெலி மூன்று கொணர்ந்தான்
உலைக்குப் புறமெனில் ஓடு மிருக்கும்
புலைக்குப் பிறந்தவை போகின்ற வாறே. ௨௭

2853 காடுபுக் காரினிக் காணார் கடுவெளி
கூடுபுக் கானது ஐந்து குதிரையும்
மூடுபுக் கானது ஆறுள ஒட்டகம்
மூடு புகாவிடின் மூவணை யாமே. ௨௮

2854 கூறையுஞ் சோறுங் குழாயகத் தெண்ணெயுங்
காறையும் நாணும் வளையலுங் கண்டவர்
பாறையி லுற்ற பறக்கின்ற சீலைபோல்
ஆறைக் குழியில் அழுந்துகின் றாரே. ௨௯

2855 துருத்தியுள் ளக்கரை தோன்று மலைமேல்
விருத்திகண் காணிக்கப் போவார்முப் போதும்
வருத்தியுள் நின்ற மலையைத் தவிர்ப்பாள்
ஒருத்தியுள் ளாளவர் ஊரறி யோமே. ௩௦

2856 பருந்துங் கிளியும் படுபறை கொட்டத்
திருந்திய மாதர் திருமணப் பட்டார்
பெருந்தவப் பூதம் பெறலுரு வாகும்
இருந்திய பேற்றினில் இன்புறு வாரே. ௩௧

2857 கூடும் பறவை இரைகொத்தி மற்றத
னூடுபுக் குண்டி யறுக்குறில் என்னெக்குஞ்
கூடேறி நெய்யுண்டு மைகான் றிடுகின்ற
பாடறி வார்க்குப் பயனெளி தாமே. ௩௨

2858 இலையில்லை பூவுண் டினவண் டிங்கில்லை
தலையில்லை வேருண்டு தாளில்லை பூவின்
குலையில்லை கொய்யும் மலருண்டு சூடுந்
தலையில்லை தாழ்ந்த கிளைபுல ராதே. ௩௩

2859 [1]அக்கரை நின்றதோர் ஆல மரங்கண்டு
[2]நக்கரை வாழ்த்தி நடுவே பயன்கொள்வர்
மிக்கவ ரஞ்சு துயரமுங் கண்டுபோய்த்
தக்கவர் தாழ்ந்து கிடக்கின்ற வாறே. ௩௪

2860 கூப்பிடு மாற்றிலே வன்கா டுருகாதங்
காப்பிடு கள்ளர் கலந்துநின் றுருளர்
காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டுக்
கூப்பிடு மீண்டதோர் கூரைகொண் டாரே. ௩௫

2861 கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை
எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையுங்
கட்டியுந் தேனுங் கலந்துண்ண மாட்டாதார்
எட்டிப் பழத்துக் கிளைக்கின்ற வாறே. ௩௬

2862 பெடைவண்டும் ஆண்வண்டும் பீடிகை வண்ணக்
குடைகொண்ட பாசத்துக் கோலமுண் டானுங்

பா. வே. 1. அக்கண. 2. நக்கண.

கடைவண்டு தானுண்ணுங் கண்கலந் திட்ட
பெடைவண்டு தான்பெற்ற தின்பமு மாமே. ௩௭

2863 தட்டத்து நீரிலே தாமரை பூத்தது
குட்டத்து நீரிற் குவளை எழுந்தது
விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக்
குட்டத்தி விட்டதோர் கொம்மட்டி யாமே. ௩௮

2864 ஆறு பறவைகள் ஐந்தகத் துள்ளன
நூறு பறவை நுனிக்கொம்பின் மேலன
ஏறும் பெரும்பதி ஏழுங் கடந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே. ௩௯

2865 கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள்
வட்டனப் பூமி மருவிவந் தூறிடுங்
கட்டனஞ் செய்து கயிற்றால் தொழுமியுள்
ஒட்டனஞ் செய்தொளி யாவர்க்கு மாமே. ௪௰

2866 ஏழு வளைகடல் எட்டுக் குலவரை
யாழும் விசும்பினில் அங்கி மழைவளி
தாழு மிருநிலந் தன்மை யதுகண்டு
வாழ நினைக்கில தாலய மாமே. ௪௧

2867 ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடச் சூலத்தாச்
சாலிங் கமைத்துத் தலைமை தவிர்த்தனர்
கோலிங் கமைத்தபின் கூடப் பறவைகண்
மாலிங்கண் வைத்தது முன்பின் வழியே. ௪௨

2868 கொட்டுக்குந் தாலி இரண்டே இரண்டுக்குங்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரை வலிதென்பர்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரைக்கும் மூன்றுக்கும்
இட்டம் வலிதென்பர் ஈசன் அருளே. ௪௩

2869 கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்
முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்
பறையொன்று பூசல் பிடிப்பா ளொருவன்
மறையொன்று கண்ட துருவம்பொன் றாமே. ௪௪

2870 கோரை எழுந்து கிடந்த குளத்தினில்
ஆரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது
நாரை படுகின்றாற் போலல்ல நாதனார்
பாரை கிடக்கப் படிகின்ற வாறே. ௪௫

2871 கொல்லைமுக் காதமுங் காடரைக் காதமும்
எல்லை மயங்கிக் கிடந்த இருநெறி
எல்லை மயங்கா தியங்கவல் லார்கட்
கொல்லை கடந்துசென் றார்புக லாமே. ௪௬

2872 உழவொன்று வித்து ஒருங்கின காலத்
தெழுமழை பெய்யா திருநிலச் செவ்வி
தழுவி வினைசென்று தான்பய வாது
வழுவாது போவன் வளர்சடை யோனே. ௪எ

2873 பதுங்கிலும் பாய்புலி பன்னிரு காதம்
ஒதுங்கிய தண்கடல் ஓதம் உலவு
மதுங்கிய வார்களி யாரமு தூறப்
பொதுங்கிய ஐவரைப் போய்வளைத் தானே. ௪அ

2874 தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு
வாணிபஞ் செய்து வழங்கி வளர்மகன்
நீலிக் கிறையுமே நெஞ்சின் நிலைதளர்ந்
தாலிப் பழம்போல் அளிக்கின்ற அப்பே. ௪கூ

2875 முக்காத மாற்றிலே மூன்றுள வாழைகள்
செக்குப் பழுத்த திரிமலங் காய்த்தன
பக்கனார் மிக்கார் படங்கினார் கன்னியர்
நக்கு மலருண்டு நடுவுநின் றாரே. ருO

2876 அடியும் முடியும் அமைந்ததோர் ஆத்தி
முடியும் நுனியின்கண் முந்நலை மூங்கில்
கொடியும் படையுங் கோட்சரன் ஐயைந்து
மடியும் வலம்புரி வாய்ந்தநவ் வாறே. ருக

2877 பன்றியும் பாம்பும் பசுமுசு வானரந்
தென்றிக் கிடந்த சிறுநரிக் கூட்டத்துக்
குன்றுமை கூடித் தராசின் நிறுத்தபின்
குன்றி நிறையைக் குறைக்கின்ற வாறே. ருஉ

2878 மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டினைக்
கட்டுவிட் டோடின் மலர்தலுங் காணலாம்
பற்றுவிட் டம்மனை பாழ்பட நோக்கினாற்
கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணாதே. ருங

2879 நீரின்றிப் பாயும் நிலத்தினிற் பச்சையாம்
யாவரும் என்றும் அறியவல் லாரில்லை
கூரு மழைபொழி யாது பொழிபுனல்
தேரினிந் நீர்மை திடரினில் லாதே. ருச

2880 கூகை குருந்தம தேறிக் குணம்பயில்
மோகம் உலகுக் குணர்கின்ற காலத்து
நாகமும் ஒன்று நடுவுரை செய்திடும்
பாகனு மாகின்ற பண்பனு மாமே. ௫௫

2881 வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டன
வாழைக்குச் சூரை வலிது வலிதென்பர்
வாழையுஞ் சூரையும் வன்துண்டஞ் செய்திட்டு
வாழை யிடங்கொண்டு வாழ்கின்ற வாறே. ௫௬

2882 நிலத்தைப் பிளந்து நெடுங்கடல் ஓட்டிப்
புனத்துக் குறவன் புணர்ந்த கொழுமீன்
விலக்குமின் யாவர்க்கும் வேண்டிற் குறையா
தருத்தமு மின்றி யடுவது மாமே. ௫௭

2883 தளிர்க்கும் ஒருபிள்ளை தட்டா ணகத்தில்
விளிப்பதோர் சங்குண்டு வேந்தனை நாடிக்
களிக்குங் குசவர்க்குங் காவிதி யார்க்கும்
அளிக்கும் பதத்தொன் றுய்ந்துகொள் வார்க்கே. ௫௮

2884 குடைவிட்டுப் போந்தது கோயில் எருமை
படைகண்டு மீண்டது பாதி வழியில்
உடையவன் மந்திரி யுள்ளளவும் ஊரார்
அடையா நெடுங்கடை ஐந்தொடு நான்கே. ௫௯

2885 போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
ஆகிப் படைத்தன ஒன்பது வாய்தலும்
நாகமும் எட்டொடு நாலு புரவியும்
பாகன் விடாவிடிற் பன்றியு மாமே. ௬0

2886 பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக்
கூசி யிருக்குங் குருகிரை தேர்ந்துண்ணுந்
தூசி மறவன் துணைவழி எய்திடப்
பாசங் கிடந்து பதைக்கின்ற வாறே. ௬௧

2887 கும்ப மலைமேல் எழுந்ததோர் கொம்புண்டு
கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு
வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப் பூவுக்குள்
வண்டாய்க் கிடந்து மணங்கொள்வன் ஈசனே. ௬௨

2888 வீணையுந் தண்டும் விரவி யிசைமுரல்
தாணுவும் மேவித் தருதலைப் பெய்தது
வாணிபஞ் சிக்கென் றதுவடை யாமுன்னங்
காணியும் அங்கே கலக்கின்ற வாறே. ௬௩

2889 கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்தது
வங்குபுக் காலன்றி ஆய்ந்தறி வாரில்லை
திங்கள்புக் கால்இரு ளாவ தறிந்திலர்
தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமே. ௯௪

2890 போதும் புலர்ந்தது பொன்னிறங் கொண்டது
தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை
ஏதமில் ஈசன் இயங்கு நெறியிது
மாத ரிருந்ததோர் மண்டலந் தானே. ௯௫

2891 கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே
காமுற்ற கத்தி இடுவர் கடைதொறு
மீவற்ற வெல்லை விடாது வழிகாட்டி
யாமுற்ற தட்டினால் ஐந்துண்ண லாமே. ௯௬

2892 தோட்டத்தில் மாம்பழந் தோண்டி விழுந்தக்கால்
நாட்டின் புறத்தில் நரியழைத் தென்செயும்
மூட்டிக் கொடுத்து முதல்வனை முன்னிட்டுக்
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. ௯௭

2893 புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்பப்
புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லிப்
புலம்பி னவளோடும் போக நுகரும்
புலம்பனுக் கென்றும் புலர்ந்தில போதே. ௯௮

2894 போதிரண் டோதிப் புரிந்தருள் செய்திட்டு
மாதிரண் டாகி மகிழ்ந்துட னேநிற்குந்
தாதிரண் டாகிய தண்ணம் பறவைகள்
வேதிரண் டாகி வெறிக்கின்ற வாறே. ௯௯

2895 தோணியொன் றுண்டு துறையில் விடுவது
ஆணி மிதித்துநின் றைவர்கோ ளூன்றலும்
வாணிபஞ் செய்வார் வழியிடை யாற்றிடை
ஆணி கலங்கில் அதுவிது வாமே. ௭0

## 18. மோன சமாதி

2896 நின்றார் இருந்தார் கிடந்தார் எனவில்லை
சென்றார்தஞ் சிந்த மோன சமாதியாம்
மன்றேயு மங்கே மறைப்பொரு ளொன்றுண்டு
சென்றாங் கணைந்தவர் சேர்கின்ற வாறே. க

2897 காட்டுங் குறியுங் கடந்தவர் காரணம்
ஏட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன்

கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லது
ஆட்டின் கழுத்தில் அதர்கிடந் தற்றே. ௨

2898 மறப்பது வாய்நின்ற மாயநன் னோடன்
பிறப்பினை நீங்கிய பேரரு ளாளன்
சிறப்புடை யான்திரு மங்கையுந் தானும்
உறக்கமில் போகத் துறங்கிடுந் தானே. ௩

2899 துரியங்கள் மூன்றுங் கடந்தொளிர் சோதி
அரிய துரிய மதில்மீது மூன்றாய்
விரிவு குவிவு விழுங்கி யுமிழ்ந்தே
உரையில் அநுபூ திகத்தினுள் ளானே. ௪

2900 உருவிலி யூனிலி யூனமொன் றில்லி
திருவிலி தீதிலி தேவர்க்குந் தேவன்
பொருவிலி பூதப் படையுடை யாளி
மருவிலி வந்தென் மனம்புகுந் தானே. ௫

2901 கண்டறி வாரில்லை காயத்தின் நந்தியை
எண்டிசை யோரும் இறைவனென் றேத்துவர்
அண்டங் கடந்த அளவிலா ஆனந்தத்
தொண்டர் முகந்த துறையறி யோமே. ௬

2902 உடலாங் குகையில் உணர்வாகும் பீடத்
தடலார் சமாதி இதயத்த தாக
நடமா டியகுகை நாடிய யோகி
மிடையாகா வண்ணமே சாதிக்கு மெல்லவே. ௭

2903 தற்பர மல்ல சதாசிவன் தானல்ல
நிட்கள மல்ல சகள நிலையல்ல
அற்புத மாகி யநுபோகக் காமம்போற்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. ௮

2904 முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே. ௯

2905 அப்பினில் உப்பென அத்தன் அணைந்திட்டுச்
செப்பு பராபரஞ் சேர்பர மும்விட்டுக்
கப்புறு சொற்பத மாளக் கலந்தனை
எப்படி யப்படி என்னுமவ் வாறே. ௧௦

2906 கண்டார்க் கழகிதாங் காஞ்சிரத் தின்பழந்
தின்றூர்க் கறியலாம் அப்பழத் தின்சுவை
பெண்டா னிரம்பி மடவிய ளானுற்
கொண்டான் அறிவன் குணம்பல தானே. ௧௧

2907 நந்தி யிருந்தான் நடுவுத் தெருவிலே
சந்தி சமாதிகள் தாமே யொழிந்தன
உந்தியி னுள்ளே யுதித்தெழுஞ் சோதியைப்
புந்தியி னூலே புணர்ந்துகொண் டேனே. ௧௨

2908 விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து
பதறு படாதே பழமறை பார்த்துக்
கதறிய பாழைக் கடந்தந்தக் கற்பனை
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே. ௧௩

2909 வாடா மலர்புனை சேவடி வானவர்
கூடார் அறநெறி நாடொறு மின்புறச்
சேடார் கமலச் செழுஞ்சுட ருட்சென்று
நாடார் அமுதுற நாடார் அமுதமே. ௧௪

2910 அதுக்கென் றிருவர் அமர்ந்தசொற் கேட்டும்
பொதுக்கெனக் காமம் புலப்படு மாபோல்
சதுக்கென் றுவேறே சமைந்தாரைக் காண
மதுக்கொன்றைத் தாரான் வளந்தரு மன்றே. ௧௫

2911 தானும் அழிந்து தனமும் அழிந்துநீ
டூனும் அழிந்து உயிரும் அழிந்துடன்
வானும் அழிந்து மனமும் அழிந்தபின்
நானும் அழிந்தமை நானறி யேனே. ௧௬

2912 இருளும் வெளியும் இரண்டையும் மாற்றிப்
பொருளிற் பொருளாய்ப் பொருந்தவுள் ளாகி
அருளால் அழிந்திடும் அத்தன் அடிக்கே
உருளாத கன்மன முற்றுநின் றேனே. ௧௭

2913 ஒன்றிநின் றுள்ளே புணர்ந்தேன் பராபரம்
ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் சிவகதி
ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் உணர்வினை
ஒன்றிநின் றேபல வூழிகண் டேனே. ௧௮

## 19. வரையுரை மாட்சி

2914 நான்வரை வற்றபி னுரை வரைவது
நானவ னனபி னுரை நினைவது

காமனை வென்றகண் ணாரை யுகப்பது
தூமொழி வாசகஞ் சொல்லுமின் நீரே. க

2915 உரையற்ற தொன்றை யுரைசெயு மூமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே. உ

2916 மனமாயை மாயைஇம் மாயை மயக்க
மனமாயை தான்மாய மற்றொன்று மில்லை
பினமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டா
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே. ௩

## 20. அணைந்தோர் தன்மை

2917 மலமில்லை மாசில்லை மானுபி மானங்
குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே. க

2918 ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்
கழிந்தேன் கடவுளும் நானுமொன் றானேன்
[1] அழிந்தாங் கினிவரு [2] மாக்கமும் வேண்டேன்
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே. உ

2919 ஆலைக் கரும்பும் அமுதும்அக் காரமுஞ்
சோலைத்தண் ணீரும் உடைத்தெங்கள் நாட்டிடைப்
பீலிக்கண் ணன்ன வடிவுசெய் வாளொரு
கோலப்பெண் ணாட்குக் குறைவொன்று மில்லையே. ௩

2920 ஆராலும் என்னை அமட்டவொண் ணாதினிச்
சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல் லால்இனி
யார்பாடுஞ் சாரா அறிவறிந் தேனே. ௪

2921 பிரிந்தேன் பிரமன் பிணித்ததோர் பாசந்
தெரிந்தேன் சிவகதி செல்லு நிலையை
அரிந்தேன் வினையை அயில்மன வாளால்
முரிந்தேன் புரத்தினை முந்துகின் றேனே. ௫

2922 ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவது

பா. வே. 1. இழிந்தாங். 2. மார்க்கமும்.

நன்றுகண் டீர்இனி நமச்சிவா யப்பழந்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே. ௬

2923 சந்திரன் பாம்பொடுஞ் சூடுஞ் சடாதரன்
வந்தென்னை யாண்ட மணிவிளக் கானவன்
அந்தமும் ஆதியும் இல்லா அரும்பொருள்
சிந்தையின் மேவித் தியக்கறுத் தானே. ௭

2924 பண்டெங்கள் ஈசன் நெடுமால் பிரமனைக்
கண்டங் கிருக்குங் கருத்தறி வாரில்லை
விண்டங்கே தோன்றி வெறுமன மாயிடில்
துண்டங் கிருந்ததோர் தூறது வாமே. ௮

2925 அன்னையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அன்னையும் அத்தனு மாரறி வாரென்னை
அன்னையும் அத்தனும் யானும் உடனிருந்
தன்னையும் அத்தனை யான்புரந் தேனே. ௯

2926 கொண்ட சுழியுங் குலவரை யுச்சியும்
அண்டரும் அண்டத் தலைவரும் ஆதியும்
எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்துளே
உண்டனர் நானினி உய்ந்தொழிந் தேனே. ௧௦

2927 நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்
சிவன்வரின் நானுடன் போவது திண்ணம்
பவம்வரும் வல்வினை பண்டே யறுத்தேன்
தவம்வருஞ் சிந்தைக்குத் தானெதி ராரே. ௧௧

2928 சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தங்
கத்துஞ் சிறுகுங் கலகமுங் கைகாணார்
சத்தம் பரவிந்து தானென்றெண் ணியே. ௧௨

2929 நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம்
வினைப்பற் றறுக்கும் விமலன் இருக்கும்
வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி
நினைக்கப் பெறிலவன் நீளிய னாமே. ௧௩

2930 சிவபெரு மானென்று நானழைத் தேத்தத்
தவபெரு மானென்று தான்வந்து நின்றான்
அவபெரு மானென்னை யாளுடை நாதன்
பவபெரு மானைப் பணிந்துநின் றேனே. ௧௪

2931 பணிந்துநின் றேன்பர மாதி பதியைத்
துணிந்துநின் றேன்இனி மற்றொன்றும் வேண்டேன்
அணிந்துநின் றேனுடல் ஆதிப் பிரானைத்
தணிந்துநின் றேன்சிவன் தன்மைகண் டேனே. ௧௫

2932 என்னெஞ்சம் ஈசன் இணையடி தாஞ்சேர்ந்து
முன்னஞ்செய் தேத்த முழுதும் பிறப்பறுந்
தன்னெஞ்சம் இல்லாத் தலைவன் தலைவிதி
பின்னஞ்செய் தென்னைப் பிணக்கறுத் தானே. ௧௬

2933 பிணக்கறுத் தான்பிணி மூப்பறுத் தெண்ணுங்
கணக்கறுத் தாண்டனன் காணந்தி என்னைப்
பிணக்கறுத் தென்னுடன் முன்வந்த துன்பம்
வணக்கலுற் றேன்சிவம் வந்தது தானே. ௧௭

2934 சிவன்வந்து தேவர் குழாமுடன் கூடப்
பவம்வந் திடநின்ற பாசம் அறுத்திட்
டவனெந்தை யாண்டருள் ஆதிப் பெருமான்
அவன்வந்தென் னுள்ளே யகப்பட்ட வாறே. ௧௮

2935 கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தில்
அரும்புங் கந்தமு மாகிய ஆனந்தம்
விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே. ௧௯

2936 உள்ள சரியாதி ஓட்டியே மீட்டென்பால்
வள்ளல் அருத்தியே வைத்த வளம்பாடிச்
செய்வன எல்லாஞ் சிவமாகக் காண்டலாற்
கைவள மின்றிக் கருக்கடந் தேனே. ௨௦

2937 மீண்டார் கமலத்துள் அங்கி மிகச்சென்று
தூண்டா விளக்கின் றகளிநெய் சோர்தலும்
பூண்டாள் ஒருத்தி புவனகு டாமணி
மாண்டா ரொருவன்கை வந்தது தானே. ௨௧

2938 அன்புள் உருகி அழுவன் அரற்றுவன்
என்பும் உருவ இராப்பகல் ஏத்துவன்
என்பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன் கடிப்பன் திருத்துவன் தானே. ௨௨

2939 மனம்வி ரிந்து குவிந்தது மாதவ
மனம்வி ரிந்து குவிந்தது வாயு
வனம்வி ரிந்து குவிந்தது மன்னுயிர்
மனம்வி ரிந்துரை மாண்டது முத்தியே. ௨௩

## 21. தோத்திரம்

2940 மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்
போயின நாடறி யாதே புலம்புவர்
தேயமும் நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்
காயமின் னாட்டிடைக் கண்டுகொண் டேனே. க

2941 மன்னு மலைபோல் மதவா ரணத்தின்மேல்
இன்னிசை பாட இருந்தவ ராரெனில்
முன்னியல் கால முதல்வனார் நாமத்தைப்
பன்னினர் என்றே பாடறி வீரே. உ

2942 முத்தினின் முத்தை முகிழிள ஞாயிற்றை
எத்தனை வானோரும் ஏத்தும் இறைவனை
அத்தனைக் காணா தரற்றுகின் றேனையோர்
பித்தன் இவனென்று பேசுகின் றாரே. ங

2943 புகுந்துநின் றானெங்கள் புண்ணிய மூர்த்தி
புகுந்துநின் றானெங்கள் போதறி வாளன்
புகுந்துநின் றானடி யார்தங்கள் நெஞ்சம்
புகுந்துநின் றானையே போற்றுகின் றேனே. ச

2944 பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன்
வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படு
நீதிக்கண் ணாடி நினைவார் மனத்துளன்
கீதக்கண் ணாடியிற் கேட்டுநின் றேனே. ரு

2945 நாமமோ ராயிரம் ஓதுமின் நாதனை
ஏமமோ ராயிரத் துள்ளே இசைவீர்கள்
ஓமமோ ராயிரம் ஓதவல் லாரவர்
காமமோ ராயிரங் கண்டொழிந் தாரே. சு

2946 நானா விதஞ்செய்து நாடுமின் நந்தியை
ஊனார் கமலத்தி னூடுசென் றப்புறம்
வானோர் உலகம் வழிப்பட மீண்டபின்
தேனார வுண்டு தெவிட்டலு மாமே. எ

2947 வந்துநின் றானடி யார்கட் கரும்பொருள்
இந்திர னாதி இமையவர் வேண்டினுந்
சுந்தர மாதர் துழனியொன் றல்லது
அந்தர வானத்தின் அப்புற மாமே. அ

2948 மண்ணிற் கலங்கிய நீர்போல் மனிதர்கள்
எண்ணிற் கலங்கி இறைவன் இவனென்னார்

உண்ணிற் குளத்தின் முகந்தொரு பால்வைத்துத்
தெண்ணிற் படுத்த சிவனவ னாமே. ௯

2949 மெய்த்தவத் தானை விரும்பும் ஒருவர்க்குக்
கைத்தலஞ் சேர்தரு நெல்லிக் கனியொக்குஞ்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற தேவர்கள்
அத்தனை நாடி அமைந்தொழிந் தேனே. ௧௦

2950 அமைந்தொழிந் தேன்அள வில்புகழ் ஞானஞ்
சமைந்தொழிந் தேன்தடு மாற்றமொன் றில்லை
புகைந்தெழும் பூதலம் புண்ணியன் நண்ணி
வகைந்து கொடுக்கின்ற வள்ளலு மாமே. ௧௧

2951 வள்ளற் றலைவனை வானநன் னாடனை
வெள்ளப் புனற்சடை வேத முதல்வனைக்
கள்ளப் பெருமக்கள் காண்பர்கொ லோஎன்று
உள்ளத்தி னுள்ளே ஒளித்திருந் தானுமே. ௧௨

2952 ஆளும் மலர்ப்பதந் தந்த கடவுளை
நாளும் வழிபட்டு நன்மையுள் நின்றவர்
கோளும் வினையும் அறுக்குங் குரிசிலின்
வாளு மனத்தொடும் வைத்தொழிந் தேனே. ௧௩

2953 விரும்பில் அவனடி வீர சுவர்க்கம்
பொருந்தில் அவனடி புண்ணிய லோகந்
திருந்தில் அவனடி தீர்த்தமு மாகும்
வருந்தி யவனடி வாழ்த்தவல் லார்க்கே. ௧௪

2954 வானக மூடறுத் தானிவ் வுலகினில்
தானக மில்லாத் தனியாகும் போதகன்
கானக வாழைக் கனிநுகர்ந் துள்ளுறும்
பானகச் சோதியைப் பற்றிநின் றேனே. ௧௫

2955 விதியது மேலை யமரர் உறையும்
பதியது பாய்புனற் கங்கையும் உண்டு
துதியது தொல்வினைப் பற்றறு விக்கும்
பதியது வவ்விட்ட தந்தமு மாமே. ௧௬

2956 மேலது வானவர் கீழது மாதவர்
தானிடர் மானுடர் கீழது மாதனங்
கானது கூவிள மாலை கமழ்சடை
யானது செய்யுமெம் ஆருயிர் தானே. ௧௭

2957 சூழுங் கருங்கடல் நஞ்சுண்ட கண்டனை
ஏழும் இரண்டிலும் ஈசன் பிறப்பிலி
யாழுஞ் சுனையும் அடவியும் அங்குளன்
வாழும் எழுத்தைந்து மன்னனு மாமே. ௧௮

2958 உலகம தொத்துமண் ணொத்துயர் காற்றை
அலர்கதிர் அங்கியொத் தாதிப் பிரானும்
நிலவிய மாமுகில் நீரொத்து மீண்டச்
செலவொத் தமர்திகைத் தேவர்பி ரானே. ௧௯

2959 பரிசறிந் தங்குளன் அங்கி அருக்கன்
பரிசறிந் தங்குளன் மாருதத் தீசன்
பரிசறிந் தங்குளன் மாமத ஞானப்
பரிசறிந் தன்னிலம் பாரிக்கு மாறே. ௨௦

2960 அந்தங் கடந்தும் அதுவது வாய்நிற்கும்
பந்த வுலகினிற் கீழோர் பெரும்பொருள்
தந்த வுலகெங்குந் தானே பராபரன்
வந்து படைக்கின்ற மாண்பது வாமே. ௨௧

2961 முத்தண்ட வீரண்ட மேமுடி யாயினும்
அத்தன் உருவம் உலகே ழெனப்படும்
அத்தனின் பாதாளம் அளவுள்ள சேவடி
மத்தர் அதனை மகிழ்ந்துண ராரே. ௨௨

2962 ஆதிப் பிரான்நம் பிரானவ் வகலிடச்
சோதிப் பிரான்சுடர் மூன்றொளி யாய்நிற்கும்
ஆதிப் பிரான்அண்டத் தப்புறங் கீழவன்
ஆதிப் பிரான்நடு வாகிநின் றானே. ௨௩

2963 அண்டங் கடந்துயர்ந் தோங்கும் பெருமையன்
பிண்டங் கடந்த பிறவிச் சிறுமையன்
தொண்டர் நடந்த கனைகழல் காண்டொறுந்
தொண்டர்கள் தூய்நெறி தூங்கிநின் றானே. ௨௪

2964 உலவுசெய் நோக்கம் பெருங்கடல் சூழ
நிலமுழு தெல்லா நிறைந்தனன் ஈசன்
பலமுழு தெல்லாம் படைத்தனன் முன்னே
புலமுழு பொன்னிற மாகிநின் றானே. ௨௫

2965 பராபர னாகிப்பல் லூழிகள் தோறும்
பராபர னாயிவ் வகலிடந் தாங்கித்
தராபர னாம்நின்ற தன்மை யுணரார்
நிராபர னாகி நிறைந்துநின் றானே. ௨௬

2966 போற்றும் பெருந்தெய்வந் தானே பிறிதில்லை
ஊற்றமும் ஓசையும் ஓசை யொடுக்கமும்
வேற்றுடல் தானென் றதுபெருந் தெய்வமாங்
காற்றது ஈசன் கலந்துநின் றானே. ௨௭

2967 திகையனைத் துஞ்சிவ னேயவ னாகின்
மிகையனைத் துஞ்சொல்ல வேண்டா மனிதரே
புகையனைத் தும்புறம் அங்கியிற் கூடு
முகையனைத் தும்எங்கள் ஆதிப் பிரானே. ௨௮

2968 கலையொரு மூன்றுங் கடந்தப்பால் நின்ற
தலைவனை நாடுமின் தத்துவ நாதன்
விலையில்லை விண்ணவ ரோடும் உரைப்பன்
நரையில்லை யுள்ளுறு முள்ளவன் தானே. ௨௯

2969 படிகால் பிரமன்செய் பாசம் அறுத்து
நெடியான் குறுமைசெய் நேசம் அறுத்துச்
செடியார் தவத்தினிற் செய்தொழில் நீக்கி
அடியேனை உய்யவைத் தன்புகொண் டானே. ௩௰

2970 ஈசனென் றெட்டுத் திசையும் இயங்கின
ஓசையி னின்றெழு சத்தம் உலப்பிலி
தேசமொன் றாங்கே செழுங்கண்டம் ஒன்பதில்
வாச மலர்போல் மருவிநின் றானே. ௩௧

2971 இல்லனு மல்லன் உளனல்லன் எம்மிறை
கல்லது நெஞ்சம் பிளந்திடுங் காட்சியன்
தொல்லையன் தூயன் துளக்கிலன் தூய்மணி
சொல்லருஞ் சோதி தொடர்ந்துநின் றானே. ௩௨

2972 உள்ளத் தொடுங்கும் புறத்துளும் நானெனுங்
கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தியும்
வள்ளற் பெருமை வழக்கஞ்செய் வார்கள்நம்
அள்ளற் கடலை அறுத்துநின் றானே. ௩௩

2973 மாறெதிர் வானவர் தானவர் நாடொறுங்
கூறுதல் செய்து குரைகழல் நாடுவர்
ஊறுவர் உள்ளத் தகத்தும் புறத்துளும்
வேறுசெய் தாங்கே விளக்கொளி யாமே. ௩௪

2974 விண்ணிலும் வந்த வெளியிலன் மேனியன்
கண்ணிலும் வந்த புலனல்லன் காட்சியன்
பண்ணினில் வந்த பயனல்லன் பான்மையன்
எண்ணிலா னந்தமும் எங்கள் பிரானே. ௩௫

2975 உத்தமன் எங்கும் உகக்கும் பெருங்கடல்
நித்திலச் சோதியன் நீலக் கருமையன்
எத்தனை காலமும் எண்ணுவர் ஈசனைச்
சித்தர் அமரர்கள் தேர்ந்தறி யாரே. ௩௬

2976 நிறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் ஈசன்
அறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் இன்பம்
மறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் பாவம்
புறம்பல காணினும் போற்றகி லாரே. ௩௭

2977 இங்குநின் றானங்கு நின்றனன் எங்குளன்
பொங்கிநின் றான்புவ னாபதி புண்ணியன்
கங்குல்நின் றான்கதிர் மாமதி ஞாயி
றெங்குநின் றான்மழை போலிறை தானே. ௩௮

2978 உணர்வது வாயுமே யுத்தம மாயும்
உணர்வது நுண்ணறி வெம்பெரு மானைப்
புணர்வது வாயும் புல்லிய தாயும்
உணர்வுடல் அண்டமு மாகிநின் றானே. ௩௯

2979 தன்வலி யாலுல கேழுந் தரித்தவன்
தன்வலி யாலே அணுவினுந் தானொய்யன்
தன்வலி யான்மலை எட்டினுந் தான்சாரான்
தன்வலி யாலே தடங்கட லாமே. ௪௦

2980 ஏனோர் பெருமைய னாகிலும் எம்மிறை
ஊனே சிறுமையுள் உட்கலந் தங்குளன்
வானோர் அறியும் அளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தின் அளவே. ௪௧

2981 பிண்டாலம் வித்தில் எழுந்த பெருமுளைக்
குண்டாலங் காயத்துக் குதிரை பழுத்தது
உண்டனர் உண்டார் உணர்விலா மூடர்கள்
பிண்டத்துட் பட்டுப் பிணங்குகின் றார்களே. ௪௨

## 22. சர்வ வியாபி

2982 ஏயுஞ் சிவபோக மீதன்றி யோரொளி
ஆயும் அறிவையும் மாயா உபாதியால்
ஏயப் பரிய புரியுந் தனைச்செய்துஞ்
சாயுந் தனது வியாபகந் தானே. ௧

2983 நானறிந் தப்பொருள் நாடவிட மில்லை
வானறிந் தங்கே வழியுற விம்மிடும்

ஊனறிந் துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறிந் தெங்குந் தலைப்பட லாமே. ௨

2984 கடலிடை வாழ்கின்ற கவ்வை யுலகத்
துடலிடை வாழ்வுகொண் டுள்ளொளி நாடி
உடலிடை வைகின்ற உள்ளுறு தேவனைக்
கடலின் மலிதிரை காணலு மாமே. ௩

2985 பெருஞ்சுடர் மூன்றினும் உள்ளொளி யாகித்
தெரிந்துட லாய்நிற்குந் தேவர் பிரானும்
இருஞ்சுடர் விட்டிட் டிகலிட மெல்லாம்
பரிந்துடன் போகின்ற பல்கோரை யாமே. ௪

2986 உறுதியி னுள்வந்த வுள்வினைப் பட்டு
இறுதியின் வீழ்ந்தார் இரணம தாகுஞ்
சிறுதியின் உள்ளொளி திப்பிய மூர்த்தி
பெறுதியின் மேலோர் பெருஞ்சுட ராமே. ௫

2987 பற்றி னுள்ளே பரமாய பரஞ்சுடர்
முற்றினு முற்றி முளைக்கின்ற மூன்றொளி
நெற்றியி னுள்ளே நினைவாய் நிலைதரு
மற்றவ னாய்நின்ற மாதவன் தானே. ௬

2988 தேவனு மாகுந் திசைதிசை பத்துளும்
ஏவனு மாம்விரி நீருல கேழையும்
ஆவனு மாமமர்ந் தெங்கு முலகினும்
நாவனு மாகி நவிற்றுகின் றானே. ௭

2989 நோக்குங் கருடன் நொடியே மூலகையும்
காக்கு மவனித் தலைவனு மங்குள
நீக்கும் வினையென் நிமலன் பிறப்பிலி
போக்கும் வரவும் புணரவல் லானே. ௮

2990 செழுஞ்சடை யன்செம்பொ னேயொக்கு மேனி
ஒழிந்தன னாயும் ஒருங்குடன் கூடுங்
கழிந்திலன் எங்கும் பிறப்பிலன் ஈசன்
ஒழிந்தில கேழுல கொத்துநின் றானே. ௯

2991 புலமையின் நாற்றமில் புண்ணியன் எந்தை
நலமையின் ஞான வழக்கமு மாகும்
விலமையில் வைத்துள வேதியர் கூறும்
பலமையில் எங்கும் பரந்துநின் றானே. ௧௦

2992 விண்ணவ னாயுல கேழுக்கு மேலுளன்
மண்ணவ னாய்வலஞ் சூழ்கடல் ஏழுக்குந்
தண்ணவ னாயது தன்மையின் நிற்பதோர்
கண்ணவ னாகிக் கலந்துநின் றானே. கக

2993 நின்றனன் மாலொடு நான்முகன் தானாகி
நின்றனன் தான்நிலங் கீழொடு மேலென
நின்றனன் தான்நெடு மால்வரை ஏழ்கடல்
நின்றனன் தானே வளங்கனி யாயே. கஉ

2994 புவனா பதிமிகு புண்ணியன் எந்தை
அவனே உலகில் அடர்பெரும் பாகன்
அவனே அரும்பல சீவனு மாகும்
அவனே இறையென மாலுற்ற வாறே. கங

2995 உண்ணின் றொளிரும் உலவாப் பிராணனும்
விண்ணின் றியங்கும் விரிகதிர்ச் செல்வனும்
மண்ணின் றியங்கும் வாயுவு மாய்நிற்குங்
கண்ணின் றிலங்குங் கருத்தவன் தானே. கச

2996 எண்ணும் எழுத்தும் இனஞ்செயல் அவ்வழிப்
பண்ணுந் திறனும் படைத்த பரமனைக்
கண்ணிற் கவருங் கருத்தில் அதுவிது
உண்ணின் றுருக்கியோர் ஆயமு மாமே. கரு

2997 இருக்கின்ற எண்டிசை அண்டம்பா தாளம்
உருக்கொண்டு தன்னடு வோங்கவிவ் வண்ணங்
கருக்கொண்டு எங்குங் கலந்திருந் தானே
திருக்கொன்றை வைத்த செழுஞ்சடை யானே. கசு

2998 பலவுடன் சென்றஅப் பார்முழு தீசன்
செலவறி வாரில்லை சேயன் அணியன்
அலைவிலன் சங்கரன் ஆதிஎம் மாதி
பலவில தாய்நிற்கும் பான்மைவல் லானே. கஎ

2999 அதுவறி வானவன் ஆதிப் புராணன்
எதுவறி யாவகை நின்றவன் ஈசன்
பொதுவது வான புவனங்கள் எட்டும்
இதுவறி வான்நந்தி எங்கள் பிரானே. கஅ

3000 நீரும் நிலனும் விசும்பங்கி மாருதந்
தூரும் உடம்புறு சோதியு மாயுளன்
பேரும் பராபரன் பிஞ்ஞகன் எம்மிறை
ஊருஞ் சகலன் உலப்பிலி தானே. கக

## வாழ்த்து

வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்கமெய்ஞ் ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே.

ஒன்பதாந் தந்திரம் முற்றும்.

தமிழ் மூவாயிரம் முற்றிற்று.

---



# திருமந்திர உரைக் குறிப்புக்கள்

[எண் - பாட்டு எண்]

ஒன்றவன்றானே - அவன் தானே ஒன்று; அவன் தனிப்பட நிற்கும் போது ஒன்று. இது கடவுள் ஒன்று எனக் கூறியது ஆகும். இரண்டவனின்னருள் - அவன் இன்னருள் இரண்டு; கடவுள் தன் அருளுடன் கூடி இருக்கும்போது இரண்டு எனப்படுவான். நின்றனன் மூன்றினுள் - கடவுள் முக் குணங்களோடு (இராசதம், தாமதம், சாத்துவீகம்) கூடி யிருக்கும் போது, மூன்று என்று சொல்லப் படுவான். நான்கு உணர்ந்தான்- நான்கு வேதங்களையும் (இருக்கு, சாமம், தலவதிகாரம், பவுடிகம்) உணர்ந்து வெளிப்படுத்தினன். ஐந்து வென்றனன்-பொறி வாயில் ஐந்து அவித்தனன். ஆறு விரிந் தனன் - பதம், எழுத்து, மந்திரம், கலே, தத்துவம், புவனம் என்னும் ஆறு அத்துவாக்களாகப் பரந்துள் ளான். ஏழு உம்பர்ச் சென்ற வன் - ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்னும் ஏழு அண்டங்களையும் கடந்து நின்றவன். தான் எட்டு உணர்ந்து இருந்தான் - தான் எண் குணங்களையும் அறிந்து அவைகளுடன் உலகர் பொருட் டுச் சேர்ந்திருந்தான். 1

தென்றிசைக்கு ஒரு வேந்தன் - தென்திசையிலுள்ள யமபுரத்துக்கு ஒப்பற்ற அரசனாகிய யமனை. நாற் றிசை - கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு. மேற்றிசை - நாற்றிசை களிலும் உயர்ந்த (பரிசுத்தமான) திசை அல்லது மேலே சொல்லப் பட்ட நான்கு திசைகளுள். 2

நக்கன் - தத்துவங்களைக் கடந்தவன்; மலமில்லாதவன்; மாசில்லாதவன். உலப்பிலி தேவர் - பாவம் இல் லாத புண்ணிய பூமியாகிய தேவர் உலகத்தில் வசிக்கின்றவர்கள். ஒக்க நின்றானை - உயிர்களுடன் கூடவே நின்றவனை. 3

தவனம் - தீ—(செந்நிறம்). புவனம் - அண்டங்கள். சிவன் - சீவனோடு சேர்ந்துள்ளவன்; மங்களகரமான வன்; செந்நிறத்தவன். 4

ஊர் - முத்தி நகர். மூவர் - அயன், அரி, அரன் (உருத்திரன்). அமரர் - மரியாதவர்கள்; இறவாதவர் கள். 5

முன்னை - படைப்புக் காலத்துக்கு முன். போதகத்தான் - போது அகத்தான்; உள்ளமாகிய தாமரை மலர்மீது உள்ளவன். 6

அணியன் - அணுவாகிய உயிருடன் கலந்துள்ளவன். சேயினும் - மன மாதிகளுக்கு எட்டாதவன் ஆயி னும். 7

நந்தி - நந்துதல் இல்லாதவன்; பிறப்பு, இறப்பு இல்லாதவன். பொன்... இருந்தவன்-அருளாகிய கதிர்களால் சூழப்பட்டவன். (அக் கதிர்கள் ஒன்றோடொன்று பிணைந் திருப்பது சடைபோன்ற காட் சியை அளிக்கின்றது.) 8

பெயலு மழைமுகில் - மழை பெய் யும் முகில், அருண் மழையைப்

பொழிகின்ற மேகம் போன்றவன். முயலின் முடிவும் - அச்சாதனையின் பயனும். முயலும் - முத்தி சாதனையும். அயலும் புடையும் - புறத்தும் அகத்தும். 9

இயற்றிகழ் - இயல்பாகவே பிரகாசிக்கின்ற. உயற்றுவன் - உயிர் வாழ்வேன். இயற்றுவன் நெஞ்சத்து - நந்திதன் திருவடியை நெஞ்சத்துள் பொறிப்பன். பிதற்றுகின்றேன் - ஓயாமல் உச்சரிக்கின்றேன். 10

அண்ணல் - பெருமை பொருந்திய கடவுள். வானுறுவ்வார்கள் - தேவர்கள். மண்ணுறுவார்கள் - மானிடர்கள்; தூல தேகத்தை உடையவர்கள்; தேவர் - திவ்விய (சூட்சும) தேகத்தையுடையவர். புதன், வியாழம், வெள்ளி, செவ்வாய் முதலிய அண்டங்களில் உள்ளவர். 11

கண்ணளந்து - எல்லா அண்டங்களையும் வரையறுத்து. விண்ணளந்தான் - ஆகாய தத்துவத்திற்கு அதிபதியாகிய சதாசிவன். எண் அளந்து - தங்களுக்குள்ள ஆயுட்காலத்தை எண்ணி. மலரோன் - அயன் என்னும் தேவர். மண்ணளந்தான் - மால் என்னும் தேவர். 12

கமலம் மலராதி - பிரம உலகமாகிய வியாழ அண்டத்தையும். கடல் வண்ணன் எம்மான் - விண்டு உலகமாகிய செவ்வாய் அண்டத்தையும். அவர்க்கப்புறம் ஈசன் - அதற்குமேல் இருக்கப்பட்ட உருத்திரன் உலகமாகிய சுக்கிர அண்டத்தையும், மகேசன் உலகமாகிய புதன் அண்டத்தையும். எங்குங் கண்டு நின்றான் - எல்லாவற்றையும் கடந்து நின்றாலும் எல்லாவற்றிலும் நிறைந்து நிற்கின்றான். 13

வேதியுமாய் - ஓமத்தானமாய் (Solar Pluxus); இது உடலில் மணிபூரகத்தானம்; உந்திக் கமலத்து நேர். ஆதியுமாய் - உற்பத்திக்குக் காரணமாய். ஆர்ந்து இருந்தார் - உணர்ந்து, ஓமத்தானத்தினின்றும் கிளம்பும் ஒளியைக்கொண்டு பிரகாசிப்பவர்களுக்கு. 14

கோது குலாவிய கொன்றை - வண்டுகள் மொய்க்கின்ற கொன்றை. மாது - விருப்பம். மாது குலாவிய - கண்டார் விரும்புந் தன்மையையுடைய. யாது - துன்பம். கோது குலாவி-குற்றத்தை நீக்கி. கோது - குற்றம். குலாவு - வளை, நீக்கு. 15

காயம் இரண்டும் - வெங்காயம் பெருங்காயம் ஆக இரண்டும். மாயம் கத்தூரி - கறுத்த கத்தூரி. 16

அதுபதி செய்து - கற்பாந்தத்திலும் அளகை நகரை அழியாமற் செய்து. 17

விதுபதி செய்தவன் - மதிக்கலையைப் பதியச் செய்வதாகிய யோகமார்க்கத்தை அநுட்டித்தவன். 18

முன்னே - முதற் படைப்பில். இடியும் முழக்கமும் - விந்துவும் நாதமும். 19

மதித்தவர் - மதிக்கலையைப் பதியச் செய்தலாகிய யோகானுட்டிப்பால் தியானித்தவர். முன்னும் - பிரமாவிற்கு முந்தியவனாகிய விண்டுவும். 20

வானப் பெருங் கொண்டல் மால் - கார்நிற வண்ணனாகிய திருமால். கானக்களிறு கதறப் பிளந்த எம் கோன் - யானையை உரித்த சிவ பெருமான். 21

மனத்திலெழுகின்ற மாய நன்னாடன் - ஒவ்வொருவர் மனத்திலும் எழுகின்ற எண்ணங்களை அறியும் ஒருவன். பிழைக்க நின்றார் - முத்திக் கரை சேர விரும்பி நின்றவர். 22

வன்னிக்கிறையிடை வாரணம் - கடலினுள்ளே தீயை. 23
துறப்பிலி - தன்னை அடைந்தவர்களை நீக்காதவன். மறப்பிலி - தன்னைத் தொழுதவர்களை மறக்காதவன். மாயா விருத்தமும் ஆம் - மயக்கமும் ஒழியும். 25
பரிபாரகமுற்றும் கடந்துநின்றான் - அண்டங்களை யெல்லாம் கடந்து நின்றவன். கமலம் மலர்மேலே உடந்திருந்தான்-மலர்மிசை யேகினான். 26
சந்தியெனத்தக்க - அந்தியில் தோன்றும் செவ்வான நிறத்தையுடைய. வணங்கப்படுமவர் - தொழும் அவர். 27
பிணங்கி - பொருந்தியும் பொருந்தாமலும். பின்முன் - படைப்புக்கு முந்தியும், அழித்தலுக்குப் பிந்தியும். முணங்கி நின்றான்-மறைந்து நின்றவன். 28
ஆணியனாகி - ஆழப் பதிந்தவனாகி. கோணையில்லாத குணத்து அடியார் - மனக்கோட்ட மில்லாது நன்னெறியில் ஒழுகிய அடியார். 29
வானின்றழைக்கும் மழை - உலகர் வேண்டாது தானே பெய்யும் மழை. ஆனின்றழைக்கும் - ஆன் கன்று தாய்ப்பசுவை அழைக்கும். 30
மண்ணகத்தான் - பூமியில் உள்ளவனாயினும். வானகத்தான் - இந்திர உலகத்துள்ளவனாயினும். விண்ணகத்தான் - இந்திர உலகத்தைத் தவிர ஏனைய பிரம, விண்டு, உருத்திர, மகேசுர, சதாசிவ உலகத்தானாயினும். வேறகத்தான் - மண் - வான்-விண்ணைத் தவிர்த்து நரக புவனங்களில் உள்ளவர்களாயினும். கண்ணகத்தே நின்று - ஞான வடிவாய் நின்று. 31
பதி பலவாவது - பல தேயங்களை உடையது. விதிபல செய்து - ஆரிய வேதங்களில் சொல்லப்பட்ட புன்னெறி யாகத்தைச் செய்து. துதி பல தோத்திரம் சொல்ல வல்லார் - முதல்வனைத் தவிர்த்துப் பல தேவர்களை வணங்கித் துதிப்பவர். 33
சாந்து - கலவைச் சாந்து. சவுரி - முதியாள் கூந்தல். வேந்தன் - இறைவன்; முதல்வன். 34
ஆற்றுவன் - சன்மார்க்க நெறியினுள் படச் செய்வன். ஆற்றுகிலா வழியாகும் - முன் மந்திரத்தில் கூறிய வண்ணம் போற்றாவிட்டால் வழிபாடு செய்யாததற்கு ஒப்பாகும். அப்படி ஆற்றவும் ஆமே - அப்படிச் சன்மார்க்க நெறியில் சேரும்படி செய்தால் முத்தி கைகூடும். 35
குறைந்தடைந்து - மிகத் தாழ்ந்து வணங்கி. மறைஞ்சு அடம் செய்யாது - வஞ்சிக்காது. புறம் சடம் செய்யான் - சடம் புறம் செய்யான் - சரீரத்தைப் புறக்கணிக்காது. 40
புனம் செய்த - திருத்தப்பட்ட. உற்பனம் செய்த வாணுதல் பாகன் - அகிலம் படைத்த ஆதிபகவன். இனம் செய்த மான்போல் - இனத்தோடு கூடிய மானைப் போல. 41
உரன் அடி செய்து - உறுதியான எண்ணத்துடன். ஒதுங்க வல்லார் - துதித்து, அரற்றி, அழுது பரவ வல்லார். 43
வேலை உலகம் - கடல் சூழ்ந்த உலகம். பதிவழி - முத்திமார்க்கம். 45
முந்திவண்ணு - படைப்புக்கு இச்சை கொண்டகாலத்தில் முதல் முதல் வெளிப்பட்ட ஐந்நிறக் கதிர்களை உடையவனே. 46
பனையுளிருந்த பருந்ததுபோல - பழத்தையுடைய பனைமரத்தின் மேல் பருந்து இருந்தாலும்

பழத்தை நினைப்பதில்லை அது போல. 47
படியார் - (படியாருக்கு) பூமியில் உள்ளவர்களுக்கு. முடியார் - முடியுடை அரசர்கள். விடியா விளக்கு- அழிதல் இல்லாத அருட்பெருஞ் சோதி. 48
பரை - மனோன்மணி. நாதனை - சதாசிவத்தை. 49
பிரான் - பெருமான். 50
அந்தம் - அழகு. 51
ஆதிப்பிரான் - உருத்திரன். மணி வண்ணன் - மால். அலர்மிசை ஆயன் - அயன். தொடர்ச்சியில் - தோற்றத்தில். 52
ஈசன் - மகேசன். இருவினை - கன்மம்-மாயை. பீசம் - தாமரை மொக்கு (அருவுரு). தூசுமடித்தவர் - தூய்மையாளர். 53
சிவன்...ஐவர் - சிவம் - சத்தி - விந்து நாதம் - சதாசிவம் - மகேசன் - உருத்திரன்-மால்-அயன். சிவன் முதல் மூவர் - 4 + ஐவர் 5 ஆக 9. அவை...ஆகும்-அவை ஒன்பதும் தோற்றத்தில் ஒன்றாகும். ஆறு + இரண்டு + ஒன்று-9. 54
வயன் - பயன் "வகரம் பகரமுமாகும்" என்ற சூத்திரப்படி. (உ-ம்: வலம் - பலம்.) 55
உலப்பிலி - அழிவில்லாத சிவன். 56
பேரொளி மூன்று - சத்தி - சிவம் - விந்து. பேரொளி ஐந்து - சதாசிவம்-ஈசன்-அரன்-அரி-அயன். 58
வரத்து - படைப்பு. தரம் - முறை. கரத்து - அழித்தல். 59
வரன் - பராசத்தி - பரை. கோன் - பதி. சலமயன் - தண்ணியன். 60
வேதம் - தமிழ் வேதம். ஓதத் தகும் அறம் - அறம், பொருள், இன்பம், வீடு. 61
வேதமுரைத்தானும் - தமிழ் வேதம் உரைத்தவனும். வேதியன் ஆகிலன் - பிரமா அல்லன். வேதமுரைத்தானும் வேதா - ஆரிய வேதம் உரைத்தவன் பிரமா. 62
இருக்கு உருவாம் எழில் வேதம் - இருக்கு என்று சொல்லப்படுகின்ற சுலோகங்களையுடைய ஆரிய வேதம். 63
குருநெறி - சன்மார்க்கம். 65
ஆறங்கமாய் வருமாமறை - ஆறு அங்கங்களோடு கூடிய தமிழ்மறை. கூறங்கமாக - மாறொருபாகனுக்கு. மாட்டாதார்-தமிழ் வேதம் ஆரிய வேதங்களைப் பிரித்து அறிந்து கொள்ளமாட்டாதார். 66
அஞ்சாமுகம் - ஈசான முகம். 68
நூறுயிரம் - இலக்கம் சூத்திரங்களையுடையன. 69
தரன் - பரிபாலிப்பவன். உரனுகி - திண்மையுடையவனுகி. 71
அந்தணர்-அறவோர். அறுதொழில்- ஓதல், ஓதுவித்தல், தவம், வேட்டல், ஈட்டல், ஈதல். 75
பெருநெறி - முத்தி மார்க்கம். குருநெறி - சன்மார்க்கம். திருவை இருத்தி - மயக்கத்தை நீக்கி. 77
இந்தியம் ஈட்டி - புலன்களை அடக்கி. பெத்தமறுத்தல் - பாசம் நீங்குதல். 78
வேதாந்தம்-வேதத்தின் முடிவு. 79
பிராமணர் - பிரமனை வணங்குகிறவர்கள் (விஷ்ணுவை வணங்குவோர் வைணவர், உருத்திரனை வணங்குவோர் உருத்திர பல்கணத்தார், மகேசனை வணங்குவோர் மாகேசுரர்.) 81
திருநெறி - வேதத் திருநெறி, வேத மார்க்கம். குருநெறி - சன்மார்க்கம். 82
ஆகுதி வேட்டல் - ஆவின் நெய்யைப் பறப்பையில் விட்டு எரிவளர்த்து, எரியுருவராகிய சிவபெருமானை வணங்கல். பறப்பை - சிருக்கு- சிருவம். 85
போகதி - முத்தி மார்க்கம். 86

பற்று இரண்டு - யான், எனது என்னும் அகப்பற்று, புறப்பற்றுக்கள். 88
மை-மலம். நெய்-அறிவு, ஞானம். 89
பாழி-பள்ளம், குழி. வீழி செய்து-பார்த்து. 90
பெரும்செல்வம்-பெருகும் செல்வம்-அதாவது ஆகாமியம். முன்னே படைத்த அரும் செல்வம் - ஊழ் வினை - வல்வினை. பருஞ் செல்வத் தாகுதி - முத்தி பயக்கும் ஆகுதி. 91
ஓமம் - பிரணவத்துடன் கூடிய மந்திரத்தால் செய்யும் அக்கினி காரியம். இது வடமொழியில் ஹோமம் என வழங்கப்படுகிறது. ஈமத்துள் அங்கி - சுடுகாட்டில் செய்யும் அக்கினி காரியம் - அந்தி யேட்டி - ஈமக்கடன். 93
ஆரணத் தங்கி - தமிழ் வேத ஆகமங்களில் கூறிய சிவாக்கினி. 94
கல்லா அரசன் - அரச நீதிகளைக் கல்லா அரசன். மனு நீதி கண்ட சோழன் செய்த நூல், திருக்குறள் முதலியன மனுஸ் மிருதி அல்ல. 95
அவன் நெறி - அரச நீதி.
செல்வ நரபதி - செல்வமும் அரசனும். 96
சடை - துறவறத்தார்களுக்கு உரியது. சிகை-நூல் - இல்லறத்தார்களுக்கு உரியது. 99
கால் - பிராணவாயு, மூச்சு. கனல் - மூலக் கனல், குண்டலினி. மேலேற்றி-வீணைத்தண்டின் மேலேற்றி. பால் - அமிழ்தம். 103
உரையில்லை - குற்றங் கூறப்படுவது இல்லை. 106
அவரிவர்-உயர்ந்தோர், தாழ்ந்தோர், உறவினர், பகைவர், நண்பர் முதலியோர். 107
அறம் தாங்கி நின்றார் - அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் நான்கும் இல்லாதவர். 108
அற்று நின்றார் - பற்று அற்று நின்றார். 110
தழுக்கிய நாள் - கல்வி, செல்வம், இளமை ஆகியவை கூடி இருக்கும்போது. வெம்மை - சாக்காடு. 111
இறந்தான் - உலகில் செத்தாரைப் போலத் திரிகின்றவன். அதாவது, உலகை மறந்து சிவனை நினைந்தவன். மறந்தான் - ஈதலை மறந்தவன். 113
ஊன் தெய்வமாக - தேகத்தையே பெரிதாக எண்ணிக் காலங் கழிப்பவர். 114
திளைக்......யாமே - தவம், அறம் இரண்டுமே வினைக் கடல் கடக்க உயர்ந்த தோணிகள் போன்றன. 115
பற்றது...பற்று - பொருள். அண்ணல்...வழி - சன்மார்க்கம். 116
இருங்கனி - பெரும்பழம். ஒட்டிய - தானே நேர்ந்த. மண்ணின் முகந்திடும் - எட்டிப் பழம்போல் பயனின்றிக் கெடும். பட்டி - வஞ்சனை. பதகர் - பாதகர். 117
கற்பனை - வீண் எண்ணங்கள். பிழிந்...அழிந்தன - இரசம் பிழியப் பட்ட கனிபோல் சத்துக் கெட்ட யாக்கை. 118
சிவலோகம்-புதன் அண்டம். புறம் - இதர பத முத்திகள். மறம்-துன்மார்க்கம். வகை-பிறப்பு இறப்பு. 119
சோகை - இரத்தமின்மை. ஈளை - கோழை. வெப்பு-உட்சுரம். 120
கழிநடப்பார்-வரம்பிகந்து நடப்பவர். கரும்பார் - நரகம். ஒழிநடப்பார் - சன்மார்க்கர். 122
கனிந்தவர் - ஈர நெஞ்சுடன் அறம் செய்தவர். துணிந்தவர் - துறந்தவர். மலிந்தவர்-ஆசை உள்ளவர். 123

இடுவது-அன்னம் இடுவது. இன்பம் படுவது-துன்பம் தருவது. 125
புலராமல் - வருந்தாமல். இல்லங் கருதி - முத்தி கருதி. 126
நந்திகள் நால்வர் - சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர். மன்று தொழுத பதஞ்சலி-தில்லையில் நடம் கண்ட பதஞ்சலி. 129
நந்தி......நாடினேன் - நந்தியெம் பெருமான் திருவருள் இயக்க இறந்த மூலனுடைய தேகத்தில் புகுந்தேன். 130
மாலங்.........மலையன் - திருமூலருடைய ஏழு மாணவர்கள். ஆவடுதுறையில்உடனிருந்தவர்கள்.132
யுகம் - ஆண்டு (சதுர்யுகக் கணக்குகள் எல்லாம் பாரத காலத்தில் வியாசரால் வகுக்கப்பட்டன). யுகாதி-வருடப்பிறப்பு என்பதை நோக்க. 136
புவனா...செல்வி-புவனேசுவரி. 137
நீலாங்க......வேதம் - தமிழ் நான்மறை. (அறம்-பொருள்-இன்பம்-வீடு.) 138
சிவபோதி - சிவன் கோவிலில் உள்ள அரசு. 140
புகலி......டானை-மறைத்துவைத்த இடத்திலிருந்த என் உடம்பை மறையும்படி செய்தானை. 141
நந்திநகர் - ஆவடுதுறை. 143
உடல் - சொல். உற்பத்தி - பொருள். 145
ஊன்பற்றி - தசைபொதி நாவைப் பற்றி. 147
உறைப்பு - உறுதி. 148
சதா...வேதம் - படைப்புக் காலத்தில் சதாசிவனுடைய தத்துவமாகிய சாதாக்கிய தத்துவத்தினின்றும் வெளிப்பட்ட தமிழ் வேதம். 149
தங்கி...சாத்திரம் - தமிழ் வேதாகமங்கள் இறந்து ஒழிந்தது திருவருளாலே. 150

ஞேயம் - அறியப்படுபொருள். ஞானம்-அறிவு. ஞாதுரு-அறிபவன். பரை ஆயம் - சத்திகள் கூட்டம். வீயம்- பிறப்பிறப்பில்லாச் சிவம். 154
சொற்போந்து - உபதேசம் பெற்று. கயிலைவழி - நந்திபரம்பரை. 155
நந்தி...பின் - நந்தி யெம்பெருமான் திருவருளியக்க மூலனுடைய தேகத்தில் புக்குப் பின். 156
தலைக்காவல்-சிறந்த காவல். களிம்பு-ஆணவமலம். 157
களிம்...விழிப்பித்து - அன்பு முதிர்ச்சியினால் அருளை வளரச்செய்து ஆணவமலத்தை ஒழித்தான். 158
நான்றதாகி - கூடினதாகி. 163
தீமேவும் - தீமை பொருந்திய. எரிசேர்ந்த வித்து - வறுக்கப்பட்ட விதை. 164
வியாக்கிரம் - உபதேசச் சொல். உடம்பொடு செத்திட்டிருப்பார் - உலகவாசனைஅற்று இருப்பர். 165
இழவு - ஒழிவு. சோம்பு - செயலற்றிருத்தல். 171
தூங்கி - செயலற்றிருந்து. 173
பிரியா...நெறி-முத்தி. பெற்றார்... பெருமையே - மதுவுண்ட வண்டுகள்போல் தாம் கண்டு அனுபவிப்பதை விள்ளமுடியாத பெருமை. 176
புரையற்ற பால் - புரை குத்தாத பால். உரையற்றுணர்வோர் - மவுன நிலையற்றுச் சிவம் நினைவோர். 178
கூர்மை - உப்புத்தன்மை. 180
கடம் - உடம்பு. 181
நந்திநாமம் - அஞ்செழுத்து. பொற்போதம் - பொன்போன்ற சிவஞானபோதச் சூத்திரங்கள் பன்னிரண்டுமே. 185
போத நந்தியை - தமிழ்ச் சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரங்களையும் உபதேசித்த நந்தியை

போதந்தனில் - தெளிந்த சிந்தை யினிடத்து. 186
பண்டம்...விழுதலால் - உயிர் நீங்கி உடல் கீழே விழுதலால். மண்டி- சேர்ந்து. 188
சூரை - ஒருவகைச் செடி. 189
பாலுள் - பக்கங்களில், விலா வில். 190
சீக்கை விளைந்தது - உயிர் உடலி னின்றும் பிரியும் காலம் நேர்ந் தது. செய்வினை மூட்டிற்ற - ஊழ் கழிந்தது. மூக்கினில் கை வைத்து - உயிர் இருக்கிறதா? இல்லையா? என்று மூக்கினில் கை வைத்துப் பார்த்தல். காக்கைப் பலி - ஈமக்கடன் செய்யும்போது பிண்டமிட்டுக் காக்கைகளுக்குப் போடுதல். 191
அடப்பண்ணி வைத்தார் - பலகாரம் செய்தார். மந்தணம் - மந்தனம் என்ற சொல்லின் திரிபு; மந்த னம் - ஆலோசனை. 192
அத்தா என்ன - அப்பா என்று கூப்பிட. 193
வாசந்தி - வாய் சந்தி; வாய்க்கு இனிமையான. ஆசந்தி - பாடை. பாசந்தி-பாசம் தீ; சுற்றம் நெருப் பிட்டு. 194
அச்சு அற - உயிர் நீங்க. ஐவர் - ஐம் பூதங்கள். 195
பந்தல் பிரிந்தது - உடல் கட்டுக் குலைந்தது. பண்டாரம் - உயிர் நிலை. துரிசு - முடிவு. 196
நாடு - தேகம். காட்டுச் சிவிகை - பாடை; சுடுகாட்டுக்குச் செல்லும் சிவிகை. 197
முப்பது முப்பது முப்பத்தறுவரும்- 96 தத்துவங்களும் செப்பமதி லுடைக்கோயில் - தேகம். 198
அச்சு அகலாதென - உயிர் விரைவில் நீங்காதென்று. 200
ஊர்த்துறைகால் - ஊர்ப் பொது வாய்க்கால். 201
ஐந்துதலை - ஐம்பொறிகள். பறி ஆறு - ஆதாரங்கள் ஆறு. சடை யுள சந்தவை - முதுகெலும்புகள். சார்பு - பொருத்து. 203
அத்திப்பழம் - உடல். அரைக்கீரை நல் வித்து - உயிர். உலை - கருப்பா சயம். கூழ் - ஊழ். 204
கூடம் - உடல். கோலம் - சித்தி ரம். 206
முட்டை - உயிருடன் கூடின உடல். பார்மணம் - உலக வாசனை. 207
இடிஞ்சில் - அகல். முடிஞ்சது - முடிந்தது. விடிஞ்சு இருளாவது- பிறந்து இறப்பது. 208
மடல்விரி கொன்றையன் மாயன் - மாயையை உடைய சிவன். இடர் படர்ந்து - துன்பப்பட்டு. எழா நரகிற் கிடப்பர் - கருப்பத்தில் கிடப்பர். 209
ஆருயிர் - பிராண வாயு. இடம் வலம் அடையும் - இடமும் வல மும் மாறுதல் அடையும். 210
தோற்பை - உடல். கூத்தன் - உயி ருடன் கூடிய இறைவன். 211
இயக்குறு...செல்வம் - இயங்குகின்ற திங்களின் இருட்பக்கத்தைப் போன்று குறைந்துகொண்டே போகின்ற. 213
விரிவு செய்வார்க்கு - அறவழியில் செலவிடுவார்க்கு. ஒன்று - சிவன் என்று. 218
தறி - சுழுமுனை. போம்வழி - உயிர் போம் வழி. நாட்டிய - வளர்த்த. 219
அடும்பரிசு - வெல்லும் வகை. அண் ணலை...லாரே - உயிர் போகும் போது சிவனை நினைந்தால் நமன் தூதுவர் நணுகமாட்டார். 220
தேய்...பாய்ந்தற்ற - இளமை கழிந் தால் அரிய கருமங்கள் செய்ய முடியா. கங்கை...போதே - இளமை நடமாடும்போதே நந் தியை நினை. 223

முன் - இளமையில்.
காஞ்சிரங்காய் - எட்டிக்காய். 224
இசையினுல் - புகழக்கூடிய அறச் செய்கைகளினுல். எய்திய நாள் - வரையறுக்கப்பட்ட ஆயுள். எறிவது - அழிவது. 228
இழைக்கின்ற - உண்டாக்கப்பட்ட. பிழைப்பு - தவறுதல். அழைக்கின்றபோது - இயமன் கூப்பிடுகிறபோது. 229
ஐவர்க்கு - ஐம்பொறிகளுக்கு. ஐவர்க்கு நாயகன் - உருத்திரன். 230
மத்தளி - உடல். தாளம் - இரேசகம் - பூரகம். அரசன் - உயிர். 231
வேங்கடநாதனை - வேகும் இயல்புள்ள உடலுக்கு நாதனை. வேங்கடம் - உடல். 232
திவாகரன் - சூரியன். 233
பட்டிகை - பட்டாடை. 234
துடுப்பு - இடைகலை பிங்கலை. அடுப்பு - நாபித்தானம். கொள்ளி - ஞானக்கினி. பானை - உடல். அரிசி - உயிர். 235
மூன்ெறுளி கண் - மூன்று கண் ஒளி; (சோம சூரிய அக்கினி வடிவான சிவன்). புறநின்ற - சேரமாட்டான். 236
ஆம் விதி - இல்லற துறவறங்களுக்கு உரித்தாம் விதி. அந்நிலம் - முத்தியுலகம். 237
வெவ்வியனுகி - பேராசை உடையவனுகி. தவ்வி - அகப்பை. 238
அணு - உயிர். 239
இடு - எறி. 240
ஆத்த - தாலிகட்டின. 244
தேமா - மாமரம். புளிமா - புளியமரம். 245
கண்டன் - அரசன். 246
இலைநலவாயினும் - பார்ப்பதற்கு இலையால் அழகுடையதேனும். விலகுறும் - செல்லும். வெய்து - கடிந்து. 247
இயல் - அழகு. 249
மெய்யகத்தோர் - உண்மை உணர்ந்தோர். 250
கோழை - விந்து. குளம் - கருப்பை. 251
பொய்க்குழி - வயிறு. 253
உடந்து - வருத்தப்பட்டு. 255
ஆறினும் - அறுசுவையினும். 256
சுடுபொடி - நீறு. பின்னிக் கிடந்தது - சேர்ந்திருந்தது. 258
என்பொன்மணி - சிவம். 259
ஆர்வம் - அன்பிற்கு முதல். ஈரம் - இரக்கம். பாரம் - அன்பின்மை. கோரம் - துன்பம். கோங்கு - ஒருவித நரகம். 260
என் - பல கூறிப் பயன் யாது. தலைநின்றவாறு - தோன்றிய விதம். 261
தேன் ஒரு பால் திகழ் - ஒரு பக்கத்தில் விளங்குகின்ற உமாதேவியை உடைய. 262
வன்பு அடைத்து - உறுதி செலுத்தி. 263
அருத்தி - அன்பு. விருத்தி - இன்பம். 264
அன்...யுளான் - அன்பே சிவம். முன்பினுள்ளான் - உலக உற்பத்திக்கு முன்னும் அதன் அழிவுக்குப் பின்னும் உள்ளவன். 266
கொழுந்தன்பு - வளரும் அன்பு. 267
இன்பப் பிறவி - முத்தியின்பம். 268
கண்ணி ஐந்து - ஐம்புலன். 269
உணர்ச்சியுள் - ஈசனை அறியும் அன்பினுள். உணர்ச்சி இல்லாது - உலக உணர்ச்சி இல்லாது. 270
கமலமலர் உறைவான் - மலர்மிசை ஏகினன். 272
இன்பனை - ஆனந்தமயனை. இ[illegible] திக்கும் - தித்திக்கும். 27[illegible]
தேசு - சிவஞானம். 275
மேதகு - பெருமையுள்ள. மட்டு - அன்பு. 27[illegible]

பெருக்கு. . கண்கடல் - பெரி தாகிய ஞானக்கண். 350
சமைக்க வல்லான் - ஆக்கி - அளித்துத் துடைக்கவல்லான். அமைக்க வல்லார் - மனத்தில் இருத்தித் துதிக்கவல்லார். 351
பண்பழிசெய் வழிபாடு - தகுதிஅற்ற வணக்கம். நண்பழியாளன் - அயன். விருத்தி - ஐயம். 352
போதகன் - குரு. எழு குருக்களில் ஒருவர் மால். ஏனையோர் :—சதாசிவன்-அநந்தன்-நீலகண்டன்-அம்பிகை-கந்தன்-அயன். 353
சசிமுடி - சந்திரனைச் சூடிய வீரபத்திரர். 356
வலம்...ராதி - ஒளிபொருந்திய அழகிய முடியை உடைய சிவன். 357
செறிவுடை - கூட்டமாகிய. மூவடி தா என்றான் - வாமனன். பாவடி ...செய் - வேதமோதும். தாவடி ...மாறே - அடியையும் முடியையும் எய்துமாறு. 363
ஆலிங்கனம் செய்து - கலந்து. மெய்நெறி - சுத்த அத்துவிதம். கோ லிங்கம் ஐஞ்சு - பஞ்ச லிங்கங்கள். 365
வாள் கொடுத்தான் - அறிவாகிய ஒளியைக் கொடுத்தான். ஆள் கொடுத்து - அடிமைப்பட்டு. கோளாக - வலிமை உண்டாக. 366
சதுமுகன் - கர்த்திருசாதாக்கியத்திலுள்ள நான்கு முகங்களை உடைய சிவன். 367
இல்லது - மாயை. வல்லது வழிஆக - மாயை மூலமாக. சொல்லது - புகழ். தூராதி தூரம் - விரிவுடையது. 370
சத்தி ஓரா வத்து மானும் - ஆராய்ந்தறியப்படாத பரம்பொருளைச் சத்தி ஒக்கும். 371
மான் - அசுத்த மாயை. 372
ஒருவன் ஒருத்தி - சிவம் சத்தி. புத்திரர் ஐவர் - சதாசிவன் - மகேசன் - உருத்திரன் - மால்- அயன். 373
வயணம் - காரணம். 379
ஒன்று...உடலுற - உயிரை உடலோடு சேர்க்கும்போது. முன் துயராக்கும் உடற்கு - ஊழின்படி படைக்கும் உடலுளி. 381
திரு ஒன்றில் - சத்தி சிவத்தோடும் கூடில். 383
புவனபதி அண்ணல் - உருத்திரன். உழக்கு - அளவு கருவி. 384
ஆணவ...ஐவர் - ஆணவமலம் ஒன்றுடைய அணுபட்ச சதாசிவாதி ஐவர். காரிய காரண ஈசர் - அணுபட்ச சம்புபட்சத்தார். விந்து - சுத்த மாயை. 385
முப்பால் - முக்குணம். உமையாளுதயம் - சிற்சத்தியிடத்துத் தோன்றும். 386
காண அளித்தல் - புலனுக்குத் தோன்றுமாறு உண்டாக்கல் 387
அளி - கருணை. முக்கோணம் வயிந்தவம் - முக்கோணச் சக்கரத்தில் உள்ள பீஜ எழுத்து. 388
ஓராயம் - சிவமும் சத்தியும் கூடிய கூட்டம். 394
தள்ளுயிர் - பல அண்டங்களிலும் செலுத்தப்படும் உயிர். 404
தாங்கருந் தன்மை - காக்கும் தன்மை. 405
அணுகினும் - சீவனுடன் இருந்தாலும். 406
இலயங்கள் மூன்று - தினப்பிரளயம்-கற்பாந்தப் பிரளயம் - கடைப் பிரளயம். உலை தந்த மெல்லரி - உலையிலிட்ட அரிசி. அலை தந்த மானிலம் - அப்புவிலிருந்து உண்டான உலகம். 408
பதம் செய்யும் பார் - ஆன்மாக்களுக்கு இன்பத்தைக் கொடுக்கும் உலகம். முதம் - மகிழ்ச்சி. குதம் - மிகுதி.

ஆகாசவிதம்-தோற்றுந்தபடி. 409
ஒன்றின் - மாயையின். ஓம் என்ற அப்புறக் குண்டம் - பிரணவம். கோலிக் கொண்டான் - திரட்டிக் கொண்டான். 410
இரண்டு உடல் - தூலம், சூக்குமம். 412
உடல் உயிர் நீவுதல் - கருவி காரணங் கள் கழன்று நிற்றல். 413
பாழ் - சிவம். பயிர் - உலகம். வாழாச் சங்காரம் - வாழ்வினைக் கொடாத அழிப்பு. 415
சேரும் வினை - ஆகாமியம். ஆர் மின் - ஊழ்வினையைப் புசியுங்கள். மாயம்...உண்டு - புருவமத்தி. ஆயம் - சிவம் சத்தி கூட்டம். ஆய் உணர்வு - அறியும் அறிவு. 416
இறையவன் - உருத்திரன். மாதவன் - மால். இன்பம் படைத்த மறை யவன் - அயன். 419
அரைக்கின்ற அருள் - மறைப்பு. அங் கங்கள் - தத்துவங்கள். 422
வேட்சி - விருப்பம். 423
யோனிகள் - நால்வகைப் பிறப்புகள்; அண்டசம் முதலியன. 425
வட்டத்திரை - கடல். 426
விச்சும் - மேலான. சுடர் மூன்று - சூரியன் - சந்திரன் - அக்கினி. 427
அதுவிதுவாமே - பலவகை. 428
மண்ணின்ற வானோர் - உலகத்திற்கு வந்த வானவர். 434
இருபத்தைந்து - பூதம்-5, புலன் 5, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரி யம் 5, கரணம் 4, புருடன் 1 ஆக 25. 436
அங்கி அப்பு - உதராக்கினியும், நீரும். செந்தாள் கொளுவி - சிவந்த பாதங்களைக் கட்டி. ஓம் துறை - பிரணவக் கரை. பறி கின்ற - விட்டு நீங்குகின்ற. பத்து - பத்து மாதம். 437
முன்பு ஊறிய - அநாதியே ஆன்மா வைப் பற்றியுள்ள. 438
கருவை ஒழிந்தவர் - சத்திநி பாதர். நால் மூவேழ் - 25 தத்துவங்கள். 439
நீள் வாயு - தனஞ்சயன். கூவி அவி ழும் - இரைந்துகொண்டு செல் லும். 441
ஏற எதிர்க்கில் - விந்துவைச் சுழு முனையில் ஏற்றி நாதத்தை எதிர்த் துச் சென்றால். ஆற எதிர்க்கில் - நிதானமாக எதிர்க்கில். 442
ஏய் அங்கு அலந்த - பல அண்டங் களில் பிறந்திறந்து அலைந்து வருந்தின. மாயங் கலந்த - மோக வலைப்பட்ட. 443
கிளை கூட்ட - தத்துவங்களைக் கூட்ட. 444
செம்பால் - உதிரம். 445
குதம் செய்யும் அங்கி - மூலச்சூடு 446
கோசம் - பஞ்சகோசம். இரண் டெட்டு மூன்றைந்து - முப்பத் தொரு தத்துவங்கள். 449
பேதைப்புலன் - அறிவற்ற புலன் 450
ஐந்துடன் - சிவ தத்துவங்கள் ஐந் துடன். உலைப்பொறி - சரீரம். 451
துன்பக்கலசம் - சரீரம். ஒன்பது நீர்ச்சால் - ஒன்பது கழிவாய். கல சம் பதினெட்டு - 18 பக்க எலும்பு. 452
உடம்பினிலாகிய ஆறு - பேறு, இழவு, நரை, திரை, மூப்பு, சாக் காடு. பிறியீர் - பிரித்து அறி வீர். 453
பூ - யோனி. மொட்டு - இலிங்கம். காவுடைத் தீபம் - கரு. 456
கண்ணுதல் நாமம் - நமச்சிவாய. 458
வழிபோல - சாயல் போல. 461
இரண்டு - மலமும் சலமும். 465
குழறினுல் - தடுமாறினுல். 467
இட்டார் - தந்தை. ஏற்றவர் - தாயார். தட்டான் - சிவன். 470
தொன்பு - பழமையாகிய பிறவி. 471

அதன் புதலாய் - அதன் செடியாய். 473
திரித்து - மீண்டு. 474
இருமாயா - சுத்தமாயை - அசுத்த மாயை. 475
ஐவகைத்திண்மலம் - ஆணவம் - கன்மம் - மாயை - மாயேயம் - திரோதாயி. 480
அவித்து ஆம் நனவு - மண்பட்ட அறிவு. விந்து ஆம் நாதம் - விந்துவைப் படைக்கின்ற நாதம். 483
இடிஞ்சில் - அகல். வறடு - மலட்டுப் பசு. 486
குளகு - தழை. 488
தளி - இரக்கம். குளி - உலக அறிவு. 493
பேர்கொண்ட பார்ப்பான் - ஆரியப் பார்ப்பார். 502
அசுரன் - சூரபன்மன். 503
அதோமுகம் - பிரகிருதிமாயை 504
சதோமுகம்-சத் ஓம் முகம்; சத்தாகிய பிரணவ சொரூபமான முகம் 507
கிழது - கிழிபட்டது. 509
முளிந்தவர் - வாடிய சரீரத்தை உடையவர். தளிந்தவர் - அடங்கியவர். 510
பொய்ப்பகை - விளையாட்டுப் பகை. 511
பல்லி - பொறுமை. கமை - பொறுமை. 522
கொல்லை - இடுகாடு. 524
ஓடவல்லார் - மூர்த்தி - தலம் - தீர்த்தம் முறையால் வணங்குவோர். பாடவல்லார் - சிவன் புகழ் பாடுவார். தேடவல்லார் - யோகிகள். கூடவல்லார் - ஞானிகள். 525
போர்புகழான் - மதச்சண்டை யிடாமல். வாயடையா - மவுனமாக. 528
திருமை - பெருமை. 530
வற்கரி - மூச்சு. நிரைத்த இராசி - 12. பிரைச்சதம் -யோகம். 531
அயமுறு - நல்வழிப்படுத்தும். 534
அமுந்திய நால்வர் - நந்திகள். நால்வர் - சனகர் - சனந்தவர் - சனாதனர் - சனற்குமாரர். 535
எண்குணன் - எண்ணும் குணன் - எல்லாராலும் மதிக்கப்படும் குணமுடையவன். 536
நேமி - நியமத்தை உடையவன். 538
சித்தாந்தக்கேள்வி - சைவ சித்தாந்த நூல்களிற் கூறும் பொருளைக் கேட்டல். மகம் - விருந்து முதலிய ஐம்பெரு வேள்வி. நிவம் - நியம். இவை போன்ற நற்செயல்கள். 539
சொங்கு - சொக்கு என்பதன் மெலித்தல்; குற்றம். சுவத்திகம் - எது சரிப்படுகிறதோ அது; சுகமானது. 540
ஊரு - தொடை. 541
தூரிசில - குற்றமற்ற. உருகியிடும் உடல் - நெகிழும் உடல். 542
துளங்காது - அசையாமல். 543
பாணி - கை. கொடி மூக்கு- மூக்கு நுனி. 544
ஐவர் - ஐம்பொறிகள். ஊர் - உடல். தலைமகன் - மனம். குதிரை - பிராணவாயு. பற்றுக்கொடுக்கும் - வசப்படும். துள்ளி விழுத்திடும் - வசப்படாது. 546
ஆரியன் - மிலேச்சன். குதிரை இரண்டு - இடைகலை பிங்கலை. விரகு - உபாயம். வாரி - சேர்த்து. 547
புள் - பறவை. புரவி - பிராணவாயு. 548
மடைமாறி - இடைகலை - பிங்கலைகளை மாறிமாறி. 549
மாறுதல் - மடைமாறுதல். 550
வயம் - வசம் (சகரத்துக்கு யகரம் போலி). பழுக்கினும் - முதுமைப் பருவம் எய்தினும். பிஞ்சாம் - இளமைத்தன்மையை எய்தலாம். 551
பூரி இடத்திலே - இடைகலை வழி

யாய்ப் பிராணவாயுவைப் பதினாறு மாத்திரை உள்ளே வாங்கு. அங்கே பிடித்து - 64 மாத்திரை கும்பித்து. விட்டளவுஞ்செல்ல - 32 மாத்திரை இரேசகம் செய்ய (அதாவது வெளியேவிட). சங்கே குறிக்க - சங்கு முதலிய நாதங்கள் கேட்க. தலைவனுமாமே - பிராணாயாமப் பயிற்சியில் தலைசிறந்தவன் ஆகலாம். 552

காற்றைப்பிடிக்கும் கணக்கு - மேலே கூறிய அளவு. 553

இரேசகத்தால் உட்பதிவித்து - அளவுக்கு மீறி வாயுவை வெளியே விடாமல். 554

வீடு இளகாது - சரீரம் தளராது. புட்டிபட - பருக்கும்படி. கொட்டிய - வீணைக் கழியும். நட்டம் இருக்க - நிலைநிறுத்த. 555

கூடம் - சரீரம். மங்கையர் - இடைகலை - பிங்கலை. எண்விரல் கண்டிப்பர் - பிராணவாயுவைப் பன்னிரண்டங்குலமுள்ள பொருளாகக்கொண்டால் பூரகம் எட்டங்குலப் பிரமாண முள்ளதாகும். நாலங்குலம் வந்து கூடாது. கால் விரல் - 16 மாத்திரையுள்ள பூரகத்தின் கால்பாகமாக உள்ள நாலங்குலம். கூடிக்கொளின் - 64 மாத்திரை அளவுள்ள கும்பகத்தாலும் 32 மாத்திரை அளவுள்ள இரேசகத்தாலும் நாலங்குலம் கூடிக்கொண்டால். 557

பன்னிரண்டானைக்கு - 16 மாத்திரையில் நாலு மாத்திரையை விட்டு விட்டு 12 மாத்திரையை மாத்திரம் பூரிப்பவருக்கு. பாகன் - ஆன்மா. 558

நாபிக்குக்கீழே பன்னிரண்டங்குலம் - மூலாதாரம். 560

பாவித்த - பிறப்பைத் தருகின்ற. கோலித்த - வட்டமாயுள்ள. 561

அதோமுகம் - கீழ். 562

இரேகைச்சுடரொளி - கீற்றுப் போன்ற ஒளி. கோதில் - குற்றமில்லாத. உன்மத்தம் - பரவசம். 563

முக்காரமிட்டிரு - நிமிர்ந்து உட்கார்ந்து, மூச்சடக்கி அழுத்தி இரு. மேலைத்துவாரம் - மூலத்துக்கு மேல் உள்ள துவாரத்தின்மேல்; இந்திரியம் தேகத்திற்குள் பரவும் வழி. 564

எருவிடும் வாசல் - மலத்தைக் கழிக்கும் மூலம். கருவிடும் வாசல் - இந்திரியம் வெளிப்படும் வழி. உருவிடு சோதி - பிறப்பினை ஒழிக்கும் சிவபெருமான். 565

உபாதி - மாயையுடன் கூடிய உயிரை. ஒண்சோதி, தன்னை } - சிவத்தை. 566

புறப்பட்ட வாயு - வெளிச்செல்லும் நால்விரல் அளவுள்ள வாயு. பொகவிடா (போகவிடா) வண்ணம் - கழியாவண்ணம். 567

கோணா மனம் - எப்பொழுதும் கோணும் தன்மையுள்ள மனம். குறிக்கொண்டு கீழ்க்கட்டி - மூலத்துவாரத்தை முக்காரமிட்டு. வீணைத் தண்டுடே வெளியுற - வீணைத்தண்டின் துவாரத்தின் ஊடே வெள்ளியாகிய சுக்கிலம் உற. வாணாள் அடைக்கும் - வாழ்நாள் கழிந்துபோகாதபடி காக்கும். 568

மலையார் சிரத்திடை - உச்சியிலுள்ள. வான்நீர் - ஆகாய அருவி என்கிற ஆனந்தக் கண்ணீர். நிலையார - தேகம் நிலைத்து நிற்க. நெடுநாடி - நீண்டு பரந்து கிடக்கும் நாடிகள். சிலையார் பொது - உயிருள்ள இடம் அதாவது உள்ளம். தொலையாத - விட்டகலாத. 569

மேலை நிலத்தினுள் - நிராதாரத் தானத்திற்குரிய மன உன்மனி. வேதகப்பெண் - வேதத்தைக்

கைக்கொண்ட சத்தி. மூல நிலத்தில் எழுகின்ற மூர்த்தி - விநாயகர் அல்லது அந்தமில் சத்தி. 570
கடைவாசல் - மூலத்துவாரம். இடைவாசல் - வீணாத்தண்டினுள் சுக்கிலம் புகும் வழி. 571
கலந்த உயிர் - கடைவாசலைக் கட்டி, இடைவாசல் நோக்கி, இனிய உள்ளத்திலிருக்கும் சிவத்துடன் கலந்த உயிர். காலமும் நிற்கும் - ஆயுள் நிலைத்து நிற்கும். 572
வாய்திறவாதார் - மோன நிலையில் உள்ளவர். மாடு - பெருமை. கோய் - பரணி; (பரணி மும்மீன் அடுப்புப்போல) மூன்று கண்கள் இரு கண்களுடன் ஞானக்கண்ணும் சேர்ந்தது. ஞானக்கண் திறந்ததற்கு அடையாளம் ஆனந்தக் கண்ணீர். 573
மனத்திடை....வாயு - மனத்தைப் புலன்களிற் செலுத்துகின்ற வாயு. சாலேகம் ஏழு - ஏழு வாயில்கள் (செவி 2, கண் 2, மூக்கு 2, வாய் 1, ஆக 7). பெருவாய் இரண்டு - எருவாய் கருவாய் ஆகிய இரண்டு. பள்ளியறை - உயிரும் சிவமும் ஒன்றி நிற்கும் இடமாகிய உள்ளம். 574
ஈரைந்து - தசவாயு. ஐந்து - பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன். குரங்கு - மனம். கோட்டை - தேகம். 575
முன்னமே...முடிந்தனர் - இதற்கு முன் பலபேர் இறந்தொழிந்தார்கள். பின்...பிரமாணம் - பின்னால் வருபவர் இறக்கமாட்டார் என்பதற்கு ஆதாரம் இல்லை. இடிகரை - அழியும் தேகம். 576
அரித்த உடல் - ஐம்புலன்களால் அவதிப்பட்ட உடல். தாரணை - மண் முதல் தத்துவங்களை ஒன்றி ஞென்று ஒடுக்கிச் சிவத்தைச் சிந்தித்தலேயாகும். அதாவது, பூதங்கள் ஐந்தைப் புலன்களில் ஒடுக்கி, புலன்களை அந்தக்கரணம் நான்கில் ஒடுக்கி, அந்தக்கரணங்களை மாயையில் ஒடுக்கி, மாயையை ஆன்மாவில் ஒடுக்கி, ஆன்மாவைச் சிவத்தில் ஒடுக்கல். 577
ஈரெட்டு - பூதங்கள் 5. புலன்கள் 5. அந்தக்கரணங்கள் 4. மாயை 1. சீவன் 1. ஆக 16. புந்தி புலன் போக - புலன்கள் எல்லாம் புந்தியில் ஒடுங்க. 578
பண்ணாக்கி - நாதத்தை ஒலிக்கச் செய்து. 579
ஒண்ணும் நயனம் - ஞானக்கண். விண்ணாறு - ஆனந்தக் கண்ணீர். 580
சந்திரப்பூ - ஆஞ்ஞையிலுள்ள சந்திரன் போன்ற வெண்ணிற ஒளி. 581
மான் - அவிச்சை. திரி - அறிவு 582
நடுமூக்கு - புருவமத்தி. தேட்டம் - ஆராய்ச்சி. 584
பாசமிறங்க - பாசம் கெட. 588
பள்ளி அறை - உள்ளம். கொள்ளி அறை - சுடுகாடு. 591
தண்டுடன் - வீணாத்தண்டுடன். மண்டலம் மூன்று - சந்திர, சூரிய, அக்கினி. 592
மடலித்த வாணி - அஞ்சுகதம். கடலித்து - அலையற்ற கடல்போல் இருந்து. சடலத் தலைவன் - சீவன். 596
அசத்தென்னும் ஆறாறு - 36 தத்துவங்கள். 597
சமாது இயமம் ஆதியில்தான் - இயமம் ஆதிசாதனையால் உண்டாகும் சமாதி. 598
மேரு - புருவமத்தி. 599
மன்மனம் - மன்னும் மனம். தூல சூக்கும சரீரங்கள் இரண்டினும் பொருந்தும் மனம். 600
முகட்டலகுச்சி - புருவமத்தி. நாலுவாசல் - கண், மூக்கு, செவி,

வாய் நான்கு வாசல்களும் கூடும் இடம். மேலைவாசல் - நாற்சந்திக்கு மேலுள்ள வாசல். 602

வளைகள் - இடங்கள். குடிகள் - அதி தேவதைகள். 603

பொறிப்பட்ட - அடைக்கப்பட்ட. மாம்பழம் - சிவக்கனி. 604

கருவரை - கருங்கல்லால் ஆகிய வரை. அருவரை - வீணாத்தண்டு. திருவரையா மனம் - அளவிடப் படாத பெருமையுள்ள மனம். 605

கொம்பேறி - வீணாத்தண்டு ஏறி. 606

கற்பனை - வீண் சிந்தனைகள். கனல் - மூல அக்கினி. புணர்மதி - சிவத் தோடு கலக்கும் அறிவு. 608

தத்துவம்-மெய்ப்பொருளான சிவம். தூங்கவல்லார் - யோகம் செய்ப வர். 609

சமாதியில் எட்டும் எட்டுச் சித்தி - அணிமா முதலிய எட்டுச் சித்தி கள். 611

அமராபதிக்கே செல்வர் - இயமம் முதலிய எட்டு யோகங்களில் சித்தி பெற்றவர் அமராபதியாகிய இந்திர உலகினை எய்துவர். 612

விருந்தின்பம் - புதிய இன்பம். 614

கும்பத்து அமரர் - பூரண கும்பங் களை ஏந்திய அமரர். 615

தேவர்கள் ஆர் இவர் என்ன - பிரத் தியாகாரப் பலத்தால் சிவ சாரூபம் பெற்றுச் செல்லும் இவர் யார் என்று தேவர்கள் கேட்க. 616

சொல்வழி - நூல்கள் கூறும் தாரணை மார்க்கம். சுருங்...ஆளர் - பிரம விட்டுக்கள். 617

தூங்கவல்லார் - விட்டுணு. துணை... வல்லார் - பிரமா. வலிசெய்...வல் லார் - உருத்திரன். அமுதம்... வல்லார் - இந்திரன் உள்ளிட்ட தேவர்கள். 618

காரியமான உபாதி ஏழு - சீவ னுடைய உபாதி 7. ஆரியகாரண (உபாதி) ஏழு - ஈசனுடைய உபாதி 7. தார் - ஒழுங்கு. தார் - இயல்-தற்பரம் எனப் பிரிக்க. 619

அடி என - திருவடிகளே பொருள் என. 621

சாம்பவி, கேசரி - இருவகைத் தீக் கைகள்; முத்திரைகள் என்றுங் கூறுப. 622

காயாதி - காயம் ஆதி. அறிவொன்று - ஒருமுகப்பட்ட சித்தம். ஓயா - முடிவு இல்லாத. வீயா - இற வாத. 623

இருபதி...போகம் - பலதிறப்பட்ட கன்மபோகங்கள். தாய உழைப்பு - தேகத்திற்கு வருத்தம். அரு... அடங்கும் - எட்டு யோகங்களுள் அடங்கும். 624

மதிதனில் - இடகலை. மன்னுங்கலை - பன்னிரண்டங்குலமாய்ப் பொருந் தும் பிராண கலை. நால் ஒழிய - 12 அங்குலத்தில் 4 அங்குலம் ஒழிய. ஈராறு - இரண்டும் ஆறும்; எட்டு. 625

நஞ்சனம் - உறவினர். வாயா - கிட்டா. தூரம் - பொறுத்தல். நீண் முடிவு ஈராறு - யோகாப்பி யாச காலம் 12 வருடங்கள். 626

ஏழானதில் - ஏழு ஆண்டில். எட் டில் - எட்டு ஆண்டில். ஒன்பதில் - ஒன்பது ஆண்டில். 627

அணு - அணிமா (1). சகம் - மகி மா (2). நோன்மை - கரிமா (3). ககனம் - லகிமா (4). பரகாயத் தேகம் - பிராப்தி (5). தானுவது - பிராகாமியம் (6). ஆனாத உண்மை- ஈசத்துவம் (7). வியாப்பியம் - வசித்துவம் (8). இவை அட்ட சித்திகளாகும். 629

காலம் - விநாடி. 60 விநாடி - ஒரு நாழிகை. 360 காலம் - 360 விநாடி; ஆறு நாழிகை. (ஒரு பகலுக்கு 30 நாழிகை, அதனை 5 பங்கு ஆக்க. ஒவ்வொரு பங்கை

யும் முறையே வான் முதலாகக் கொள்க. வான் - வளி, தீ, நீர், நிலம். 'வான் முதலாயிட' என்றார். இது தோற்ற முறை. நிலம் முதலாகக் கொள்ளின் ஒடுக்க முறை என்க. இதனை "மண் முதற் றேர்ந்தறிவார்" என்றார். இவ்வாறே இர்வையும் 5 பங்கு ஆக்கிக்கொள்க. 631

திரிந்து - புலன் வழியினின்றும் திரிந்து. முத்தம் - முத்தி. சித்தம்பரம் - சிதம்பரம், சிதாகாயம். 632

ஒன்பது வாயு - தனஞ்சயன் ஒழிந்த ஒன்பது வாயு. 633

கால் - வாயு. இருநூற்றிருபத்து நான்கு - புவனங்களின் தொகை. 634

தூடி - துடி ; எட்டு விநாடி. 637

ஒன்பது ... இடம் - நாற்சந்தி. 638

ஒரு பொருள் - குண்டலினி. பகைவர் - ஐந்து இந்திரியங்கள். 641

ஒன்பது கன்னியர் - ஒன்பது சத்திகள். தளம் - ஆதாரம். 642

மாடில் - பெருமையினையுடைய. 647

அணுவில் அணுவின் நேர்மை - அணுவுக்கணுவாதல். பெருமையின் நேர்மை - பெரிதில் பெரிதாதல். வேகார் - வேகாத. 648

கிட்டா - அடக்கமுடியாத. 649

பரக்காட்சி - பரசிவதரிசனம். 651

கந்து - அடித்த முளை. குழி...ர்க்கு - அமுத ஊற்றினுலே குற்றம் அற்று இருக்க வல்லார்க்கு. 652

முடிந்திட்டு வைத்து - அமுதத்தைப் பானுவில் விடாமல் அடக்கி வைத்து. 653

போகின்ற தத்துவம் - மூலாதாரத்தினின்றும் தான் போகும் தத்துவங்கள். புகலதாய் - அச் சத்தியே ஆதாரமாக. 654

மாலகு - லகிமா. 655

தன் வழியாக - தன் வசமாக. 658

கூட இருந்திடில் - பூத தாரணையோடு கூட இருந்தால். 659

பூவின் பரப்பு - சக்கிர அறைகள். 660

அறிந்த பராசத்தி - யோகத்தாற் கண்ட சிற்சத்தி. குறிந்தவை - குறித்தவை. 662

விளக்கு ஒளி-எப்பொருளையும் விளக்கும் பரசிவ ஒளி. 663

மூல விளக்கொளி - சீவனுடைய இயற்கை ஒளி. கான விளக்கொளி - ஆஞ்ஞையிலுள்ள ஒளி. பண்மையதாக - தகுதியாக. 667

கைப்...எல்லாம் - காணப்படும் உயிர் வருக்கங்களுக்கு எல்லாம். 668

தழைத்த பகல் - சிறப்புற்ற அந்நாள். 669

தாயகம் - சொந்த இடம். போயகமான - அகலமான. பேயகம் - பேசகம் ; புகழ்ந்து பேசும் இடம். 672

பெரிய அவ் எடு - பெரிய இதழுள்ள தாமரை. தார் ஒளி - நேர்மையான ஒளி. கால் ஒளி - பிராணவாயுவின் ஒளி. 673

காலது 513 - பிராணவாயு வியாபிக்கும் நாடிகளின் தொகை. பெண் - சத்தி. மண்டிக்கொண்ட - அடக்கிக்கொண்ட. 674

ஆறதுவாகும் அமிர்தத் தலையினுள் - அமுத ஆறு பெருகும் தலையினுள். ஆறது...அருவழி - அமுதம் பெருகும் வழிகள் 1305. வளர்ப்பதிரண்டே - விருத்தியாக்குவது சத்தியும் சிவமும். 675

சந்திரன் சூரியன் - சந்திர கலை - சூரிய கலை. தாணுவின் சந்திரன் - பரம ஆகாயத்திலுள்ள பரமசிவத்துக்குரிய சந்திரன். சந்தியிலே கண்டு - சந்திக்கும்போது தரிசித்து. 684

அணங்கற்றமாதல் - ஆசை ஒழிதல். சிணுங்குற்ற வாயர் - சித்தர். 685

சிறை - சரீரம். இரணம் சேர் பூமி - செல்வம் பொருந்திய நாடு. அரணன் - பரமசிவன். மூவேழாங் கரன் - சூரியன்; சிவன். 686
மதியமும் ஞாயிறும் - இடகலை பிங்கலை. 690
கட்டவல்லார்கள் - பிராணவாயுவைக் கட்டவல்லவர்கள். மட்...குத்தி - சகசிர அறைக்குளே பிரமரந்திர வழி திறக்கும்படி மோதி. பொறி எழ - பொறிகள் விடயங்களில் செல்லாமல். நட்டிடுவார் - நின்றிடுவார். 691
காதல் வழி - அன்பு நெறி. சங்கை வழிதரும் - அமுதம் பெருகும். 692
கலை பதினாறு - அமுத கலை 16. 693
கலை...கலப்பை - அமுத கலையினிடத்துச் சிவம் சத்தி நின்ற கலப்பை. மலைவு - மயக்கம். 694
இருக்கின்ற காலம் - இனி வாழுங் காலம். 696
போதகமாக - சகசிர அறையில். 697
ஓசையில் 7 - சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், சரித்தல், சேர்த்தல். ஒளியில் 5 - இரசம், உருவம், கந்தம், வெம்மை, தகித்தல். நாசியில் 3 - கந்தம், இடைகலை, பிங்கலை. தேசி - பிராணவாயு. தேனு - சந்தி. 703
சுழற்றிக் கொடுக்க - பூரித்து இரேசிக்க. அஞ்சனம் - மறைபொருளாகிய சிவத்தைக் காட்டும் மை. 706
ஐ - கபம். நஞ்சு அற - விஷம் நீங்க. 707
மூன்று மடக்கு - இரேசகம், பூரகம், கும்பகம். பாம்பிரண்டெட்டு - உகார அகர வடிவான. உச்சுவாசம் - நிச்சுவாசம். இயந்திரம் - பிராணவாயு. முட்டை யிரண்டு - இடகலை பிங்கலை. 708
சத்தியார் கோவில் - தேகம். உறப்பற - அழுத்தமின்றி. 710
அண்டம் - பீஜம். பிண்டம் - தேகம். 715
பிழக்கடை - குதம், குய்யம் இரண்டிற்கும் இடையிலுள்ள வாயில். அண்டத்துள் உற்று - அண்டத்து உள்ளிருந்து வெளிப்படும் வெள்ளியை வீணுத்தண்டுள் விட்டு. 716
நான் கண்ட வன்னி - சிவன். நாலு கலை - ஓமரூபி, அநந்தை, நாதை, அநாதை. வழு - வாயு வழு; பஞ்சப் பிராணனோடு இடகலை பிங்கலை. மான்கன்று - சீவன். 718
சனவேதசத்தி - திரோதாயி. நெல்...மையை - ஒரு நெல்லினின்றும் பல நெல் உற்பத்தியாதல் ஒப்ப. ஊழ்கொண்ட மந்திரம் - அஜபா மந்திரம். 719
மதிவட்டம் - சகசிர அறை. வரை - புருவமத்தி. பதிவட்டம் - சிவம் இருக்கும் இடம். மது - அமுதம். 720
ஐந்தும் உணர்ந்தறிவார் - புலன் வழிச் செல்லாதார். 721
அழிகின்ற ஆண்டு - கண்டங்கள். ஐயஞ்சு மூன்று - 28-வது வயது ஒரு கண்டம். முப்பத்துமூன்று - 33-வது வயது ஒரு கண்டம். அறுபத்திரண்டு - 62-வது வயது ஒரு கண்டம். ஈரைம்பது-100வது வயது ஒரு கண்டம். 722
நாள் - மீன்; நட்சத்திரம். 723
இருபத்தைந்து - ஆன்ம தத்துவம் 24 ம் சீவனும். ஈராறு - பன்னிரண்டங்குல சுவாசம். அட்டு - விலக்கி. நாலே - நால்விரல் அளவுள்ள சுவாசம். 724
நாலும் - கரணங்கள் நாலும். நால்வரும் - பிரமனாதி நால்வரும். நாலஞ்சு-நவவடிவங்களும். பத்தி பதினைந்து - வளர்பிறை, தேய்

பிறை நாட்கள் 15. ஆலங்கடந்த தொன்று - சிவன். 725

இறை - கொஞ்சம். மறை-மறைந்த. பறை அறையாது - வெளிப்படுத்தாது. 728

முடிந்தது - மறைத்து வைத்தது. இடிஞ்சில் - அகல், ஈண்டுத்தேகம். இருக்க - அழியாது இருக்க. விளக்கெரி - மூலாக்கினி. கதுவல் - (கது - வெடிப்பு) வீணைத்தண்டின் கடைவாசலைத் திறத்தல். நடந்திடும் பார் - அழியும் உலகம். நண்ணல் - நிலைபெறுதல். 729

சிறு...மூன்று முக்கட்டு - பிரம, விண்டு, உருத்திரக் கட்டுகள் அல்லது கிரந்திகள் அல்லது சுவாதிட்டானம், மணிபூரகம், அநுகதம். சென்னியின் மூன்று - சந்திரன், சூரியன், அக்கினி. உள்ளி...ஓவியம் - உன்மனே. 730

பூவில்...தண்டே - சகசிர அறையிலிருந்து வெளிப்பட்டுள்ள வீணைத் தண்டு. 731

தலைப்பு எய்த யோகி - சகசிர அறையை அடைந்த யோகி. மண்டலம் மூன்று - சந்திரன், சூரியன், அக்கினி. வினைப்பயன் - ஊழ், வல்வினை. பிண்டம்-தேகம். 732

குழல்வழி - வீணைத்தண்டின் மேலைத் துவாரம் அதாவது பிரமரந்திரம். 734

ஒன்றில் - சுழுமுனை நாடி ஒன்றில். மூன்றுக்கு - மூன்று நாடிகளுக்கு. நாள் - வாழ்நாள். 736

பத்தினில் - பத்து அக்கரங்கள் கூடும் அநுகதத்தில். பதுமர் - சிவபெருமான். நூறு தலைப்பெய்தலாம் - நூறு வயது இருக்கலாம். 737

காத்து...காண்பர் - பல ஆயிர ஆண்டுகள் காண்பர். மூத்து - அறிவில் முதிர்ந்து. 738

சிவங்கோடி - சிவமே முடிந்த இடமாக. 739

செயல் உறுவார் - கன்மங்களைச் செய்வார். 740

கழிகின்ற...பொருள் - சீவன். கழியாத...பொருள் - சிவன். 742

கண்ணன் - முக்கண்ணன், சிவன். 743

நரபதி - மனிதர்களுக்குள் சிறந்தவர். 744

ஓசை - நாதம். வட்டம் - பிரணவம். 747

வட்டங்கள் ஏழு - ஆதாரங்கள் ஆறும் சகசிர அறையாகிய மதிமண்டலமும் ஆக ஏழு. கட்டி - கருப்புக் கட்டி போன்ற சிவம். 748

அத்தம் - கை. 750

ஓசை இறந்தவர் - மனம் அடங்கப் பெற்றவர். 751

இடம் வலம் சாதிப்பார் - பிராணாயாமத்தைச் சரியாய்ச் செய்து முடிப்பவர். 753

நடுவுநில்லாமல் - சுழுமுனையில் நில்லாமல், அந்தணன் - சிவபெருமான். பணி - குண்டலி சத்தி. தீபம் - பிராணன் சென்று அடங்கும் சோதி. 775

பதினாறு - பதினாறு மாத்திரை. (பூரக இலக்கம்) 776

கட்ட - விந்துவைக் கட்ட. கழ... ...விழாமல் - வெளிப்படாமல். அட்ட...கோலி - வீணைத் தண்டின் கடைவாயிலைத் திறந்து. விட்டம் - வீணைத்தண்டு. மேற்பை - சகசிர அறை. நட்டம் இருக்க - நாடி இருக்க. 779

வண்ணான் - பிராணன். சதுரப் பலகை - நாற்சந்தி. மேற் கண்ணாறு - அமுதம் வரும் மேலைத் துவாரம். மோழைபடாமல் - வீண் போகாமல். குளம் - கபாலக்குகை, மனம். 780

இடக்கை, வலக்கை - இடகலை, பிங்கலை. துதிக்கை - சுழுமுனை. 781
வாய்ந்து - சித்திபெற்று. மீந்து - மிகுதியாக. பாலிக்குமாறு - காப்பாற்றுமாறு. 782
ஊன்ஊறல் - சுக்கிலம். வான்ஊறல்- அமுதம். தேன் ஊறல் - அமுதத்தின் சுவை. 784
அணு - அண்ணுக்கு. 785
பந்தி...பகலோன் - அமுதம் பெருகாதபடி அதனைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும் சூரியகலை அல்லது பிங்கலை. 786
தீவினையாட - தீய கருமங்களாலே. நாவினை நாடில் - நாவின் நுனியை அண்ணுக்கில் செலுத்தில். (இது தான் கேசரி யோகம்). பாவினைப் பாடி - மறைப்பாட்டுக்களைப்பாடி. தேவினை - நன்மை தரும் கருமங்களாலே. 787
கோங்கு அரும்பு - பாம்பின் தலை, குண்டலி. 788
ஊனீர் - அமுதம். கான் - மேல்வீடு. கங்கை - இடகலை. 789
காய்ந்து - அஞ்ஞானத்தை எரித்து. படிக்கதவு-கேசரி முத்திரையாகத் தடை. கூய்ந்து - நிர்மலமாகி.790
தீவினையாளர் - சிவாக்கினி வளர்த்துப் பூசனை புரிபவர். பூவினையாளர் - பூவால் பூசனை புரிபவர். பாவினையாளர் - தோத்திரப் பாக்களால் பூசனை புரிபவர். மாவினையாளர் - யோக முயற்சியுடையவர். 792
மதி...பதினாறாய் - சந்திரகலை பதினாறு போல 16 இதழ்களுள் விசுத்தி. நூறு நூற்றிருபத்து நாலாய் - மூலாதாரம் முதல் அனுகதம் வரை ஒளிபரப்பும் கிரணங்கள் 224. 793
அந்நடு - விசுத்தியின் நடு. மானேர் முக நிலவாா - மான் நேர் முகம் நிலவு ஆர என்று பிரிக்க. 794
பொழிந்து அவிரும் வெள்ளி - சத்தியால் சொரியப்படும் அமுதம். பொன்மண் - பூதலம்; மூலாதாரம். வான்முதல் - ஆகாயம் முதலிய பூதங்கள். 795
மணமதுவாக - ஈசனுடன் கூடி. 796
பரிந்த - பரித்த சரீரத்தைத் தாங்கி நிற்பதாகிய. தண்டு - வீணாத் தண்டு. அண்டம் பரிய - ஆகாயம் செல்ல. பூ - சகசிர அறை. மண்டலம் - மதிமண்டலம். 797
மண்டலத்துள்ளே - மண் தலத்துளே; உலகிலே. ஒட்டியாணம் - மூலத்துவாரத்தை முக்காரமிட்டிருத்தல். பண்டகம் - மேல் வீடு; சகசிர அறை. 798
ஒழிகின்ற-வீணாய்ப் போகின்ற. கழிகின்ற வாயு - வராமல் இருக்கின்ற 4 விரல் அளவுள்ள சுவாசம். வட்டக்கழல் - பிரமரந்திரம். பை - குண்டலியின் தலை. 799
பை - சரீரம். படிக் கதவு - கேசரி யோகம். 800
மாகம் - ஆகாயம். அஞ்சு - பூதங்கள் அஞ்சும். தூரதரிசனம் - பரம்பொருள் தரிசனம். 802
கடைஞானம் - முடிந்த ஞானம். 803
காயக்குழலி - மனதை வெதுப்புகின்ற அப்பெண் (காய் அக்குழலி) ஊசித்துளை-ஊசிக் காது போன்ற துளை. 805
வெள்ளி - விந்து. வியாழம் - நாதம். சூது - சூதாட்டத்தில் உபயோகப்படும் கருவி. சூதன் - ஆடவன். விந்துவை இரசம் என்றும் நாதத்தைக் கந்தகம் என்றும் கூறுவது சித்தர்களுடைய பரிபாஷை. 806
கண்டனும் கண்டியும் - கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்த ஆடவனும் மாதும். வண்டி - இடகலை, பிங்கலை. வானீர் - அமுதம். தண்டு - தேகம். 807

அங்கப்புணர்ச்சி - பரி அங்கி யோகம். பங்கப்படாமல் - நாத விந்துக்கள் கெடாமல். 808
தன்வழி அஞ்சு - ஐம்புலன்களும் தன் வசமே. 809
ஏய்ந்த...முப்பதும் - பரியங்கி யோகம் பயில் பெண்களுக்கு 20 வயதும் ஆடவர்க்கு முப்பது வயதும் ஆம். வெள்ளி - விந்து; சுக்கிலம். 813
வெள்ளி - விந்து. பொன் - நாதம். கள்ளத் தட்டான் - யோகிபோல் நடிப்பவன். கரி - சாட்சியான மனம். குழல் - இலிங்கம்; ஆண்குறி. 814
பதினெண் கணம் - உலகிலுள்ள 18 வகைத்தொழிலாளர், கூட்டங்கட்கும். 815
வெங்கதிர் - சூரிய மண்டல அதிபதியாகிய சதாசிவம். சனி - அதோமுக மண்டலமாகிய சனி. நங்கைமன உன்மனி. வெள்ளி - திங்கள்; விந்து. பொன் - செவ்வாய்; நாதம். 816
புதன் - அறிவு. வெள்ளி - சந்திர ஒளி. 817
உழுகின்றது - அழிக்கின்றது. 818
உளி - மனம். மூறி - அடிமை. மேல் - முன்னமேயே. 819
நாலாநிலம் - துரியம். 820
பொன்னிடை வட்டம் - பொன் போலும் ஒளியுள்ள சகசிர அறை. 821
வாங்கல் - பூரித்தல்; இறுதல் - இரேசகம். வீங்கல் - கும்பித்தல். உதம் பண்ணல் - உய்யும் வழி அறிதல். 822
கதம் - மார்க்கம். பதம் - பக்குவம். பார் - ஆதாரங்கள். 823
பங்கயம் - சகசிர அறை. தார் - அரும்பு. கேள்வி - ஞானம். 824
கடலிற் சிறுகிணறு - கடலுக்கருகிலுள்ள நன்னீர்க் கிணறு. உடலில் ஒருவழி - பிரமரந்திரம். நடலை - கலக்கம். 825
சிவநீர் - அமுரி, அமுதநீர். வளியுறு எட்டின் - எட்டின் குறியாகிய அகர உருவாகியவர் கலந்துள்ள (சீவப்) பிராணவாயு. 826
கப்பு - சேர். 827
உவரிக்கரையருகே நின்ற கானல் - உப்பு நீர்ப்பை யருகே உள்ள விந்து. வரை வரை - ஒழி ஒழி; கழி கழி. 828
களவு - களவு, கற்பு என்னும் இரு முறைகளில் ஒன்று. மிளகு... வேம்பு - இந்நான்கும் அரைத்து, பாலுடன் கலந்து, தலைக்குத் தேய்த்து முழுகுவது கற்பமுறை. 829
சந்திரன் ஈரெட்டு - சந்திரகலை 16. சூரியன் ஆறிரண்டு - சூரியகலை 12. அங்கி எட்டெட்டு - அக்கினி கலை 64. இடைவழி - இடகலை. 832
ஆறு ஆறு அதாம் கலை - 12 கலை அளவாகிய. 833
வங்கிய - கூட்டமான. 838
தாரகைபூவில் சகலத்தியோனிகள் - தாரகைகளே உலகில் சகல உற்பத்திக்குங் காரணம். 840
முன்பதினஞ்சு - வளர்பிறை. பின் பதினஞ்சு - தேய்பிறை. 841
ஊட்டத்து - கொடுப்பதிலே. 842
பருதி - பிங்கலை. மதி - இடகலை. ஆணி - சீவன். 846
ஆலிக்கும் - ஒலிக்கும். ஒன்பதில் - ஒன்பது துவாரங்களையுடைய தேகத்தில். காலைக்குச் சங்கு கதிரவன் - சூரியன் சங்கின் நிறமுள்ள சந்திரன் போன்று தோன்றுவன். 847
பொதிர் - ஒளித்தல். மழை - அமுதம். 848
ஆதியும் அந்தமும் - சுவாசம் உதித்தலும் ஒடுங்குதலும். 850

பாம்பு - குண்டலினி. மதி - அமுதம். தீங்கு கதிரை - தீங்கு செய்கின்ற சூரியன். 851
அயின்றது - பாம்பினால் விழுங்கப்பட்ட மதி. 852
ஊழி தரியாது - விதியை அடையாமல். 854
மண்மதி - உலகத்தாரால் மதிக்கப்பட்ட. 855
உயிர்த் தேய்மதி - சீவனுக்கு அபரபக்கம். விந்து...போலிது - சாதாரணமாகச் செல்லும்வழியில் செல்வது விந்து. காமுறவு - ஆசையுறுதல். மூலத்தில் கட்டுண்ணும் - மூலாதாரத்தில் உள்ள வீணைத்தண்டின் ஊடே செல்லும். 857
சோணி - சோணிதம்; நாதம். இனன் - சூரியன். உவை - அவை இரண்டும். 859
மனபவனம் - மனமும் பிராணனும். கடா - முரட்டுத்தனம். வீடுபடாதன - நீங்காத. 860
தற்சுடர் ஐந்து - சிவம், சத்தி, நாதம், விந்து, சீவன். சமைய - பொருந்த. 861
தீரா நலக்கண் - ஞானக்கண். 862
மாறும் - மாறுபட்டிருக்கின்ற. தாறுபடாமல் - பிரிவில்லாதபடி. தண்டோடு - வீணைத்தண்டூடே. ஊறுபடாது - கெடாது. பாறுபடா - அழிவில்லாத. 863
அறை + ஓர் - சக்கரமும் பிரணவமும். அறை - வீடு. ஓரெழுத்து - அஜபா மந்திரம். 864
ஓர் எழுத்து - ஒ என்னும் எழுத்து. ஈர் எழுத்து - அ + உ. இருவராய் - சீவன் + சிவன் or சத்தி + சிவன். மூவெழுத்து - அ + உ + ம். மா எழுத்து - ம் or மாயை. 865
தென் - அழகு, பெருமை. 866
பொன்னம்பலம் - பொன்னம்பலத் தாண்டவம். அற்புதம் - அற்புதத் தாண்டவம். ஆனந்தம் - ஆனந்தத் தாண்டவம். அனவரதம் - அனவரதத் தாண்டவம். பிரளயம் அல்லது சங்காரம் - பிரளயத் தாண்டவம்; எனத் தாண்டவங்கள் 5. 867
தாண்டவமான தனி எழுத்து ஓர் எழுத்து - ஐந்தெழுத்து நடனம். தொழில் - அது தொழில் நடனம். ஆக்கல் - அளித்தல் - அழித்தல் - மறைத்தல் - அருளல். தற்பரம் - தற்பரக்கூத்து. தமனியம் - பொன். 868
தத்துவம் - மெய்ப்பொருள். அகர உகாரமதாய் - அக்கர உருவமாய். தராதலம் - பூமி ஆதாரம் என்பது. 869
ஆனந்தம் மூன்று - அ. உ. ம். அறிவு இரண்டு - சத்தி - சிவம். ஒன்றாகும் ஆனந்தம் சிவாய - சத்தி - சிவம் - ஆன்மா. 872
இரண்டும் - அம்ச மந்திரங்கள் இரண்டும். படுவது - சொல்லப்படுவது. 873
சதாசிவம் மாறிலா ஆகமம் - சதாசிவ நாயனார் வெளியிட்ட மாறுபாடில்லாத ஆகமங்கள். அமலம் - சிவம்; நின்மல சிவம். 874
தனமலை - பெரும் செல்வம். தலைவன் - பதி. 876
சற்பாத்திரம் - சத்து. 877
எட்டு எழுத்து - அ. 878
ரீம் - மாயையின் பீஜ மந்திரம். 881
நடம் இரண்டு - அற்புதம் ஆனந்தம். நளினம் - இன்பம். நடம் இரண்டு நமன் செயும் - பிரளயம் - சங்காரம் நமன் செயும் கூத்து. நடம் இரண்டு - பொது, அனவரதம். நகை செயும் - சீவத்துவம் ஒழித்துச் சிவத்துவத்தை விளங்கச் செயும். செம்பு பொன்னே - செம்பைப் பொன்னாக்குதல் போன்றது. 882
சிரீயும் கிரீயும் - சத்தி பீஜ மந்திரங்கள். 883

ஈராறு - குறுக்கு ஆறுவரை நெடுக்கு ஆறுவரை கீற; திருவம்பலச் சக்கரம். இருபத்தஞ்சாக்கி - இருபத்தைந்து அறைகளாக்கி. திருவம்பலமாகச் செபிக்கின்றவாறு - பஞ்சாக்கரங்களை மாறியிட்டுச் சிற்றம்பலச் சக்கரமாகக்கொண்டு செபிக்கின்ற விதம். 884

இருசுகம் - உதடு. புகை - சுவாசம். 886

திருமேனியாயிடும் - சிவசாருபம் கிட்டும். 887

ஒரு கூட்டில் புக்கு - இன்னொரு சரீரத்தில் புகுந்து. சுடர்ப்பாம்பு - குண்டலி. 888

சூக்குமமான வழி - பிரமரந்திரம். 889

ஆனந்தம்...ஆமே - ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்ற 5 எழுத்துக்களும், அம், ஹ்ரீம், அம், க்ஷம், ஆம் என்ற 5 பீஜ அக்கரங்களும் சிதம்பரச் சக்கரத்திற்கு உரியவை. 890

ஒன்று இரண்டு - பிருதிவி, அப்பு பூதங்கள். ஒன்றினில் மூன்று - அக்கினி பூத வேறுபாடாகிய சூரியன், சந்திரன், அக்கினி. ஏழும் - ஏழு உலகங்கள். ஒன்பது - ஒன்பது சிவவடிவங்கள் இவைகளெல்லாம் ஆட ஆடுவது மாணிக்கக் கூத்து. 893

வட்டங்கள் - 25 அறைகள். ரேகை - வரை. ஈராறு பத்தொன்று - 12ம் 11-ம். 894

தன்னெழுத்து - சி. நான்கு - சிகரம் ஒழிந்த நாலு. 895

எட்டுநிலை - நடுவீட்டைச் சூழ இருக்கும் எட்டுவீடு. ஒட்டினில் - இந்த அமைப்பில். ஒன்று - பிரணவம். 897

விட்ட எழுத்து - வா. விடாத எழுத்து - சி. 898

அகாரம் - அகர உருவனாகிய சிவன். 900

மகாரம் - நாதம். சத்தி - சத்திபீஜம். ஒகாரம் வளைத்திட்டு - ஒ எழுதி. உம் பிளந்து - உம் என்பதை நீக்கி. அகரம் தலையால் - அகரம் சிரசாக. இருகண் சிகாரமாய் - சிகரம் கண்களாய். நகாரம் வகாரம்-நகரம், வகரம் கால்களாய். இது சிதம்பரச் சக்கர நடுவில் ஈசனை மனித உருவமாகக் காணும்முறை கூறியது. 901

பிரணவநடு இருபக்கமும் - பிரணவ நடுவில் இருபக்கத்திலும். அவர் - அந்த சத்தி சிவங்களின். ஆடும் வாய் - பேசும் வாய். நடுவுள் - நடு வட்டத்தில். முகம் நமசிவாய - நமசிவாய என்பது முகமாக. புறவட்டம் - மேல் வட்டம். 902

சிகாரந்...விலே - சிகரம் முதலாக இட்டுக் கடைசிவரையில் மாறும் முறை கூறியது. 903

ஐம்பது - க்ஷகரம் நீங்கிய 50 எழுத்துக்கள். ஐயைந்தறையில் அடையும் - அறை ஒன்றுக்கு இரண்டு அக்கரங்களாக 50 அக்கரங்கள். மகாரத்தில் அந்தமாம் க்ஷவ்வும் அடையும் - க்ஷகாரத்தைப் பிரணவ வட்டத்து அமைந்த மகாரத்தோடும் சேர்த்திடுக. 904

புறவட்டம் - வெளிவட்டம்; இதற்கு அரகர என்றும், அதனுள் வட்டம் - புறவட்டத்தை அடுத்துள்ள வட்டம்; அதற்கு அரிகரி என்றும் ஆம். அதனுள் வட்டம் - அவ்வுள் வட்டத்தை அடுத்துள்ள வட்டம்; அதற்கு அசபா மந்திரம். ரேகையும் - வரைகளின் முனைகளில். சூலமே - சூலம்போன்ற குறிகள் கீறுக. 905

சூலத்தலை - சூலத்தின் முனை. சத்தி- சத்திபீஜம். சூலத்...வாமே-சூலத்தைச் சூழ ஒங்காரம் இட்டு அமைத்துச் சூல இரேகைகளுக்கு

இடையிலே பஞ்சாக்கரங்களை அமைக்க என்றது. 906
அதுவாம் - அப் பஞ்சாக்கரமாவன அ, இ, உ, எ, ஒ. 907
அவளக்கரம் - சத்தி பீஜம். பிரா ணக்கரம் - சிவ பீஜம். 911
அவ்விட்டு - அகாரத்தை எழுதி. அர விட்டு - அதன்மேல் அர என்பது எழுதி. இவ்விட்டு - அதன்மேல் இ எழுதிப் பார்க்கில் சிவலிங்க மாம். தொம் - தகர ஒகரம். 912
சவ்வுண்ட சத்தி - ச என்னும் பீஜ மந்திரத்துள்ள சத்தி. 913
கூத்தன் எழுத்து - பஞ்சாக்கரம். முதலெழுத்து - சி. 915
அவ்வெழுத்து - ஓங்காரம். 916
தையல் - குண்டலினி. மகாரம் - நாதம். கல்லொளி - மாணிக்கச் சோதி. 917
கல் - பளிக்கட்டி, (கல் மழை என்னும் வழக்கில் காண்க) வட திசை - கயிலாயம். கல் - வயிரக் கல்; இந்திரன் - இந்திரியத்தை அவித்தவன்; பொறி வாயிலைந்தவித்தவன்; சிவன். கல் - வயிரம். கல் - நிலையான. 918
தானே எழு குணம் - நாதம். 919
மறையவன் அஞ்செழுத்தாம் - தமிழ் நான்மறைகள் எல்லாம் அஞ்செழுத்தின் பெருமையை விளக்குவதாம். 920
பாதமும் நவ்வாய் - நகரம் திருவடி. நாபியுளங்கே மகாரமாய் - மகரம் நாபிக்கமலம். சி இருதோள் - சிகரம் இருதோள்கள். வவ் வாய் - வகரம் வாய். அச்சுடர் யவ்வியல்பு - யகரம் சுடர் அல்லது புருவமத்தி. 921
இரு மூன்று எழுத்து - பிரணவமும் ஐந்தெழுத்துக்களும். ஒவ்வியல்பு - பிரணவத்தின் இயல்பு. பவ்வியல்பு - பர இயல்பு; செய்யுள் வடிவமான தமிழ் நான்மறைகளின் இயல்பு. 922
பரந்தது மந்திரம் - மந்திரங்கள் இவ்வாறு பரவின. சூழ்பகை - பிறப்புக்காரணமான இன்ப துன்பங்கள். 923
நடு எழு தீபம் - சிகரம். 924
அஞ்செழுத்துள் நடு - யகரம். இவ்வெழுத்தை முதலாக வைத்து மாறி உச்சரிக்கும் முறை இப்பாட்டில் கூறப்படுகிறது. 926
நின்ற...தானே - அவ்வாறு நின்ற ஐந்தெழுத்துக்களே 5 பூதங்களும் 5 வண்ணங்களும் ஆகப் பொருந்தி நின்றுன். 927
நின்றது...ஞமே - இத் திருவம்பலச் சக்கரத்தைப் பூசித்து நந்தி தேவர் கயிலையில் காவற்றலைமை எய்தினார் என்பது. 928
குறியைந்து - மூலாதாரத்தைத் தவிர்த்து ஆதாரச் சக்கரங்கள் ஐந்து. எழுத்தைந்து - அச் சக்கரங்களின் நடுவில் விளங்கும் எழுத்துக்கள் ஐந்து. 929
இரேகை - திருவம்பலச் சக்கரத்தின் கீற்றுகள். சுளியில் - வட்டம்; வளைவு. 930
அகரம்...ஆறும் - பிரணவத்தோடு கூடிய ஐந்தெழுத்து; சடாக்கரம். வளி...செய்ய - சிகரத்துடன் தொடங்கிக் காற்றைப் பிடிக்கும் கணக்கறிந்து சிவன் சிந்தனை செய்ய. 931
அற்றவிடம் - புருவத் திடைவெளி. 932
பிரணவத்தின் - உச்சரிப்பைக் குறிக்கின்றது இப் பாடல். 933
நீரில் எழுத்து - நிலையற்றது. உலகார் அறிவது - உலகத்தில் பெரும்பாலோர் உச்சரிப்பது. வானில் எழுத்து - ஆகாய தத்துவத்தினிடத்து முதல் முதல் தோன்றிய பிரணவம். யாரிவ் வெழுத்தை

யறிவார் - ஒருவரும் அறியாதவர். அவர்கள் - அப்படி அறிய மாட்டாதார். ஊனில் எழுத்து - ஊன் அகத்துள்ள நெஞ்சத்தினிடம் பொறிக்கப்பட்ட எழுத்துக்கள். 934

காலை நடுவறக் காயத்தில் - உடம்பில் இருகாலின் இடுக்கின் நடுவு தொட்டு உள்ள மூலாதாரம் தொடங்கி ஆறு ஆதாரங்களில். அக்கரமாலை...ஆவன - ஐம்பத்தோரக்கரங்களும் மாலை போன்று உளளன. மேலும்...மூலம் - அம்மாலையில் பதக்கங்கள் போன்று உள்ள ஆதாரத்தானங்களின் நடுவில் இருக்கும், வேதத்தில் சொல்லப்பட்ட ஐந்தெழுத்து. 935

நாவி...ஒன்று - பிரணவம். 936

அவ்......மந்திரம் - அசபா மந்திரம். 937

உந்தி......நிற்கும் - மனத்தை மணிபூரகத்தில் நாட்டி, கும்பகத்தில் இருந்து மந்திரங்களை விதிப்படி உச்சரித்தால் மந்திரங்கள் பலனைக் கொடுக்கும். சந்தி செய்யா நிற்பர் - இம்மாதிரி உச்சரிக்க அறிகிலாதார். ஆர்த்து - ஆர்ப்பாட்டம் செய்து. 938

பூவுக்குள் - ஆறு ஆதாரங்களாகிய பூவிற்குள். ஆவிக்கு - உயிருக்கு. அங்குசம் - ஐம்பொறிகளாகிய மதயானைகளை அடக்க அங்குசமாகும். 939

அம்பரம் - ஆகாயம். விந்து - உகாரம். விந்து மருவிய அகாரம் - பிரணவம். சிகார நடுவாய் - நமசிவாய என்னும் தூல பஞ்சாக்கரம். 940

ஆறெழுத்து - பிரணவத்தோடுங் கூடிய தூல பஞ்சாக்கரம். ஆறெழுத்தொன்றாக - தூலத்தைச் சூக்குமத்திலும், சூக்குமத்தைக் காரணத்திலும், காரணத்தை மகா காரணத்திலும், மகா காரணத்தை முத்தி பஞ்சாக்கரத்திலும் ஒடுக்கி ஏகமாகும்படி. வேறு எழுத்து - வைகரி வடிவாய் விகாரப்பட்ட எழுத்துக்கள். 941

ஓது...மூவஞ்சு - உயிர் 16. (திருமூலர் காலத்தில் தமிழ் மொழியில் உயிர் 16 உண்டு என்பது இதனால் அறிகின்றோம்). ஆதி...என்பர் - மெய்யெழுத்துக்கள் 35-ம் சேர்ந்து (16+35) 51 எழுத்துக்கள் என்று புலவர் கூறுவர் (செந்தமிழ்க்காலத்துக்கு முந்திய தமிழ் மொழி நிலை இது).சோதி எழுத்து, நாத எழுத்து - சி. 942

விந்து......திட - 51 எழுத்துக்களும் விந்துவினின்றும் உற்பத்தி...... எழுத்துக்கள் எல்லாம் சத்தி உருவமாகும். 943

ஐம்...தாமே - 51 எழுத்துக்களாலேயே எல்லா வேதங்களும் ஆகமங்களும் 51 எழுத்துக்களும் அஞ்செழுத்தில் அடங்கின. 944

அஞ்செ...றனே - அஞ்செழுத்துக்களே உலக உயிர்களாய் விரிந்தன. 945

வீழ்...யோனே - அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்கும் ஒருவன் பந்தத்தினின்றும் விடுபடலாம். சிவனும் வெளிப்படுவான். 946

மருந்து - அமிழ்தம். 947

ஐந்தின் - அஞ்செழுத்தின். 948

வேர் எழுத்து - மூல எழுத்தாகிய பிரணவம் (ஆணிவேர் ஆகிய எழுத்து எழுத்தாணி என்றுங் கூறுப. விண் எழுத்து - வ. நீர் எழுத்து - ம. நிலந்தாங்கி எழுத்து - ந. அங்கி எழுத்து - சி. உயிராம் எழுத்து - ய. ஓர் எழுத்து - சி 949

நாலாம் எழுத்து - வ. 950

இட்டம் - தியான உறைப்பு. 951

முப்பத்தாறு - 36 தத்துவங்கள். 952

வளியுடன் - சிவான்மாவுடன். 953

அஞ்சுள ஆனை - ஐம்புலன்கள். அடவி - தத்துவக் கூட்டத்தாலாய தேகம். அஞ்சையும் கூடத் தடுக்க வல்லார்கட்கு - காற்றைப் பிடிக்கும் கணக்கு அறிவார்கட்கு. அஞ்சாதி யாதி அகம் - அஞ்செழுத் ததிபனாகிய சிவன் இருப்பிடம். 954

ஐந்து கலை - நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதம். அகராதி - கலைகளால் காரியப் பட்ட அகர முதலிய வன்னங்களில். நகராதி மாற்றி - சிகர முதலாக உச்சரித்து. சடங்கு - கன்மம். 955

அருள்தங்கி ய சிவமாவது - திருவருட் சத்தி பதிந்து ய ஆகிய ஆன்மா சிவமாகி அநுபவிக்கக் கூடியது முத்தி இன்பம். 956

அஞ்சு உக - அஞ்சு மலங்கள் நசிக்க. 957

953-ம் மந்திரத்தில் நகார முதலாக உச்சரிப்பதையும், இதில் சிகார முதலாக உச்சரிப்பதையும் கூறியுள்ளார். 959

நம்...கருமங்கள் - உலகத்தில் காரியங்கள் கைகூட ந முதலாக ஓத வேண்டும். சிம்...ருனே - சி முதலாக ஓதினுல் முத்தியின்பம் கிட்டும். 960

எட்டும் இரண்டும் - அகரமும் உகரமும். 962

எட்டு...பட்டது - அகரம் உகரம் என்று அறியாதவர் எட்டுமிரண்டும் பத்து (இருமூன்று நான்கு) எனக் கூறுவர். 963

எட்டுவரை மேலும் கீழும் வரைந்தால் 49 அறைகள் உண்டு. இறைவன் எழுத்து - சி. 964

தானவர் - ஐயனுர். சட்டர் - வயிரவர். சதிரர் - விநாயகர், முருகர். ஆற்றவர் - வாயில் காப்போர். சேனை - சிவகணங்கள். 965

பட்டணம் - சிவசக்கரம். 966

வித்து - விந்து. நத்தார் - விருப்பமுள்ள. கலைபதினாறு - சந்திர மண்டலம். பன்னிரண்டாதி - சூரிய மண்டலம். கலைதொகும் பத்தாம் - அக்கினி மண்டலம். 967

கமலமலருள் - உள்ளக் கமலத்திடை. பண்பழியாத பதிவழி - குணம் கெடாத சிவசக்கரத்தினுல். நமஎனலாம் - "நமசிவாய வாழ்க" எனலாம். 968

சாவித்திரி - காயத்திரி 24 எழுத்துக்கள் கொண்டது. தலை எழுத்து - பிரணவம். பேதிக்க - பிரித்தறிய. 970

மட்டும் - யந்திர பூசைசெய்து தியானம் செய்பவர்கட்கு. மாபதியான் - சிவன். 971

நம்முதல் - நகர முதலாகக்கொண்டு. எட்டிடை - எட்டு அறைகளில், உம் முதலாயவன் - சத்தி முதல்வனாகிய இவன். ("பாரும் உகாரம் பரந்திட்ட நாயகி" என்பது காண்க). 972

அரசம்பலகை - அரசமரத்துப் பலகையில் யந்திரத்தைச் செதுக்கி. மவ்விட்டு - மகரமுதலாக அஞ்செழுத்தை மாறி. சாதகம் - உரு வேற்றுதல். 973

கரணம் - சாதனத்துக்கு. இரளி - கொன்றை. யமன்திசை - தெற்கு. மாரணமிட்டு - மாரக அக்கரம் இட்டு. எட்டின் மகாரமிட்டு - எட்டறைகளிலும் மகரத்தை மாறி இட்டு. வரணம் - மறைப்பு. ஐங்காயம்-சுக்கு-மிளகு-கடுகு-உள்ளி-பெருங்காயம். முரணின் - மாருக. 974

கோட்டம் - கோவில். காங்கு அருமேட்டில் - வெப்பமுள்ள கரிய தகட்டில். கங்கு - கந்துள்; நெருப்போடு கூடிய கரிக்கட்டி. கடு - கடுகு-கடு+கு-சிறுத்தவிடம். 975

அன்னிமூலே - அக்கினிமூலே-தென்கிழக்கு. பஞ்சகாயம் - ஐங்காயம் (மேலே கூறியபடி). பாரித்து - பூசி. முதுகாடு - சுடுகாடு. 976

வில்லம் - வில்வம். 977

யகாரமிட்டு - யகரத்தை மாறி. பொன்நாள் - வியாழம். எழுவெள்ளி - வெள்ளி பற்பம். 978

மாதவி - குருக்கத்தி. வகுளம் - மகிழ். 979

சாங்கம் - முறைமை. கர்ப்பூரம் - பச்சைக் கர்ப்பூரம். 980

அமுதம் - தளிகை. 981

அவித்தார் - ஐம்புலன்களை அடக்கியவர். மண்ணிய - நன்றாய்ச் சமைத்த. பஞ்சாங்கம் - ஐந்து அங்கங்கள் பூமியில் படும்படி கும்பிடுதல். மனபவனம் - மனமும் பிராணவாயுவும். 983

எறிமணி - ஒளியில் பத்துவித நாதத்தின். 985

இருளும் வெளி - இருளொடு கூடிய ஆகாயம். எறியாமை - நீங்காமை. 986

அறிவன் - சிவன். நாலாம் மரபு - சாயுச்சியம். 987

ஓங்காரம் உந்திக்கீழ் - மூலாதாரத்தில் பிரணவம். வகாரம் நீள்கண்டம் - கண்டத்தானத்தில் வ எழுத்து. பாங்கார் யகாரம் பயில் நெற்றி - புருவ மத்தியில் ய எழுத்து. 988

ஆசனம் - ஆவுடையார். 989

சிவ அமுது - சிவத்தின் இன்பம். எட்டில் உகளும் ஒளி - அகாரத்தில் விளங்கும் ஆன்ம ஒளி. 990

முக்கால் - முக்கோணம். நன்மைகள் ஐந்து - ஆக்கலாதி ஐந்தொழில்கள். முப்புரம் - முச்சரீரம் (தூலம், சூக்குமம், காரணம்). 992

கால் - பிராணவாயு. அண்டம் - ஆகாயம். சிறகற - ஆதாரம் இன்றி. 993

அண்டங்கள் ஈரேழு - 14 உலகங்கள். பண்டையுள - முன்னிருந்து இறந்துபோன. வேதம் பரந்த பரப்பு - வேதங்களிற் கண்ட பொருள்களை விளக்கிநின்ற ஆகமங்கள் கூறிய பொருள்களை எல்லாம். இன்றுசொல் நூல் - தமிழ் மூவாயிரம். 994

பதினாறு - பதினாறு இதழ். கலைகள் - அக்கரங்கள். 995

முக்கூடம்-புருவமத்தி. ஆடிய ஐந்து- ஐந்தொழில்கள். பன்னீர்ராசி - தேகத்தின்கண் உள்ள பன்னிரண்டு இராசித் தானங்கள். (இது நேபாள சுவாமிகள் வரைந்து அளித்த படத்தை நோக்க வெளியாம்.) 996

சிரமுகவட்டம் - புருவமத்தி (இது தான் சிற்றம்பலம்). கருத்துற்ற கை - தியானிப்பவர் கையில். 997

நாயகம் - தேவி. மெல்ல நின்றாள் - திருவருட்சத்தி. 998

இரண்டும் - சத்தியும் சிவமும். 999

கை - கலை. இரண்டு ஆறு - பன்னிரண்டு. செஞ்சுடர் - சூரியன். 1000

அகிலமும் உண்டவன் - பெரு ஊழியில் உலகங்களை எல்லாம் தன்னிடம் ஒடுக்கிக்கொண்டவன். திக்கண...கண்டவன் - எட்டுத் திசைகளிலும் வியாபித்தவன். எக்கணன்றனுக்கு-திருமாலுக்கு. 1001

காலொன்றும் இரண்டும் - பிரணவ பாதங்கள் மூன்றும். கை இரண்டு ஒன்று - சூரியன் சந்திரன் அக்கினி மண்டலங்கள் மூன்று. 1003

கல்லொளி - நிலைபெற்ற ஒளி. 1004

கடுத்த - ஒத்த. முகம் இரண்டு - சத்தி, சிவங்களின் முகங்கள் இரண்டு. படித்தெண்ணும் - இப்படியாகக் கருதுக. 1006

அந்தமில்லான் - ஆன்மா. அடுத்த சொல் - குறித்த சொல். பத்து - ய. 1007

பத்து, எட்டு, ஆறு, நாலு - ஆதார இதழ்கள். 1008
பார்ப்பதி - மனோன்மணி. பாகன் - சதாசிவன். 1009
அஞ்சிட்ட கோலம் - சதாசிவ உருவம். ஐயைந்து - இருபத்தைந்து ஈச உருவங்கள். கொஞ்சிட்ட - அருமையான. வன்னி - சோதி. 1010
முத்தன் - முத்தியைப் பயப்பவன். கற்று அற்று நின்றார் - கலைகள் அனைத்தும் கற்று, சந்தேக விபரீதம் அற்று உணர்ந்து அடங்கி நின்றார். செற்று - சினம். 1011
பாய்ந்த - பரந்த. காய்ந்தவர் - உலகத்தை வெறுத்தவர். 1012
பொய்கண்டம் இல்லா - அசத்தும் கண்டமும் இல்லா. அதாவது சத்தாயும் எங்கும் வியாபித்தும் உள்ள. 1013
இம்மந்திரம் நவகுண்டநாதன் உருவத்தியானம் கூறுகின்றது. 1014
மத்திமன் - குண்டத்தின் நடு. பச்சிமம் - மேற்கு. 1015
வன்னி - நவகுண்ட அக்கினி. பாதனமாக - ஆழ்ந்து. 1017
ஆத்தமதாக - உபகாரம் உள்ளதாக. காத்து - நவகுண்ட அக்கினியைக் காப்பாற்றி, பூசித்து. 1018
உகங் கண்ட - பழமையான. 1019
தழன்மூன்று - கொடிநிலை, கந்தழி, வள்ளி. ஆறு பூநிலை - ஆறு ஆதாரங்கள். போதஞ்சு பொற்கயம் - ஐம்பூதங்கள். வாரணநாதன்-விநாயகன். 1020
வயிந்தவம் - விந்து. ஓ மாயை - பிரணவம். ஆறுகோடியிற்றுமான மந்திரம் - ஆறு ஆதார மந்திர எழுத்து. 1021
திரிபுரைசுந்தரி - மும்மலம் நீங்க அருள்செயும் சத்தி. இருள்புரை ஈசி - கரியநிறமுள்ள சத்தி. 1022
ஒருத்த - ஓடு உற்ற. 1023

இது தியான உருவம் கூறியது. மலர் வாளி, கன்னல் வில், அங்குசம், பாசம் கொண்ட நான்கு கரங்கள். 1025
சண்டிகை - அம்பிகையின் பெயர். 1026
குன்றலில் மோகினி - குறைதல் இல்லாத அழகினை உடையவள். நாற்காற் களிறணி - யானை வாகனம் உடையவள். 1027
வம்பார - கச்சு, மாலை அணிந்த. சுகோதயள் - சுக உற்பத்திக்குக் காரணம் ஆனவள். வத்துவம் - மாயை. 1028
ஐவர் - ஐந்து ஆதார மூர்த்திகள். ஊர் - முத்தி உலகம். 1029
சத்தி, சிவம் வேறின்றி உள்ள நிலையைக் கூறிற்று இம் மந்திரம். 1030
சத்தியும் சிவமும் உலகில் பிரிவின்றி நின்ற நிலையைக் கூறிற்று இம்மந்திரம். 1031
பராசத்தி - எங்கும் வியாபித்துள்ள சத்தி. தாராசத்தி - ஆதாரசத்தி. உராசத்தி - பொருந்தும் சத்தி. புராசத்தி - திரிபுரை சுந்தரி. 1032
ஆகம்செய்து - மனத்தில் இருத்தி. பாகம்செய் - முதிர்ச்சி பெறும். 1033
வானவர்நாடி - தேவர்களால் விரும்பிப் பூசிக்கப்படுபவள். 1034
கலைபலவென்றிடுங் கன்னி - வேதங்கள் ஆகமங்கள் வல்ல சத்தி. 1036
ஒன்றெனை ஒன்றி - சிவத்தோடு ஒன்றாகக் கலந்து. 1037
சித்தடைக்கும் வழி - சித்துக்களை அடையும் மார்க்கம். 1038
உடனே - சிவத்துடனே. கணிந்து - சிந்தித்து. 1039
அளியொத்த - யாரிடத்தும் சமமான கருணை. 1040
உண்டு, இல்லை என்றது உரு - உரு, அரு. 1041
இடங்கை நங்கை - வேதம் ஆகமங்

களைச் சுவடி உருவமாகக் கையில் வைத்துள்ள மனோன்மணி. (இதனால் சதாசிவ தத்துவம் ஆரம்பத்திலேயே வேதாகமங்கள் எழுதப்பட்டுச் சுவடி உருவமாய்ச் சத்தி கையில் இருந்தன என்று ஏற்படுவதாலும், வடமொழி எழுத்தில்லாத மொழியானதாலும், எழுதும் மொழி தமிழ் ஆனபடியாலும், வேதாகமங்கள் தமிழ் மொழியிலேயே இருந்தன என்றும், அது பிற்காலத்தில் தமிழ்நாடாகிய இந்தியாவுக்கு ஆரியர்கள் வந்த காலத்தில் தமிழ் எழுத்துக்களாகிய கிரந்தத்திலும், தமிழின் வழிமொழியாகிய பஞ்ச திராவிடத்தில் ஒன்றான மராட்டிய (தேவநாகரம்) எழுத்துக்களிலும் எழுதப்பட்டன என்பது தெளிவாகின்றது) 1043

வழிபடும் ஆறு இரும் - வழிபாடு செய்யும் நெறியில் நில்லுங்கள். 1044

மேதாதி ஈரெட்டு - மேதை முதலிய தத்துவங்கள் பதினாறு. 1046

சொல்ல - பிறர்க்கு எடுத்துரைக்க. பொருள் - இன்பப் பொருள். புவனாபதியார் - பிரமன் முதலிய பதவியாளர்கள். மருளுற்ற சிந்தை - புவனாதிபதிகளைப் பரம்பொருள் எனக் கருதும் மயக்க உணர்வு. அருமைப்பொருள் - முத்திச் செல்வத்தை நல்கும். 1047

வாராகமுகத்தி - வாராகி. ஈனவர்-இழிகுணம் உடையோர். முசலம் - இருப்புலக்கை. 1048

ஐவர் - சதாசிவன், மகேசன், உருத்திரன், மால், பிரமன். ரீங்காரம் - ரீம் என்பது மாயையின் பீச எழுத்து. 1049

உயிர்வித்து - உயிர்களின் உடல்கருவிகளுக்குக் காரணம். பதினாலும் - பதினான்கு உலகங்களும். 1050

பன்...ரவி-ஆதி பயிரவியின் கலை 12. அகாரமும் மாயையும் - அகாரகலையும் மாயையின் கலையும் சேர்ந்து 14 கலைகள். 1051

அந்த...வயிரவி - வயிரவிக்குக் கலைகள் பதினாறு. சிந்தைக் கலசம் - சித்தமாகிய தத்துவம். 1052

ஆகின்ற மூவர் - பிரமன், மால், உருத்திரர். போகின்ற பூதம் -அழிவெய்தும் மண்முதலிய பூதங்கள். புராதரர் - உயிர்கள். 1053

திரு ஆகும் - எல்லாச் செல்வங்களும் ஆகும். நாள் - மீன். தென்னன் - சிவன் ; தென்பாண்டி நாட்டான். (இப் பெயரை மாணிக்கவாசகர் எடுத்து ஆண்டுள்ளார்). 1054

சேவகன் - வீரன். பொன்னங்கிரி - திருக்கயிலாயம். பன்னும் - கூறப்படுகின்ற. பரிபிடி - இரக்கமுள்ள. (இம் மந்திரத்தில் சிவனை "அர்தம் பகவன்" என்றும் வேறோர் இடத்தில் 'ஆதிபகவன்' என்றும் வழங்கியிருப்பதை நோக்குக). 1055

நீதியில் - நெறிமுறையில். 1056

நாலங்கரமுள - நான்கு கைகள் உள. மால...மேலங்கமாய் - மாலயன் அறியாத சிவனுக்கு அங்கமாய். (இதனைத்தான் மாணிக்கவாசகர் "உடையான் நடுவில் நீயிருத்தி") என்றார். 1057

விடமி - நியாயத்தைக் கடைப்பிடித்தவன். கல் - மாணிக்கக் கல். இயல் - வண்ணம். பல் இயல் ஆடை - பலவிதமான ஆடைகள்; மேகலை, இடைகலை, கச்சு முதலியன. 1058

உழை - மான். வன்னி - அக்கினி. 1059

ஆரியத்தான் - தாமரை இதழ்கள் நடுவில் உள்ளதோர் உறுப்பு. 1060

கண்ட - பொறுக்கி எடுத்த. 1061

யோசனை - காத தூரம். பஞ்சத்

தொலி-மணி, கடல், யானை, வளை, சங்கு ஆகிய ஐந்து ஒலிகள். வாசமிலாத - சொல்லற்கரிய. தேசம் - ஒளி. 1062

பூண் - ஆபரணம். 1063

பூரணம் - பூரகம். 1064

இம் மந்திரம் "அஞ்செழுத்து" தமிழ் என்றும், சமயம் முதலிய தீக்கைகளைப் பெற்றவர்கள் நடுவிரல் அடி முதற்கொண்டு சுண்டுவிரலுக்கு வந்து ஓங்கார உருவமாய் விரல்களின் வரைகளைக் கொண்டு ஐந்தெழுத்தைக் கணிப்பதைக் கூறுகின்றது. நடுவிரல் ஆதி - நடுவிரல் அடி. 1065

உண்ணின்ற எமத்திருள் - அஞ்ஞானம். ஓமப் பெருஞ்சுடர் - நாபி. உள்ளெழு நுண்புகை - பிராணன். 1067

இவ்விரு மந்திரப் பாட்டுக்களிலும் ஆறங்க மந்திரங்களைப்பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. இருதயம், நம என்று - இருதயாயநம. பேசுந்தலைநம - சிரசேநம. சிகையே - சிகாயநம. கவசம்கொண்டு - கவசாயநம. நேத்திரம் - நேத்திராயநம. பகைநின்ற அங்கம் - அத்திராயநம. 1068—69

சூலம், யோனி - இரண்டும் முத்திரைகள் - 1070

பேசிய மந்திரம் - சி. இகாரம் பிரித்து - ச்+இ. கூசிய விந்து - ம். சகாரத்தை முன்கொண்டு கூவினல் சிம் என ஆகும். இது பிராணயாமம் சித்திக்கும் முறை. 1071

கூவிய - சொன்ன; உறப்போட்ட. சவ்வுடன் பண்ணும் மகாரம் - சம். 1072

நிசாசரி - நிசி+சரி - இரவில் சஞ்சரிப்பவள். பேரூழிக் காலத்து, சந்திரர் சூரியர் கெட்டு இருக்கும் நிலைபெற்ற இருளில் உள்ளவள் ஆனதால் நிசாசரி. 1073

உலகின்கண் உள்ள சரம் அசரம் முதலிய பொருள்களும் வேதங்களும் ஆகமங்களும் உலகங்களும் உயிர்களும் எல்லாம் சத்திசொரூபம் என்று இப் பாட்டில் கூறப்பட்டிருக்கிறது. 1074

ஆதி வயிரவி - சக்கரத்துடன் கூடிய வயிரவி மந்திரத்தை. கன்னித்துறை - விசுத்தி. உடல் உயிர் ஈசனும் - உடலில் உள்ள உயிர் ஈசனது தன்மையை அடையும். உலவாத கோலம் - அழிவற்ற தேகம். 1075

ஆலிக்கும் - மகிழ்ச்சி பயக்கின்ற. சிவத்தை வெளிப்படுத்தாள் - அருவமாயுள்ள சிவத்தின் தன்மையை உணரும்படி செய்வள். 1076

விளைவு - பயன். களிப்படுவித்து - களிப்பைச் செய்து. கதிர்ப்படு சோதி - பரையாகிய இரணங்களைக் கொண்ட சிவசோதியை. ஒளிப்படுவித்து - உயிர் தரிசிக்கும்படி செய்து. 1077

கொண்...கள் - வயிரவி என்கிற மனோன்மணி சத்தியானவள் வேண்டும் கோலம் பூண்டு. கண்டனள் - உண்டாக்கினுள். எண்...மாலைகள் - 64 கலைகளின் பதிகங்கள் அல்லது கோவைகள். விண்ட...மூன்றை - கால தத்துவ காரணராகிய சோமன் - சூரியன் - அக்கினி இவற்றை ஆக்கினுள். தண் தலை மேல் நின்ற - குளிர்ச்சி பொருந்திய சகசிர அறையுள் நின்ற. 1078

தலத்திற் றலைவி - சகசிர அறைத் தலைவியை. 1079

தென்மூலை - சகசிர அறையில் உள்ள தென்மூலை. தனிப்படுவித்து - தத்துவங்களினின்றும் பிரித்து. சார்வு படுத்து - சிவத்தொடுங் கூட்டி. 1081

நாடி...ஞானத்து - புருவமத்தியில் உள்ளம் என்னும் கூடத்தில். 1082
உறங்கல் - தூங்கற்க. 1083
சுவாலை - மனத்தை. சுழியகம் - சக்கரம் (ஆதார சக்கரம்). 1084
கோரி - ஒடுக்குங் காலத்து எடுக்கும் கோர உருவம் உடையவள். 1086
கலாவி - கலந்து. கலைத்தலை - சந்திர கலை அணிந்த தலை அல்லது 64 கலைகளை விரித்தவள். 1087
பொருந்தினள் நால்விரல் - நால் விரல் அளவுள்ள பிராணவாயு. 1089
அகாரணகாரணி - தனக்கோர் காரணம் இல்லாதவள். 1090
முயற்றி - முயற்சி. கம்பலை - ஒலி. 1092
ஒரு மூன்று - இடைகலை, பிங்கலை, சுழுமுனை. பிள்ளைத்தடம் - சுழுமுனை. 1093
ஐவர் - அயன், அரி, அரன், ஈசன், சதாசிவன். நன்னூல் - 64 கலைகள். பகைவர் - காமக் குரோத முதலியவைகள். 1094
இருளதி சத்தி - சத்தியின் நிறம் கறுப்பு. 1095
பாதிபராபரை - சிவத்தில் பாதி ஆனவள்;இடப்பாகம்பெற்றவள். 1096
ஆவின் கிழத்தி - உயிர்களின் தலைவி. நாவின் கிழத்தி - வாணி. தேவின் கிழத்தி - சதாசிவ பத்தினி. 1098
கண...மே - தன் கணவனாகிய சதாசிவம் முதல் ஐவரைப்பெற்றதால் அநாதியும் ஆவள். 1099
பன்னிரண்டு - ஆதாரம் 6, நிராதாரம் 6 ஆக 12. 1100
குணர்ந்த - கொணர்ந்த. கும்பகம் - ஒடுக்கம். 1102
கும்பக் களிறு - இந்திரியம். கோல் - மனம். பாகன் - ஆன்மா. மணி முடி வண்ணன் - பரமசிவன். இனிதுறைதையல் - பூரணசத்தி. 1103
துன்பக் குழம்பு - கருப்பாசயம். பாசம் - சரீரம். 1104
உன் அம்மை - நினைத்தற்குரிய அம்மை. 1105
பார்மேல் - சுவாதிட்டானம். 1106
ஆணையம் - உண்மை. தாதள் - ஆதாரத் தாமரையுள். மாணைய மான - ஐயம், விபரீதம் முதலிய குற்றங்கள் பொருந்திய. பாணையமாய - இனிய நாதவடிவனை. தாணையமாய தன் ஆதனம் - திருவடி இன்பம். 1107
மதி - ஞானம். 1108
அறிவான மாயை - மனம். அறிவான மங்கை அருள் - திருவருட் சத்தி. 1109
இரவு...தே - நினைப்பு மறப்பு இல்லாமல். குரவம் - விளையாட்டு. அரவம் செய்யாமல் - உதடு அசையாமல். பருவம்...தோர் - பாலன், குமரன் முதலிய பருவங்கள் இல்லாததோர். 1110
நன்று...சத்தி - ஈசனை நன்கு புலப்படுத்தும் கிரியா சத்தி. மன்றன் - கூத்தப்பெருமான். 1112
மரு - வாசனை. உரு ஒத்து - உருவ வேறுபாடு இல்லாமல். கருஒத்து - கருவிலேயே உள்புகுந்து. திரு ஒத்த - முத்தி அடையவேண்டும் என்ற. 1113
சடாதரி - சடையை உடையவள். சாத்தவி - சாத்மீக குணம் உடையவள். 1114
ஆறி இருந்த - சிவத்துள் அடங்கி இருந்த. அமுத பயோதரி - அமிழ்தக் கடல் போன்றவள். 1115
அங்கி உருத்திரன் - தேயு தத்துவ அதிபதியாகிய உருத்திரன். விடையவன் - இடப இலக்கினத்துக்கு உரியவன். கடையவர் போயிடும் - அறிந்துகொள்ளாதவர் தவறிவிடுவர். நெஞ்சத்...சாதகர் - அடையோகர். 1116

மாறிதழ் - இதழ்கள் கீழ்நோக்கியும் மேல்நோக்கியும் இருப்பது. 1117
விண்கொடி - மின்னல். 1118
நாலுடன் அஞ்சு - ஒன்பது. கன்னிகள் எட்டுடன் ஒன்று - நவசத்தி. தன்வழி - பூரண சத்தியின் வழி. உள்வழி - சகசிர அறை. 1119
அடுக்குந் தாமரை - ஆஞ்ஞை. எடுக்குந் தாமரை - விசுத்தி. மடுக்குந் தாமரை - அனுகதம். முடுக்குந் தாமரை - மணிபூரகம் (Solar pluxes). 1120
மூச்...சுடர் - மணிபூரகத்தினின்றுமே எவ்விடத்துக்கும் சத்தி பரவுதலால் மூளைச்சுடர் எனப்பட்டது. எச்சதுரம் - எல்லா இடத்திலும். கைச்சதுரம் - பிரமரந்திரம். 1121
தன்...நாலும் - முகங்கள் பத்து. வாயு - சத்தி உயிர்ப்பு. அதோமுகம் - கீழ்முகம். 1122
செறிகமழ் : கமழ்செறி - மணம் செறிந்த. நவிலுகின்றான் - சொல்லுகின்றான். 1123
நான்மறை - தமிழ் நான்மறைகளை வெளிப்படுத்திய. உழை - திசைகள். 1124
வளைய - ஆக்க. புனைய - அலங்கரிக்க. 1125
ஆற்றல் - அறிவு ஆற்றல். கூற்...கோள் - கூற்றுவனைத் தூரத்துகின்ற வல்லமையுள்ள. 1126
செடி - துன்பம். என்று என்று - சூரியன் என்று. 1127
வியோமம் - ஆகாயம். பல்...பாவை - இசைக்கு நாயகி. புல் - புன்மையான. இசைப்பாவை வல்மனம் என்று கொள்க. 1128
தாவித்த - நிச்சயித்த. பாவித்து - நினைத்துப் பார்த்து. ஆவிக்கு - உயிர்களுக்கு. அப்பொருள் - கருவிகள். 1129
கதி - முத்தி. திதம் - தன்மை 1130.

ஆறு ஆதாரங்களின் இதழ்களையும் அவற்றின் பீச எழுத்துக்களையும் பற்றி இப்பாட்டுக் கூறுகின்றது. ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு - தொண்ணூற்றாறு புற தத்துவங்கள். தானிதழாகி - இதழ்களாயுள்ளவை ஆதார சத்திகளாகி. 1131
தன்னொளி - சத்தி தங்கிய சிவ ஒளி. விரித்திருந்தாள் - வெளிப்படுத்தினள். மறித்திருந்தாள் - ஒடுக்கி இருந்தாள். 1132
பெய்ய - கொள்ள. வேதனை - பிறவித் துன்பம். வெள்ளடை - தெளிவு. 1133
வெள்ளடை - பரமஆகாயம். கமழ்... அடையான் - மாதரால் கவரப்படும் தன்மையில்லாத சிவம். பிறவி பெண்ணும் - பிறவி பெண்ணிடத்திலேயே உண்டாம். 1134
பெண் - சத்தி. ஒரு பெண்ணை - பேணப்பட்ட ஒருவனாகிய சிவத்தை. (பெண் - பேண் என்பதின் குறுக்கம்) பெண்ணிடை யானும் பிறந்து இடருதலை - "உடையாள் நடுவில் நீயிருத்தி" என்ற வாக்கின் பொருள். பெண்ணுடை ஆண் - மாதொருபாகன். 1135
மாச்சற்ற - மாசு அற்ற. காச்சற்ற - பகைமை அற்ற. 1136
வேலைத் தலைவி - ஐந்து தொழில்களுக்கும் முதல்வி. 1137
அவள் தன் தோள் தொகுத்து - புணர்ந்து. 1138
துத்தி - பொறிகளை உடைய. சுணங்கினள் - தேமலை உடையவள். புத்தகம் - மயிலிறகு போன்ற மென்மையான. 1139
வினை - மறைத்தல் தொழில். மல்ல - வெற்றிகொள்ள. 1140
வடவரை - தமிழ் நாட்டின் வடக்கின் கண்ணேயுள்ள இமயம். தண் கடற் கண்ணே - தண்கடலாயிருந்த

இடத்தின்கண்ணே மேலே கிளம்பிய (வடவரை என்று கொள்க). 1141

கண்ணுடையாள் - மனோன்மனி. மண்ணுடையாரை - (மண் - மாட்சிமை) திருவருட் சத்தி கலந்த மாட்சிமை உடையவரை. பண்ணுடையார் - மணி கடல் முதலிய பத்துவித நாதங்களைக் கேட்டவர். விண்ணுடையார் - முத்தியுலகை உடையவர். 1142

கன்னி - நினைப்பு மாத்திரையில் எல்லா உலகங்களையும் உடம்புகளையும் கருவிகளையும் போகங்களையும் ஆக்குவதால் கன்னி எனப்பட்டார். 1143

சந்திரன் - மதி போன்ற நெற்றியையுடைய மனோன்மனி. சென்னி இருப்பிடம் - மனோன்மனிக்கு இருப்பிடம் சென்னியில். பதினாறு - பதினாறு கலைகள். 1144

தாராசத்தி - தாங்கும் சத்தி. தலைப்பிரமாணி - முக்கியமான தமிழ் நான்மறையையுடையவள். இராசத்தி...ஆகும் - ஒன்பது ஆகமங்களில் ஒன்றாகிய வியாமள ஆகமத்தில் சிறப்பித்துக் கூறப்படா நின்ற சத்தி. குராசத்தி - குருவாக நின்ற சத்தி (குரு+ஆசத்தி). 1145

முன்னதன் - ஆக்கல் தொடங்கு முன். 1146

இது - சத்தியும் சிவமும் சேர்ந்த காட்சி. 1147

ஆறு - ஆறாதாரம். எட்டு - எட்டு யோகங்கள். ஆறு - நிராதாரம் ஆறு. ஈரேழு - பதினாலு உலகங்கள். 1150

இருபானேழு - இருபத்தேழு வயதிற்குள். உருத்திரம் - உடல் உறுதியை அடையும் அஞ்செழுத்து மந்திரம் (உரு - உடல்; திரம் - உறுதி.) 1151

கொங்கு - வாசனை, நறுமணம். 1152

பேயுங் கரையும் - உயிர்க்கூட்டங்கள். (பிறப்பு எடுப்பதற்கு முந்திய நிலை). அரனுக்குத் தாய் - சத்தி தத்துவத்தினின்றும் சதாக்கிய தத்துவ வாசியாகிய சதாசிவமாகிய அரன் தோன்றுவதால் தாயாகியும்; மகள்-சிவதத்துவத்தினின்றும் சத்தி தத்துவம் தோன்றுவதால் சிவத்துக்கு மகளாயும்; தாரம் - ஆதி சத்தியாகி நின்று சத்தி தத்துவத்தில் சதாசிவ நாயனாரோடும் கூடி இருந்து உலகமும் பல் உயிர்களும் தோற்றுவதற்கு ஏதுவாயிருத்தலால் தாரம் ஆயும் நின்ற அவசர பேதங்களை ஆய்ந்து அறிந்துகொள்க. 1154

பத்து முகமுடையாள் - ஆதார ஆதேய சத்தியின் முகங்கள் பத்து. வைத்தனள் - தன் காத்திடத்துச் சுவடி உருவமாக வைத்துளாள். ஆறங்கம் - தமிழ் அங்க நூல்கள் ஆறு. நாலுடன் தான் வேதம் - தமிழ் மறைகள் நான்கு. 1156

ஆரிய நங்கை - மகிமை பொருந்திய மங்கை. பயோதரம்-பால் நிறைந்த முலைத்தடம். பேர் உயிராளி - எண்ணிறந்த உயிர் வருக்கங்களை ஆட்டுவிப்பவள். 1157

வள்ளற்றலைவி - உயிர் வருக்கங்களுக்குக் கைம்மாறு கருதாமல் நல்லறிவினை ஊட்டும் வள்ளற்றன்மை வாய்ந்த திருவருட்சத்தி. 1159

பூவ...இலக்கி - செந்தாமரை ஆசனத்தி. 1160

மதிமலராள் - அமுதம் சொரிகின்ற மண்டலத்தில் உள்ள செந்தாமரைப் பீடத்தாள். 1162

மாறன் - சிவன். அங்குலி...பார்த்தனர் - மாயையும் உயிர்க் கூட்டங்களும் தங்கி இருக்கும் அதோமுகத்தைப் பார்த்து அணுக் கூட்டங்களைக் கிளப்பிவிட்டும் பின்புறம் நோக்க சத்தியருள் பெற்ற

சதாசிவன் முதல் பிரமன் வரை உள்ள ஐவரும். சடங்கு - ஐந்தொழில். 1167
கடம் - தேகம். 1168
பனிமலர் ஆறினும் - ஆதாரங்கள் ஆறினும். 1169
ஒவினும் - விலக்கினும். 1171
சாதக - சாதகர்க்குரிய. 1175
சிராதி - சிரசு முதலிய உறுப்புகளில். நிந்தை - மறதி. சந்தை - உறுப்போடல். 1177
சிவாதி - சிவத்தில். நவாதி - ஒன்பது முகூர்த்தங்கள். உவாதி - விகாரம். 1178
கைதவம் - வஞ்சம் - பொய் - துன்பம். 1180
எண்குணம் - தன் வயத்தனுதல் முதலிய எண்குணங்கள். 1181
ஆமையொன்றேறி - ஐம்புலன் அடக்கி. ஓம் அ - பிரணவம். 1182
உருத்திரம் - உருத்திர மந்திரம். 1183
சாமன் - புதன்; காமன் தம்பி. 1184
கண்ட....ஞலே - ஆண்பெண் என்னும் விதமாக உலகத்தைப் படைப்பதற்குச் சத்தியும் இருவிதமாய் நின்ருள். 1186
குவிந்த பதவை - சிறு வழி. மேல் - கபாலத்தில். 1187
காலால் வருந்தி - நடந்து அலைந்து. நாலாம் நளினம் - நாலிதழ்த் தாமரை. ஆமம் - ஆமாசயம். 1188
ஓமம் - அக்கினி காரியம்; நெய்யால் செய்யும் வேள்வி. 1189
சுலா - வட்டம். 1190
காலம் - காலதத்துவம். 1191
காலவி - கால தத்துவ முதல்வி. கூலவி - அநுகூலமானவள். குலி - மனைவி. 1192
நாலொன்பதின்மர்-36 தத்துவங்கள். ஓர் ஐந்து - ஐந்து பிரமர் (ஈசானர்- தற்புருடர் - அகோரர் - வாமதேவர் - சத்தியோசாதர்).
வேதன் - அயன். ஈரொன்பதின்மர் - 18 கணங்கள். 1194
கலை - அக்கரம். பாடு - பக்கம். 1195
அண்டவை - சக்கரம். ஆறும் இரண்டுள - எட்டிதழ். 1196
உயிர்ப்பெய்தும் - உணர்ச்சியுறும். ஒன்பதின்மர் - ஒன்பது சத்திகள். ஒன்று - சிவம். 1197
மணந்தெழும் - பொருந்தி எழும். சூதனும் சூதியும் - சிவமும் சத்தியும். கணந்து - கலந்து. 1198
சீவன் சிகை - உயிர் அக்கரம். கோதண்டம் - சுழுமுனை. 1199
ஆகிய ஐம்பத்து உடன் - 51 அக்கரங்களுடன். 1200
போன மயம் உடையார் - பிறப்பற்றவர். ஆவியினுகிய - உயிர்தொறும் நிறைந்த. 1201
மோனையில் - முதலில். 1202
மார்க்கங்கள் - தாச மார்க்கம் - சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம். 1203
நானும் - சீவனும். அத்தி - சரீரம். வித்து - உயிர். அத்தி பழுத்தால் - சரீரம் - பண்பட்டால். மத்தியில் - வீணுத் தண்டுடே. 206
பதிமது - சந்திர மண்டலத்தமுது. விதிவழி - வல்வினை. 1207
வென்றிடும் - மேன்மை பொருந்திய. 1208
ஓர் ஐம்பதின்மர் - 51 அக்கர அதிதேவர்கள். பாரம்பரியம் - பரம்பரை. 1209
சயம்பு - சிவன். 1210
வவ்விடம் - வலிய ஆலகால விடம். 1211
வேண்டுரு-விரும்பும் உருவம். 1214
அணுவாரணி - அணுவுக்கணுவானவள். 1215
சத்தியையும் சிவனையும் பிரித்தல் கூடாது என்றது இப்பாட்டு. 1216
தேமயம் - இன்ப வடிவம். 1217

அவிக்கொண்ட - செய்யவியுண்ட. 1219
உலப்பிலி - அழிவில்லாதவன். 1220
மாதர் - பரிவார சத்திகள். அற்கொடி - கரிய கொடிபோன்ற. விற்கொடி - ஒளி பொருந்திய சத்தி. 1221
தாங்கிருள் - நிலைபெற்ற ஆணவம். இலம்பியம் - உபதேச மொழி. 1222
தெருவும் புகுந்தமை - வெளியிட்டமை. 1224
மாயம் புணர்க்கும் - மாயையின் பரிணமங்களாகிய உடல் - கருவி - உலக போகங்களைக் கொடுக்கும். அடித்தாயம் - திருவடி ஞான உரிமை. சலமதி - கங்கையையும் மதியையும் தரித்த. காயம் புணர்க்கும் - உயிரை உடலுடன் கூட்டும். 1225
பிணைந்து - கலந்து. 1226
பொற்றூள் உலகம் - முத்தி உலகம். 1227
கனியாய் நினைவது - கனிந்து நினைவது. 1228
அம்மனை - சகசிர அறை. இம்மனை - இவ்வுடல். 1229
அம்மையும் அத்தனும் - சத்தியும் சிவமும். 1230
எரொளி - வீணாத்தண்டின் இரு பக்கமும் உள்ள கதிரொளி. 1231
வன்னி எழுத்து - எரொளிச் சக்கர எழுத்து. 1232
1233 முதல் 1238 வரை ஐம்பூதங்களின் உற்பத்தி கூறப்படுகிறது.
ஐயஞ்சு - ஐந்து ஐந்து - 10. அப்பதியோர் - அந்தந்தச் சக்கர அதிபர்கள். பகலோன் - சிவசூரியன். 1239
அம்முதல் ஆறும் - அந்த முதன்மையான ஆதார எழுத்துக்கள் ஆறும். ஆதி எழுத்து - ஆக்கற்றொழிலுக்குக் காரணமான எழுத்துக்கள். இருநடு - நாபி. 1240
பதினெட்டு - விசுத்தி - ஆஞ்ஞையின் எழுத்துக்கள். பதின்மூன்று - துவாத சாந்தத்தின் எழுத்துக்கள். இந்துகை - சந்திரமண்டலம். ஆருடம் - அறிதல். 1242
ஆவினம் - அந்த வகை. 1243
ஆகாசம் ஆறு - ஆகாய வழி. அவ்வியே - அவ்விதியே. 1244
ஆடு - மேடம். 1245
இராசியுள் சக்கரம் - ஆறு தாரங்களும் மேடம் முதலிய 12 இராசிகளுள். 1246
விந்து என்று உள்ள - விந்து என்று சொல்லப்படுகின்ற குறி எழுத்து எல்லாம். நாதமும் ஓங்கும் - நாதமும் கூடி எழும். அப் பதி - அந்தந்த இராசி மண்டலம். அவ்வெழுத்தே வரில் - அது அதற்குரிய எழுத்துக்களே வரில். தாரகை - நட்சத்திரங்களாம். ஆதாரம் ஒவ்வொன்றினுக்கும் இராசி இரண்டு நட்சத்திரம் $4\frac{1}{2}$ ஆக இராசி 12 நட்சத்திரம் 27. 1247
பேரொளி - சிவ ஒளி. தாரகை கண்டது - நட்சத்திர வடிவமான அக்கரம் காணப்பட்டது. 1248
கண்டிடு சக்கரம் - இவ்வாறு காணப்பட்ட தாரகைச் சக்கரம். வன்னிக்கொழுந்து - ஒளிச்சுடர். காரொளி - சத்தி ஒளி. 1249
சாரொளி - தீயொளி. சாலொளி - வாயு ஒளி. எரொளி - மூலாதாரத்தினின்று ஐம்பூத மண்டலங்களிலும் நிறைந்த ஒளி. 1250
மூலமலம் - ஆணவ மலம். அண்டம் பலம் - அண்டத்துக்குப் பலம். 1251
ஒக்க - சமமாக. 1252
மெய்யினில் - சரீரத்துக்குள் இருக்கும் ஆறு ஆதாரங்கள் உள். 1256

தந்திரம் - ஆகமம். கந்தரம்-கழுத்து. இரேகையில் - வரைகளில். பந்தமதாகும் பிரணவம் - வரைகளைக் கொண்ட சக்கரத்தில் பந்தித்திருக்கும் பிரணவத்தை. உன்னிட - தியானிக்க. 1257

பின்னிட்ட - கலந்துள்ள. தன்னிட்டு - வரையப்பட்டு. எழுந்த - எழுந்த மந்திரம். பன்னிட்ட - சொல்லப்பட்ட. 1258

பகை - பிறவிப்பகை. நுணக்கற்ற - தளருதல் இல்லாத. 1259

ஆதி எழுத்து - ஆதி சத்தியோடு கூடிய சிவன் எழுத்து. மேலெழுத்து அம்மை - அதன் மேலே சத்தி எழுத்து. பார் அங்கி நாலும் - பார், நீர், தீ, வாயு எழுத்துக்கள் நான்கும். குவிந்திடும் - கூடிய. 1260

ஆறியல்பு: தம்பனம் மோகனம். வசியம் - மாரணம். உச்சாடணம் - வித்துவேடனம். அஞ்சுடன் - மாரணம் ஒழிந்த வினைய அஞ்சுடன். 1261

ஆடியல்பு - விளையாட்டு. பாடி - பாடிவீடு; பகை அரசர் தங்குமிடம்; இங்கே சரீரம். 1263

அரவினை - குண்டலினி சத்தியை. அளிந்து - கனிந்து. 1264

கால்......மந்திரம் - கால் முதலிய மாத்திரையளவாக உச்சரிக்கப் பட்ட மந்திரம். மாலுற்ற-விரும்பி உச்சரித்த. 1265

கூத்தன் எழுத்து - ஆதி எழுத்து; சிவன் எழுத்து. உணுவில் - உள்ளே உள்ள நாவால் (உதடுகள் அசையாமல்.) 1266

ஆறும் - ஆறு ஆதாரங்களினும். வலமதுவாக - வலப்பக்கம் வளர் பிறையாக. 1267

சூலகபாலி - சூலத்தையும் கபாலத்தையும். கடந்து - வென்று. 1268

ஆமேவ - உயிர்கள் விரும்ப. தமருகம் - உடுக்கை. இதில் வயிரவருடைய ஆறு ஆயுதங்கள் கூறப் பட்டுள்ளன. 1269

கையறு ஆறு - வயிரவர்க்கு ஆறு கைகள். மெய்யது செம்மை - நிறம் சிவப்பு. 1270

ஓராயிரம் பூசனை - ஆயிர நாமப் பூசனை. மது - தேன். பூசலை - சாத்துப்படி செய்தலை. 1271

கலகமும் - பகைவர்களுக்குள் கலகமும். மெய்யது பெற்றபின் - உண்மையை அறிந்தபின். 1272

பதம்-வரை. தத்துவம் நாலு-விந்து, நாதம், சத்தி, சிவம். நயனம் - விந்து. 1273

கோடற - விகாரம் நீங்க. ஏடு-இதழ். 1274

நாலு நற்பூ - அனுகதம். 1275

ஆறு இருபத்துநாலு அஞ்சு - 35 - மெய்கள். அஞ்சு - பஞ்சாக்கரம். ஐ - சத்தி எழுத்து. 1276

குரைகழல் - சிலம்பு ஒலிக்கின்ற கழல். 1277

தகைவு - தடை. சலமதுவாம் - எளிதாம். 1280

ககாராதி ஓரைந்தும் - தமிழ்மொழியில் செந்தமிழ்க் காலத்துக்குமுன் வட்டெழுத்துக்காலத்தில் இருந்த க வருக்கம் 5-ம். (நாயனுர் வட்டெழுத்துக் காலத்தவர் ஆனதால் அக்காலத்து வழக்கப்படி கூறுகின்ருர்.) அகாராதி ஓராறு - ஆ-ஈ-ஊ-ஏ-ஐ-ஓ. சகாராதி - ச வருக்கம் நான்கு. காமிய - விரும்பப் பட்ட. 1282

சிவகாயம் - சிவ உருவம். 1283

சிவகுருயோகம் - சிவராசயோகம். எட்டாமே - எட்டு யோகங்களாமே. 1284

எட்டாகிய - அடையப்படுவன ஆகிய. கட்டாகும்-உறுதியுடையதாயிருக்கும். தொட்டாத......மூடர்க்கே-

விந்துவை வீணாகக் கழியவிட்ட மூடர்க்கு எட்டுச் சித்திகளும் கிட்டாது ஒழிந்தது ஆகும். (இது விந்துவைக் கட்டினால் எல்லாம் சித்திக்கும் என்றது.) 1285

இந்து இராசன் - சந்திர மண்டலத்து அதிபதி. தங்குமங்கநியாசம் - கரநியாசம் அங்கநியாசங்களை. சாதம் - பிறப்பு. செம்பில் - தாமிரத்தகட்டில். சட்கோணம்-அறுகோணம். (சடு - ஆறு.) 1286

வட்கோணம்- அழகிய அறுகோணம். ஈரெட்டக்கரம் - உயிர் பதினாறும். (இது திருமூலர் காலத்தில் உயிர் 16-ம் மெய் 35-ம் இருந்ததைக் குறிக்கின்றது.) அம் முதல் மேலிடு - பதினாறு இதழ்களிலும் அகர முதல் இடு. 1287

அந்தரம் - வெளி. அட்ட - பொருந்திய. உவ்விட்டு - உகரத்தை இட்டு. வாமத்து - இடப் பக்கத்தில். (கிரோம் - சிரோம் என்பன பீச எழுத்துக்கள்.) 1288

கோவை - மாலை. பூவைப் புவனாபதியை - புவனாபதி என்ற சத்தியை. (பூவை சத்தி.) 1289

ஆசற்று - உள்ளத்தூய்மையுடன். 1290

தோற்போர்வை - மேல் வேட்டி. பால்போனகம் - பாயசம். சீர்ப்பு - சிறப்பு. 1292

உத்வாசனத்தால் - இதயத்தில் ஒடுக்குவதால். இயந்திர இராசன் - புவனாபதியை. 1293

நவாக்கரி - புதுமையான அக்கரி. நவாக்கரியாக - நவாக்கரி சக்கரமாக. அ. கிலி - சௌ - முதல் ஈறே - அந்தக் கிலீம் முதல் சௌ ஈறாக. 1294

சௌ...பாதமா - சௌ - ஔ - ஹௌ - கிரீம் - சௌ - ஐ - இரீம் - சிரீம் - கிலீம் என்பன மந்திர உறுப்புக்களாக. செவ்வுள் - செவ்வையாக. 1295

நாவுளே ஓத - வாய்திறந்து உச்சரியாது நா புடைபெயரும் அளவில் உச்சரிக்க. 1296

வல்வினை - ஊழ். சிரந்தரு தீவினை - ஆகாமியம். வரந்தரு சோதி - நவாக்கரி சத்தி. 1297

மண்டலம் - 49 நாள். 7 நாள் ஒரு வாரம்- (7 வாரம் ஒரு மண்டலம்.) 1298

நெல்லொடு புல் - அருச்சனைக்கு. மஞ்சள் அரிசியும் - அறுகம் புல்லும். 1299

திரு - சிவசத்தி - ஆதிசத்தி. வண்ணம் - நிறம். பொற்பூவைக் கார்தரும் வண்ணம் - காயாம் பூபோலும் நிறம். நார் - விருப்பம். 1300

காலனும் எண்ணிய நாளும் கடந்திடும் - யமனும் அணுகான்; வரையறுக்கப்பட்ட வாழ்நாளும் பெருகும். 1301

திரு - முத்தி. வண்ணம் - முறைமை. 1302

தேவர்கள் தேவன் - தேவ இந்திரன். பாய்புனல் - கங்கை. முரிந்திடுவான் - முரித்திடுவான் என்பது மெலிந்து வந்தது - அழிப்பவன். 1303

நீர் பணி - நீவிர் வணங்குகின்ற. தாரணியும் புகழ் - புகழ்மாலை அணிகின்ற. 1304

மொண்டுகொளும் - அள்ளிக்கொள்ளும்படியாக. 1305

நாடுடையார் - அரசர். மாறுடையார் - பகைவர். கூறுடையாள் - பாகம் பிரியாள்; பாகாயி. 1306

ஆறுமின் - ஆசையை அடக்குமின். மாறுமின். ... தன்னையும் - பிறவியை மாற்றிக் கொள்ளுங்கள். தேறுமின் - தெளியுங்கள். 1307

இருந்தவர் - பெருமையுள்ள தவசிகள். நாவடி - உள்நாவினுலே. பூ அடியிட்டு - பூக்களைக்கொண்டு அருச்சனை செய்து. மாஅடி - பெருமை பொருந்திய திருவடி; முத்தி. 1308

ஐம்முதலாக - ஐ எழுத்து முதலாக. அம்முதலாகியவர் - அகரமுதலாகியவர் சிவன்; "ஆநமறியார் அகாரம் அவனென்று" என்பது காண்க. மைம்முதலாக - மாயைக்குத் தலைவியாக. 1309

நாவுக்கரசு இவள் தன்னை - வாக்குக்கு அரசியை; வாகீஸ்வரியை. ஒரு நாவிடை - தன்னைத் துதிக்கும் ஒப்பற்ற ஒருவனுடைய நாவினுலே. முகத்துளும் - முகப் பொலிவினுல். 1310

கூத்தன் - நடராசன். மன்றினுள் வித்தை - திருவம்பலச் சக்கரம். 1311

சொல்லியல் - உபதேசம். பல்லியல்பாக - பல வகையாக. நல்லியல்பாலே - நன்மையாகவே. 1312

பகை...ஈறு - சௌ முதல் ஐ ஈறு உச்சரிப்பின் பகையில்லை. நகையில்லை - பிறர் பழிப்பு இல்லை. பல்லுரு - பல வகையான உயிர் வருக்கங்களுக்கு எல்லாம். மிகையில்லை - பிறப்பு இல்லை. வகை இல்லையாக - வெல்லும் திறமை இல்லையாக. 1314

நலங்கிடும் - அடங்கும். 1315

தானே...வல்லனுய் - அவையிற் பேசும் ஆற்றல் வாய்ந்தவனுய். தனி நடம் - பெரு ஊழிக்காலத்தில் சத்தியும் சிவனும் தனித்து இருக்கும்போது சிவன் செய்யும் நடனம். 1316

கண்ணியன் - பெருமை உடையவன். தண்ணியன் - இரக்கமுடையவன். அண்ணியன் - அருகில் இருப்பவன். 1318

நான் அது - நான் அறிந்த அந்த. கான் - கடம்பவனம். கேள் அது - உறவு ஆனது. 1319

ஒளிக்கும் - வஞ்சகர்க்கு மறைந்திருக்கும். காரணம் - சிவத்தை. தெளிக்கும் - தெரிவிக்கும். அளிக்கும் - காப்பாற்றுவான். 1320

எறிந்திடும் - விலக்கும். காவல் மறிந்திடும் - சிறையில் வைத்திடும். பொறிந்திடும்-கலக்கம் உறுகின்ற. புகை - துன்பம். 1321

குகை - கருப்பாசயம். சிகை - முடிவு. 1322

திசை ஒளி - திக்குகள் எங்கும் புகழ் பெற்றவர். மேல் வினை - ஆகாமியம். உள்ளொளி - ஞான ஒளி. காரிருள் - ஆணவ இருள். மாறு ஒளி - மயக்கம். 1323

களியது - களிப்பினைத் தருவது. பஞ்சாக்கரம் அது - நவாக்கரி மந்திரமே பஞ்சாக்கரமாம். 1324

அதோமுகத்துள் ளறிவானவள் - அதோமுகத்தில் ஒடுக்கப்பட்டுக் கிடக்கும் உயிர் வருக்கங்களுக்கு அறிவாய் விளங்குபவள். 1325

தன்...நின்றவள்-அண்டமும் பிண்டமும் ஆகி நின்றவள். மன...ஆமே - ஐம்பூதங்களிலும் ஊனக் கண்ணிலும் தேகத்துள்ளும். 1326

ஔ முதல் ஹௌ ஈறுக் கூறின் அமுதேசுவரிச் சக்கரம் என்ப. 1329

தாள் அதினுள்ளே - தாமரைத் தாள்போன்ற சுழுமுனையிலே. காலது கொண்டு - பிராண வாயுவுடன். உற வீசிடில் - மேல் உறச் செய்திடில். நாளது நாள் - நாளுக்கு நாள். கேளது-தெரிந்து கொள். 1330

நாடில்லை - தேச பேதம் இல்லை. மாடில்லை - பக்க பேதம் இல்லை. காடு இல்லை - துக்கம் இல்லை. 1331

உற்...பாழாக்கி - மாயா காரியம் எல்லாம் முழுவதும் ஒழித்து. கற்ற -

அறிந்த. இடம் - உலகம். கடு வெளி - இன்மை. சலிப்பற - உறுதியாக அசையாமல். 1332

நின்றி...எல்லாம் - அண்டத்திலுள்ள வற்றை எல்லாம் பிண்டத்தில் காணலாம். நின்றிடும் உள்ளம் - மனம் நிலைபெறும். நின்றிடும் சத்தி நிலைபெற - என்றுமுள்ள சத்தி இதயத்தில் வீற்றிருக்க. கண்டிடம் நின்றிடும் - எங்கும் சத்தி மயமாய்த் தோன்றும். மேலை விளக்கொளி - புருவ மத்தியி லுள்ள தீபம் போன்ற சிவ சத்தி ஒளி. 1333

விளக்கொளிச் சக்கரம் - எல்லாவற் றையும் விளக்கும் நவாக்கரி சக்கரம். 1334

விளங்கிடுவார்கள் - விளக்கியிடுவார் கள் என்பது மெலிந்து வந்தது. 1335

வெளியென - ஆகாயத்தைப் போலப் பரமவெளி ஞானாகாயம். 1336

குண்டம் - நாபி. கண்டம் - விசுத்தி. 1337

உலப்பு - அழிதல். சிலப்பு அறியார் - சிலம்பொலி கேளாதவர். தலைப் பறியாக - தலைப்பொறி என்பது தலைப்பறி என வந்தது; தலை எழுத்து. சமைந்தவர் - பெற்ற வர். 1338

மானே - இந்திரனே. மதிவரை பத் திட்டு - குறுக்கும் நெடுக்குமாக மதிக்கும் வரைகளைப் பத்தாகக் கீறி. தேனே...மே - அப்படி ஏற் பட்ட 81 அறைகள். 1339

மேனி மதி வட்டம் - சக்கரத்தின் மேல் இடும் சந்திரன் போன்ற வரை. கன்நிய ரேகை - ஏனைய வரைகள். என்......எழுத்து - அச்சக்கரத்தின் அறைகளில் இடும் எழுத்துக்கள். 1340

மரவுரி - மரப்பட்டை. இப் பெண் - இந்த எழுத்துக்கள். அம்மை எழுத்தென்று மேற்பாட்டிற் கூறியபடி ஈண்டுப் பெண் என்றே கூறினார். எண்பத்தொன்றின் - 81 அறைகளிலும். காய்ந்தவி - சமைத்த சோறு. ஆய்ந் தலத்து - செய்யத்தகும் இடத்தில். உயி ராகுதி - பிராண ஆகுதி - பூரண ஆகுதி. 1341

பண்ணிய பொன்னை - இயந்திர வடிவமாகச் செய்த பொன்னிறத் தளான நவாக்கரிசத்தியை. பரப்பு அற - பரபரப்பு அற-நிதானமாக. நண்......மாமே - ஆத்ம சத்தி களின் அருள் பெறலாகும். 1342

போகின்ற - வாசனை வீசுகின்ற. ஆகோசனம்-பசுவினின்றும் எடுக் கப்படும் கோரோசனை. ஒன்பது - சந்தனம் (1) குங்குமம் (2) கத் தூரி (3) சாந்து (4) சவ்வாது (5) புழுகு (6) நெய் (7) கற்பூரம் (8) கோரோசன நீர் (9) 1343

வைத்திடும் பொன்னுடன் - சக்கரத் தின்கண் தாபிக்கப்பட்டிருக்கும் பொன்மயமாகிய நவாக்கரி சத்தி யுடன். கை - அழகிய. தச்சு - வசியம். 1344

எந்தை - தந்தை போலும் அன்புள்ள. பந்தம் - மழு. கிலீம் - பீச எழுத்து. 1345

எண் வகை - மதிக்கத்தகுந்த. 1346

கனகம்குழை-பொன்னாலாகிய குழை. கண்டவிம் முத்தம் - பருமுத்து. கனல் திருமேனி - கனல் நிற மேனி. சோதிபடர் இதழ் - செவ் வதரம். 1347

மணந்து - கலந்து. ஓசை - மணி கடல் முதலிய பத்து விதமான ஒலி. தணந்து - நீங்கி; (அதாவது சக்கரத்தினின்றும் தோன்றி.) 1348

தருவழி - முத்தியைத் தரக்கூடிய. கரு......அறுத்து - பிறவி வேரை அறுத்து. பெருவழி-முத்தி. 1349

காரொளி - நீல ஒளி. பாரொளி - உலகத்துக்கு ஒளி. 1350
பரந்தகாம் - அபயகாம். குவிந்தகரம்- சின்முத்திரைக் காம். 1351
தணிப்பவர் - கற்று அடங்கினவர். 1352
சிரீம் தனம் - செல்வத்தைக் கொடுக்கும் பீச மந்திரம். 1353
ஓடி மரிக்கில்-அடங்கினால். கனமிவை யற்று-ஆசை ஒழிந்து. தினகரன் - சூரியன். 1354
ஐம்பத்து அறுவகை - அக்கரங்கள் 51-பீசம் 5-ஆக 56. ஐம்பத்து அறுவகை சூழ - 56 அக்கரதேவதைகள் சூழ. 1356
தாங்கிய கை - அன்பரை ஆதரிக்கும் அபயகாம். தார் - படிகமாலை. ஞானம் - சின்முத்திரை. 1357
கண்ணுடை நாயகி - கருணையுள்ள நாயகி. ஹ்ரீம்-பீசமந்திரம். 1359
மண்டலத்துள்ளே - நவாக்கரி சக்கரத்துள்ளே. விண்டு - களங்கம் ஒழிந்து. தண்டு அகத்து - வீணாதண்டத்துள். 1360
நாபித் தடமலர் மண்டலம் - மணிபூரகம். வங்க - வருத்தம் உற. 1361
நாவுக்கு நாயகி - வாகீச்சுரி. பூவுக்கு நாயகி-இலக்குமி. பாவுக்கு நாயகி- வாணி. ஆவுக்கு நாயகி - மனோன்மனி. 1362
அன்று - சிருட்டி ஆரம்பத்தில். இரு கையில் - சின் முத்திரையைக் காட்டும் கையினாலும், சுவடி ஏந்திய மற்றொரு கையினாலும். அளந்த பொருண்முறை - அளவுபடுத்திய ஞானப் பொருள். வெண் குண்டிகை - வெள்ளிய கமண்டலமும், படிக மாலையும். 1363
சத்திகள் ஐம்பத்திரண்டு - அக்கர சத்திகள் 51-ம், நவாக்கரி சக்கர சத்தி 1-ம் ஆக 52. 1364
வன்னி - சக்கரசத்தியின் ஒளி. மணி - மணி முதலிய பத்துவித ஒலிகள். 1365
கண்ட இச் சத்தி - மணிபூரகத்தில் காணப்பட்ட இந்தச் சத்தி. வாயுப்பகையை அறுத்திட - பிராணயாமம் கைகூட்டினால். 1366
இருநாலுகை - எட்டுக்கை; பாசம் - மழு - வாள் - கேடகம் - வில் - அம்பு - அபயம் - வரதம். அபயகரத்தில் கிளி. இவ்வாறு கொள்க. குரந்து - ஆரவாரித்து. 1367
பச்சை - பச்சை நிறத்தி. 1368
பாங்கிமார் ஆறெட்டு - பரிவார சத்திகள் 48. கொச்சையார் எண்மர் - தோழியர் 8. கையிரு - இருகை; இருபுறம். எச்ச இடைச்சி - சிற்றிடைச்சி. 1369
தான் - பிரமரந்திரம். கால் - பிராணவாயு, மால் - விருப்பம். பாலதுபோல - களங்கம் அற்று. விண் - புருவமத்தி. 1370
கூபம் - விசுத்தி. 1371
தாபத்துச் சத்தி - ஆதித்திய மண்டல சத்தி. ஆபத்துக் கைகள் - ஆபத்துக் காலத்தில் உதவும் கைகள். 1372
மேரு - புருவமத்தி. ஆனின் பகடு - ஆன்மாவின் பாசம். தீபம் - ஒளியாகிய சத்தி. 1376
அதோமுக...நாயகி - அதோ முக சத்தி; சதாசிவ நாயகியாகும். ஒன்று...ஆனதே - 1-2-3-4-10. 1377
எண்ணவர் - நாற்பதின்மர். கன்னிகள் - பரிவார தெய்வப் பெண்கள். காசினி - பூமியில். 1379
தாரம் - பிரணவம். பாரம் - பிராணவாயு. வேர் - மூலாதாரம். கார் - சுழுத்தி நிலை. 1380
மண்ணில் - மூலாதாரத்தில். விண்ணில் - ஆஞ்ஞையில். கண்ணில் -

பிரமரந்திரத்தில். கண்ணில் எழுந்தது - தோன்றியது. 1381

அமுதபயோதரி - அமுதேச்சுரி. மண்ணடை - மண்ணுற்செய்த கமண்டலம். 1382

படிகம் - பளிங்கு நிறம். குமுதம் - அல்லி. கெழுதம் - பொருந்திய. 1383

பூவிலி - தோற்றம் இல்லாதவள். 1384

புத்தி...வன்னி - அனுகதத்தில் விளங்கும் உருத்திரன். கூடி வருகை - சித்தியாதல். விண்ட - மேலே சொன்ன. 1385

வானிடை...எல்லாம் - வானிலுள்ள ஏனைய அண்டங்களின் உயிர்கள் எல்லாம். மண்டலம் - பூமி. 1386

காமேல் - கடம்பவனத்தில். 1387

அக்களி - மயக்கம் கொடுக்கின்ற; மற்கடம் - கடம் மன்னும். 1388

பெண்மை - பெண்தன்மை. மாது ஐ - பெண்களுக்குத் தேவி. மண்ணும் - அலங்கரிக்கின்ற. 1389

காரணத்துள்ளது - எவற்றிற்கும் காரணமாயுள்ளது. இல்லடைந்தாளுமே - குடியாகக் கொண்டு எனை ஆளும். 1391

ஆன் ஐ - விடையை வாகனமாக உடைய சிவன். 1392

ஆனே - ஆன்மாவை. ஆனே - பிரணவ சொரூபியான சிவன். கோடு - சத்தி. 1393

நால்வகைச் சைவம் - சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம். மேரு - பூமியின் மத்திய இரேகையும் நிரட்சர ரேகையும் சேரும் இடத்தில் இருந்து கடல் கொண்டொழிந்த மேரு மலை. சுமேரு - வட துருவம் (North pole). குமேரு - தென் துருவம் (South pole). இங்கே நிலைதவறாமைக்கு உவமையாக வந்தது. மூவுலகு - பரந்து விரிந்த தன்மைக்கு உவமை. சைவம் - மெய்ப்பயன் தருவதற்கு உவமை. 1394

சத்து - மெய்ப்பொருள் ஆகிய பதி. அசத்து-மாயை, உடல். சதசத்து-உயிர். சித்து - ஞானம். அசித்து - அஞ்ஞானம். சுத்தம் - சுத்த மாயை. அசுத்தம்-அசுத்த மாயை. நித்தம் - நித்தியம். பரம் - சிவம். 1395

கலைமன்று மெய்யோகம் - நூல்களில் கண்ட உண்மையான யோகம். முற்பதம்-யோகத்துக்கு முந்திய சரியை, கிரியை. தொற்பதம் - தொல்பதம்; சமாதி நிலை. 1396

வேதாந்தம்...சித்தாந்தம் - சுத்த சைவ சித்தாந்தமே வேதங்களின் முடிவு. பூதாந்தம் - பூதங்களின் முடிவு. போதாந்தம் - ஞான முடிவு. புனம் செய்ய - ஐம்புலக் காட்டினைப் பண்படுத்த. 1397

சீரங்கம் - சிறப்புற்ற சரீரம். ஈரணை முத்திரை - விபூதி அணிந்து அஞ்செழுத்தைச் செபித்துச் சின் முத்திரையுடன். குணிமார் - நற் குணத்தைக் கொடுக்கின்ற. இணை - இணைத்த. கண்டமாலை - உருத்திராக்க மாலை. குன்றுது - தவறாது. 1398

சோதனை செய்து - அத்துவா சோதனை செய்து. இது நிர்வாண தீக்கையில் செய்யக்கூடியது. 1399

கண்டங்கள் ஒன்பது - இப் பூமி அண்டத்தின் பாகங்கள் ஒன்பது. கண்டு ஆய் - பார்த்து ஆராய்ந்த. 1400

புவியெழு நன்னூல் - பூமியின்கண் தோன்றிய நல்ல நூல்கள். மோன திசை - மவுன நிலை. எனை நிலம் - ஏனைய அண்டங்கள். எழுதா மறை - எழுதப்பட்ட வேதங்கள். (எழுதா - செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்). கோன் -

சிவம் தன்னை - ஆன்மாவை. 1401

பொன்னாற் சிவசாதனம் - பொன் கட்டிய உருத்திராக்க மாலை. நன் மார்க்க சாதனம் - சரியை, கிரியை, யோகம், ஞானம். துன்...சாதனம் - இவை சன்மார்க்கத்திற்கு அடைமொழிகள். 1402

பாடு - குற்றம். வேதாந்த சித்தாந்த பாகம் - வேதங்களின் முடியை ஒத்த சித்தாந்தப் பகுதி. தமிழ்ச் சிவஞான போதமே சித்தாந்த சாத்திரங்களில் முதன்மை பெற்றது. ஆகமங்களின்சாரமாயுள்ளது. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் தமிழ் நான்மறைகளின் முடிபை ஒத்தது. வடமொழி வேதங்களுக்கு ஆகமங்கள் உடன்பாடு இல்லை. அவ்வேதங்களில் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் பாகுபாடுகளும் இல்லை. இதனை வலியுறுத்தவே 'வேதாந்த சித்தாந்த பாகம்' என்றார் நாயனார். பாடு - பெருமை. 1403

தணந்த - நீங்கின. உள்ளாம் பராபரை - ஆன்மாவுக்கு உள்ளிருந்து நடத்தும் சத்தி. 1404

சிவோகமாய் - சிவமே ஆய். 1405

தன்னை - ஆன்மாவை. முன்னை - அநாதியேயுள்ள. முன் கட்டை - அநாதியே ஏற்பட்ட ஆணவக் கட்டை. 1406

அற்ற அப்போதம் - ஒழிந்த அந்த ஆன்மபோதம். ஆரணம் அந்தம் - வேதாந்தம். மதித்த - கலந்த. ஈராறு நீதி - 12 ஆதாரங்களின் முடிவு. 1407

மதிப்பு - எல்லை. பாவனை - சிவோகம் பாவனை. கூறுகு ஞானி சரியை - ஞானத்தில் சரியை. 1408

வித்தியாதரர் - அறிந்தவர். 1409

வியன் - பரந்த. 1410

ஒன்று - ஏகான்மவாதம். இரண்டு - துவிதம். ஒன்றாக நின்று - சுத்த அத்துவிதமாய். சமய நிராகரம் - மதநிந்தை. நேயத்தை-சிவத்தை. 1411

விகிர்தன் - சிவன். ஆசாபாசம் - ஆசை, பாசம். பாடொன்று - துன்பம் பொருந்திய. போதகர் - ஞானிகள். 1412

உடலான ஐந்து - உடலின்கண் ஏற்படும் ஐந்து அவத்தைகளும். ஓர் ஆறும் - காமம் முதலிய ஆறும். ஐந்தும் - ஐம்புலன்களும். அடல் - வலிமை. நீவப்படல் - ஒழிக்கத் தக்க. கேவலபாசம் - சகசமலம்; ஆணவம். தனையுறல் - தன்னை அறிதல். 1413

சிவன் உரை - சிவனால் சொல்லப்பட்ட. தானத்தில் - பதமுத்திகளில் முத்தர் - சீவன் முத்தர். பதப்பொருள் - கூறும் பொருள். முத்திவித்தாம் மூலம் - முத்திக்குக் காரணமாம். அடைந்தற்றால் - அடைந்தால். 1414

தற்பதம் - தான் ஆகிய பதம். நான் - ஆன்மா. தான் - சிவன். 1415

தத்துவம் - தானென்றும் நானென்றும் இரண்டிலாத் தற்பதம். ஐந்து - புலன்கள் ஐந்தும். 1416

உயிர்க்குயிராய் நிற்றல்-எல்லா உயிர்களையும் தன்னுயிர்போல் கருதி நிற்றல் (ஞான பூசை). உயிர்க் கொளி நோக்கல் - உயிரின்கண் ஒளியைக் கண்டு நிற்றல் (யோக பூசை.) உயிர்ப்பெறும் ஆவாகனம்- தன் உயிரின்கண் உள்ள சிவத்தை வெளியிலுள்ள பொருள்களில் தாபித்துப் பூசித்தல் (கிரியா பூசை.) 1417

இப்பாட்டில் சரியா பூசையைப் பற்றிக் கூறுகிறார். 1418

பத்தர் - சரியையாளர். தொண்டர்- கிரியையாளர். சாதகர் - யோகி

கள். சித்தர் - சிவஞானிகள். 1419

தானவனுயினோர் - சாயூச்சியம். சேர்ந்தவெண் யோகத்தார் - சாரூபத்தார். அர்ச்சனை தப்பாதோர் - சாமீபத்தார். நீணிலத்தோர் - சாலோகத்தார். இம் மந்திரம், சரியையாளர் சாலோகத்தையும், கிரியையாளர் சாமீபத்தையும், யோகத்தார் சாரூபத்தையும், ஞானத்தார் சாயூச்சியத்தையும் அடைவர் என்றது. 1420

கிரியையாளரும் யோகிகளும் செய்வது உருவப் பூசையாகும்; ஞான பூசை என்பது அருவப் பூசையாகும். 1421

ஞான நான்கு - சரியையின் ஞானம், கிரியையின் ஞானம், யோகத்தின் ஞானம், ஞானத்தின் ஞானம். வேதாந்தம் ஆறு - காபிலம், காணாதம், பாதஞ்சலம், அட்சபாதம், வியாசம், ஜைமீனியம் - 6 சித்தாந்தம் ஆறு - பைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம். பொன்னகர் - சிவலோகம். மருள் - அஞ்ஞானம். 1422

இம்மந்திரம் சைவத்திலுள்ள தீக்கைகளை விவரிக்கின்றது:—சமயம் - விசேடம் - நிருவாணம் - அபிடேகம். 1423

எத்திக்கிலர் இல்லை - தெய்வம் பரவியில்லாத திக்கு இல்லை. தத்தும் - ஏறும். 1424

கோடி - எல்லை. வான் உறு - பெருமை பொருந்திய. ஊனினை நீக்கி - சரீர அபிமானம் விட்டு அல்லது மாமிச உணவை விட்டு. 1425

கோன் நக்கன் தாய் - இறைவன் தாய்; தேவி. ஞான...தரும் - ஞானம் உண்டாகும். வானக் கன்று ஆகிய வானவர் - வானத்தின்கண் உள்ள உலகங்களில் வசிக்கும் பசுக்களாகிய வானவர் (பசுக்கள் - மும்மலங்களையுடையவர்). ஆனக்கு - ஆனால். அன்று ஈசன் அருள்வளமாமே - அப்பொழுது ஈசன் அருட் செல்வமுண்டாம். 1426

இது பணிந்து - இவ்வுரையை நம்பி. அது பணி - ஆக்கி அளிக்கும் தொழில். 1427

நெறிவழி - குரு உபதேசித்தபடி. தறி - கம்பம். 1430

ஒருச்சி - விலகி, நீங்கி, ஒருவி. 1431

நாவி - புனுகு. 1432

உறுபொருள் - அடைதற்கு உரிய பொருள். மூந்து அப் பிறவிக்கு மூல அவித்தாகும் - உண்டாகும் பிறவிகள் இல்லையாகும். 1433

எழுத்து - இலக்கணம், நூல். பாடல் - இலக்கியங்கள். எண்ணெண் கலை - 64 கலைகள். பழித்தலை - பழிச்சலை என்பதன் திரிபு; படிக்காவிட்டால். வழித்தலை - தலைவழி; முக்கிய நெறி. சோமன், அங்கி, அருக்கன் - இடகலை, பிங்கலை, சுழுமுனை. வருத்தலைச் செய்யும் - பிராணாயாமம் செய்யும். 1434

பிறவா உலகு - சிவலோகம். தனது கலவியுளே - சீவனிற் கலந்தே. நாணின் - யோக மார்க்கத்தை நாணத்தால் விட்டுவிட்டால். நகா நெறி - பாப மார்க்கம். ஊனிற் சுடும் - சரீர துன்பத்தைக் கொடுக்கும். அங்கி உத்தமன் - தீ வடிவனை சிவன். 1436

ஒத்த செங்கோலார் - முடி அரசர்கள். உப்பிலா மாதவர் - கேடில்லாத தவசிகள். 1437

தாகம் - ஆசை. ஆதித்தன் - சிவசூரியன். 1438

இம் மந்திரம் யோகத்தில், சமயம், விசேடம், நிருவாணம், அபி

டேகம் இற்றெனை விளக்குகின்றது. 1439

நாட்டில்லை - நாட்டில் இல்லை. மிக்க - வேறான. மிக்கார் - சிறந்தவர். நகரின் - நகர மக்களில். 1440

இம் மந்திரம் அந்தக் கரணங்கள் சுத்தமாய் இருப்பதே சன்மார்க்க நெறி என்று கூறுகின்றது. 1441

சிவோகம் - அவனே தானே ஆகிய நெறி. பின்பால் - சிவோகம் பாவனை கைவந்த பின். நேயம் - சிவம். 1442

செம்மி இருக்கும் - மறைந்து இருக்கும். ஆசாரம் - ஒழுக்கம். திருக்கிலா - மாறுபாடில்லாத. 1443

பிறியா நகர் - முத்தி நகர். நீர்த்தொனி - நீரினிடத்து உள்ள ஒலி காற்று முதலிய கூட்டுறவால் வெளிப்படுவதுபோல, அறிவால் ஆன்மாவில் அடங்கியுள்ள ஞானம் பிரகாசிக்கும். 1444

ஏனம் - சாதனக் கருவி, ஆதார யோகம். வழி - ஆதார மார்க்கம். கூன... கண்டு - சந்திர மண்டலத்துப் பெருகும் அமுதம். ஊனை மறுத்து - மலம் ஒழித்து. ஒண் சுடர் - சிவம். 1445

ஞானத்தில் நான்கு - ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம். முன் மோகித்து - சிவ சன்னதியில் தன்னை மறந்து. சத்தி வித்தை - குண்டலி யோகம். தானிக் குலத்தோர் - ஆதார யோகிகள். 1446

பரோதயம் - பரம்+உதயம்; சிவம் தோன்றல். நன்றறிவான் அருள் - சிவனருள். நற்குரு - சிவகுரு. 1449

சிவ தத்துவத் தோற்றங்கள் - சுத்த வித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம். ஆக 5. சுருதி - தமிழ் நான்மறைகளிலும் தமிழ் ஆகமங்களிலும் விளக்கப்பட்ட. குறிப்பு - சன்மார்க்க நெறி. 1450

ஐந்து ஆம் மலம் - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி ஆக-5. மோன ... மொழியால். "சும்மா இரு சொல்லற" என்ற குருமொழியால். அனுபூதி - அனுபவம். 1454

வருக்கம் - சங்கம். 1455

பின் மார்க்கம் - சகமார்க்கம், புத்திர மார்க்கம், தாச மார்க்கம். துரியத் துரிசு - துரியாதீதத்துக்குக் கீழ்ப்பட்ட துரியம். 1456

அன்னிய பாசம் - தனக்கு வேறாய்ப் பாசம் உண்டு என்றும், ஆகும் கருமம் - பாசத்தால் கன்மம் உண்டு என்றும், முன்னும் அவத்தையும்-அக் கன்மங் காரணமாகப் பிறப்பு இறப்புக்களாகிய அவத்தைகள் உண்டு என்றும், மூலப் பகுதியும் - அவத்தைக் கேதுவான மூலப் பிரகிருதி உண்டு என்றும், பின்னிய ஞானம் - இவைகளை அறியும் அறிவு உண்டு என்றும், பேதாதி பேதமும் - இவைகளின் பேதங்களையும். தன்னொடும் - ஆன்மாவையும். கண்டவர் - கண்டு ஆராய்பவர். 1458

ஒசியாத - கெடாத. சொரூப உதயம் - ஆன்மாவின் இயற்கை உருவம். 1459

சித்தயோகம் - சிவராஜ யோகம். 1460

சகமார்க்கம் - தோழனைப்போல் பத்தி பண்ணும் நெறி. மன் - பெருமை பொருந்திய. பின் மார்க்கம் - மேலே கூறிய நான்கு மார்க்கங்கள் அல்லாதது. 1461

துவாதச மார்க்கம் - பன்னிரண்டு ஆதாரங்களின் வழி - ஆதாரங்கள் 6. நிராதாரங்கள் 6. அவை மண்டலம் 3 ம். சமனை - உன் மனை, அதிகம் - 3 ம். சமயம் - சகமார்க்கம்.

திருமண் வெருவும் - இலக்குமி அச்சப்படுவாள். 1462

யோகச் சமாதி - சகமார்க்கம். 1463

புருடார்த்தம் - அறம்; பொருள், இன்பம், வீடு. இரண்டு - யோகம், போகம். 1464

மேதாதி - மேதை முதலிய தாதுக்கள். ஈரெண் - பதினாறு கலைகள். விண்ணொளி - சூரிய சந்திர ஒளி. போதாலயம் - ஞான ஆலயம். சாதாரணம் - சீவ இயல்பு. 1465

அணங்கு - வருத்தி. 1466

வாய்மையன் - தன்மையன். 1467

இம் மந்திரம் - சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம். ஒன்றுக்கொன்று அடிப்படை என்று கூறுகிறது. 1468

அறுகாற் பறவை - வண்டு. மறுகா - அலைந்து. நரை அன்மை-வெள்ளை அன்னப்பறவை. சிறு கால்-இளம் பருவம். 1470

அருங்கரை சம்சாரக் கடலுக்குக் கரை. வருங்கரை - எழும் பிறப்புக்கள். அரையாய் - இறைவனாய் 1471

பயந்து பரிக்கில் - பயம் பத்தியுடன் சற்புத்திர மார்க்கத்தைக் கைப்பற்றினால். 1472

சென்று - உதயமாகி. 1473

பாசங்கை கூம்ப - பாசம் கெட. 1474

எளி - பணிவாக. அளிதின் - அன்புடன். தூர்த்தல் - திருவலகு இடல். பளி - பள்ளி; கோவில். 1475

விதி வழி - தமிழ் வேதம்; தமிழ் ஆகமங்கள் விதித்தபடி. வேந்தன் - சிவபெருமான். 1476

அந்திப்பன் - அடக்குவேன். திங்கள் ஞாயிறு - இடகலை, பிங்கலை. வகை - நான்கு வகையான மார்க்கங்கள். 1477

உண்ணின்று - மனமார. 1478

பாசிக்குளம் - கருப்பாசயம். 1479

சரியையால் சாலோகம் பெறலாம் என்றது இம் மந்திரம். 1481

பாசம் பசுவானதாகும் - செயலற்ற பாசம் பசுப்போன்று நெகிழ்ச்சியுறும். பாசமருளானதாகும் - பாசம் வருத்தும் தன்மையுறும். பாசம் சிரமான - பாசம் அதிகார மாத்திரையாய் நிற்கும். பாசம் கரை - பாசம் அற்று ஒழிதல். 1483

யோக மார்க்கத்தால் சாரூபம் கிட்டும் என்றது இம் மந்திரம். அங்கத்துடல் - உறுப்புக்கள் அமைந்த உடல். 1484

சயில லோகம் - சிலை, சைலம், சயிலம் அதாவது மேரு. "மேருவைச் சார்ந்த காகமும் பொன்னாம்" என்னும் பழமொழிப்படி "சயிலமதாகும் சாராசரம் போல" என்றார்.

சாராமல் நீவுதல் - சார்ந்து நில்லாமல் இரண்டறக் கலத்தல். 1486

உபசாந்தம் - விருப்பு வெறுப்பு இல்லாமை. 1487

இருட்டறை - அஞ்ஞான இருள் படர்ந்த சரீரம். குமரி - திருவருட் சத்தி. குருட்டுக் கிழவன் - ஞானக் கண்ணில்லாத ஆன்மா அதாவது அஞ்ஞானமுள்ள சீவன். குருட்டினை - அஞ்ஞானத்தை. மருட்டி - தெளிவு உண்டாக்கி. மணம் புரிந்தாள் - தங்கினாள். 1488

தீம்புலன் - இன்பம் அனுபவிக்கும். தசை - சமயம். ஆம் புலனாய் - பொருந்திய அறிவாய். சோம் புலன் - சிவஞானம். 1489

பொருணீங்கா - நிலைபெற்ற. 1490

இருட்டறையில் விளக்கொளியால் பொருளைக் காண்பது போல, அஞ்ஞான இருள் படர்ந்த சரீரத்தில் திருவருட் சத்தியின் ஒளியால் சிவமாகிய பொருளைக் காணலாம் என்றது இம் மந்திரம். 1491

வெருட்டி - அச்சுறுத்தி. 1492
கன்னித்துறை - சத்தி பொருந்து தலுக்கு உரிய வழி. 1493
செய்யன் - அயன். கரியன் - அரி. வெளியன் - அரன் (உருத்திரன்) பச்சையன் - ஈசன் (மகேசன்) மை வென்றகன்ற பகடு - யானை. வெங்கையன் - வேம்+கையன் - இடது கரத்தில் எரி யுடையவன். 1494
கையில் - சின் முத்திரையால். கருமஞ் செய் காட்டு - யோகம் செய் என்று கூறுவது போலும். 1495
இரண்டு - சூரியன், சந்திரன். ஓயும் - தளர்வுறும். நின்று கண்டார் - சன்மார்க்கத்தில் நின்று கண்டார். 1496
அண்ணிக்கும் - பொருந்தும். பெண் பிள்ளை - திருவருட் சத்தி. அப்பனார் தோட்டம் - சரீரம். எண்ணிக்கும் - அளவுகடந்த. உண்ணிற்பது எல்லாம் - நெஞ்சத்துள் நிற்கும் வினைப்பயன்கள் எல்லாம். 1497
குறப்பெண் - குறிஞ்சி நிலப் பெண், பார்வதி. 1498
தாங்குமின் - நினையுங்கள். ஒளி நீலம் - நீல ஒளி, சத்தி. 1499
இருவினை நேரொப்பு - புண்ணிய பாவத்தில் சம உணர்வு. திரிமலம்- ஆணவம், கன்மம், மாயை. 1501
ஊனை - சரீரத்தை. மலர் உறை மாதவன் - உள்ளத்தாமரையில் வீற்றிருப்பவன் "மலர்மிசை ஏகினான்" இதன் வழித்து. 1502
பொள்ளல் - ஒன்பது ஓட்டைகள் உள்ள. குரம்பை - குடம்பை - உடல். 1505
ஆறு சமயம் - பைரவம், சமணம், பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம், உலகாயதம், சூனிய வாதம் (வேறு விதமாகக் கூறுவாரு முளர்) 1508
அவமல்லதில்லை ஆறு சமயங்கள் - ஆறு சமயங்களும் பாபமார்க்கங்கள். 1509
அண்ணலை நாடிய ஆறு சமயம் - உட் சமயங்கள் ஆறும். முன் நின்று அழிய - ஆசை ஒழிய. மண்ணின்று ஒழியும் வகை - பிறப்பு அறும் வகை. 1510
தவகதி - சன்மார்க்கம். மூவரும் - மும்மூர்த்திகளும்; அயன், அரி, அரன். 1511
நூறுசமயம் - அளவிறந்த சமயம். ஆறுசமயம் - மேலே கூறிய ஆறு சமயங்களும். அவ்வாறுள் - அளவிறந்த சமயங்களுள். வீறு பரநெறி - வலிமை மிக்க சிவநெறி. 1512
கலதிகள் - வீணர்கள். 1513
முயங்கு - அனுபவித்து. முழை முகப்பு ஆக்கி - குண்டலி சத்தி. ஈறு - வினை முடிவு. 1514
வழியிரண்டு - மேல்கதி, கீழ்கதி. சுழி - பிரணவம். அழிவு அறிவார் - நிலையாமையை உணர்வார். நெறி - முற்கூறிய இரண்டு வழிகளை. 1516
நாதமதாக-நாத உருவினனாக. 1517
அரன் நெறி - சன்மார்க்கம். உரநெறி - அறிவு நெறி. பரநெறி - முத்தி நெறி. பல்வகைத் தூரம் - நெடுந்தூரம். 1518
பரிசறவானவன் - மாயை இல்லாதவனு சிவன். பெரிசறிவானவர் - மிக்க அறிவுள்ள வானவர். தூய் மணி - படிகமணி. அரிதவன் - அரிய தவத்தைச் செய்து அடையக்கூடியவன். அறநெறி - சன்மார்க்கம். 1519
மாய மனிதர் - வஞ்ச மனிதர். கானங் கடந்த - தத்துவங்கள் கடந்த. ஊனம் - குற்றம். 1520

சென்னெறி - செல்லத்தக்க நெறி. பின் முன் நெறி - நந்தி வகுத்த சன்மார்க்கத்துக்கு முந்தியும் பிந்தியும் மானிடரால் வகுக்கப்பட்ட நெறிகள். 1521

உறும் ஆறு - அடையத்தக்க மார்க்கம். பிணக்கு - விரோதம். அறுமாறு - பிறவி அறும் வழி. அங்கியுள் - அங்கி உருவனான சிவபிரானிடத்தில். இறுமாறு - இலயிக்கின்ற விதம். 1522

வழி - சன்மார்க்க வழி. பரிசு - சாதனம். கழி நடக்கு - வரம்பு கடந்த நடக்கை. கற்பனை - மானிடரால் கற்பிக்கப்பட்ட மதங்கள். கழி நடக்கும் துயரம் - கற்பனை செய்யப்பட்ட மதங்களின் கொள்கைகளால் ஏற்படும் துயரம். பழி நடப்பார் - துன்பம் தருவனவற்றைப் பழித்து நடப்பார். 1523

பழி செல்லும் - நிந்தனை பரவுகின்ற. ஆங்கே வழி - அந்த நிந்தனை பரவும் வழியான பிற மார்க்கம். வழி செல்லில் - சன்மார்க்கத்தில் சென்றால். 1524

இமையங்கள் - இமயமலை போன்று அசைவற நின்ற. அமை - அடையத்தக்கது. கமை - பொறுமை. 1525

நேரொப்பர் - சமானம் ஆவார். நீங்கிய - அஞ்ஞானம் நீங்கிய. 1526

இயல்பு - தன்னிலைமை. வானவர் கோன் - சிவன். பெருந்தன்மை - ஞானம். 1527

தூர் அறிவாளர் - ஈசனைத் தமக்குப் புறம்பாக நினைப்பவர். துணைவர் - பெத்தம் முத்திகளில் துணையாய் இருப்பவர் ஈசன் என்று. பார் அறிவாளர் - உலக அறிவுடையோர். படுபயன் - உலகப் பயன்களை. உண்பர் - துய்ப்பர். கார் அறிவாளர்-அஞ்ஞானிகள். கரந்து பிறப்பார் - செத்துப் பிறப்பார். நீர் அறிவார் - சிவத்தின் தன்மையை அறிவார். நெடுமாமுகில் - பெருமை தங்கிய கார்முகில் போன்றவர். 1528

தோணி - சிவத்தின் திருவடி. பறி - பொன் போன்ற உடல். பாரம் - தத்துவக் கூட்டம். பழம்பதி - அநாதி மாயையால் ஆகிய சரீரம். குறி - கருத்து. 1529

மன்னும் - நிலைபெற்று இருக்கும். ஏழைகள் - அறிவில் வறியவர். துணையிலி தன்னை - ஒப்பற்றவனை. 1530

நீங்காச் சமயம் - மயக்கம் நீங்காத பிரம சமயம். 1531

இமையவர் - இமயமலை வாசிகள். ஆதி புராணன் - உலக உற்பத்திக்கு ஆதியாகிய அநாதி முதல்வன். அமை அங்கு உழல்கின்ற - அச் சமயங்கள்தோறும் பொருந்தியிருக்கின்ற. 1532

குன்று குரைத்தெழு நாய் - (இது ஒரு பழமொழி) குன்றைப் பார்த்துக் குரைக்கும் நாய். அதாவது, வீண் ஆரவாரம். 1533

மெய்ய - மெய்யான. 1534

பவன் - பரமசிவன். பழவழி - பழமையான சன்மார்க்கம். 1535

ஆமாம் வழி - சரியான மார்க்கம். அவ்வேறுயிர் - மலபரி பாகம் பெற்ற சீவர்கள். 1537

நன்னெறி உணராது வேறு நெறிகளில் அலைந்து திரிந்த காலத்திலும் கூடவே இருந்து மலபரிபாகம் வருவித்துச் சன்மார்க்கத்தில் கூட்டியதும் சிவசத்தியே என்று கூறுவது இம் மந்திரம். 1538

தேர்ந்து அவ் அரனை அடைந்த - திருவருட் சத்தி உணர்த்த அறிந்து அடைந்த. பேர்ந்து - விலகி. உன்னி - உண்மை நெறியென்று கருதி. பெயர்ந்த பெருவழி -

சென்றடைந்த பிற சமயங்கள். ஆர்ந்தவர் - அவ்வச் சமய ஒழுக்க நெறி நின்றவர். அண்டத்துப் புக்கு - அவ்வச் சமயங்களுக்குத் தக்க போக பூமிகளில் சென்று புசித்து நீங்கி. அருநெறி போந்து - பூமியில் மறுபடியும் திருவருள் கூட்ட உட் சமயங்களில் புகுந்து படிப்படியாக மேலேறி. புனைந்து புணர்நெறியாம் - பின் உண்மை இதுவென்று கண்டு அதனைப் புகழ்ந்து கைக்கொண்டு அடையும் சன்மார்க்க நெறி ஆகும். 1539

ஈரும் மனம் - சலிக்கும் மனத்தை. இரண்டற - ஒரே நிலையில் நிற்க. ஊரும் சகரம் - சி. வாரும் அருணெறி மன்னி - வ எழுத்தைச் சேர்த்து. முன்னி - எண்ணி. ய - உயிர். தூரும் - மண்டி இருக்கும். 1540

மினற்குறியாளனை - மின்னல் போன்ற ஒளியுடையானை. அனற்குறியாளனை - சிவாக்கினி உருவமானவனை. நினைக்குறியாளனை - சகுணத்திருமேனியுடையானை. 1541

வாய்ந்து உணராவகை - வாய்ந்து உணரும் வகை. (உணரா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்). ஏர்ந்து - சிவஞானம் கைவரப்பெற்று. உணர் செய்வது - அநுபவிப்பது. 1542

ஒல்லை - சீக்கிரம், விரைவில். 1543

ஆருயிர்...ஆறுள - ஆர் உயிர்களும் மாயை (Matter) யின் அணுக்களும் தங்கும்படியான அகோர முகந்தொறும் கூட சதாசிவத்தின் முகங்கள் ஆறுரும். 1544

பேதிப்பிலாமையில் - பிரிவு இல்லாமல். ஆதிக்கண் - சிருட்டி ஆரம்பத்திலும். அந்தமும் - ஒடுங்கும் காலத்திலும். 1545

ஆய்ந்து அறியாவணம் - சாதாரண மனிதர்கள் ஆராய்ந்து அறிய முடியாத. காய்ந்து - விருப்பு வெறுப்பு இன்றி. 1546

உடம்பின் பயன் - உடம்பினால் பெறப்படும் பயன் முத்தி. அறுவகை - ஆறு வகை உட்சமயங்களாக. அறியவொண்ணாத அறுவரை - அறிதற்கு அரிதாகிய ஆணவமலம் அறும்வகை செய்து. கோசத்து - உடம்பினுள். அண்டம் - அண்டகாரணனாகிய சிவம். 1547

பத்திப்பணித்து - அன்புகனியச் செய்து. சுத்த உரை - குற்றமற்ற தெளிந்த உரை. துரிசற - மலபந்தங்கள் நீங்க. சோதித்து - அத்துவா சோதனை செய்து. சத்து, அசத்து, சதசத்து - சிவம், பாசம், சீவன். சித்தம் இறையே - உள்ளத்தின்கண் இருக்கும் இறைவனே. 1548

பாச...ட்டு - மாயைக் கூட்டி ஆணவமலத்தைத் தொலைத்து. கூசற்ற - அச்சமற்ற. நேசித்...வித்து - தானென்ன விரும்பி இருந்த சரீர ஆசையை நீக்கி. நாட்டத்தது - கருத்தினையுடையது. 1549

சுத்தியும் - அத்துவா சோதனையும். எண்...யும் - சிவனுடைய எண் குணங்களையும் பொருந்தியதால் தூய்மையும். யோக...யும் - எண் வித யோகங்களால் அடையும் வல்லமையும். மந்திர சாதகமும் - மந்திர வல்லமையும். போதமும் - அறிவும். பத்தியும் - அடியார் பத்தியும் நாத...லும் - சிவகுரு கருணையால் நடைபெறும். 1550

எல்...லோன் - அண்டங்கள் எல்லாம் கடந்த அமலன். இப்பாலாய் - குருவடிவாய் இங்கு வந்து. உய்யக்கொண்டு -

ஈடேறும்படி. சொல்லார்ந்த - புகழ் நிறைந்த. 1551

தேவனும் - சிவனும். உபாயத்துள் - பதார்த்தங்களுள். மூன்றாய் உனக் கண்டு - பதி, பசு, பாசம் என மூன்றாகக் கருதுவதை உணர்ந்து. மூவாப் பசு பாசம் - அழிவில்லாத ஆன்மாவின் பாசத்தை. 1552

பொய்...என்பர் - அருட்கண்ணால் அன்றி ஊனக்கண் கொண்டு பார்க்கும் மூடர் சிவகுருவைச் சிவமாகப் பாவிக்காது மானிடரில் ஒருவர் என்பர். 1553

பொய்ம்மை - அஞ்ஞானத்தை. உண்மைப் பார் திண்மையும் - உண்மையாகக் காணப்பட்ட உலகத்தின் மாய வலிமையும். எட்டெட்டு சித்தி மயக்கம் - 64 சித்திகளால் ஆகும் மயக்கமும். 1554

பவம் - பிறப்பு. 1555

சித்த..... ஆனக்கால் - பசுகரணம் எல்லாம் பதிகரணம் ஆனக்கால். 1557

சீர்மையுள் - சன்மார்க்க ஒழுக்கத்துள். சந்தித்த-காணப்படுவதான. வானந்தி - மேலான நந்தி. அந்தி அங்கி - மாலைக்காலத்துத் தீபம் போன்றவன். 1558

நாதன் உருவாய்-நந்தி குருவடிவாய் வந்து. 1559

முத்தியின் ஞான முளைத்தலால் - முத்தியடைய இச்சை உண்டாகலான். அம் முளை - அந்த இச்சை. சத்தி அருள்தரில்-திருவருட் சத்தி அருளில். 1560

இன் எய்த - இன்பம் எய்த. முன் எய்த - பிறப்பினை எய்த வைத்த. தன் எய்தும் - தன்னை அடையுங் காலத்தில். மன்......தானே - பெருமை எய்த வைத்த உள்ளத்தின்கண்ணே. (மனம் - உள்ளத்துக்கு ஆகுபெயர்.) 1561

சிவபரம் - சாயுச்சியம். 1562

அகலிடம் - உலகம் முழுதும். செறிந்துணர்ந்து - அன்பினால் உணர்ந்து. மதி மாண்டவர் - அறிவு கெட்டவர். 1563

பசைந்து எழும்-விரும்பித் தோன்றுகிற. பாசத்துள் ஏக - அன்பின் வழிச் செல்ல. சிவந்த - அஞ்ஞானத்தைக் கோபித்த. சென்னி கை வைக்க - தலையில் கை வைத்துச் செய்யும் தீக்கையைச் செய்ய. 1564

தாள் தந்த போதே - திருவடியை என் சென்னிமிசை சூட்டின போதே. தலைதந்த - தலைமைத் தன்மை வந்தது. வாள் தந்த ஞான - வாள் போலும் அஞ்ஞானத்தை ஈரும் ஞான. வீடு அந்தமின்றியே ஆள்கென - முத்தி இன்பத்தை என்றும் நித்தியமாய் அநுபவி என்று. அருட்பாடின் - அருளினால். முடி வைத்து - தலையில் திருவடியைச் சூட்டி. பார் வந்து - பூமியிலே குருவடிவாய் வந்து. 1565

உயிர் பரமற்று - சீவன் சிவன் என்கிற வேறுபாடின்றி. சொல்லிறந்தோம் - மவுன நிலையடைந்தோம். 1567

உயிர்முச் சொரூபம் - தூலம், சூக்குமம், காரணம். அரிய பொருள் முத்திரையாக - உடல், பொருள், ஆவி மூன்றையும் காணிக்கையாக. பேச்சற்று - மவுன நிலையில் இருந்து. 1568

மாச்சற்று - ஒடுங்கச் செய்து. மாள் வித்து - பசுத்துவத்தை ஒழித்து. காச்சற்ற - கொடுமையில்லாத. கடன் மூன்றும் - முக்காரணங்களால் செய்யப்படும் காரியங்கள். வாச்சபுகழ் - தற்புகழ்ச்சி. 1569

மேல் வைத்தவாறு - மேலே கூறிய வாறு. மேல்வினை - முன்னைய வினைகள். மாயமதாக்கிடும் - வஞ்

சனையாதிகளில் செலுத்தும். தரிப்பித்த - நிலைபெறுவித்த. 1573
உயிர்க்கூடு - சரீரம். 1574
அடிக்கண் - திருவடிஞானத்தை. பொய்...வழி - பொய்ப்பொருள்களில் பற்று வைக்கும் ஐம்புலன் வழி. எய்த்தேன் - ஒழித்தேன். மெய்த்தேன் - உண்மை இன்பம். வேதத்தின் அந்தம் - வேதத்தில் கூறப்பட்ட முடிவான பொருள். 1576
படிசார்ந்த - சோபான முறைப்படி அடையப்பட்ட. பழவடி இன்ப வெள்ளக்குடி - பழமையான மோக்ஷ இன்பத்துள் மூழ்கும் அடியாரோடு. சார்நெறி - சேர்தற்குரிய சன்மார்க்கம். 1577
இம்மந்திரக் கருத்தைத் திருஞானசம்பந்த சுவாமிகள் எடுத்து ஆண்டுள்ளார். திருவடி ஞானமே எல்லாமாம் என்பது இம்மந்திரக் கருத்து. 1578
ஞாதுரு - அறியும் ஆன்மா. ஞானம் - அறியும் அறிவு. ஞேயம் - அறியப்படு பொருள். பாங்கான பாசம் - சகச மலம், ஆணவம். ஆங்......கவே - ஆங்காரத்தை அடக்கி பவுனம் சாதிக்கவே. நீங்கா அமுதநிலை - அழியாத இன்பநிலை. 1579
ஞேயத்தே நின்றோர்க்கு - மெய்ப்பொருளை ஆராய்வோர்க்கு. ஞேயத்தின்...வீடாகும் - மெய்ப்பொருளை அறிந்த ஆன்மாவின் அறிவே முத்தியைப் பயக்க உதவியாகும். ஞேயத்தின்... ஞேயத்தை - சத்தியையும் சிவத்தையும். ஆயத்தினின்ற - சிவமான தன்மையின். 1580
தத்துவம் - உண்மைப் பொருள். இரண்டும் தனிற்கண்டு-சிவத்தை சீவனிற் கண்டு. தானென்ற பூவை - ஆன்மாவை. நானென்று அவனென்கை - சிவன் சீவன் என்று பிரித்துக் கூறல். 1581
ஆறாறு - 36 தத்துவங்கள். மாற்றி - களைந்து. எனை வைத்து - என்னை நிலைக்கச்செய்து. பரன்றன் வியாத்துவம் மேலிட்டு-சிவத்தின் வியாபகம் மேலிடும்படி செய்து. நிச்சயமாக்கி - சிவமாம் தன்மை எய்த வைத்து. ஞேயத்தால் - அச்சிவத்தினால். அச்சம் கெடுத்து - பிறப்பு இறப்பின் அச்சத்தை நீக்கி. 1582
முன்னை - தீக்கை பெறு முன்னர். பின்னை - தீக்கை பெற்றுப் பாசம் ஒழிந்தபின். அறிவறியாமையைப் பேதித்தான் - அறிதலும் அறியாமலிருத்தலும் என்னும் தன்மையை ஒழித்தான். தன்னை அறியப் பரனாக்கி - ஆன்மாவாகிய தன்னை உணரச் சிவமாக்கி. தற்சிவத்து - அந்தச் சிவனிடத்திலே. என்னை அறிவித்து - ஆன்மாவை அறியும்படி செய்து. 1583
காணுதகண் - ஞானக் கண். கேளாத கேள்வி - உபதேச மொழி. கோணுத போகம் - குறைதல் நிறைதல் இல்லாத சிவபோகம். கூடாத கூட்டம் - பிரிதலும் கூடுதலும் இல்லாத சேர்க்கை. நாணுத நாணம் - சொல்லமுடியாத வார்த்தை; ஆனால் நாணத்தால் அல்ல. 1584

இதனைத் தாயுமானவர்:—

—"அவன்
சொல்லாத வார்த்தையைச்
சொன்னாண்டி தோழி
சொன்னசொல் ஏதென்று
சொல்வேன்—என்னைச்
சூதாய்த் தனிக்கவே
சும்மா இருத்தி
முன்னிலை ஏதுமில்
லாதே—சுக

முற்றச்செய் தேனைப்
பற்றிக்கொண் டாண்டி
பற்றிய பற்றற
உள்ளே—தன்னைப்
பற்றச்சொன் ஞன்பற்றிப்
பார்த்த இடத்தே
பெற்றதை ஏதென்று
சொல்வேன்—சற்றும்
பேசாத காரியம்
பேசினன் தோழி"

என்று விளக்கி யுள்ளார்.

நாதாந்தபோதம் - நாத முடிவான ஞானம்.

ஊமையாமொழி - பேசாத மந்திரம் இதனை அஜப மந்திரம் என்றும் கூறுப. ஊமை எழுத்து - பிரணவம். ஐங்கரும - ஐந்தொழில்கள். 1585

முத்திரை மூன்று - சாம்பவி முதலிய முத்திரை மூன்று. மூன்றின்பால் - இடகலே, பிங்கலே, சுழுமுனைகளில். வைத்த...மாற்றி - பிராணவாயு நாலு விரற்கடை வீணுக வெளிச்செல்லுதலைக் கும்பகத்தால் நிறுத்தி. பெத்த மறுத்தோர் - பெந்தம் என்பது வலிந்து வந்தது. பெந்தம் - பந்தம், பாசம் ஒழிந்துள்ளோர். 1586

மேலைச் சொருபங்கள் - அறிவு, அறிபவன், அறியப்படுபவன். சத்திபாலித்த முத்திரை பற்றும் - சிவசத்தி அருளிய சாம்பவியாதி முத்திரைகளைப் பற்றுகின்ற. ஆலித்த ..புகுந்து - விரும்பிய நடனத்தின் வழியே ஞேயத்திலே படிந்து. அற்றமூலச் சொருபன் - மூலப் பிரகிருதி அற்ற சரீரத்தையுடைய ஆன்மா. 1587

வாய்மொழிவார் - துதிப்பவர். அறப்பதி - முத்தியுலகம். 1588

பிற...யாலே - பல பிறவிகளின் அநுபவத்தால். மறந்...நீங்க - ஆணவமலம் பரிபாகப்பட்டுத் தன் வலி அடங்க. மறைந்து சிறந்த - ஆன்மாவிலேயே மறைந்து இருந்து பின் பரிபாகத்தினல் வெளிப்பட்ட. சிவ...பருவத்து - திருவருட்சத்தி பதியும் காலத்தில். துறந்த உயிர் - துறவுக்கு உரிய அறங்களைக் கைக்கொண்ட உயிர்.

துறவறங்களாவன :—அருள் உடைமை, இனியவை கூறல், அடக்கமுடைமை, தவம் உடைமை - செய்யப்படுவன நான்கு.

கூடாவொழுக்கம், அழுக்காறுமை, வெஃகாமை, புறங்கூறுமை, பயனிலசொல்லாமை - தவிரப்படுவன ஐந்து.

துறவு உடைமை, நிலையாமை உணர்தல், மெய்யுணர்தல் - உணரப்படுவன மூன்று.

அவா அறுத்தல் - வெறுக்கப்படுவது ஒன்று. ஆகப் பதின்மூன்றும் துறவு அறங்களாம். 1589

காட்டகம் - உள்ளம். அறவன் - இல்லறவாசிகளுக்காக இல்லறங்களைக் கைக்கொண்டவன். துறவன் - துறவிகளுக்காகத் துறவு அறங்களையும் கைக்கொண்டவன். 1590

நெறி - வழி. இம்மந்திரம் அறவழியிற் செல்லாதவர்களைத் துன்பம் சுடும் என்பதை உவமான முகத்தால் உணர வைத்தது. 1591

கேடும் - தீயவை இன்ன என்றும். கடமையும் - அறங்கள் இன்ன என்றும். கேட்டு - உபதேசவாயிலாகக் கேட்டு. உவந்து - இன்பம் எய்தி. ஐவரும் நாடி விளைந்தது - ஐம்புல ஆசையால் விளைந்த பயனுக்கு. நான் கடவேன் அலேன் - நான் உட்பட்டவன் அல்லன். 1592

உழவன் - சரியையாதி நாற்பாதங்களில் பயிலும் பக்குவன். உழவு -

பயிற்சி. வானம் - கருணைமழை. வேளை பூத்தது - வேளை ஒரு வகைச் செடி. வேளை என்றால் காலத்துக்கும் ஒரு பெயர். பக்குவ காலத்தில் ஞானம் உண்டாயது என்பது பொருள். உழத்தியர் - அறிவு, இச்சை, செயல்கள். 1593

மேல் துறந்த - இயற்கைத் துறவி யாகிய. கூற்றுவன் நாள் துறந் தார்க்கு - யோகத்தால் எமனை வென்றவர்களுக்கு. கார் - அஞ் ஞானம். பார்-உலகப் பற்று. 1594

நாகம் - ஆன்மா. படமைந்து - ஐம் பொறிகள். நாலது போகம் - போகம் நான்கு:-அறம், பொருள், இன்பம், வீடு. உட்புற்றில் - சரீரத் தில். ஆகம் இரண்டு - சூக்குமம், காரணம் இரண்டு சரீரங்களிலும். படம் விரித்தாட்டொழிந்து - பொறிகளில் சென்று உழல்வதை ஒழிந்து. படம் செய்து - பக்குவப் படுத்தி. உடம்பிடமாம் - உடம் பிலே நிலைத்திருக்கும். 1595

அகன்றார் வழிமுதல் - துறவிகள் பரம்பரைக்கு முதல்வன். சிவன் றாள் - சிவசத்தி. வரும் வழி - அச் சத்தி வரும்வழி. நாம் அறியோம்- 'நாம்' என்னும் மமகாரத்தைக் கொண்டு இருக்கிறவரை அறி யோம். 1596

தூம்பு - தொளை. ஆம்பல் குழலி - தேவி, சத்தி. கஞ்சுளி - சட்டை. வேம்பேறி - வீணைத்தண்டு ஏறி. மீகாமன் - சிவன். கூரையின் கூம்பு - முகட்டின் உச்சி. பூக் கின்ற - ஒளிவிடுகின்ற. 1597

ஒடுங்குநிலை - புலன்வழிச் செல்லா நிலை. 1598

பிச்சை செய். மாந்தர் - தவசிகள். மறப்பிலாராகி - நினைப்பு மறப்பு இல்லாதவராகி. 1600

கள்...காணுமே - தவசிகள் உலக அனுபவங்களில் அழுந்தி நின்று லும் உள்ளம் சிவனை விட்டு அக லாது. 1601

இம் மந்திரம் பெரிய வல்லரசுகளும் பகைத்தெழுந்து, சண்டையிட் பட்டு, மாண்டு ஒழிவதைக் கண்டு அச் சமயத்தில் ஏற்படும் ஞானத் தால் அறிவுடையோர் தவத்தை மேற்கொள்வர் என்றது. அத்தம் என்பது ஆத்தம் என்று ஆயிற்று. அத்தம் - சமயம். 1603

சதுர்-பெருமை. மாத்திரைப்போது- இமைகொட்டு நேரம். மறித்து - வெளிமுகமாய் இருக்கும் அறி வைத் தடுத்து. ஆர்த்த - பந்தித்த. 1604

சகசன்மார்க்கத்தோர்க்கு - சகமார்க் கத்தோர் - சன்மார்க்கத்தோர்; அதாவது யோக-ஞான நெறியில் நிற்பவர். மாற்றம் - தடுமாற்றம். 1605

உயிர்க்குயிர் - சிவன். மெய்க்காய மிடங் கண்டால் - உடம்பினுள் உத்தமன் கோவில் கொண்டால். போதல் - தவமியற்ற வனம் முத லியஇடங்களுக்குப்போதல். 1606

கருத்தறிந்து - உண்மைப் பொருளை அறிந்து. ஆறினால் - அடங்கினால். சத்தமும் - மந்திர உச்சாடனமும் ஆரவார பூசையும். தொடக்கு - பற்று. 1607

விளைவு-உடம்பினால்ஆம் பயன். 1608

கூடி - மனம் ஒருமைப்பட்டு. வாடி - உடலை விரதங்களால் வாட்டி. இவை களைந்து ஊடில்-இவ்வாறு தவம் செய்வதை விட்டு மாறு படில். உலகோர் எத்தவரே - உல கினர் எவ்வகைத் தவமும் உடை யாராகார். 1609

மனத்துறை-மனத்தின் பகுதியாகிய நெஞ்சத்திடத்தே பதிந்துள்ள. மாகடல் ஏழுங் கை நீந்தி - சமுத் திரம் போலும் எழுவகைப் பிறவி களுக்கும் காரணமான விதைகளை

நீக்கி. சார்வத்து - கூட்டத்தில். பவ்த்திடையாகார் - பிறவியில் சேரார். முகத்திடை - நேராக. 1610

மதிவாள் - அறிவாகிய வாள். இனத்திடை நீக்கி - காமம் முதலிய பகைவர் அறுவரினின்றும் விலக்கி. இரண்டற ஈர்த்து - தான், நான் (சிவன் - சீவன்) என்ற பாவனை ஒழிந்து சிவோகம் பாவனை செய்து. புன...மறித்தால் - ஐம்பொறிகளும் புலன்களின் வழிச் செல்லாமல் தடுத்தால். தவ...யாமே - தவத்தினுல் பெறும் ஒளியாகிய சீவ ஒளியைப் பெறலாகும். 1611

ஒத்து - சிவனேடு ஒத்து. உரைப்பது - துதிப்பது. முத்தி...தவந்தானே - முத்தியைப் பயக்கும் நன்மை தீமைகளை முனிந்த நிலையாகிய சிவத்தன்மையைக் கொடுப்பதும் தவமே. 1612

இலைதொட்டு - பத்திரங்கிள்ளி (சிவ பூசைக்குரிய செயல்). வரும் புனல் கண்டேன் - கண்களில் ஆனந்த நீர் வரக் கண்டேன். தலை தொட்ட நூல் - ஞானநூல். தாழ்ந்தது - அடங்கிற்று. தலை தொட்டு - அதுமுதல். 1613

பத்திய பத்தர் - அருளுடைமை முதலிய பதின்மூன்று துறவு அறங்களைக் கைக்கொண்ட தவத்தர். இடர் அடை செய்தவர் - துன்பத்தை இன்பமாகக் கருதுபவர். உடர் அடை செய்வது - (உடர் - உடல்; ரகரம் போலி) பிறவியைத் தடுப்பது. ஒருமனம் - ஒருமைப் பட்ட மனம். 1614

ஈற்றுக்காடி - குட்டிபோட்ட காடி ஈன்ற என்பது விரிந்து வந்தது; குட்டிகளுடன் உள்ள காடி மிகக் கொடுமையானதாய் இருக்கும். 1615

பழுக்கின்றவாறும் - தவத்தில் முதிர்ச்சியடையும் விதமும். பழம் - தவத்தின் பயன். குழக்கன்று - பிராணவாயு. கோணி - சரீரம். கொட்டில் - புருவமத்தி. இழுக்காது - தவருது. நெஞ்சத்திட - ஈசனை நெஞ்சில் இருத்த. ஒன்றும் - கூடும். 1616

செய்தவம் வேண்டாவாம் - செய்த அவம் வேண்டாவாம் எனப் பிரிக்க. மறச் செயல்களை நீக்க வேண்டும். உறவுண்டால் - சிவ ஞானிகள் இணக்கம் இருந்தால். 1617

தமிழ்...திரிவார் - மண்டலம் ஐந்தும் தமிழ் தாவிய ஞானத்தை உமிழ்வது போல உலகந்திரிவார் என வாசிக்க. தமிழ் தாவிய ஞானம் - தமிழ் வேதாகமங்களில் கூறப் பட்ட ஞானம். மண்டலம் ஐந்து - மண் தலம் ஐந்து; அதாவது பூமி அண்டத்திலுள்ள ஐந்து கண்டங்களும். உமிழ்வதுபோல உலகந்திரிவார் - சித்தர்கள் ஐந்து கண்டங்களிலும் சஞ்சரித்துத் தமிழ்த் தத்துவ அறிவைப் பக்குவர்களுக்கு உபதேசிப்பார். அவிழுமனம் - அன்பால் உருகிய மனம். திருமூலர் காலம் B. C. 6000 முதல் B. C. 100; ஆனதால், அக்காலத்தில் தமிழர்கள் ஐந்து கண்டங்களிலும் குடி ஏறி இருந்தார்கள். ஆண்டு எல்லாம் தமிழ்மொழியும், சைவ சமயமும் சிவலிங்க வழிபாடும் பரவி இருந்தன. இது அவ்வக் கண்டங்களில் இப்போது அகப்படும் சிவலிங்கங்களாலும் கல்வெட்டுகளாலும் தமிழ்த் திரிபான மொழியைப் பேசும் மனிதர்கள் அவ்வக்கண்டங்களில் வசித்தலாலும் உறுதி பெறுகின்றது. 1619

இம்மந்திரம் புண்ணியத்தையும் பாவத்தையும் இரண்டையும்

ஒழிக்கவேண்டு மென்றது. அதா வது இரண்டிலும் பற்றற இருக் கும் நிலை. 1620

முன்னின்று அருளும் - எதிர் தோன்றி அருளுவன். முடிகின்ற காலத்து - தவம் முற்றுப்பெற்ற காலத்து. நன்னின்று...நிற்கும் - நன்மார்க்கத்தில் நிற்கும் உயிர் களுக்கு அவ் வுயிர்களின் ஊடே சிவன் சிறந்து விளங்குவான். 1621

தேவர் - செவ்வாய், சுக்கிரன். புதன், வியாழன் முதலிய கோள் களில் வசிப்பவர்கள் தேவர் எனப் படுவர். பூமியில் வசிப்பவர் மானி டர் எனப்படுவர். சந்திரன் முத லிய உபகோள்களில் வசிப்பவர் பிதிர்க்கள் எனப்படுவர். தெய் வத்தோடு ஒப்பர் - மானிடரே ஆயினும் தேவர் தன்மை பெற்று இருப்பவர். 1622

விளக்கென - விளக்கின் ஒளிபோல. 1623

காயத்தேர் - உடம்பு. மனப்பாகன் கைகூட்ட - மனத்தோடு கூடி. மாயத்தேர் - உலக வாழ்க்கை. நேயத்தேர் - நியமம் நேயம் என வந்தது. இயமம் நியமம் முதலிய ஒழுக்கங்களைக் கைக்கொண்டு. ஆயத்தேர்-சமாதி யோகம். 1624

மணி - முத்து. சதி - தீத்தட்டுங் கருவி; முக்கி. சாக்கி - சக்கி என் பதன் நீட்டல்; தீத்தட்டுக்கல். இவை இரண்டினையும் "சக்கி முக்கி" என்பது உலக வழக்கு. 1625

காடு முறவு கலந்து - உள்ளன்போடு. வீடு மளவும் - சாகும் வரை. 1626

வேடங்கள் கொண்டு - பொய்யாகத் தவசி வேடம் பூண்டு. வெருட் டிடும் - மயக்கும். 1627

இருப்பினும் - சுகமாக இருந்தபோதி லும். ஆன நலம் - உண்மை வேடத்தால் ஆன நன்மை. கழிப் பித்தல் - நீக்கல். 1628

இறை - அரசன். நாடி - உண்மைத் தவசிகள் இன்னார் என்றும் பொய்த் தவசிகள் இன்னார் என்றும் ஆராய்ந்து பார்த்து. 1629

இழிகுலம் - இழிந்த ஒழுக்கங்களுள்ள குடி. வழி குலம் - பிறர் வழிபடக் கூடிய ஒழுக்கமுடைய குடி. பாழ் சண்டர் - வீணர், கொடியர். கழி குலத்தோர் - பிறரால் ஒதுக்கித் தள்ளப்படக்கூடிய ஒழுக்கமுள்ள குடி. 1630

பொசித்தற் பயனாக - சாப்பாட்டுக் காக. உய்வேடம் ஆகும் உணர்ந்து அறிந்தோர்க்கு - பொய் வேடத் திற்கே உலகத்தில் மரியாதையும் சோறும் கிடைக்கின்றனவே,மெய் யாகவே வேடம் பூண்டால் பலன் அதிகம் உண்டு, அம்மையினும் இன்பம் உண்டு என்று அறி வார்க்கு அப் பொய் வேடமே அவன் உய்வதற்கு உதவும் வேட மாகும். 1632

தலையான - சிறந்த. 1633

பூதி - விபூதி. வி - உபசர்க்கம். புழுதி என்னும் சொல் இடைக்குறைந்து முதல் நீண்டு பூதி என்று ஆயிற்று. ஆதியில் - முதலில். கண்டிகை - 32 உருத்திராக்க மணிகள் கொண்ட மாலை. ஓதிய வர்க்கும் - வேதங்கள் ஆகமங் கள் படித்தவர்க்கும். உருத்திர சாதனம் - (உரு - உடல்; திரம் - உறுதி, உடலுக்கு உறுதியைத் தரக்கூடிய சாதனம். 1634

உட்கட்டு - கோவணம். கஞ்சுளி - பொக்கணம், மேற்போர்வை. தோகைக்குப் பாசம் - மயிலிறகால் ஆய குல்லா. (குப்பாயம் - குப் பாசம் என வந்தது, சகரம் யகர மானது போலி). சிகத்த மாத்

திரை - அழகிய கையில் பிடிக்கும் கோல் (க என்னும் எழுத்துக்கு ஹ என்னும் ஒலி. வளாகம்—என்னும் சொல்லொலி போல்.) 1635
யோக அந்தம் - யோகத்துக்குரிய அழகிய. யோகப் படம் - யோகப் பட்டிகை. தண்டம் - யோக தண்டம். 1636
பாலொன்றும் - ஒழுக்கமுள்ள. பார்ப்பார் - உணருவார். பரம் - சிவம். 1637
திருவடி - சாயுச்சிய முத்தி. 1638
விரவு கனலில் வியன் உரு மாறி, அரசு......அக்காரம் - விபூதியானது சிவாக்கினி காரியத்தில் அரசு, ஆல், அத்தி முதலிய சமித்துக்கள் எரிக்கப்பட்டு நீறு ஆக்கப்படுவதாலும் உண்டாகும் (இது ஒருமுறை). நிரவயன்-வடிவமற்ற சிவன். நீதர் - நீதியை உடையவர். பிரமன் உயர்குலம் - பிரமனால் படைக்கப்பட்ட மனிதர்களில் உயர்ந்த ஒழுக்கத்தை உடையவர் ஆவர். "மேதினியில் இட்டார் உயர்ந்தோர் இடாதார் இழிகுலத்தோர், பட்டாங்கில் உள்ளபடி" என்ற ஔவையார் வாக்கை நோக்குக. இழிகுலம் என்றும் உயர்குலம் என்றும் திருமூலர் கூறியது ஜாதி அல்ல. ஒழுக்கத்தில், அறநெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகுவதில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் ஆவார். "பட்டாங்கில் உள்ளபடி" என்றது வேதாகமங்களில் கூறியபடி என ஔவையாரும் எடுத்துக் காட்டியுள்ளார். 1639
நரகத்தர் - நரக புவனங்களை அடைந்து துன்புறுவர். இன்றெனின் - இன்றெனினும் - (உம் தொக்கி வந்துள்ளது) இல்லாமவிருந்தாலும். நக்கன்பால் - சிவனிடத்தில். 1640
புன்ஞானம் - சிறிது ஞானம். துன்ஞானத்தோர் - பொய் ஞானம் உடையவர். சமயத்துரிசு - சமயங்களில் உள்ள குற்றம். 1641
அவமான - பாபம் விளைக்கக்கூடிய. உவமானம் இல்பொருள்-தனக்கு உவமையில்லாதான்; சிவன். உள்ளுறலாம் - உள்ளத்திலே அடையலாம். 1642
கழுவடி - கழுமரத்தின் அடியில் நிற்கும். குரக்கு அளி ஞானிகள் - குரங்கு போன்று தாவித் திரியும் மனத்தையுடைய ஞானிகள். 1643
அடியார் - பொறியும் உடலும் ஒத்துச் செத்துத் திரியும் சிவஞானிகள். 1644
சுந்தரவேடம்-அழகுள்ள தவவேடம். ஒன்றும் - ஒரு வேடமும். அவனுக்கே - தவம் அல்லாத அவ்வழியில் உள்ளவனுக்கே. 1645
தானத்தில் - உலகத்தில். தனியாலயத்தன் - உள்ளம் பெருங்கோயிலாக உடையவன். வினைத் தவசி - பொய் வேடத்தையுடைய தவசி. இவன் - உண்மை வேடமுள்ள சித்தன். 1646
தானற்ற தன்மை -'யான்','எனது' என்னும் பற்று நீங்கின தன்மை. தான் அவனுதல் - அவனே தானேயாகிய நெறி; தான் சிவமாந் தன்மை எய்தி நிற்றல். வினைய - தன்னைத் தவிர்த்து மற்றத் தாவர சங்கமங்கள். தானுரு - தான் கொண்ட. சாதக முத்திரை-வேடமும், பழக்கமும். எனமும் - பிச்சைப் பாத்திரமும். 1647
பொருளாம் - மெய்ப்பொருள் வெளிப்படுதற்குரிய. பொற்பதி - சிவம் தங்கும் அழகிய இடம். இருள் - அஞ்ஞானம். தெருளாம் அடிமை - மெய்யடிமை. 1648
உடல் உயிர் - உடலில் உள்ள உயிர். கடலில் அகப்பட்ட கட்டை - கட

வில் அகப்பட்ட கட்டையைப் போல் பவக்கடலில் அகப்பட்டுப் பல அண்டங்களிலும் பிறவி யெடுத்து எடுத்து அலேவர். 1649

கையிணக்கு - கூட்டுறவு. தயலற்றவர் - தையல் அற்றவர்; பெண் ஆசை இல்லாதவர். செயல் - உலக விவகாரம். 1650

குசை - கடிவாளம். ஓடு...பற்றுமின் - ஓடுகின்ற பிராண வாயுவை அடக்கி, வீண் போகாது செய்மின். 1651

குருடு - அஞ்ஞானம். குழி விழுமாறு - குருடும் குருடும் சேர்ந்தால் குழியில் விழுவதுபோல, அஞ்ஞானம் நீங்காத குருவைக் கொண்டால் கொண்டவனும் குருவும் பிறவிக் குழியில் விழவேண்டியதுதான். 1652

மாயக்கண்ணுடி - திரோதான சத்தி. இச் சத்தி முன்புறம் ஒளியுள்ளதாயும் பின்புறம் மங்கலாயும் உள்ள முகம் பார்க்கும் கண்ணுடி போன்றது. ஒருவனுக்குப் பந்த காலத்தில் பின்புறத்தையும் முத்தி காலத்தில் முன்புறத்தையும் இச் சத்தி காட்டி நிற்கும். வினைப்...கொள்ளார் - தங்களுடைய வினைகள் ஒழிய திரோதான சத்தியால் விளக்கத்தைப் பெறுவதற்கும் முயற்சி செய்யார். புறக்கடை இச்சித்து - சத்தியின் பின் புறத்தையே இச்சித்துப் பந்தத்திலேயே மூழ்கிக் கிடப்பர். 1653

எய் - விளித்தற் குறி. பிரசைகள் - மானிடர். வாய் முலை பெய்ய மதுரம் - முலையில் வாய் வைக்க மதுரமான பால். தாய் முலை ஆவது - திரோதான சத்தி தாய் போன்று இருக்கும் தன்மையை. தமருளோர் - தெரிந்து சத்தியை உறவாகக் கொண்டவர்க்கு ஊனிலே செய்யும் - சரீரத்தை அழியாமல் செய்யும். அதாவது பிறவி இல்லாமல் செய்யும். 1654

நீ யொன்று செய்ய - ஆன்மாவின் கை ஒன்று செய்ய. தீ யென்று - தீ உருவினனான சிவன் என்று. பேய் என்று - பேய் போல்பவன். சிவப்பித்துப் பிடித்தவன். 1655

பஞ்சத் துரோகம் - பொய், கொலை, கள், களவு, காமம். பஞ்சச் சமயத்தோர் - பஞ்சாயத்தோர் நியாயாதிபதிகள். விஞ்ச - மிகுதியாக. புவி வேறே - நாடு கடத்தி. பஞ்சத்துளாய் - பஞ்சம் ஏற்பட்டு. 1656

உண்ணும் கன்மம் - கன்ம அனுபவம். சிவத்திடை நின்றது - சிவானுபவமாக இருந்தது. பவத்திடை - பிறப்பினில். ஓர் பாடு - ஒப்பற்ற துன்பம். 1657

கன்றல் - கோபித்தல். பின்றல் - தாழ்ச்சி அடைதல். பிறங்கல் - மேன்மையை யடைதல். 1658

விடிவது - சித்தத்தைச் சிவனிடம் வைப்பது. வெளி - ஞானம். வெடியில் - அச்சமில்லாத. வெளியில் - பரம ஆகாயத்தில். விழிக்கவும் - பார்வையைச் செலுத்தவும். கடி - இன்பத்துக்குக் காரணமாயுள்ள. உள் - உள்ளத்தை, மனத்தை. நிமை - கண் இமைப்பொழுது. விடியாமை - அஞ்ஞான இருள். காக்கும் - தடுக்கும். விளக்கதுவாம் - ஞானம் உண்டாம். 1659

வைத்த - அநாதியாய் உள்ள. பசு பாசம் - பசுத்துவத்துக்குக் காரணமான ஆணவம். பெத்தமற - பந்தம் நீங்க. பிறழ்வு உற்று - மாறுதலை அடைந்து. தத்துவம் முன்னி - மெய்ப்பொருளைச் சிந்தித்து. தலைப்படாது - மேம்பாடு அடையாது. பித்தான - மயங்கிய.

ஈயப்பெறு - உபதேசிக்கப்படா. 1660

மலம் ஐந்து - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி அல்லது வைந்தவம். ஓரான் - சிந்தியான். தோயும் - பொருந்தும். பின்னிய - நிறைந்த. அன்னியன் - உபதேசத்திற்குப் புறம்பாவான். அசற்சீடன் - பயனற்ற சீடன். 1661

தொழில்-கன்மங்கள். சுருதி-வேதம், ஆகமம். பழுது - குற்றம். வழியறிவார் - வழிபட அறிவார். அழிவறிவார் - அழிவினைச் செய்யும் துன்மார்க்கம் அறிவார். 1662

பதைத்து - பதறி. பரமா - சிவனே. அதைத்து - அலைந்து. உதைத்து-நீக்கி. உடையாய் - என்னை அடிமை கொண்டவனே. 1663

பதைக்கின்றபோது - பிறப்பு இறப்பை நினைத்துப் பதறுகின்ற காலத்து. பரம் எனும்-சிவஞானம் என்னும். மேனின்று - புருவ மத்தியில் நின்று. சிதைக்கின்ற - கெடுதலைச் செய்கின்ற. செவ்வே - நேரே. இசைக்கின்ற - ஈசன் திருவடியில் பொருத்தி வைக்கின்ற. 1664

உள்ள பொருள் - உரிமையாயுள்ள பொருள். எள்ளத்தனையும் - சிறிதும். தெள்ளி அறிய - ஆராய்ந்து உணர. 1665

சோதி - சுவாதி நாள். தேள் - விருச்சிகம். நண்டு - கடகம். ஓதியநாள்- சொல்லப்பட்ட சுப வாரங்கள். ஆதியும் ஏதும் - முதலும் காரணமும். 1666

தொழிலார - சரியை முதல் நாற்பாதங்களிலும் சித்திபெற்ற. விழலார் - சரியை முதலிய மார்க்கங்களை அனுசரியாத வீணருடைய. விறலாம் - வலிமை பொருந்திய. 1667

சாத்திகனாய் - சத்துவகுணம் உடையவனாய். ஆத்திக பேதநெறி - கடவுள் உண்டென்னும் பல சமயங்கள். ஆர்த்த - பந்தித்த. சாத்த வல்லான் - கைக்கொள்ளவல்லான். 1668

சித்தை உருக்கி - பாசத்தொடு கலந்த சித்துருவனான ஆன்மாவை வேறு பிரித்து. ஆனந்தசத்தி - முத்தி. 1669

இன்று உன்னு - இப்பொழுது நினைத்து. அடிவைத்த - தொடங்கிய. காய - பரம ஆகாய. அடிபெற்ற ஞானம்-நிலைத்த ஞானம். ஆசு - குற்றம். 1670

வாராத காதல் - அபக்குவர்க்கு வாராத அன்பு. குருபரன் பாலா - குருவினிடத்து உண்டாக. சாதக நான்கும் - சரியையாதி நான்கும். அடிவைக்க - குருவானவர் திருவடி தீக்கை செய்து உபதேசிக்க. 1671

இணக்கில் - ஒன்றோடும் பற்றுதல் இல்லாத. பராபரத்து எல்லையில் - சிவ வியாபகத்துள். உத்தரம் - வடக்கு. பச்சிமம் - மேற்கு. ஆவுடையான் தன்னை-பசுபதியை. 1672

ஐவணக்கம் - (1) கைகளால் கும்பிடுதல். (2) கைகளைத் தலைக்குமேலே தூக்கிக் கும்பிடுதல் (மூன்றுறுப்பு) (3) கைகள் இரண்டு, தலை ஒன்று முழங்கால்கள் இரண்டு ஆக ஐந்து உறுப்புக்கள் நிலந்தோய வணங்கல். (4) மேற்கூறிய ஐந்து உறுப்புகளுடன் நெஞ்சும் நிலந்தோய வணங்கல். (5) கைகள் 2, கால்கள் 2, தலை 1, காதுகள் 2, நெஞ்சு 1 ஆக எட்டு உறுப்புக்களும் நிலந்தோய வணங்கல். இவைகளை வடமொழியாளர் ஏகாங்கம், திரியாங்கம், பஞ்சாங்கம், சாஷ்டாங்கம், அஷ்டாங்கம்

என்பர். சிறையுடல் - பந்தமான சரீரம். நீயற - நீ என்பது அல்ல என்று. அறிவுக்கு - ஆன்மாவின் அறிவுக்கு. 1673

வேட்கை - மூவகை ஆசைகள். வாழ்க்கைப் புலன் - உலக வாழ்வுக்கு ஆதாரமான இந்திரியங்கள். சித்தாந்தத்து வேட்கை விடுமிக்க வேதாந்தி - சுத்த அத்துவித சித்தாந்தத்திலே ஆசை கொள்ளும் வேதாந்தி. தாழ்க்கும் - வணங்கும். 1674

தயா -- தயை, கருணை, இரக்கம். சாயைபோல் - நிழல் போல். தண்மை - பொறுமை. 1675

நாலும் - நான்கு இதழ்கள் உள்ள மூலாதாரம். இருமூன்றும் - ஆறு இதழ்கள் உள்ள சுவாதிட்டானம். ஈரைந்தும்-பத்து இதழ்கள் உள்ள மணிபூரகம். ஈராறும் - பன்னிரண்டு இதழ்கள் உள்ள அநாகதம். பதினாறும் - பதினாறு இதழ்கள் உள்ள விசுத்தி. இரண்டும் - இரண்டு இதழ்கள் உள்ள ஆஞ்ஞை. காலங்கண்டான் - கால தத்துவத்தையே உண்டாக்கியவன். குறிகள் - அக்கரங்கள். 1676

ஈராறு நாதத்தில் - நாத தத்துவத்தில் பன்னிரு கலைகள் (சூரிய மண்டலம்). ஈரெட்டா மந்தத்தில்- சந்திர மண்டலத்தில் பதினாறு கலைகள். மேதாதி - பிருதிவி முதலாக. போதாலயம் - ஞானாலயம். அவிகாரம் - அருவமாகிய சிவன். மீதானம் - நிராதாரத்துக்கு மேல் பட்ட இடம் (விமலனுடைய இடம்). "ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று மீதானத்தே செல்க உந்திபற - விமலற்கிடமதென்று உந்திபற." 1677

ஓராறு - தான்,நான்,நீ,அவன்,அவள், அது ஆக ஆறு தன்மைகள். காரொன்று கற்பகமாக - மேகத்தையும் கற்பக மரத்தையும் ஒப்பாக. 1678

மேதாதியாலே - பதினாறு கலைப் பிராசாதத்தாலே. ஆதார சோதனை - ஆறு ஆதார சோதனை. அத்துவா சோதனை - ஆறு அத்துவாக்கள் சோதனை (மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை). தாது ஆரமாக - மூலாதாரம் முதலாகக் கொண்டு. செய் போகம் - சிவபோகம். 1679

ஆறந்தம் - அத்துவாக்கள் ஆறு. ஆறிய - அமைந்துள்ள. ஊறிய - அமுதம் ஊறுதற்குரிய. ஓர் எழுத்து - பிரணவம். 1680

ஆகும் உடம்பு - தூல சரீரம். போகும் உடம்பு-சூக்கும சரீரம். ஆறந்தம்- அத்துவாக்கள் ஆறு. 1681

ஆயுமலர் - ஆராய்தற்குரிய ஆதார மலர்கள். இதழ் பதினாறு-விசுத்தி. அறிவு - ஆன்மா. மேய அறிவு - பொருந்திய சிவம். 1682

இலிங்கம் - குறி. உலகமும் சரம் அசரங்களும் எல்லாம் சிவ வடிவம் என்பது. 1683

சத்தி முதலா - சத்தியை முதற் காரணமாக் கொண்டு. 1684

ஏகம் - ஆன்மா. ஆகம் - ஆகமங்கள் கூறுகின்ற. 1685

வாசப்பசுந்தென்றல் வள்ளல் என்று- பஞ்சபூதங்களையே தன்னுருவாக் கொண்ட சகுண பரசிவத்தை. வாழ்த்தினர் - தேவர் பூசித்தனர். அண்டங்...யாரே - நிர்க்குண சிவத்தைத் தேவர்கள் அறியார். 1686

ஒண்சுடர் - அக்கினி. தண்சுடர் - சந்திரன். 1687

தாபரம் - அசரப் பொருள்கள். மாபரம் - பெருமையுள்ள சிவம். பூவகம் - சகசிர மலர். பொற்கொடி - சிவ சத்தி. 1688

விமானம் - கருப்பக் கிரகத்தின்மேல் கட்டப்படும் கோபுரம். தூலமதாகும் - தூல இலிங்க உருவமாகும். சதாசிவம் - கருப்பக் கிரகத்துள்ள இலிங்க வடிவம் சூக்கும இலிங்கம் ஆகும். பாய - பரந்த. பலிபீடம் - பலி இடும் இடம். பத்திரம் - இடபம். ஞானிலே - சிவாலயம். 1689

கொத்தும் அக் கொம்பு - சித்திர வேலை செய்யப்பட்ட மரம். அத்தன்றன் ஆகமம் - சாத்திரப் புத்தகம் (இன்னின்ன இலிங்கமாகப் பூசிக்கலாம் என்றது இம் மந்திரம்.) 1690

மெழுகு - மெழுகுக்குப் பயன்படும் சாணம். செம்பு - தாமிரம். கனல்- அக்கினி. இரதம் - பாதரசம். சலம் - சலத்தில் உண்டாகும் சங்கு (சலஞ்சலம்). வில்லம் - வில்வம். தென் தியங்கு ஒன்றை - அழகு விளங்கும் தயிர் முதல் பொன் இறுதியாகச் சொல்லப்பட்ட பொருள்களில் ஒன்றை. 1691

அது - சிவம். ஒரு தன்மை - அத்து விதம். எது - எதனுலும். புது உணர்வு - ஞானம். புவனங்கள் எட்டு - பஞ்சபூதம், சூரியன், சந்திரன், ஆன்மா என்பவைகளுடன் கூடிய புவனங்கள். இது உணர்ந்து - இச் சரீரமும் தனக்கோர் உருவமாம் என்று கருதி. 1692

அறியாமல் - உணர்தற்கு அரிதாய். உகவிடம் - அழிதற்கு இடம். பகவிடமாம் - சூரிய மண்டலத்தை இடமாகக் கொண்டருளிய. முனம் - முன் பிறப்புக்களில் ஈட்டிய. 1693

போது புனை - அன்பர்களால் சூட்டப்படும் மலரினை அணிந்த. மாது புனை - கங்கையைத் தரித்த. ஆதி உற நின்றது - அண்ட உருவமாய் நின்றது. 1694

தரை உற்ற சத்தி - தரை ஆவுடையார். இலிங்கம் விண் - ஆகாயம் இலிங்கம். திரை பெறுநீர் - கடல். மஞ்சன சாலே - நீர் ஆடுதற்குரிய இடம். வரை தவழ் மஞ்சு நீர் - வரைகளின்மேல் தவழும் மேகம், கங்கை நீர். வான் உடுமாலே - வானத்தில் விளங்கும் மீன் கணங்கள் ஆகாய இலிங்கத்தின் மேல் விளங்கும் மாலேயாகும். • கரை அற்ற நந்தி - தத்துவங் கடந்த நந்தியெம்பெருமான். 1695

ஆக்கை வடிவு - சரீரத்தின் அமைப்பு. 1696

நிலந்தரு நீர் - நிலம் உற்பத்திக்குக் காரணமான நீர். தெளிவூன் - காணப்பட்ட தூல உடல். புலந்தரு - அறியப்படுகின்ற. வலந்தரு- பிறப்பிறப்பை வெற்றி கொள்ளுமாறு வல்லமை தருகின்ற. 1697

கோயில் கொண்ட அன்றே - சரீரம் எடுத்தபோதே. ஐவர் - ஐந்து கர்த்தர், ஐம்மூர்த்திகள். வாயில் கொண்டு - சரீரத்தை வழியாகக் கொண்டு. வழி நின்று - சரீரத்தில் இருந்துகொண்டே. தாய் இல் கொண்டால்போல் - கன்றினையூட்டத் தாய்ப்பசு இல்லம் நோக்கிச் செல்வதுபோல. வாயில்கொண்டு - அன்பினை வழியாகக் கொண்டு. 1698

கொல்லே - காடு. அடிநாடிகள் - திருவடி செல்லுதற்குரிய நாடிகள். பிறகிட்டு - பின்னிடச் செய்து. வாயில் கொண்டான் - அந்த நாடிகளை வழியாகக் கொண்டான். 1699

கூடிய பாதம் - சேர்ந்துள்ள பாதம். பாடிய - புகழ்ந்து கூறப்பட்ட.

செங்கணின் - சிவந்த கண்களில். 1700

மீதான ஐம்முகன் - மகேசனுக்கு மேற்பட்ட சதாசிவன். சாதாரணமாம் - பொதுவாக. 1701

ஆகின்ற-எல்லாம் உண்டாக்குகின்ற. கலை - சந்திரன்; கதிர் - சூரியன். அத் திசை பத்து - பத்துத் திக்குகளைக் கொண்ட உலகம். 1702

அத் திசைக்குள் - மேலே கூறிய பத்துத் திக்குகளுக்கு உள்பட்ட உலகத்தில். 1703

அவத்தை - மேலாலவத்தை, கீழாலவத்தை. இராசி - மேட முதலிய இராசிகள். சரீரமாறு - பிரமனாதி சத்தி ஈறாக ஆறு. எட்டு - பிருதிவியாதி வடிவம் எட்டு. 1704

இம் மந்திரம் சதாசிவத்தின் முகங்களின் வரிசைக் கிரமத்தையும், நிறங்களையும் கூறுகிறது. ஈசானம்-நடு. தற்புருடம்-கிழக்கு. அகோரம்-தெற்கு. வாமதேவம் - வடக்கு. சத்தியோசாதம்-மேற்கு. ஈசானம்-படிகநிறம். தற்புருடம் - மஞ்சள் குங்கும நிறம். அகோரம் - அஞ்சன (கறுப்பு) நிறம். வாமதேவம் - சிவப்பு நிறம். சத்தியோசாதம் - பால் நிறம். 1705

கூறுமின் நூறு - 108 நாமங்களால் துதியுங்கள். (108க்கு 100 என்றும், 1008க்கு 1000 என்றும் கூறுவது மரபு.) வேறோர் உரை - தமிழ்வேதத்துக்கு மாறான உரை. மிகைப்பொருள் - குற்றமுள்ள பொருள். எறுரை செய்தொழில் - தம்மை மேம்பட உரைக்கும். வானவர் தம்மொடு - தேவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் ஆரியர் தம்மொடு. மாறு செய்தான் - விரோதப்பட்டிருப்பவன். 1709

இம் மந்திரம் ஐம்முகங்களும் எத்திசைகளை நோக்குகின்றன என்பதை விளக்குகிறது. 1711

நாண் - அடக்கம். அவ்வவ் வவயவங்களுக்கு மந்திரம் இன்னதெனக் கூறுகின்றது இம் மந்திரம். ஈசானம் - உச்சி; தற்புருடம் - முகம். அகோரம் - இருதயம்; வாமம் - குய்யம். சத்தி - பாதம்; இவை பஞ்சபிரம மந்திரங்கள் என்னப் படும். 1712

இம் மந்திரம் ஆறு அங்க மந்திரங்களைக் கூறுகின்றது. இவை கரு அங்க மந்திரம் அல்லது சட் அங்க மந்திரம் எனப்படும் அவையாவன:— நெஞ்சு - இருதயாய நம. சிரம் - சிரசாய நம. சிகை - சிகாய நம. கவசம் - கவசாய நம. கண் - நேத்திரப்யோ நம. அம்பு - அத்திராய நம. பஞ்ச பிரம மந்திரங்களும், ஆறு அங்க மந்திரங்களுமே சைவ மந்திரங்களாம். 1713

இறை - சிவனுக்கு; இதயம் ஞான சத்தி. சிரம் பராசத்தி; சிகை ஆதி சத்தி; கவசம் இச்சா சத்தி; நேத்திரம் கிரியா சத்தி ஆகும். 1714

சதாசிவ உருவம் சத்தியின் உருவம் என விளம்புகின்றது இம்மந்திரம். 1715

மானந்தி - ஆசைமிகுந்து. அஞ்சில் - சத்தி உருவமாகிய பஞ்ச முகங்களில். கானந்தி - பிராணவாயு. உந்தி - மேலே செலுத்தி. கமலத்தின்மேல் - உச்சித் தாமரை; சகசிர அறை. ஒன்பதின் மேவி - ஒன்பது வடிவங்களில் பொருந்தி. 1716

ஒன்றியவாறு - சிவன் உலகத்தில் பொருந்தி இருக்கும் முறைமை. 1717

கோயில் என் நெஞ்சம் - உள்ளம் பெருங் கோவில். இங்கே நெஞ்சம் என்பது உள்ளம். பகலவன் - சூரியனை உண்டாக்கிய சிவன். பாட்டும் ஒலி - ஒலிப்பாட்டு; நாத

தத்துவத்தினின்றும் எழுந்த தமிழ் வேத ஆகமங்கள். 1718

மானிட உடல் சதாசிவ உருவமான சிவலிங்க உருவமாகும் என்றது இம் மந்திரம். 1720

தாரம் இரண்டும் - பிரணவ உறுப்புக்களாகிய அகாரம், உகாரம் இரண்டும். 1721

இலிங்க உருவத்தின் அடிப்பீடம் பிரணவ உருவம் என்றும், இலிங்கத்தின் கண்டம், அதாவது அதோமுகம் பிரணவ எழுத்துக்களில் மகாரத்தைக் குறிக்கும் என்றும், இலிங்கத்தின் நடு வட்டம், அதாவது உள் வட்டம் (ஒடுங்கியுள்ள வட்டம்) உகாரத்தைக் குறிக்கும் என்றும், மேல் இலிங்க பாகம் அகாரத்தைக் குறிக்கும் என்றும் இம் மந்திரம் கூறுகின்றது. 1722

அகாரம், சிவன்; உகாரம், சத்தி; சிவத்துடன் சத்தி சேர்ந்தவிடத்துப் பொருள்கள் உயிர்ப்பெய்தும் என்றும் இம் மந்திரம் கூறுகின்றது. 1723

ஆதேயம் - ஆதாரத்தில் நிலைத்துள்ளது. 1724

தாபர இலிங்கம் - கோவில்களில் உள்ள அருவுருவத் திருமேனியான இலிங்கம். சங்கம லிங்கம் - அடியார். தாபரம் சத்தி சிவமாம் - உலகமே சத்தி சிவ உருவங்களாம். 1725

தான் ஏர் எழுகின்ற சோதி - என்றும் உள்ள இயற்கைச் சோதி. ஐம்பது அமர்ந்திடம் - 51 அக்கரங்களும் அடங்கிய பிரணவம். பூ நேர் எழுகின்ற பொற்கொடி - ஆயிரத்தெட்டிதழ்த் தாமரையில் (உச்சித் தாமரை) இருக்கின்ற மனோன்மணி. அகாரம் - சிவன் "யாரும் அறியார் அகாரம் அவனென்று". 1726

அந்த இரண்டு - நாத விந்துக்கள். கருவைந்து - ஐந்து மூர்த்திகள். செய்யும் அவை ஐந்தே - அம் மூர்த்திகள் செய்யும் தொழில்கள் ஐந்து (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்.) 1727

தகு நல்லவான்மா - சீவான்மா. சத்தி நல்லான்மா - பரமான்மா. 1728

இலம் புகுந்து - சரீரமாகிய வீடு. 1729

தராபரன் - தரையாகிய உலகங்களுக்கு இறை. சிராபரன் - மேலான தேவன். மராசமரன் - மரு + ஆம் + அரன் - பூவின் மணம் போன்ற சிவன். 1730

பிரானல்ல நாமெனில் - நல்ல பிரான் நாம் எனில். குரால் - பசு. பொரா நின்றவர் - பொருகின்றவர் அதாவது தரிக்கின்றவர். செய - கருணை புரிய. 1731

அன்று - ஒரு காலத்தில். ஒன்றி - கலந்து. 1732

தருவென - தா என்று கேட்க. நல்கும் - விரும்பியவற்றைக் கொடுக்கும். 1733

நாலான கீழது உருவம் - அருவுருவமாகிய சதாசிவத்துக்குக் கீழ்ப்பட்ட. அயன், அரி, அரன், ஈசன் ஆகிய நான்கு பேதங்களும் உருவம் ஆகும். மேலான நான்கும் அருவம் - அருவுருவமாகிய சதாசிவத்துக்கு மேற்பட்ட. விந்து - நாதம். சத்தி - சிவம்; ஆகிய நான்கு வேதங்களும் அருவம் ஆகும். நாப்பண் - நடுவில் உள்ள. நாலான ஒன்று - ஈசன், அரன், அரி, அயன் ஆகியவர்களை நடத்தும் சதாசிவம் ஒன்றும். அருவுரு - அருவுருவாம். பாலாம் இவை - இவ்வாறு முப்பகுதியில் அடங்கும் ஒன்பது வடிவங்களும். 1734

தேவர்...நந்தியை - முப்பகுதியில் நடுவில் உள்ள அருவுருவாகிய

சதாசிவம், தேவர்களுக்குப் பிரான், எட்டுத் திக்கு இறைவர்களுக்கு நாதன்; அயன், அரி, அரன், ஈசன் என்னும் நால்வருக்கும் பிரான் ஆவான் அவனே. எவர் பிரான் - எல்லாருக்கும் பெருமான். 1735

ஆண்...கின்ற - சதாசிவத்துக்கு ஞாயிறும், திங்களும் இரு கண்கள் ஆதலால் நாள், மாதம், ஆண்டு இவைகளைச் செய்கின்ற இறைவன் என்னப்பட்டது. கன்னி - மனோன்மணி. மூண்ட - மூடிய, பொருந்திய. 1736

பாதி...ஆமே - மாதொரு பாகன் ஆவான். 1737

சத்திக்கு மேலே - சத்தி தத்துவத்துக்கு மேலே. பராசத்தி தன்னுள் - பரை என்னும் சத்தி இடத்தில். சுத்த சிவபதம் - நின்மல சிவத்துக்கு இடம். தோயாத தூவெளி - யாதினும் தாக்கற்று நிற்கும் தூய்ய சோதியாகிய சிவம். அப்பாலைக்கப்பாலாம் ஒத்தவும் - பராசத்தியோடு கூடியும் கூடாமலும். ஈசன் தானான உண்மை - சிவத்தின் உண்மை நிலை.
1738

கொழுந்து - சிவக்கொழுந்து அதாவது ஞானலிங்கம். எழுந்திடம் - பரை என்னும் சிற்சத்தி. பரம் திடம் - பரசிவத்தின் உண்மை நிலை. பார்ப்பதி மேலே திரண்டெழக் கண்டவன் - மாதொரு கூறனாகக் கண்டவன். 1739

கூட்டம் - ஒரு பாகத்தமர்ந்த சேர்க்கை. ஞானமாம் சந்தித்திருந்த இடம் - ஞானம் உண்டாகும் இடம். பெருங்கண்ணி - குண்டலினி. உந்தியின்மேல் வைத்து - மணிபூரகத்தில் மனத்தைப் பதித்து (Solar pluxes).
1740

தாரணி - அண்டங்கள் எல்லாமும், அவைகளில் உள்ள இயங்கியற் பொருள்கள் எல்லாமும். தாபரம் - தாபர இலிங்கம் என்கிற ஞான லிங்கம். சத்தி...ஆகுமே - சிவத்துடன் சத்தி சேர்ந்துதான் உருவ உலகமாகும். 1741

வரைத்து - எல்லைப்படுத்தி. 1742

இப் பாட்டு மஞ்சன நீராட்டி, மலரான் அருச்சித்து, சிவ நாமங்களை உச்சரித்து, அவன் திருவடியை உள்ளன்போடு உணர்ந்து உருக வேண்டுமென்று கூறிற்று. 1743

இன்புற என்று அன்று - இன்பம் அடைக என்று அப்பொழுது.
1744

மலர்ந்த - உலகமாகப் பரிணமித்த பிரகிருதி மாயைக்கு அதிபனான. பலந்தரும் ஐம்முகன் - முத்திப் பலனைக் கொடுக்கும் சதாசிவன். பலந்தரும் - ஐந்து மூர்த்திகளாயிருந்து அவ்வப்பயனை அளிக்கும். பராநந்தி - சிவலிங்கம் (இது ஞான லிங்கமாகிய சதாசிவத்தின் மேலாகிய இலிங்கம்). 1745

மேவி...சுடர் - வீணாத்தண்டு ஊடே செல்லும் செம்மையாகிய சோதி. ஆவி - உயிர். மேவப்படுவது - தழுவப்படுவது. விட்டு நிகழ்வது - ஒழிக்கப்படுவது. 1746

உடல்...கொண்டு - பக்குவப்பட்ட ஆன்மாக்களுடைய உடல், பொருள், ஆவி மூன்றையும் அடிமையாக் கொண்டு. படர்வினை - தொல்வினை (சஞ்சிதம்). கை வைத்து - தலையில் கை வைத்து. அடிவைத்து - தலையில் திருவடியைச் சூட்டி. நுண்ணுணர்வாக்கு - பசுகரணங்களைப் பதிகரணங்களாக்கி ஞான வடிவினனாகச் செய்து. 1747

வியவார் - மகிழார். உயலார் - உய்யும் படி எழுந்தருளிய. 1748

பச்சி...ஆசாரியன் - தீக்கை செய்யும்போது ஆசாரியன் வடக்கு முகமும் மாணவன் கிழக்கு முகமாகவும் இருக்கவேண்டும். ஆதலால் ஆசாரியனுக்கு மாணவன் மேற்கே வீற்றிருப்பதால் பச்சிம திக்கிலே என்றார். உச்சி... வாதே - சிவம் இருக்கும் இடம். அதுதான் உயிர் நிலையும். உயிரை விட்டு என்றும் பிரியாதவன். 1749

பொட்டடித்து - வெறும் வாயாடியாக. பொட்டடித்து-மாயையை நீக்கி. உள்ளமர் மாசு - கன்ம மலம். தட்டொக்க - இருவினை ஒப்பு, மலபரிபாகம் உண்டாக. வட்...த்தே - உலகப் பழமொழி. 1750

பிரிக்கின்ற விந்து - சிவனையும், சீவனையும் பிரிக்கின்ற மாயை. பிணக்கு - மாறுபாடு. கருக்கொண்ட - அண்டங்களையும் ஆன்மாக்களையும் தன்னுள் அடக்கி வைத்திருக்கின்ற. 1751

பாடல் - படல் என்பதன் நீட்டம்; துன்பத்துக்கு இடமான. குளிக்கொண்டே - சீவனுடன் மறைந்து நின்றே. 1752

கொண்டான் - அடிமை கொண்ட சிவன். அடிமை - ஆட்கொள்ளப் பட்ட சீவன். 1753

நெறிக்கும் - நன்கு நிற்கும். பிராணன் நிலைபெற்ற - பிராண வாயுவை இருப்பிடமாகக் கொண்ட. பறிக்கின்ற - இயமனால் வலிந்துகொள்ளப்படுகின்ற. நேர்மை-முறைமை. பிறக்க - பிறங்க என்பதன் வலித்தல் விகாரம்; விளங்க என்னும் பொருட்டு. 1754

உணர்வு உடையார் - பதி, பசு, பாச உணர்ச்சி உடையார். உணர்ந்த அக்காலம் - பதியை அறிந்த அக் காலத்தில். உணர்ந்து கண்டார் - பதி, பசு, பாச இயல்பின் உண்மை நிலையைக் கண்டார். 1755

காயப் பரப்பு - அளவில்லாத பிறப்பு. துரியம் - கேவல துரியம். சகலம்- அஞ்சு அவத்தையோடுங் கூடிய நிலை. ஆறாறு - 36 தத்துவங்கள். 1756

ஊன் உயிரென்ன - உடலும் உயிரும் போல. வானென - ஆகாயம் எல்லாப் பூதங்களிலும் கலந்திருத்தல் போல. 1757

அவனும் அவனும் - கன்மகாண்டியும் பத்திகாண்டியும். அவனை அறியில் - சிவனை அறியில். அறிவானும் இல்லை - சீவபோதம் இல்லையாம். அவனிவன் - சிவ போதத்தை அடைந்தவர்கள். 1758

நான் இது தானென்ன - சீவனோடு ஒன்றித்ததாய். ஊனிது தானுயிர் போல் - உடலைத் தானென்றிருக்கும் உயிரைப்போல. இருமாமுகில் போல் - கைம்மாறு கருதாது பொழியும் மேகத்தைப் போல. 1759

பெருந்தன்மை - சிவபிரான். யான் - சீவன். உமை மெய்யேதிருந்த - சிற்சத்தியே உடலாக. முன் - அநாதியில்; அதாவது படைப்புக்கு முந்திய காலத்தில். 1760

இரவும் பகலும்-அஞ்ஞானமும் ஞானமும். போகம் - சிவபோகம். 1761

விளக்குஒளி - விளக்குகின்ற ஞானம். இருள் - அஞ்ஞானம். 1762

குறிப்பினுள் - உள்ளத்திலே. வெறுப்பு இருள் - வெறுக்கத் தகுந்த அஞ்ஞானம். செறிப்பு உறு- பாசத்தைப் பொருந்திய. அறிப்பு உறு - அறிவு பொருந்திய. 1763

பேர்ந்து - அஞ்ஞானம் ஒழிந்து. அறிவே துணை - ஞானமே துணை. 1764

அன்றே - கன்மம் ஒழிந்தபொழுதே. வான் அறிந்தார்-சுவர்க்க போகங் களை அறிந்தார். 1766

அருள் எங்கும் ஆன அளவு - திருவருள் எல்லையை. ஐங்கருமம் - ஆக்கலாதிய ஐந்தொழில். கண் - அறிவு. 1767

அறிவில் - ஞானத்தில். செறிவு - நன்னெறி ஒழுக்கம். 1768

அடிபுனைந்து - திருவடிசூட்டி. 1770

பிறவாநெறி - முத்தி. மறவா அருள்-மறதியில்லாத ஞானம். 1772

சிவமாய் அகம்புகுந்தானந்தி - சிவகாரணமாய் ஆனந்திப்பவன். ஆனந்தியாமே - பசுபதியாகிய சிவசாரூபத்தையடைவான். 1773

அறியாத மாமாயை-மூலப் பிரகிருதி. 1774

பவுதிகம் - பூத காரியம். சகளத்தன்-மாயையாற் றிருமேனி கொண்ட சிவபிரான். 1775

சிவத்தின் ஒன்பது அவசரங்கள் கூறப்பட்டன. 1776

அருட்கண் - அருளைக் கொண்டு பார்க்கும் கண். தெருட்கண் - ஒளியைக் கொண்டு பார்க்கும் கண். 1777

தலையான நான்கு - சிவம், சத்தி, நாதம், விந்து. கீழ் நான்கு-ஈசன், அரன், மால், அயன். 1779

ஒன்று அதுவால் - சத்தியால். என்னுள் நேயம் - என் உள்ளத்தின்கண் நேயமாய் இருக்கும் சிவன். 1780

குடிலை - மகாமாயை. வீயத்தகா - கெடுதல் இலாத. விந்து - சுத்தமாயை. 1781

மாயையின் பிரிவுகள் கூறப்பட்டன. பரவிந்து சுத்தமாயை என்றும், தனிமாயை அசுத்தமாயை என்றும், மாமாயை மூலப் பிரகிருதி என்றும் விளக்கப்பட்டது. 1782

ஐம்பாசம் - ஐந்து மலம். 1783

வாராவழி - பிறவாநெறி. பேர் ஒன்று - சி. 1784

உறுமலம்-ஆணவமலம். அத்தனை நீ-அவ்வளவே (தத்துவங்கள் அல்லாது தனித்திருக்கும்) ஆன்மாவாகிய நீ. கற்றன - மாறுபாடான கோட்பாடுகள். 1786

விளக்கு - அருள் ஒளி. வெளி-ஆகாய உருவத்தையுடைய சிவன். விளக்கை விளக்கும் விளக்கு - அருளைத் தெரிவிக்கும் ஞானம். விளக்கில் விளங்கும் விளக்கும் - அருளில் ஒளிரும் சிவம். 1787

புறமே - உலக மாயையிலே. நிறம் - இதயம். அறமே புகுந்த - இல்லறத்திலோ துறவறத்திலோ சென்ற. 1789

மருளது நீங்க - மயக்கம் ஒழிய. 1790

கூறு...தமை - சிவன் பிறந்து இறந்ததைப்பற்றி உங்களால் சொல்ல முடியுமா? முடியாது. வேறு... மின் - ஆதலின், பிறந்து இறக்கும் வேறு தெய்வங்கள் மெய்ப்பொருள் என்று கொள்வதை ஒழியுங்கள். பாறு - பருந்து. 1791

காளாமணி - அழகிய மணி அதாவது மாணிக்கம். 1792

வேட்டு அவி உண்ணும் - அந்தணர்கள் செய்யும் நெய் வேள்வியின் அவிசு உண்ணும் (ஆரியர் செய்யும் உயிர்க் கொலை வேள்வி அல்ல). இதனையே நம் திருஞானசம்பந்தர் "பறப்பைப் படுத்து எங்கும் பசு வேட்டு எரியோம்பும்" என்று கூறினர். பசு என்பது ஈண்டு நெய்க்கு ஆகுபெயர். நெய்யைப் பறப்பை (சிருக்கு - சிருவம்) யில் விட்டு எங்கும் வேள்வி செய்யும் என்று பொருள் காட்டவும். நாம் இலம் - வேள்வி செய்து காட்ட நம்மால் முடியாது (போனல்). பாட்டவி - தோத்திரப் பாடலான அவிசாவது. பால் அவி - பால்

ஆகிய அவிசாவது. ஆமே - ஆகும். 1793

ஆவாகித்து - எழுந்தருளச் செய்து. சீன்முகம் - அழகிய முகம். 1794

அஞ்சமுது - பஞ்சாமிர்தம். உபசாரம் எட்டு எட்டு - 16 உபசாரங்கள். 1796

நீரா - அலையும் ஓதையும் ஒழியாத. பிரான் திருநாமம் - நமசிவய. ஆராவழி - துதித்து வணங்கும் இடத்து. 1799

ஆனைந்து - பால், தயிர், நெய், வெண்ணெய், மோர். ஆன் ஈண்டுப் பாலுக்கு ஆகுபெயர். "பாலாம் ஐந்துடன் ஆடும் பரமனார்" (சம்பந்தர்) "கோதனத்தில் ஐந்தாடியை" (அப்பர்). பார் ஐங்குணம் - நிலத்தின்கண் உள்ள சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். 1800

உழை - பூமி. தழைக்கொண்ட - சுற்றியுள்ள. பிழைப்பின்றி-தவறாமல். 1801

வெள்ளக்கடலுள் விரிசடை - கங்கையைச் சடையில் தரித்த. உள்ளக் கடல் - உள்ளத்தின்கண் எழும் அன்புக்கடல். வார் - பெரிய. கள்ளக் கடல் - கடல்போலும் வஞ்சனை. அள்ளற் கடல் - ஒருவித நரகம். 1802

கழி...வழிப்படுவார் - கடல் ஒலியைத் தாழச் செய்து உரக்கத் தோத்திரங்கள் கூறி வழிபடுவோர். பழி வீழ - அஞ்ஞானம் நீங்க. வெளிப்படுவோர் - உண்மையான அன்பு நிறைந்த பூசனை புரிவோர். 1803

பயன் அறிவு - மெய்ஞ்ஞானம். வயனம் - காரணம். 1804

மூவாமுதல் - கெடாத காரணமாய். 1805

ஓடிசை - பரந்த கீர்த்தி. மூவரிற் பன்மையாய் - மூவரொடு கலத்தலால் பன்மையாய். 1806

பிழைப்பு - தவறுதல். இழைக் கொண்ட - சேர்ந்து இருக்கின்ற. மழைக்கொண்டல் போல - குளிர்ந்த மேகம் போல மெய் குளிர்ந்து. 1807

வென்று - புலன்களை வென்று. விரைப்பணி - தூபப்பணி. இறை பணி - பூசை. கூறியவாறு-தமிழ் வேதாகமங்களில் கூறியவாறு. 1808

சாத்தியும் - பூ, ஆடை முதலியன சாத்தியும். வைத்தும் - உருவத்தில் அமர்த்தி வைத்தும். ஆத்தி - ஆசை. மலக்கிட்டு - ஒழித்து. அகத்து இழுக்கு - மனக்குற்றம். மா திக்கு - முத்தி உலகம். 1809

ஆவிக்கமலம் - சகசிர அறை. 1810

சாணுகம் - ஆஞ்ஞை. பெருக்கு - அன்பினைப் பெருக்கி. 1811

பிணங்கு இருள் - மாறுபடும் அஞ்ஞானம். 1812

போகின்றுபதேசம் - முத்தி எய்தற்குரிய உபதேசம். 1813

ஆவயின் - அவ்விடத்தில். செயல் அறல் - சரியை ஆதிகள் ஒழிதல். 1814

விச்சுமின் - புகழுங்கள். 1815

புண்ணிய மண்டலம் - தேவகோட்டம். பண்ணியமேனி - தவம் செய்தவர். எண்ணிலி - ஆசையற்ற ஞானி. ஞானியூண் பார்க்கில் - ஞானிக்கு அன்னம் அளித்தால். 1816

இந்துவும் பானுவும் - இடைகலை, பிங்கலை. வாரியாம் - பயன்படுவனவாம். இந்...டை - கும்பகத்தைச் செய்து. 1817

மீதானம் - ஆறு ஆதாரங்களுக்கு மேற்பட்ட இடம். சாக்கிர அதீதம் - சாக்கிரமும் சொப்பனமும் அல்லாத நடுநிலைமை. 1818

மனபவனங்கள் - மனமும் பிராண வாயுவும். அனிதம் - அநித்தியம். மூலத்தான் - அஞ்செழுத்தால். பூதமாக்கி அகற்றி-ஐம்புலன்களை ஒடுக்கி. புனிதன் அருள் தனில் - திருவருட் சத்தியில். 1819

பகலும் இரவும் பயிலாத பூசை-உட் பூசை. 1820

படம் மாடக்கோயில் - மாடங்களை யுடைய கோயிலானது தத்துவங் களைக் காட்டும் படம் போன்ற அந்த இல்லில் இருக்கும். நடம் மாடக்கோயில் - ஆதாரங்களாகிய மாடங்களையுடைய நடமாடும் தேகமான கோயிலில் இருக்கும். 1821

தண்டறு - நீங்குதல் இல்லாத. கொண்டது - உட்கொண்டது. எண்டிசை - எங்கும் புகழ்பெற்ற. 1822

ஆத்தன் - மகேசுரன் அதாவது சமயம், விசேடம், நிர்வாணம், ஆசாரி அபிடேகம் பெற்றவன். மூர்த்தி கள் மூவர் - அயன், அரி, அரன். மூவேழ்குரவர் - தந்தை, தாய், மனைவி குடிவழியில் எழு தலை முறையில் உள்ள மூதாதையர் (அதாவது பிதிர்க்கள், நம்மை விட்டுப் பிரிந்து போனவர்கள்). 1823

அகரம் - ஆரியப் பிராமணர் வசிக்கும் இடம். 1824

வேறணிவார் - அடியாராகக் கருதிப் பூசிப்பவர். 1826

திருமுகமாய்விட்ட - அடியார் வடிவ மாகத் தோன்றிய. 1827

பண்பனை - சிவவடிவத்தையுடைய மகேசுரனை. 1828

பண்பு இலராகி - அன்பு இல்லாராகி. மத்தராய் - மயக்கம் உடையராய். முகமத்தோடு - உபசாரங்களோடு. அகம் மத்தராகி - மதிமயங்கின ராய். 1829

தாழ்விலர் - அன்புடன் பூசை செய் வதில் தாழ்வு இல்லாதவர். ஆழ் வினை - ஆகாமியம். அருவினை - சஞ்சிதம். போழ்வினை - பிராப் தம். 1830

அகக்குறை - தானிய விலைக் குறைவு. 1831

அவ்வுலகத்தே - அவரவர் பிறந்த உலகத்தே. 1832

அண்டரும் - அண்டு + அரும்; அடை தற்கு அரிய. 1833

அண்டங்கள் எழும் - நாம் இருக்கும் இச் சூரிய மண்டலத்தைச் சேர்ந்த எழு கோள்களும். அகண்டமும் வேறு பல அண்டங்களும். பண் டைமறை - தமிழ் மொழியில் முன்னிருந்த மறைகளும். என் கண் அன்றி - என் உள்ளத்தின் கண் அன்றி. 1834

மூடத்துள் - மனத்தின்கண் உள்ள உள்ளத்தினுள். மூப்பே - அநு பவமே. 1835

மயங்காவழி - ஞான வழி. போது - திருவடி. 1836

அகம் படிகின்ற - உள்ளத்தின்கண் வீற்றிருக்கின்ற. அகம்படி கண்ட வர் - ஆங்காரம் அடங்கியவர். 1837

அன்றே - அநாதியே. 1839

பாற்பட்டு - வசப்பட்டு. கணிந்தார் - மதித்தார். 1840

மிலைமிசை - மிசைமிலை, தலையில் அணியும்படி. புலை - குற்றம். பல மிசை செய்யும் - பயனை இசைக் கின்ற. 1841

அறியாப்பருவம் - இளமையில். குறி யால் - சிவ சின்னங்களால். மறி யார் - அலைகள் பொருந்திய. 1842

அவன் - சிவனடியார். இலயமதாமே - அடங்குமே. 1843

தெண் - தெளிவு. 1844

மேலுணர்வு - மேலாகிய அறிவு. 1846

விட்டுக்கிடக்கில் - நீங்கி இருந்தால். 1847
உள்ளமர் கோவிற்கு - உள்ளமாகிய கோயிலில் இருக்கும் ஆன்மாவுக்கு. 1848
விச்சுக்கலம் - (விச்சு - வித்து) உயிர் நிலைப்பதற்கு வித்தா யிருக்கின்ற பிராணவாயு இயங்கும் மூக்கு. வேலிச்செய் - ஆருளை உச்சிக்கு முன் - உச்சிக்குக் கீழே புருவ மத்தி நேர். உழவு - யோகம். அச்சங்கெட்டு - பயம் இல்லாமல். செய்யமுத்து-அமிர்தம் கொண்டு. இச்சைக்கு - உடலை வளர்க்கும் ஆசை கொண்டு. 1849
பொங்கார்-பெருமை நிறைந்த. 1853
கையக நீண்டார் - கை + அகம் - நீண்டார், உள்ளன்போடு கொடுக்க முந்துவார். ஐயம்புகாமல் - பிச்சை எடுக்காமல் "இருந்தவிடம் தேடி என் பசிக்கே அன்னம் பொருந்த முடன் கொண்டு வந்தால் உண்பேன்" என்று இருக்கும். 1854
நாலேழும் - மண்முதல் 11 தத்துவங்கள். ஆற - அடங்க. கோலாகலம் - பத்துவித நாதம். 1855
துரியங்கள் மூன்று - சிவதுரியம் சீவதுரியம், பரதுரியம். சொரு கிடம் - அடங்குமிடம். தாரம் - நாக்கு. பிறழ் - விளங்குகின்ற. 1856
ஆம்பவம்-இனி உண்டாகும் பிறப்பு. பாண்முத்திரை - சின்முத்திரை. நாம் - நாமம் என்பதன் குறுக்கம். 1857
தானம் - கண்டம். மோனத்து முத்திரை - மவுனம். முத்தாந்த - முடிந்த. 1858
மனமும் மவுனம்-ஐம்புலன் ஒடுக்கம். 1859
ஏகத்த - ஒப்பற்ற. ஆகத்தகுவேதம்- வேதம் கூறிய முத்தி அடைதற்குரிய. 1860
ஏகமும் - முழுதும். ஒன்றில் - சிவத்தில். 1861
துவாதச மார்க்கம்-யோக மார்க்கம். சோடச மார்க்கம் - சரியையிற் சரியையாதி 16 மார்க்கம். ஈரைவகை அங்கம் - பத்து அங்கம். ஆறு - காமாதி ஆறு. நவா-அவா அற்ற. 1862
முத்தர்க்கு - சீவன் முத்தர்க்கு. நாதர்க்கு - குருவுக்கு. தேனிக்கு முத்திரை - தேனு முத்திரை or பசுமடி முத்திரை. கானிக்கும் - வாயு அடங்கும். 1863
சுவடு - பிரமரந்திரம். பூநெறி - சகசிர அறை உச்சித் தாமரை. மதி மேதினி - சந்திர மண்டலம். நீள்நெறி - பிராணவாயு மேற்செல்லும் நெறி. 1864
ஊர்ஒளி - சீவஒளி. பிதிர்பதம் - உடலை விட்டு உயிர் பிதிர்ந்து நிற்கும் பதம். 1865
புகலிடம் போந்து - கன்மத்துக்கு ஈடாகப் பதவி அடைந்து.பின்னால் நவைதீர - உலகிற் பிறந்தபின் கன்மம் நீங்க. நிரந்தரம் - இடைவிடாது. அருளின் சார்வாகி - அருள் கூட்டுவிக்க நேர்ந்து.1866
புவியோர் நெறி - கன்ம மார்க்கம். விந்துதானதில் - சுத்த மாயையில். ஊனத்தோர் சித்தி வந்து - அந்த உடலிலேயே ஒப்பற்ற சித்தி பெற்று. ஓர் காயம் - ஒப்பற்ற உடலாக மாறும். 1867
தவலோகம் - ஒளி உலகம். 1868
பிரளயம்-வேறு சரீரம். உணர்வுற்று- தத்துவ ஞானம் அடைந்து. 1869
செத்தார்-உலகத்தை மறந்து சமாதியில் இருப்பவர். செத்து நீர் சேர்வது - அவிச்சை கெட்டுச் சிவத்தைச் சேர்வது. திரிமலம் செத்தார் - மும்மலம் கெட்டவர். 1870
கருவிட்டு-பிறப்பு அற்று. உரவோன்- வல்லமையுள்ள. புதல்வர்-கடவுள்

நெறிப்படி நிற்பவர். தன்னிச்சை- கருதும் விருப்பம். 1871
இங்கு - இவ்வுலகத்தில் 1872
உண்செரு-உள்நாட்டுக் கலகம். 1873
அனல் கோக்கின் - தீயிட்டால். அலங் கார பங்கம் - நாடு அழியும். 1875
குகை - நிலவறை. 1876
குகையின் ஆழம் அகலம் சாண் அள வில் கூறப்பட்டுள்ளது. 1877
குகை செய்யும் இடம் கூறப்பட் டுள்ளது. 1878
நால்வட்டம் - நாலா பக்கம். பஞ் சாங்க பாதமாய் - அஞ்சு அங்கங் கள் நிலத்தில் பதியும்படி வணங்கு தற்கு இடமுள்ளதாய். நவபாதம்- ஒன்பது காலடி. ஓசம் - குகை, கோயில். 1879
முஞ்சி - தருப்பைப் புல். சுண்ணம் - சாந்து. பொதியல் - பூசுதல். 1880
நள் குகை - குகை நடுவில். 1881
குப்பாயம் - சட்டை. சுண்ணம் - வாசனைப் பொடி. 1882
சாரு - சாய் மணை. போனகம் - சோறு. குருத்தலம் - குருவின் முன். மேல் வட்டம் - மேல் நிலை. 1883
ஆதனம் - சமாதிக் குகையின் மேலுள்ள வேதிகை. 1885
குடிலில் - பரமாகாயத்தில். வயிந்தவம் ஒன்பான் - விந்து மாயாகாரியம் ஒன்பது. கதியில் - முறையாக. 1886
மற்று இவை ஈரிரண்டு - விந்து, பர விந்து, நாதம், பரநாதம். விந்து பேதம் - 25. நாத பேதம் - 24. இவைகள் விந்து, நாத தத்துவங் களின் உண்ணிலைக் கருவிகள். 1887
எமுறு - இன்பம் பொருந்திய. மேவா - மேவி. 1888
நிவிர்த்தாதி - நிவிர்த்திகலை முதலி யன. கண்ணினுள் - கருத்தினுள். மனுதி - அந்தக்கரணங்கள். 1889
கந்தமதாகிய - வாசனை பரவிய. வீயம் - வியம் என்பதன் குறுக்கம், வியம் - பெருமை. 1890
காய ஐம்பூதம் - ஆகாய முதலாம் ஐம் பூதம். காரிய மாயை - விந்துவின் விகாரமான அசுத்த மாயை. 1891
பிரமம்போல் அல்லது பரமம்போல் - சிவத்தைப் போல. படம் கடம் - வேட்டி, மட்குடம். 1893
அது வித்தில் - அந்த விந்துவாகிய வித்தில். அண்ணிக்கும் - கலந் திருக்கும். மதுவித்திலே மலர் - மதுவுக்குக் காரணமாகிய மலர். பொது வித்து - புருவ மத்தி அல் லது சிற்சபை. 1894
முன்னுளிரதம் - முந்தின தினத்தில் உண்ட அன்ன இரசம். 1896
புற்பனி - புல்நுனிப்பனி. எழ் மூன் றின் - எழ்தாதுக்களில். இரதம், இரத்தம், சுக்கிலம் என மூன்றி னும். 1897
நேயத்தே - சிவத்திலே. 1898
ஒழியார் - ஆசையை ஒழியார். 1899
மூலத்தே சேர்க்கின்ற - மூலாதாரத் தில் வீணுத் தண்டு ஊடே விந் துவைச் செலுத்துகின்ற. 1900
சிவயோகம் தாங்காது - சிவயோக மார்க்கத்தில் நில்லாமல். உட்கும் - கெடும். ஓம்பா - காக்கப்படாமல். 1901
மாயாள் - பெண். இவர் வேண்டில் - கூடவேண்டில். வளர்பக்கம்-வளர் பிறை. அபரம் - தேய்பிறை, இரு பக்கத்திலும் சூரியன் நாள் அவ் வாறு ஆகும். அந் நாட்கள் கூடு தற்கு உரிய நாள்கள். 1902
ஆறு ஐந்து பன்னொன்று-வளர்பிறை யில் ஆறு நாட்களும், தேய்பிறை யில் சூரியனுக்குரிய 9 நாட்களில் 1,8,13 அமாவாசை ஒழிந்த ஐந்து நாட்களும் ஆகப் பதினொரு நாட் களும். சகமார்க்கம் - யோக நெறி யுடையார்க்கு மார்க்கம். வேறு

அன்பு - வேறு மார்க்கமுடையார்க்கு. பூவரிற்பின் - மங்கையர்க்குப் பூப்பு வந்தபின். ஓங்கும் - அமுதம் பெருகும். செய்ய-கலவி செய்ய. 1903

அளவிற்று - சரியான காலம். இருநாள் முகூர்த்தம் - இரவு காலம். எய்யும் கலைகாலம் - கருப்பையில் விந்துவைப் பதிய வைக்கும்காலம். இந்து பருதிகால் நையும் - இந்து பருதியின் மூக்கில் சரிக்கும் காலத்தில் அதாவது வாயு வலது மூக்கில் சரிக்கும் காலம். செய்க...வே- இடைகலையில் வாயுவை விடாது பிங்கலையில் விடுக்க. 1904

ஐயைந்து - ஐந்தும் ஐந்தும் - பத்து- பொறியும் புலனுமாகிய பத்து. 1905

கோமளம் - இளமை. 1906

கீழ்மை - தீநெறி ஒழுக்கம். 1907

வையத்துப் பரப்பு - உலக வியாபாரம். மூப்புற்று - கருமுதிர்ந்து. 1908

விது - சலனம். மாங்கனி - சிவம். 1909

கருத்தது வித்தாய் - நாயகனது எண்ணமே குழந்தைக்கு மேல் அனுபவத்துக்குக் காரணமாய். கற்பனை-நாயகனது எண்ணம். 1910

சத்தி - வல்லமை. வற்றில் - மூலாக்கினியால் விந்து சரீரத்திலேயே சுண்டி நிற்பின். 1911

மறித்து ஏற்றி - விந்துவைக் கீழ் நோக்க விடாமல் தடுத்து மேல் ஏற்றி. துற்றசுழி-ஆஞ்ஞை. 1912

கண்ணுங்கனல்-மூலாக்கினி. 1914

பொறியால் - அடக்காத ஐம்பொறிகளால். செறிவாய் - இரண்டு விந்துக்களும் கலந்து. மாயும்-கட்டுப்படும். 1915

விந்து செற்றவன்-விந்துவை அடக்கினவன். விந்து செற்றவன் - விந்துவினால் செயிக்கப்பட்டவன். காலங்களில்-இளமையில். விந்து செற்று உற்ற காரிகை - தான் கூடின பெண். காலின்கண்-தனஞ்செயன் என்னும் வாயு மூலமாக. 1917

காதல் நலத்தக - காதலால் நலம் உண்டாக வேண்டிய. உதர...... செய்து - முன்னுளிலேயே மலம் போகச் செய்து வாத, பித்த சிலேத்துமங்கள் தம்தம் நிலையில் இருக்கச் செய்து. 1918

மேலாநிலம் - நிராதாரம். கோலால் - சுழுமுனையால். குறி - ஆசிரியன் கூறியபடி. மாலானது - போகமானது. மாளும் - கட்டுப்படும். 1919

அழிவு - வெளிச் செல்லுதல். நந்திய- மிகுந்த. 1920

வீசம் - வித்து. பானுவதி கண்டம் - சூரியன் இருக்கும் இடம் வலது கண். சந்திரன் சார்பு - சந்திரன் இருக்குமிடம் இடது கண். (வலது மூக்கு இடது மூக்குமாம்). 1921

அமுத...மாள - விந்து கட்டுப்பட. அமுத...மாள - அவ்விந்து சிவாக்கினியாற் கட்டுப்பட. அமுத... யோகம் - அழிவற்ற சிவயோகம். பலாவனம் - பலாக்கனி நிறைந்த இடம். 1922

விந்து ஒழியா வகை - விந்து வெளிப்படா வண்ணம். ஆக...போகம் - ஆண் பெண் கலக்கும் காலத்திலும் விந்து வெளிப்படாமல் போகம் செய்வதுதான் சிவ போகம். 1923

விந்து சயம் - விந்துக்கட்டு. நடு நாடி நாதத்தோடு ஆற்றி - பெண்ணின் நாத சத்தியால் சுழுமுனை நாடியில் விந்து செல்லும்படி செலுத்தி. 1925

கனன் மூல - மூலக்கனல். சிந்தனை மாற - உலக சிந்தை சிவத்தினிடம் மாற. விந்துவும் மாளும் - விந்துவும் கட்டுப்படும். 1926

வித்துக்குற்றுண்பான் - வித்துக்கு வைத்திருக்கும் நெல்லைக் குத்தி உண்பான். அதுபோல், விந்துவைக் கட்டிச் சுழுமுனையில் ஏற்றாமல் மாதரிடத்தில் செலுத்துபவன். 1927

அன்...கண்டு - அன்னத்தால் உண்டாகும் விந்து. மின்...காயத்திலே - விந்துவை நாத சத்தியின் உதவியால் பயன்படுத்திக் கொள்ளாமல் விட்டுவிட்டால் நாதமும் விந்துவும் அழியும். 1928

சொன்னமுமாம் - தங்கம்போல் மாறும். அன்னவர் - விந்துவைக் கட்டினவர். 1929

பிராணனு...மூன்று - பிராணனுக்கு கருதப்படும் அகாரம், உகாரம், மகாரம். 1930

விந்து வந்த பதினொன்கு - விந்து மாயையினின்றும் வந்த பதினொன்கு வித்தைகளும். மான் - மனம். 1931

விந்து அடங்க - விந்து கட்டுப்பட. 1932

வறுக்கின்றவாறு - விந்துவைக் கட்டும் உபாயம். நிறுக்கின்ற-அடக்குகின்ற. நீள்வரை - வீணைத்தண்டு. பொறிக்கின்ற - சேர்க்கின்ற. அத்திப்பழம் - உடல். 1933

சந்திரன் - இடைகலை. அங்குதி மந்திரம் - அப்போது உண்டாகும் உறுதிப்பாடு. 1934

காமத்தை நாடினுல் எல்லாம் வீண் என்பதைக் கூறிற்று. 1935

உரம் அடி மேதினி - உறுதியுள்ள திருவடி மண் தத்துவம் ஆம். உந்தியில் அப்பாம் - உந்திவரை நீர் தத்துவம். மூலே மேவிய கீழ் அங்கி - மார்புவரை தீதத்துவம். கருமூலை மீமிசை கைக்கீழிற்கால் - கறுத்த மூலைக்காம்பினின்று தோள்வரை கால்(காற்று) தத்துவம். கந்தர மேல்வெளி - கழுத்துக்குமேல் வெளி (ஆகாயம்) தத்துவம். 1937

தேவர்கள் - கோள்களும் - மீன்களும். இறைவன் இணையடி தஞ்சுடராக - இறைவன் திருவடியை வலம் வந்து வணங்குதலால் தமக்கு ஒளி உண்டாக. 1938

பகலவன் - அண்டச் சூரியன். மாலவன் - அரி. இகல் அற - பேதம் இன்றி. பகலவன் - சிவ சூரியன். 1939

ஆதித்தன் - சிவ சூரியன். சோதி - அண்டச் சூரியன். ஆதியில் - சிவபிரானிடத்தில். 1940

தத்துவமாய் - மெய்ப்பொருளாய். தையல், சம்பு - சத்தி. சிவம். (Positive and Negative Energy). தண்சுடர் - அருள் ஒளி. 1941

இது விசுத்தியில் சூரியன் உதிக்கும் முறை கூறியது. 1942

கேதமுறுங் கேணி - குற்றத்தைச் செய்வதான கிணறுபோலும் ஆதித்த மண்டலம். சோடசம் - பதினாறு. 1943

பேதித்த நால் - வேறுபட்டுத் தோன்றும் நால்வகை வாக்கு. துடியிடை - சத்தி. 1944

பார் - மூலாதாரம். நீருக்கும் தீக்கும் நடு - மணிபூரகத்துக்கும் அனுகதத்துக்கும் நடு. 1945

இடந்து - பிளந்து. வெளிசெய்து - விளக்கி. எண்ணுங்கிழமை - தியானிக்கும் உரிமை. 1946

கலைநூலவர் - கலைப்பட்ட நூற்களை உணர்ந்தவர். தீரன் - சிவபிரான். ஊரை - ஈசன் இருக்கும் புருவமத்தி, உச்சித் தாமரை. 1947

கன்றிய - ஒளித்துள்ள. குழல் - சுழுமுனை. 1948

ஆதித்தன் - பிங்கலை. அடங்குமிடம்- சுழுமுனை. 1949

உருவி - மூலாதாரத்தினின்றும் சுழு முனையில் ஊடுருவி. 1950
உவா - பூரணை. 1951
பானுவில் இந்து வந்து ஏய்முறை - சந்திரகலை சூரியகலையில் ஒடுங்கி நிற்கும் முறை. உபயநிலம் - சுழு முனை. 1952
ஒன்ற வாங்கும் - கூடும்படி வாசியை உள்ளடக்கும். கலைஇடை நான்கு- இடைகலை, பிங்கலை, சுழுமுனை, அனல். 1953
ஈரண்டம் - அனல், சூரியன். அண்டத் தக்கார் - அடையத்தக்கவர். 1954
ஒன்பது - ஒன்பது கோள்கள். 1955
உந்தும் - நடத்தும். 1956
உள்ள-உள்ளத்தில். அருணோதயத்து- சிவந்த சிவ சூரிய ஒளி வீசுதலால். 1957
நால்வர் - அயன், அரி, அரன், ஈசன். 1958
புவனபதி - புவனங்களை உண்டாக்கி னவன். மெய்யிருள்-உலக இருள். செய்யிருள் - கன்மம். என் கை இருள் - என்னிடத்து உள்ள இருள். 1959
எற்றி - வீசி. அளித்திடும் - உதவி செய்யும். அருங்கனி ஊறல் - மதி அமுதம். கனிச்சுடராய் - கனிந்த அருள் ஒளியாய். அளிச்சுடர் - அருள்ஒளி வீச்சு. 1960
நேர் அறிவாக - நேர் அனுபவத்தில் அறியக் கூடியதாக. போர்-பேதம். தேர் - சூரியன் தேர். 1961
மண்டலத்துள்ளே - மண் தலத் துள்ளே, பூமியிலே. கண்டிடத் துள்ளே - கண்ட இடத்துள்ளே, விசுத்தியில். 1962
நாபி - கொப்பூழ். கண், நாசி, நயன நடு - புருவமத்தி. தூபி - சிரம். ஈசன் - மகேசன். 1963
அன்றிய - மாறுபட்ட. இருசுடர் - பெருமை பொருந்திய சுடர். துன்று - தோன்ற. 1964
கடம் - மட்குடம். 1965
ஐவர் - பஞ்சேந்திரியம். இடை ஆறங்கம் - அங்கத்தின் நடுவேயுள்ள ஆறு ஆதாரங்கள். 1967
இளையா - சோர்வு படாத. அன்மையன் அன்றென்று - உடம்பினின் றும் வேறானவன் என்று. 1968
ஆற்றங்கரை - உலக வாழ்வு. அன்னம் இரண்டு - சிவன், சீவன். துணைப் பிரியா - இரண்டும் தனித்து இரா. தன்மை தன்னிலை அன்னம் தனி ஒன்று - விகாரப்பாடில்லாத - ஒப்பற்ற பரமான்மா. பின்னது - இன்னொன்று. மடவன்னம் - அறியாமை நிறைந்துள்ள சீவான்மா. பேறணுகாது - தான் வேறு என்று எண்ணிக்கொண்டு இருக்கும் அளவும் முத்தி அடையாது. 1969
வைகரியாதி - வைகரி முதலிய ஐந்து வாக்குகள். மாயா மலாதி - மாயை முதல் ஐந்து மலங்கள். புருடாதி - புருடன் முதலிய ஏழு தத்துவங்கள். மெய்கரி - பிறப்பை ஒழித்து நிற்கும். கரி ஈசன் - சாட்சியான சிவன். 1970
அணு - சீவன். அணுவில் அணு - சிவன். அணுகல் - கூடுதல். 1971
படர்கொண்ட ஆல் - விழுதுவிட்டுப் படருந்தன்மையுள்ள ஆலமரம். சுடர்கொண்டு - அருள் ஒளியினால் விடர்கொண்ட - அநாதியே பந்தித்துள்ள. நடர் - அம்பலக் கூத்தர். 1972
அவன் - சிவன். கனு - பேதம். தணிவு - எல்லை. 1973
கோ - பசு. ஆவி - சீவன். 1974
தெளிவன் - சிவன். பயில் சீவனார் - யோக நெறி பயின்ற சீவன். 1975
சேதனத்தாய குரு - மானிட வடிவங்கொண்ட குரு. அதில் -

யோகத்தில். ஒயும் - ஒழியும். 1976

பசுக்கள் - மனிதர்கள். கொற்ற - மேம்பட்ட. குறி கட்டி - உருவ வழிபாடு செய்து. உற்ற - யோக நெறிப்பட்ட. 1977

கொல்லை - ஐம்புலக்காடு. வல்ல - சத்தியுள்ளதாக. கொல்லை செய் - திருத்தப்பாடு இல்லாத காடு போன்ற. 1978

குண விளக்கு - ஆனந்த ஒளி. பணம் - படம். கணம் - கூட்டம். 1980

எங்கும் தானானபோதன் - சிவன். செறிவாகி - கலந்து. 1981

ஆறாறு - உள் தத்துவங்கள் 36. ஆறாறு...றானே - தத்துவங்களைக் கடந்து நின்றான். 1982

தலைப்பறிகின்றார் - மீண்டும் பிறக்கின்றவர்கள். நவமான - மேலான. 1983

ஆகமதத்தன - மதத்தன ஆக. ஆகமதத்து - உன்மத்தமாக. தறி - சிவன். பாகன் - ஆன்மா. 1985

கால் கொத்தி - பிராணவாயுவை அடக்கி. திகைத்தன்றி - வருத்தப்பட்டல்லாமல். அம் மா - அந்த இந்திரியங்களாய யானைகள். 1986

புள் - ஆன்மா. நிலம் - சுவை முதலிய ஐந்து. நீர்மை - இந்திரிய வியாபவம். மேய்ப்பான்-சிவன். வழி ஒன்பது - நவத்துவாரம். 1987

சிங்கம் - இந்திரியம். உகிர் - நகம் (செல்லுதல்). எகிர் - பல் (பற்றுதல்). 1988

தொண்ணூற்றறுவர் - 96 புறத் தத்துவங்கள். ஐந்தரு - அஞ்சு விடயங்கள். ஐவர்க்கு இறை - மனம். 1989

திருமங்கை - அருட்சத்தி. தன்னை - மனத்தை. 1990

இல்லி - துளை. இருட்டறை - சரீரம். எண்ணிலி - அளவிடப்படாதவனை. சிவன் இல்லது - துவாதசாந்தம். 1991

நிதி - சமுத்திரம். 1992

குட்டம் - ஆழம். வாவி - முகம். மீன் - இந்திரியம். 1993

விடக்கு - உடல். இரண்டு - அருந்தல், பொருந்தல். நடக்குமளவு - பிராணவாயு இயங்கும் வரை. 1994

அஞ்சு - பஞ்சேந்திரியங்கள். அசேதனம் - சடப்பொருள். அடக்கா - அடக்காமல். 1995

மும்மதவேழம் - இந்திரியம். பிழைத்தன - தவறு செய்தன. மண்டி - நிறைந்து. குலைக்கின்ற - அறிவை அழிக்கின்ற. 1996

பேய்த்தேர் - கானல். அருத்தம் - பொருள். அத்தனை - அவ்வளவு. 1998

இன்னுயிர் - கருணை. தளைக்கொன்ற - கட்டிய. நாகம் - விந்து. அருசாடல் ஒடுக்க - பொறி வாயில் ஐந்தவிக்க. துளை...தூங்கும் - சுழுமுனையில் பொருந்தும். 1999

விதி - முறை. படர்க்கின்ற - படர்கின்ற. 2000

மைய - மெதுவாக. குறிவழி - உபதேசப்படி. 2001

பொருள் - உடல். விடுமின்கள் - அடக்குங்கள். குன்று...தாங்கல் - விடயங்களிற் செல்லாமல் தடுத்தல். 2002

ஊற்றுகை - அமிர்தப் பெருக்கு. ஒருங்கல் - ஒடுங்குதல். 2003

வரி - உறுதி. மைசூழ் வரை - ஆணவம். 2004

இசை - பண். பொய்வருடைய - அறியாமை மிக்குள்ள மலையாட்டை ஒத்த. 2005

கணு - உபதேசம். அணு - பாசத்தோடுள்ள ஆன்மா. 2006

ஊண்பொருட்டு - வயற்றுப் பிழைப் பிற்கு. அந்தகாரவோர் - அழகிய குரு பீடத்தில் அமர்வோர். 2007

கலதி - பாவி. அசத்து - பொய்ப் பொருள். கோமானலன் - பெருமையுடையவன் அல்லன். 2008

கற்பங்கள்-சங்கற்பங்கள் (எண்ணங்கள்). தற்பாவம் - ஆன்ம அறிவு. 2009

மூராணும் - மாறுபட்ட. பழங்குழி - பாழ்ங்குழி. முன்பின் அற - முன் பின் என்று இல்லாது. 2010

தவிர - ஒழிய. கோள் - குற்றம். சிரத்தோடு - சிரசின் மேல், 2012

பூசற்கு - கலகத்துக்கு. 2014

நேயம் - சிவநெறி. ஆயத்தவர் - சிவனடியார் கூட்டத்தில் இருப்பவர். அற்ற நேயர் - ஆசை அற்ற அடியார். 2015

பரிசனவேதி - உலோகங்களைப் பொன்னுக்கும் மருந்து. 2016

தனைப்பெற - தன்னை அறிய. சதுர்- பெருமை. ஊனேஎன - இந்த உடலிலேயே என்று. 2017

கருவழி - பிறக்கும் வழி. கருவழி கண்டவர் காணுவழி, பெரும் வழி, நந்தி பேசும் வழி - முத்தி நெறி, சன்மார்க்கம். 2018

பரஇன்பன் - பேரின்ப வடிவினன். உயர் - கிளைத்து எழும். 2019

சத்து - சிவம். அசத்து - பாசம். சதசத்து - ஆன்மா. 2020

தற்பர மேவுவோர் - சிவத்தை அடைய முயல்வோர். 2021

மல்லார் - வலிமையுள்ள. 2022

மீட்டேடி - அதினின்றும் திருப்பிப் போகங்களைப் புசிப்பித்து. தானத்துளிட்டு - புவனங்களில் இருத்தி. நாட்டல் - நிலை பெறுவித்தல். 2023

சடம் - தேகம். சத்துடன் - சிவத்துடன். ஐங்கருமம் - ஐந்தொழில். 2024

ஈசத்துவம் - ஐந்தொழில். 2025

மாணிக்க மாலை - மணி ஒளி போன்ற கதிர் ஒளிக் கூட்டம். ஆணிப் பொன் - பொன்னம்பலம்-உச்சித் தாமரை. ஊணுக்கு - சோற்றுக்குக் கேடாய். 2026

அசத் சத்து - சீவத்துவம். அணு - ஆன்மா. இசைத்தான் - கூட்டி வைத்தவன். 2027

எறு + நெறியே - உண்டாகும் பொழுதே. ஈறில் உரை-அழியாத உபதேசமொழி. மாறில்-ஒழியாத. 2028

கண்காணி - மேற்பார்வையாளன். 2029

வட்டம் - பூமி. 2030

பத்தி விற்றுண்டு - பத்தி நெறியில் தாம் நில்லாமல் காசுக்காகப் பிறர்க்கு எடுத்துரைத்து. பகலைக் கழிவிடும் - நாள் கழிக்கும். மத்தகர் - மதிமயக்கம் உடையவர். வித்து - பிறப்புக்கு ஆதாரமான கன்மம். விளைபுலம் - கர்ப்பாசயம். பித்தர் - ஞானிகள். 2031

வடக்கு வடக்கு என்பர் - வடக்கேயுள்ள காசி காசி என்பர். வடக்கில்...கே - வடக்கே உள்ள 'காசி' என்ற இரண்டு எழுத்திலுள்ள பொருள் அறிவுடையோர்க்கு அகத்தினில் "சி" என்ற எழுத்தைக் "கா" என்று பொருள் படும். Vide "சி எழுத்தொன்றைச் சிந்தையில் இருத்த", சிற்றம்பல நாடிகள். 2032

காயக் குழப்பன்-ஆன்மாவைச் சரீரத்தோடு சேர்ப்பவன். காய நன்னுடன் - காயமே கோயிலாக் கொண்டவன். கமழ்கின்ற-விளங்குகின்ற. காயத்து உள் - உள்ளத்தினுள்ளே. 2033

கண்காணியாக - நேருக்கு நேராக. காதலன் - சிவன். 2034

கன்னி ஒரு சிறை - திருவருட் சத்தி பதிந்தவர் ஒரு பக்கம். தன்... சிறை - தன்னை அறிந்தவர் அதாவது ஆன்ம இயல்பை உணர்ந்தோர் ஒரு பக்கம். என்னிது - என்ன ஆச்சரியம். 2035

படலம் - மறைப்பு. காணாதவர் - காண ஆசை கொள்ளாதவர். காணாதவர் - குருடர். காணாது கண்டவர் - சீவ போதம் இன்றிச் சிவபோதமாய்க் காண்பவர். 2036

பிரகிருதி - பித்த சுபாவம். 2037

பிரான்...எட்டும் - அட்ட மூர்த்தங்கள் (நிலம், நீர், அனல், வளி வெளி, சந்திரன், சூரியன், ஆன்மா). பராமயம் - பரையின் மயம். சுராமயம் - ஆனந்த மயம். நிராமயம் - துன்பம் இன்மை. 2038

ஒன்று இரண்டாகி - சிவத்தொடு வேறாகி. ஒன்றாயினோர் - சிவத்தொடு கலந்தவர். ஒன்றும் இரண்டும் - மும்மலம். ஒன்றோடொன்று - துவிதம். 2039

உயிரது - உயிர்ப்பு. அயர் அறிவு - மறந்து நினைக்கும் அறிவு. பயிர் - விளைவு, வாழ்வு. 2040

அயரும் - மறைக்கச் செய்யும். உயிர் அன்று உடலை விழுங்கும். உணர்வை - (உடல் உயிரை விழுங்குதல் என்பது சாதல்) பிரகிருதி மாயா உடலை சுத்த மாயா உடலாக உணர்தல். 2041

உலகாணி - உலகுக்கு உறுதி. நிலவாணி ஐந்து - ஐம்பூதம். சிவவாணி - கலந்து நிற்கும். தலைவாணி-தன்னிடத்து வாழ்பவனாக. 2042

தானந்தம் - எல்லாவற்றிற்கும் தானே முடிவிடமாம். ஊனந்தமாய் - உடல் இறுதியாய். தேனந்தமாய் - தேன் போலும் இனிமையாய். கோனந்தமில்லாக் குணத்து - சிவனது எல்லையற்ற கருணையினால். 2043

உன்முதல் - மனம் இயங்குதற்கு மூலம். கன்முதல் - கயிலை. நன்முதல் - பிறப்பினும் வித்து (காமம் வெகுளி முதலியன). தன்முதல் - தலைமை. 2044

ஐவிதம் - கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை, சமாதி. ஆறு ஆறு - 36 தத்துவங்கள். 2045

வித்துப் பொதிவார் - கன்மத்தை ஈட்டுபவர். விரையிட்டு நாற்றுவார் - பிறந்துழல்வார். தீயின் முனிகின்ற - விட்டில் விளக்குத் தீயில் மடிகின்ற. 2046

சடக்கென - விரைவாக. 2047

கையரை ஊட்டி - வஞ்சகருக்கு விருந்து செய்து. சாரல் - இடுகாடு. தழல் - அனல். முருடு - சிதை (முருட்டுக் கட்டை). 2048

நால்வர் - சனகன் முதலிய நால்வர். பரந்தன்னை-மேலான ஞானத்தை. உரம் - உறுதி. 2049

குன்றுகை - குறைதல். 2050

இன்பம் - சிவம். மறந்து - மயங்கி. சோறெடுங் கூறை - சோற்றுக்கும் துணிக்குமாக. 2051

பெறுதற்கரிய பிறவி - மானிடப் பிறவி. பெறுதற்கரிய பேறு - முத்தி இன்பம். 2052

தீர - சிவபத்தி ஒழிய. மாதவன் - சிவன். 2053

அங்கியின் - உயிரின்கண் உள்ள. கமலத்துறை - உள்ளக்கமலத்திடை உறையும். மெய்ப்பரிசே - உண்மையான நெறியே. வினவாது - விசாரித்துத் தேடாது. 2054

நஞ்செம்பிரான் - நம் + செம் + பிரான், நம்முடைய செம்மையான கடவுள். அஞ்சு உற்றுவிட்டது -

ஐம்புலனால் ஆட்டுண்டு வருந்து வது. 2056

பார்ப்பயன் - பூமியில் பிறந்ததால் உண்டாம் பயன். திருமரு மாத வம் - திருவருள் கூடும்படியான பெருமை மிக்க தவம். 2057

நீதி - முறைமை. நாதி - அநாதி என் றதின் முதற்குறை. 2058

மலர் களைந்து - பூக்களைக் கிண்டி. 2059

அருத்தி - அன்பு. அமராபதி - தேவ லோகம். வருத்தி - தவத்தால் உடலை வாட்டி. வழுக்குகின்றார் - நெறி தவறுகின்றார். 2060

அதிர்த்திருந்து - ஆடம்பரமாக இருந்து. ஆறுதிராகில் - மனமாதி அடங்கப் பெற்றால். சோதிக் கின்ற சூழ் - சிவச்சோதி. துடுப் பிடல் - ஆன்மா ஒருமை அடைதல். 2061

கரையருகு - சிவக்கருணை ஆற்றின் கரையை அடுத்துள்ள - கருணைக் குரிய. ஆறுக்கழனி - சிவக்கருணை வெள்ளத்தில் திளைக்கின்ற ஆன் மாக்கள். விளைந்த - உண்டான சிவானந்தத்தை. திரை அருகா முன்னம் - நரைதிரை உண்டாகா முன்னம். வரை அருகு - மலையைச் சேர்ந்த காடுகளிலோ, குகைகளி லோ. ஊறிய - செய்த. திரை உரு வம் - முதுமைப் பருவம். 2062

வரவு - தோற்றம். இரவு - முடிவு. அரவு அறிவார் - சொல்லத் தெரி வார். விரவு - கலத்தல். 2063

மன்னு - மன்னும். உள்ளும் - நினை யுங்கள். பறந்து - திரிந்து. அல மந்து - நிலை கலங்கி. 2064

செல்லுமளவும்-கூடியமட்டும். வல்ல பரிசு - இயன்ற அளவு. 2065

சென்றே...இல்லை - நாம் தேடிச் சென்று அடையும் சிவகதி இல்லை. நம் சித்தத்...பெறும் - உம் முடைய சித்தத்தின் உள்ளே தேய சிவகதி தானே வந்து நிலை பெறும். 2066

காற்றிசைக்கும் - பிராண வாயுவி னால் நடத்தப்படும். 2067

அக்கரை - பயனுடையது. 2069

பறக்கின்ற-பிரிந்து போகின்ற. 2070

ஈற்றுப் பசு - கன்று ஈன்ற பசு. 2071

விடு...போது - சாகும்போது. 2072

முத்தியை - முத்தி கொடுப்பவனை. ஞானத்தை - ஞானமயம் ஆன வனை. முத்தமிழ் ஓசையை - முத்தமிழ் வேத ஒலியைக் கேட்டுக் கொண்டிருப்பவனை. Vide "சதாசிவம் தத்துவம் முத் தமிழ் வேதம்" (திருமூலர்). நெய்த்தலைபால் - பால் தலை நெய் என்று கொள்ளவும். 2076

நியமத்தன் - காரணன். உகம் - ஆண்டு கள். பவமத்திலே - பிறப்பிலே. பாய்கின்றது - இறப்பது. 2077

எனைத்தோர் அகிதமும் - எவ்வித மான துன்பமும். துஞ்சொத்த காலத்து-மரணம் நேர்ந்தபோது. விஞ்சத்து - தத்துவங்கள் கடந்து. நஞ்சு - ஆணவம். 2078

செஞ்சு நிற்போர் - செய்து என்பது செஞ்சு என மருவி வந்தது; ஆசாரியன் பணி செய்து நிற் போர். 2079

கோதிலன் - குற்றம் இல்லாதவன். பரம் - சிவம். 2081

உருவத்...ளானே - பிறந்து அலையும் வருத்தத்தை நீக்குவான். 2082

காயப்பை - தேகம். சரக்கு - ஊன் முதலிய பொருள்கள். மாயப் பை - உடம்பு. ஓர்பை - ஒரும் உள்ளம். கள்வன் - உள்ளத்தி னுள்ளே ஒளித்தருளும் ஒருவன், உயிருடன் இணைந்த பரமாத்மா. 2083

இருகூறு - தூலம், சூக்குமம். மான்-மனம். புரியட்ட காயம் - சூட்சும சரீரம். 2084

இரதம் - அன்ன ரசம். அத்தி - எலும்பு. வழும்பு - நிணம். மச்சை - எலும்புக்குள்ளிருக்கும் பொருள். உபாதி - காரியம். 2086

அடி - சிவன் திருவடி. அவர் - சிவன். அறு - நீங்கும். பத்தோடு - பத்து வாயுக்களோடு. அடிக்காவல் - சிவ ஆலயம். (காவல் - ஆலயம் - உ-ம் திருவானைக்காவல் - திருக்கோடிக் காவல்). 2087

அறுபது + எட்டு - புறக்கருவிகள் அறுபதும், புரியட்டகமும். நாலுடம்பு - தூலம், சூக்குமம் காரணம், மகா காரணம். 2088

கடந்தொறும் - பிறவிகள் தோறும். 2089

ஆறு - அத்துவாக்கள் ஆறு. நடு - சிவம். மூவாறும் - கலைகள் பதினெட்டும் (பத்து வாயு + புரி அட்டகம்). 2090

மெய் - தூல சரீரம். பொய் - சூக்கும சரீரம். துல்லியங் காட்டுமுடல் - அதி சூக்குமம் அல்லது காரணம். ஐயன் அடிக்குள் அடங்கும். உடம்பு - சிவத்தில் அடங்கும் மகா காரண உடம்பு. 2091

இது, உயிர் பல அண்டங்களில் பல பிறவிகளை வெகு விரைவாக எடுக்கும் என்றது. 2092

அண்டசம் - முட்டையில் பிறப்பன. இரு பயன் - புண்ணிய பாவப் பயன். 2093

உண்டு - அநுபவித்து. கண்டு - அறிந்து. சூக்கம் காரணமா - சூக்கும தேக வாயிலாக. பண்டு - பழைய வினை. பிண்டம் - சரீரம். 2094

தாங்கினேன் - அதிகாரி, புருடன். ஆனவை - ஆணவ முதலியவற்றை. பரமத்து - முத்தியில். வினைக்கு - புண்ணிய பாவத்துக்குத் தக்கவாறு. 2095

தநு - உடல். அது - தநு. விந்துவும் நாதமும் - விந்து, நாதம், தநு. முப்பாழ் - ஆணவம், கன்மம், மாயை. முத்தி - மகா காரண உடல். 2096

விஞ்ஞானத்தோர் - ஒரு மலமாகிய ஆணவமலம் உடையவர். எஞ்ஞானத்தோர் - எஞ்சு ஞானத்தோர், கம்மம் தவிர்ந்து எஞ்சியுள்ள ஆணவம், மாயை ஆகிய இரு மலமுடையவர். அஞ்ஞானத்தோர் - ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலம் உடையவர். 2097

தலம் ஒன்று வேறு - வெவ்வேறு அண்டங்களில் பல வேறு வகைப் பட்ட உடல்களை. 2098

நல்ல...கள் - பரிசுத்தமான மனம் வாக்குக் காயம் உடையவர்களிடம். அல்ல...தே - ஐம்பொறி அடக்கமும் அந்தக்கரண சுத்தமும் இல்லாதவர் பசித்த முகத்தையுடையவர் அதாவது வருந்துவர். 2099

பண் - இனிமை. அண்ணாந்து பார்க்க - ஆராய்ந்து பார்க்க. 2100

இலையாமிடை - இல்லை என்று சொல்லும்படியான சிறுத்த இடை. சிலையாய - கல்போன்ற. 2102

ஐயைந்து - 25 தத்துவங்கள்; நிலம் முதல், புருடன் வரை. மத்திமை - புருவ நடு. பன்னான்கு - அந்தக் கரணம் நான்கும் வாயு பத்தும். புருடன் - ஆன்மா. உந்தி - கொப்பூழ். 2103

முதல் நனு ஐந்தாக - சாக்கிரம் முதல் ஐந்து வகையாக. அதில் நான்கு - சாக்கிரத்தில் சாக்கிரம் ஒழிந்த ஏனைய நான்கு. சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். இரண்டு - துரியம் துரியாதீதம். ஒன்று - துரியாதீதம். 2104

இந்தியம் ஈரைந்து - கன்மேந்திரியம் ஐந்து; ஞானேந்திரியம் ஐந்து. ஈரைந்து மாத்திரை - வசனுதி ஐந்து; சந்ததி ஐந்து. மாருதம் ஈரைந்து - வாயுக்கள் பத்து. சக்கரம் - சரீரம். 2105

காரறு - குற்றமற்ற. ஐந்து பூதங்களின் நிறம்:—பார் - பொன்மை. நீர் - பசுமை. தீ - வெண்மை, செம்மை. வாயு-கறுப்பு. ஆகாயம்-புகை. 2106

ஏதம் - குற்றம். கருவி - தத்துவம். 2107

இருபத்தஞ்சாலை - இருபத்தைந்து தத்துவங்கள். படுபரசேனை - வசனுதி ஐந்து. பாய்பரி ஐந்து - சத்தாதி ஐந்து. நால்வர் - நாலு வாக்கு. அடைய - மடங்க. கடைவாயில். 2108

உடம்பும் உடம்பு - வருந்தும். 2109

முருக்கும் - பிறப்பிறப்பை ஒழிக்கும். அசபை - அசபா மந்திரம். காமார்-காமனை எரித்த கண்ணுதல், முகம் - இருக்கும் இடம். 2110

பதினைலை - பதினொன்கு நூல்களை. ஆரியன் - இயற்கெனவே உள்ளத்தின்கண் உள்ள சிவன். கலைகளின் நாலு அறுபத்து - 64 கலைகள். 2111

உன்னின் - ஆராயின். 2112

முன்னிக்கு - ஆகாயத்துக்கு. ஒரு மகன் - ஓசை ஒன்று. மூர்த்திக்கு-வாயுவுக்கு. இருவர் - ஊறு, ஓசை. வன்னிக்கு மூவர் - தீக்கு ஊறு, ஓசை, ஒளி. வதுவைக்கு நால்வர் - நீருக்கு ஊறு, ஓசை, ஒளி, சுவை. கன்னிக்கு ஐவர் - மண்ணுக்குச் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். முன்னாள் - படைப்பிற்கு முன். கன்னியை - மாயையை. கன்னியே - முதற் காரணமாகக் கொண்டு. காதலித்தார்-உலகைப் படைக்க நினைத்தார் ஈசன். 2113

கனவு ஐந்து - சொப்பனத்தில் உண்டாம் அவத்தைகள் ஐந்து. கலந்தன தான் ஐந்து - இந்திரியம் ஐந்து. உண்ட நான்கு - அந்தக்கரண நான்கு. பரந்த வியாக்கிரத்து - விரிந்த மனத்தால். 2114

மன்று - உலகம். மனைவாழ்க்கை - உலக வியாபாரம். கண்டத்தில் - சொப்பனுவத்தையில். 2115

தானம் - கண்டத் தானம். மாலாகி-மயங்கி. அவ்வியத்தம் - மூலப்பகுதி. 2116

காட்சி - வியாபாரம். கமலம் - நாபிக் கமலம். விழுமம் - மேன்மையான. 2117

வானத்து - உள்ளத்தினுல். கருத்தின் தலை - மூலாதாரம். ஊமன்-ஆன்மா. 2118

ஊமை எழுத்து - ம் (மலம்). பேசும் எழுத்து - அ. உ (சத்தி சிவம்). ஆமை - ஆமையின் ஐந்து உறுப்புகள் அடங்குதல்போல. ஓமயம் - ஓம், மயம். நாமயம் - தற்போதம். 2119

நரிகள் பதினைலு - கன்மேந்திரியம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, அந்தக் காரணம் நான்கு. பரிய புரவி-வேகமாய்ச் செல்லும் ஓசை முதலிய ஐந்து. துரியம் இறந்த இடம் - துரியாதீதம். 2120

மாறுமலமைந்தான் - ஐந்து மலங்களும் நீங்காதவன். 2121

உண்ணுந் தன்னூடு - இருவினைகளால் எற்றுண்ணும் உயிர். 2122

நந்த - மிக. திதமான - நிலையான. கேவலம்-கீழாலவத்தை. பரமாகா-சிறப்பற்ற. 2123

தேசாய-புகழ்பெற்ற. தண்டு-பிரம்பு. நேசாய - கருணை நிறைந்த. நீடு - அநாதியே உள்ள. மாயான்-மாயை. 2124

மஞ்சு - மேகம். மந்தாகினி - நீர். மதி - புத்தி. அஞ்சுணு மன்னன் - ஆன்மா. 2125

படியுடை மன்னன் - ஆன்மா. பாய் பரி - சலிக்கும் மனம். ஐவர் - ஞானேந்திரியங்கள். உறைவோர்- கன்மேந்திரியங்கள். துடியில்லம் - இதயத்தானம். 2126

நேரா...உன்னி - ஐந்து அவத்தையிஞல் மலம் ஐந்தையும் அடக்கும் திறம் ஆராய்ந்து. 2127

சகலம் - கருவி, கரணங்களுடன் கூடி இருக்கும் அவசரம். 2128

விழிகண் - பார்க்கும் கண். மூவயின்- மூவகைப்பட்ட (சகல, பிரளயாகலர், விஞ்ஞகர்). 2130

மத்திமம் ஒத்த சிலந்தி வலயத்துள் - சிலந்திக்கூட்டில் சிலந்தி தான் தாங்கக் கட்டும் மத்தியிலுள்ள வலுத்த இடத்தில் இருப்பதை. அத்தன் - ஆன்மா. ஆடகம் - சரீரம். 2131

அச்சு வகை - மூர்த்தி பேதம். முச்சுமுடன் - அம்மூர்த்தங்களுடன். 2132

புருடன் பரம் - வித்தியா தத்துவம் ஏழு. வியோமம்பரம் - சிவ தத்துவம் ஐந்து. 2133

ஏலங்கொண்டு - பயிற்சி செய்து. குணம் - அநுபவம். மூலம் - மூலாதாரம். முறுக்கி - நாடிகளை நிமிர்த்தி. முக்கோணி - மூன்று மண்டலம். காலங்கொண்டான் - சிவன். 2134

கால் - பிராணவாயு. 2135

பத்தொரு பத்து - மண் முதல் தத்துவம் இருபது. ஓர் மூன்றும் - ஒன்றும் + மூன்றும் - நான்கு; அந்தக்கரணங்கள் 4. துரியம் - புருடன். காலம் - ஆன்மா. வியோமம் - ஈசன். மேலைத்துரியம் - சிவம். 2136

மூந்நூறு - 300. முப்பதோடு ஒருபான் - 30 × 10 = 300 ஆக மொத்தம் = 600. இரட்டியதாறு - 36. 600 × 36 = **21600.** நடந்தால் - **21600** சுவாசம் நடந்தால். 2137

தத்துவங்கள் 40048500ம் 96 தத்துவங்களிலும், அவை 25 தத்துவங்களிலும் அடங்கும். 2138

| | | |
|---|---|---|
| 36 | தத்துவங்கள் | சைவர்களுக்கு. |
| 28 | ,, | வேதாந்திக்கு. |
| 24 | ,, | வைணவர்களுக்கு. |
| 25 | ,, | மாயாவாதிக்கு. |

2139

வித்தகன் - ஞானி. அகாரம் - சிவம். 2140

ஐ ஏழும் ஒன்றும் - 36. 2141

மலாவத்தை - கேவலாவத்தை. 2142

மலம் ஐந்து - ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதம். 2143

மனு - மந்திரம். ஏழ்கோடி - ஏழுவகை முடிவைப்பெற்றது. அதாவது:—நம, சுவாகா, சுவதா, படு, வவுஷ, வஷட் முதலியன. 2144

நலம் தெரிந்து - நன்ருக ஆராய்ந்து கொண்டு. உள் இருபத்தைந்து - மண் முதல் தத்துவங்கள் 25. குறிவழி - குரு உபதேசம். திகைத்து - மயங்கி. 2145

சாக்கிர சாக்கிரம் - சாக்கிரத்தில் சாக்கிரம். ஆதித்தலையாக்கி-முதற்கொண்டு. நாலம் அளவாக்கி - தேகத்தின் உச்சி வரை செலுத்தி. அதீதத்து-துரியாதீதத்தில். அன்பான தாண்டவம் - சிவத்தின் கருணை நிறைந்த கூத்து. சிவம் ஆதல் ஐந்தும் - சிவ தத்துவங்கள் ஐந்தும். சிவாயமே - சிவமயமே. 2146

அனதான - அத்தன்மையதாகிய. விந்துவின் - மகா மாயையின். கனவா நனவு-நனவில் கனவு. 2147

அனன் - அன்னவன். 2148

செறியும் கிரியை-பொருந்திய செயல்கள். குறிதற்றிருமேனி - குறிக்

கப்படும் சிவ உருவம். அறிவு இல்-இவ்வளவென்று அறியமுடியாத. 2149

சிவ தத்துவங்கள் ஐந்தும், வித்தியா தத்துவங்கள் ஏழும் கூறப்பட்டன. 2150

காணும் - மூளைக்கின்ற. தாணு - சிவம். தண்டுலம் - அரிசி. 2151

பசுக்கள் - ஆன்மாக்கள். பால் - தன்மை. ஆயன் - பசுபதி, சிவம். கோல்போடின் - அருள் செய்தால். 2152

ஊசி - பொறி. விருகம் - காக்கை. பனித்தல் - சலனப்படல். பை - சரீரம். 2153

கெடுமவ்வுயிர் - கெடுகின்ற ஆன்மா. மயன் மேலுங் கிளைத்தல் - மயக்கம் அதிகப்படுமானல். 2154

தற்கு - தனக்கு. காமியம் - கன்மம். காதலாம் - மாயையாம். 2155

ஒவ்வொரு அவத்தையிலும் கழியும் தத்துவங்கள் இன்ன என இதில் கூறப்பட்டுள்ளது. 2157

புருடன் - ஆன்மா. கேவல விந்து - கேவலாவத்தையில் மாயையோடு. 2158

மானன் - ஆன்மா. முதியவனல் - பழமையான சிவாக்கினி. 2159

மூவர் - புருடன், பிராணன், சித்தம். இருவர் - பிராணன், புருடன். 2160

புரியட்டகம் - சூக்கும தேகம். மூன்று - மனம், புத்தி, ஆங்காரம். இரண்டு - புத்தி, ஆங்காரம். ஒன்று - ஆங்காரம். 2161

புலனில் வழக்கம் - உலக வியாபாரம் இல்லாத நிலை, ஐம்புலன் ஒடுக்கம். 2162

அனுமாதி - உத்தேசம். 2163

ஐம்மலம் - ஐந்து மலங்கள். அவை வன்மை - அவை எல்லாவற்றின் தன்மை. 2167

பகுதி மாயை - மூலப்பிரகிருதி. துரிய அத்தன் - துரிய அவத்தையில் இருப்பவன். 2168

இயற்பு - இயற்கை. 2170

இராகத்தில் - விருப்பினல். மயம் - மலம் (ஆணவம்). 2171

தாணு - சிவம். மதியொளி - ஞான ஒளி. 2173

சிங்கங்கள் மூன்று - காமம், வெகுளி, மயக்கம். நரிக்குட்டி - அந்தக்கரணங்கள். ஆனைக்கன்று - பொறிகள். பால் இரண்டு - பிரவிர்த்தி, நிவிர்த்தி. 2174

பதினெட்டு - புரியட்டகமும் தசவாயும். விதறு - கெடுதி. ஆனை - சிவம். 2175

நாலைந்து - மண் முதல் இருபது தத்துவங்களும். 2176

வித்தையாய் - ஞானமாய். மேனிகள் ஐந்து - ஐந்து மூர்த்திகள், அயன் முதல் சதாசிவம் ஈருக. 2178

புள்ளினம் - ஆன்மாக்கள். மாது - சத்தி. வேது - வேறுபாடு. சூது - சூழ்ச்சி. 2180

திருத்து - நன்ருக. வருத்தறிந்தேன் - தவத்தால் உடலை வாட்டிப் பின் அறிந்தேன். 2181

ஐவர் - பொறிகள் ஐந்து. வெளி - சிவம். ஐவர் கூடிய சந்தி - ஐம்பொறிவழிகளும் கூடும் இடம். கண் நாடி - உள்நோக்கி. 2183

தன்னறிவு - ஆன்ம ஞானம். 2184

சேதனன் - ஆன்மா. நீவுதல் - ஒழித்தல். 2185

பின்னம் - வேறு. துன்னுவர் - கூடுவர். 2187

எறிப்ப - விளக்க. 2190

தாவிய மாயை - சுத்த மாயை. 2192

கேவலத்து ஆணவத்தானவர் - ஆணவமலம் மாத்திரம் உள்ள விஞ்ஞான கலர். 2193

ஓமயமாகி - பிரணவ வடிவாகி. 2194

மூவகை நால்வகை - கேவல அவத்தை மூன்றே அன்றி நான்கு வகைகளும் உண்டு. 2195

எய்யாமை - அறியாமை. எய்தவன் - முயற்சித்தவன். வெள் - சிவ ஆகாயம். 2196

வியாத்தி ஆகும் - உள்ளடங்கி இருக்கும். ஆட்டி - அலக்கழித்து. கேவலம் அச் சகலம் - கேவல நிலையிலும் சகல நிலையிலும். 2197

ஆறு - மூலம், வழி. தன்பால் தனையறி - தனக்குள்ளே தன்னை அறியும். 2198

வித்தை முதல் மூன்று - சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம் ஆகிய மூன்று தத்துவங்கள். சிவம் சத்தியாம் - சத்தி, சிவம் ஆகிய இரண்டு தத்துவங்கள். 2199

மேல் மூன்று - காயபரம், வியோமம், பரம். 2200

காணும் உருவினர் - தூல சரீரமுடையவர். 2201

கிளர்ந்த - பொருந்திய. மந்திர மாமாயை - மந்திர வடிவமான மகா மாயை. 2203

நிற்க ஆணவம் - ஆணவம் மேலிட்டிருக்க. காமிய மாமாயை - கன்மமும், சுத்த மாயையும். 2204

மத்த - மயக்கத்தைச் செய்யும். தொத்து அற - தொடர்ச்சி நீங்க. 2206

அராகாதி - அராகம் முதலியன. கலாதி - கலை முதலியன. கிறியன் - வஞ்சகன். 2208

கேவலம் ஆதி - கேவலம், சகலம், சுத்தம். கேவல...சகலத்து - சகலாவத்தையிலும். மூன்று உள - சகல சகலம், சகல கேவலம், சகல சுத்தம். இவ்வாறே மூன்றுக்கும் கொள்ள அவத்தைகள் ஒன்பதாகும். 2210

அதீதாதீதம் - அதீதத்திற்கும் அப்பாற்பட்டது. வயிந்தவம் - சுத்த மாயை. 2211

உபசாந்தம் - ஓய்வு பெற்றிருத்தல். 2213

பராவத்தை - பரையினிடத்துத் தங்கும் அவதாரம். பரோபாதி - பரசிவ சம்பந்தம். 2215

உயிரிறை - உயிருக்கு இறைவன். 2217

சுழுனை முதல் எட்டு - (1) துரியம் (2) துரிய சுழுத்தி (3) துரிய கனவு (4) துரிய நனவு (5) சுழுத்தியில் துரியம் (6) சுழுத்தியில் சுழுத்தி (7) சுழுத்தியில் கனவு (8) சுழுத்தியில் நனவு. 2219

போக்கியம் - போகத்துக்குக் காரணமானவை. போகம் - துன்பமும் இன்பமும். சத்தாதி-ஓசை முதலியன. கருவுற்றிடும் - கருப்பத்தில் தங்கும். 2222

இருவினை ஒத்திட - துன்ப இன்பங்களைச் சமமாகக் கருதுதல். மருவிட - பொருந்த. ஆதனமன்னி - நிலைபெற்று. 2223

ஐயைந்து அவத்தை - ஐந்து அவத்தைகள் ஒவ்வொன்றும் ஐந்தாக இருபத்தைந்து. அதீதத் துரியம் - துரியாதீதத்தில் துரியாதீதம். பேறனவை - பெறுதற்கு அரிய சித்திகளும் முத்தியும். வரும் - உண்டாகும். நீறர் - திருநீறு அணிந்த. 2224

தன்னையறியாது உடலை முன் தான் என்றான் என்று பிரிக்க. 2225

வயிந்தவ மால் - மாயா மயக்கு. நந்த - கெட. 2226

அப்பும் அனலும் - விருப்பும், வெறுப்பும். வாரா - துரியாதீதத்தில் வரமாட்டா. 2227

அறு நான்கு - ஆன்ம தத்துவங்கள் இருபத்திநாலு. உறும் எழு - வித்தியா தத்துவம் ஏழு. உடன்

ஐந்து - சிவ தத்துவங்கள் ஐந்து. காண்டத்தால் - பகுதிகளால். 2228

மாமாயை - சுத்த மாயை. மாயை - அசுத்த மாயை. 2229

ஐஞ்சும் - ஐந்து மலங்களும். வஞ்சத்து - மாயையின்கண். உடல் உயிர் வேறு படுத்திட - தேக வாஞ்சையை ஒழித்திட. 2230

சாந்தி - விருப்பு, வெறுப்பு இன்றி இருத்தல். 2231

அஞ்சொடு நான்கு - அஞ்சு என்று சொல்லப்படுகின்ற எண்ணிக்கை கொண்ட நான்கு வகையான தத்துவங்கள், பூதம்-5; பொறி-5; புலன்-5; தன் மாத்திரை 5. அகம்-அந்தக்கரணங்கள். விஞ்சையர் வேந்தன் - சிவன். நஞ்சு - ஆணவ மலம். 2233

இவனும் - இவ்வான்மாவாம். பரிய - பெருமையுள்ள. பரனும் - அருட் சத்தியொடுங் கூடியவனும். திரியவருந் துரியம் - பர துரியாதீதம். 2234

பயிலா - அடையாத; பயிற்சி செய்யாத. 2235

பொய் - மறைந்துள்ள மாயை. வேயும் - எங்கும் பரந்துள்ள. 2236

துரியப்பரி - துரிய அதீதம். வியாக்கிரம் - அஞ்செழுத்து எண்ணுதல். நரிகள் - கன்மேந்திரியங்கள் 5; ஞானேந்திரியங்கள் 5; அந்தக்கரணங்கள் 4; ஆக நரிகள் 14-ம். 2237

மன்றன் - கூத்தப்பிரான். மணஞ்செய்ய-கலக்க. மன்றன்... மறைந்திடும் - சிவ சத்தி சேர மாயை மறைந்துவிடும். 2238

ஈடான் - வலிமையுள்ள. தெரிந்த துரியம் - நனவிற்றுரியம். 2239

தணவாது - நீங்காது. வியாத்தன் - எங்கும் கலந்திருப்பவன். 2240

கரு - பிறப்பு. இருவரும் - சீவனும் சிவனும். குருவரம் - குருவின் வரம். கூடிய - சமாதி கூடிய. 2241

அணு - ஆன்மா. பணியில் - பொருந்தினல். 2242

பரமா நனவு - பர நனவில். தானும் - கைகூடப் பெற்றவனும். 2244

சீவன்...பத்து - (1) சீவதுரியம் (2) சிவதுரியாதீதம் (3) பர நனவு (4) பரகனவு (5) பரசுழுத்தி (6) பர துரியம் (7) சிவநனவு (8) சிவ கனவு (9) சிவசுழுத்தி (10) சிவ துரியம். 2245

இடர்வீட்டும் - துன்பம் ஒழிக்கும். 2246

இம் மந்திரம் பர அவத்தை உடையவர் பரசிவ முதல் அயன் ஈறுக ஒன்பது வடிவமாய் விளங்குவர் என்றது. 2247

உலப்பு - அழிதல். அலப்பு - அலைத்தல். குறிப்பது கோலம் - ஈசன் உருவத்தை நினைப்பது. அடல் - வலிமை. 2248

தங்க நகையை நகை என்னும் எண்ணத்தோடு பார்க்குமிடத்துத் தங்கம் என்பது தோன்ருது. தங்கம் என்ற நோக்கத்துடன் பார்த்தால் நகை என்ற எண்ணம் இராது. அதுபோல், ஆன்மா தான் கருவி கரணங்களே என்று எண்ணிஞல் ஆன்ம தரிசனம் இல்லை. ஆன்மா தான் வேறு என்று நோக்கும்போது கருவிகரணங்கள் மறையும் என்பது இதன் கருத்து. 2250

மரத்தால் ஆகிய யானையை யானை என்று நோக்கிஞல் மரம் தோன்ருது. மரம் என்று நோக்கிஞல் யானை என்ற எண்ணந்தானும் தோன்ருது. அதுபோல், பாத்தினின்றும் தோன்றிய மண் முதலிய 36 தத்துவங்களைத் தத்து

வங்களாகக் கருதின் பரம் தோன்றுது, பரத்தின் வியாபகமாகக் கருதின் தத்துவங்கள் தோன்று என்றது இம் மந்திரம். 2251
நமவிட்டு - நகரத்தால் குறிக்கப்படும் திரோதான மலமும், மகரத்தால் குறிக்கப்படும் மாயா மலமும் இரண்டையும் நீக்கி. தானே அகாரமாய் - ஆன்மா சிவவடிவாய் "யாரும் அறியார் அகாரம் அவனென்று" (திருமூலர்). அகாரம் - சிவன். ஈறுர்பரை - திருவருட் சத்தி. 2252
துரியத்தில் ஐந்து - துரியம், துரிய நனவு, துரியகனவு, துரியசுழுத்தி. துரிய அதீதம். ஆக ஐந்து. பராவத்தா போதம் திரிய - பர அவத்தையிலுண்டாகும் காட்சியும் ஒழிய. 2253
பந்திடும் - கூடியுள்ள. நந்தி பராவத்தை - சிவத்தை அடைதற்குரிய பராவத்தை. 2254
ஐயைந்து - ஆன்ம தத்துவம் 24ம் புருட தத்துவமும் ஆக 25. மட்டுப்பகுதி - மூலப் பிரகிருதி. 2255
நேயம் - அன்பு. உருவு-தூல, சூக்கும தேகங்கள். உபாதி-காரண தேகம். 2256
சாத்திகம் - சத்துவ் குணம். 2257
பகிர் - புற. பேதித்த - மாறுபட்ட பூமி. பொறி ஒளி - கண்ணொளி. 2258
அண்டாசனம் - அண்டக் கூட்டங்களாகிற ஆசனம். 2259
அஞ்சில் அமுது - சிவ தத்துவங்களின் ஈறுய சிவம். ஏழின்கண் ஆனந்தம் - வித்தியா தத்துவங்களின் ஈறுய மாயை. முஞ்சில் - அழிவில்லாத. ஓங்காரம், ஓரொன்பான், பதினொன்றில் - ஓங்காரம் மூன்று ஆக - 23வது தத்துவமாகிய அகங்காரம். 2260
அழுத்திடின் - நிலைபெற்று நின்றால். ஆட்டம் செய்யாத-ஆடாத. 2262
கேவலம் - தத்துவங்களோடு சேராத நிலை. கலவ - பொருந்த. சகலம் - தத்துவங்களோடு கூடிய நிலை. தனைக்காண்டல்-ஆன்ம தரிசனம். மூன்றும் - ஆன்ம தரிசனம், பரை தரிசனம், சிவ தரிசனம். 2263
கல்லும் - அகங்காரம் என்னும் கல்லும். கடுவெளி - பரம ஆகாயம். 2264
ஊமைக் கிணறு - நின்மல அவத்தை. ஆமை - நின்மல அவத்தையின் பேதமான நனவு முதலிய ஐந்து. அழுவை - அவ்வவத்தைகளில் நிகழும் அநுபவங்கள். ஆமையின் மேலும் - ஆமை வயதுக்கு மேற்பட்ட. (ஆமை நெடுநாள் உயிருடன் இருக்கும்.) 2265
அங்கி - உருத்திரன். மேலஞ்சு - நிராதாரத்தில் உள்ள ஐந்து மூர்த்திகள் - அதாவது ஆதார ஐந்து மூர்த்திகளை இயக்கும் மூர்த்திகள். 2266
மைந்தன்-சிவ ஆனந்தத்தை அடைய உரிமையுடையவன். 2267
சேதனன் - ஆன்மா. 2268
கருமத்துரிசு - கன்ம வாசனை. 2270
உருநந்தி - வடிவுடை சிவன். நனவத்தை - நனவு. அடைத்தாய் - முறையாய். அமலா அதீதம் - சுத்த துரிய அதீதம். 2271
ஆங்கணில் - அவ்விடத்தில். சித்த சுகம் - சிந்தையால் அடையும் சுகம். அருண் முதலாமே - அருளே காரணமாகும். 2272
இருபாதி - ஆண் பெண் இரு பகுதியான உருவம், மங்கை பங்க உருவம். எங்கணும் விட்டுய்த்தான் - வியாபகம் உறச் செய்தான். அருட் கேவலம் - நின்மல கேவலம். வேறு செய்யா - வேற்றுமை செய்யாமல். 2273

கறங்கு ஓலை - காற்றாடி. கொள்ளி வட்டம் சூழ்ந்து - (கார்த்திகை மதியில் பிள்ளைகள் எரிகொள்வது சூழ்ந்து. நிறம் சேர் - அழகிய. இரங்கா உயிர் - வருந்தும் உயிர். 2274

பாசபேதம்-ஐவகை மலம். பரான்மா- பசுத்தன்மை நீங்கிய ஆன்மா. 2275

இத்திருமந்திரம் அண்டத்தில் உள்ளவை பிண்டத்தில் உண்டு என்று கூறுகிறது. 2276

ஆனைகள் ஐந்து - பொறிகள் ஐந்து. ஊனை - சிவனை. வானகம் - ஆஞ்ஞைத்தானம். 2277

அசைக்கின்ற வாயு - சிலம்பொலி. தாடித்து - மிகுத்து (தடித்து). நாடி - சுழுமுனை. 2278

ஊனங்கள் எட்டு - (1) பொய் (2) கொலை (3) களவு (4) கள் (5) காமம் (6) கடன் கோடல் (7) இரத்தல் (8) வெகுளல். 2281

அம் சத்தி - அருட்சத்தி. இருள் ஒளி- ஆணவத்தின் தன்மை. அணுவும் - ஆன்மாவின் தன்மை. பெத்தம் - பந்த பாசங்களில் நிற்கும் நிலை. 2282

மான்றும் - மயங்கியும். 2283

ஐ எழும் ஒன்றும் - 36 தத்துவங்களும். 2284

கோனந்தம் - சிவத்தின் தன்மை. மகா வாக்கியம் - பெரும் பெயர். 2287

மூன்றுடன் - நனவு, கனவு, சுழுத்தி. 2289

அறிவு - ஆன்மா. 2290

ஐங்கருமம் - பூத சுத்தி முதலிய ஐந்து சுத்தி, இது விசேட தீக்கை பெற்றுச் சிவபூசை கைக்கொண்டவர் செய்யும் சுத்திகள். ஞானத்து முத்திரை - சின் முத்திரை. 2293

மானம் - அபிமானம். ஊட்டுவோன் - சிவன். உயிர்ச்செயலன்றி - உயிர்க்குத் தெரியாமல். 2294

மாமாயை - சுத்த மாயை. மாயை - அசுத்த மாயை. சாந்தாதீதன் - ஆனந்த அதீதன். 2295

இல்லதும் உள்ளதும் - அசத்தும், சத்தும். சொல்லது - சொல்லினால். 2296

உயிரிச்சை - உயிருக்கு இச்சை. உழிதரும் - அலையச் செய்யும். உடனுறலால் - சிவன் உயிருடன் இருத்தலால். 2297

ஓர் ஒன்றிலார் - தத்துவ ஞானம் இல்லாதவர். 2298

இரு மாயா சத்தி - சுத்த மாயை, அசுத்த மாயை. ஞால சத்தி - பிரகிருதி மாயை. 2299

திருந்தனர் - தத்துவ ஞானம் கைவந்தவர். 2300

அவம் - பிறப்புக்கு ஏதுவாய செயல். 2301

அருளான சத்தி - அருள் சத்தி. போதம் புணரும் - ஞானம் ஆகும். 2302

பதுமாதி - தாமரை நீலோற்பலம் முதலியன. பேதித்தது - மலர்தல், குவிதல். சேட்டிப்ப- இயங்க. அருள் பேதம் - திருவருளின் வேற்றுமைத் திறம். 2303

ஆதன் - ஆன்மா. 2304

பொய்க்கரி - மாயானை. பாவிய பூதம் - மண் முதலிய பூதங்கள். பூவியல் - உலக இயல். தற்போதம் புரிந்து-தன்னறிவைக் கொடுத்து. நாட்டும் - நிலைபெறச் செய்யும். 2305

ஆனவன்-சிவமயம் ஆனவன். யாவும் தனில் எய்த - எல்லாப் பொருளும் தன்னிடத்தில் தோன்ற. வேறாய் - அப்பொருள்கட்கு வேறாய். வெளிபுக்கு - ஆகாயத்திடை போய். வீடு உற்றான் -சீவன் முத்தி அடைந்தான். அம் அருள்- சிறந்த திருவருள். தேறு - தேறி. 2306

விதிவழி - குரு உபதேசப்படி. மா - பரி. 2307
சார்ந்தவர் - சிவனைச் சார்ந்தவர். சத்த அருள் - நாத சத்தி, 2308
அவன் - சிவன். தானாக - சிவமாக. 2309
தன்னினில் - தன் உடலில். தன்னை - ஆன்மாவை. 2310
இருசுடர் - சிவன், சீவன். ஒருசுடர் - சிவன். 2311
கூம்புகின்றார் - மனங்குவிந்தவர். கூம்பகில்லார் - தளர்ச்சி அடையாதவர். 2312
கடம் - உடம்பு, குறி - உயிர். குறி காண - சிவத்தைக் காண. அன்னம் - சிவம். 2313
வானோர் தலைவி - பராசத்தி. மயக்கத்து - வசத்து. உறநிற்க - பிறழாது நிற்க. 2314
மறை ஈறுகள் - ஆகமங்கள். 2318
மாயத்து - மாயாமய தேகத்தில். பொன்னின் - பொன்னைப் போல. பின்னி - கலந்து. 2319
அறிவு அறிவாக - சீவன் சிவனாக. 2320
நீவி - ஒழித்து. பொறிவாய் ஒழிந்து - புலன்களைக் கடந்து. 2322
காய நன்னாடு - உடல். கரு - பிள்ளைக் கரு. அண்ணிக்கின்றான் - சேர்ந்து இருக்கின்றான். 2324
மாய விளக்கு-மாயையாகிய விளக்கு. தூய விளக்கு - ஞான விளக்கு. காய விளக்கு-உடலாகிய விளக்கு. சேய விளக்கு - செம்மையாகிய விளக்கைப் போன்ற சிவன். 2326
முன்னை முதல் - அநாதி முதல். விளையாட்டத்து - பிறப்பினுள். மலம் வந்தவர் - மல பரிபாகம் வந்தவர். பேர்த்திட்டு - சமாதியால் மலத்தைக் கெடுத்து. 2328
வேதத்தின் அந்தம் - ஆகமம். சித்தாந்தம் - ஆகமசாரமாய்ச் சீவன் முத்தர்களால் இயற்றப்பட்ட முடிந்த முடிவான சித்தாந்த நூல்கள். ஆறந்தம் - (1) வேதாந்தம். (2) சித்தாந்தம் (3) நாதாந்தம் (4) போதாந்தம் (5) யோகாந்தம் (6) கலாந்தம். 2329
அந்தமோடு ஆதி - உலகத்தின் ஒடுக்கமும் தோற்றமும். 2330
தானான வேதாந்தம் - ஆன்மாவே பிரமம் என்று கூறும் வேதாந்தம். தான் என்னும் சித்தாந்தம் - சிவமே ஆன்மா என்னும் சித்தாந்தம். ஆனு - கெடாத. அணு - ஆன்மா. 2331
நித்தம் - எப்போதும். தத்துவத்தால் - உண்மை தேர்தலால். 2332
விடா - விட்டு. ஓவும் - நீங்கும். 2333
செற்று - கடந்து. 2334
பாடுற - அருகிற் சேர. 2335
நிவிர்த்தாதி - நிவிர்த்திகலை முதலிய ஐந்து கலைகள். மேதை - மூளைச் சத்து, இது எழுவகைத் தாதுவில் ஒன்று. 2336
ஐந்து - கலை, மந்திரம், தந்திரம், உபதேசம், ஞானம். 2337
மனாதி உடலல்லா மந்திரம் - மனம் முதலிய கருவிகளும் சரீரமும் அல்லாது தனித்து நிற்கும் மந்திரம், அதாவது காரண பஞ்சாக்கரம். 2338
வாசாமகோசரம் - வாக்கு மனாதிகளுக்கு எட்டாத. 2339
ஞேயம் - காணப்படு பொருள். ஞாதுரு - காண்பவன். 2340
நேயத்தே - சிவத்திலே. வீடவே - கலப்பினால் தான் அற்று நிற்க. 2341
ஆவுடையாள் - சீவான்மாக்களை உடைமைப் பொருளாக உள்ள தேவி. வீவற - சாவு நீங்க. 2343
மூப்பதம் - அகாரம், உகாரம், மகாரம். 2345
மூதாந்தம் - பழைமையான அந்தம். 2346

உபாதி ஏழ் - சீவ உபாதி ஏழ். காரணோபாதி ஏழ் - ஈசுர உபாதி ஏழ். அசி - சிவ சீவர் ஒன்றாம் நிலை. 2347

வேதாந்த ஞானம் விளங்க விதியிலோர் - உண்மை வேதாந்த ஞானம் அடைய ஊழ் இன்றி, வடமொழி வேதங்களை ஓதி யாகாதிகளை இயற்றுவோர். நாதாந்த போதம் - நாத தத்துவத்தை உணரும் ஞானம். நாதாந்த முத்தி - நாத தத்துவத்திலுள்ள பதமுத்தி. சித்தி - எண் சித்தி. 2348

மூலவொளி - சிற்றம்பலம். அன்றி நின்றான் - மற்றொன்றோடு சம்பந்தம் இல்லாது நின்றான். 2349

கோ - ஆன்மா. சத்தி - திருவருட் சத்தி. தேவுணர்த்துங் கருமம் - சிவத்தை யறியும் செயல். பா - தோத்திரப் பாட்டு. பாரிப்ப - நிரம்பச்செய்ய. ஓவ - ஒழிய 2350

ஒருவன் - சிவன் "vide ஒன்றவன் தானே இரண்டு அவன் இன்னருள்" (மூலர்). இருமாயை - மாயை, மாமாயை. ஊட்டி - இருவினைகளைப் புசிப்பித்து. 2351

அன்பர் தானமதாரி - அன்பர்களுடைய உள்ளத்தில் அமர்ந்து. சேட்டிப்ப-தொழிற்படுத்த. 2352

தொம்பதம்-வேதாந்தத்திலே தத்துவமசி என்ற தொடரைத்தத்பதம், துவம்பதம், அசிபதம் எனப் பிரித்துக் கூறுகிற வழக்கத்தினால் ஈண்டுத்துவம்பதம்என்றார். 2353

அவ்வவ்விரண்டும் - வேதாந்த சித்தாந்தம் ஒழிந்த ஏனைய நான்கு அந்தங்களும், நாதாந்தம் போதாந்தம், யோகாந்தம், கலாந்தம். 2354

சீவன்முத்தி - பசுத்துவ நீக்கம். 2355

நவமுற்ற - மேம்பட்ட. அவத்தை - துரியாவத்தை. தத்துவத்தார் - மெய் உணர்ந்தவர். 2356

சகளம் - உருவம். அகளம் - அருவம். தற்பரம் - சிவம். 2357

வேதம் - தமிழ் நான்மறை. ஆகமம் - தமிழ் ஆகமங்கள். இரண்டந்தம் - வேதாந்தம், சித்தாந்தம். அபேதம் - வேற்றுமை இன்மை. 2358

பராநந்தி - சீவன் முத்தன். மூன்றும் - சிவசுமுத்தி, சீவசுமுத்தி பரசுமுத்தி. பாமுறானந்தம் - மாயையிலாகிய இன்பம். விரா - விரவிய, பொருந்திய. முத்திரானந்தம் - சாம்பவி முத்திரை முதலியவற்றின் பயிற்சியால் உண்டாகும் இன்பம். பொரா நின்ற - அடைந்த. பூரிப்பு - இன்பம். 2359

பஞ்சாந்தகன் - தனித்தனியே ஐந்து கலைகளின் முடிவிடத்து இருப்பவன். 2360

ஆன்றாகும் என்னாது ஐவகை அந்தம் - வேறுபட்டது என்று கருதாது ஐந்து வகையான அந்தங்களை. 2361

தனுதிமலம் - தன் ஆதிமலம் - மாயை. (அனாதிமலம் - ஆணவம்.) 2362

அயர்வற்றறி - மயக்கமற்றுக் காண்பாய். தொந்தத்தசி - துவம் + தத் + அசி - நீ சிவமாயிருக்கிறாய். 2363

சோகமாய் - சோகம்பாவனையினால் அவனே தானாகி. சென்னிய தானதலையான் சிறந்த. 2364

முதலாகும் - முதலில் உண்டான. அதிகாதி - மனி மேம்பட்ட 2365

அறிவு - ஆன்மா. அறிவு பதியில் - சிவத்துவம் உண்டாயின். 2366

பசு - ஆன்மா. பசுக்கள் தலைவன் - சிவன். 2367

ஊர்பயன் மூன்று-அறம், பொருள், இன்பம். 'நான்கு' என்ற பாடமும் உண்டு. அப்பொழுது வீடு ஒன்றைச் சேர்த்த நான்கு ஆகும். நடக்கின்ற ஞானம் - சரியையாதி

யின் பல்லுக நிகழும் ஞானம். தொடக்கு - ஆசாபாசங்கள். குடக் குன்றில் இட்ட விளக்கு - குட விளக்கு, குன்றில் இட்ட விளக்கு எனப் பிரிக்க, குடத்தில் இட்ட விளக்காயிருந்த ஆன்மா குன்றில் இட்ட விளக்காய் மிளிரும். 2368

பாசஞ் செய்தானை - ஆன்மாக்களின் ஆணவமலம் நீங்குதற் பொருட்டு மாயா மலத்தைக் கூட்டி உடல், கருவி, உலக இன்பங்களைக் கொடுத்தானை. கூசம் - கூசி. வாசம் செய் - நிலைபெற்ற. 2369

விடம் - நஞ்சு. சுட்டும் - குறித்தறியும். 2370

நீடும் - விரியும். நித்தன் - சிவன். நாடிய - விரும்பிய. 2371

இம் மந்திரம் "பிண்டத்தின் அமைப்பே கோவில்" எனக் காட்டுகின்றது. இந்தக் கருத்தையே "படம் மாடக்கோயில்" என்று வேறோர் இடத்தில் கூறியுள்ளார். கோயிலில் சிவ சந்நிதியில் இரண்டு நந்திகள் உண்டு. ஒன்றுகோயில் முகப்பில் உள்ளது. இன்னொன்று சிவலிங்கத்தின் அணித்தாய் உள்ளது. முகப்பில் உள்ள நந்திக்குப் பலிபீடம் முகத்தின் பக்கம் உள்ளது. இலிங்கத்துக்கு அணித்தாயுள்ள நந்திக்குப் பலிபீடம் வாலின் பக்கம் உள்ளது. இதன் பொருள் என்னவென்றால் சிவம் ஆன்மாவுக்குத் தூரமாய் இருக்கும்பொழுது பாசம் ஆன்மாவின் முன்னல் இருக்கும். சிவத்தைக் கிட்டினல் பாசம் பின்னல் மறைந்துவிடும் என்பதே. அதாவது தற்போதம் உள்ளவர்க்குப் பாசம் முந்தியும், தற்போதம் இழந்தவர்க்குப் பிந்தியும் இருக்கும் என்பதே. 2372

பயில்வியா நித்தம் - நாள்தோறும் செய்யும் அஞ்செழுத்து என்னும் முறை. ஆருக்கி - வழியை உண்டாக்கி. 2373.

மேலைக்கதி - முத்தி. மதி - அறிவு. துதி - தோத்திரப் பாட்டுக்கள். 2374

அணு மூன்று - ஒருமலர், இருமலர் மும்மலர் ஆகிய ஆன்மாக்கள். வியாத்தன் - எங்கும் பரவி உள்ளவன். 2375

இடைப்பால் - திதி காலத்தில் அதாவது காத்தற் காலத்தில். துஞ்சல்- நிகழுதல். 2376

மேலைந்து - விந்து, நாதம், சத்தி. சிவம், பரம். 2377

ஐம்முகன் - சதாசிவன். 2378

சடத்தை விடுத்த - உடற்பற்றை ஒழித்த. ஐந்து - அஞ்சுதொழில், படைப்பாதி முதலியன. 2379

மாயையின் முப்பால் - சுத்தம், அசுத்தம், சுத்தாசுத்தம் அதாவது மாமாயை, மாயை, மூலம் என்பன. 2380

ஆட்கும் - ஆழ்விக்கும், நாட்குற - காலங்கடக்க, நற்பாசம் - திரோதானம். 2381

ஊட்டல் - ஊட்டலால். பரிந்தனன் - நீங்கினன். 2382

அறுவை - வேட்டி. தறியினின்றும் அறுத்து எடுப்பது அறுவை. ஏற்றி - கலந்து. ஏற்றல்போல் - அடித்துப் போக்குதல் போல். 2383

அத்தத்தில் - சின்முத்திரையினல், உத்தரம் கேட்ட - தம் கேள்விகளுக்கு விடைகேட்ட, அருந்தவர்- தவசிகள், பிடித்தல் - தொட்டுத் தீக்கை செய்தல். 2385

கால் - தமிழ் மொழியில் கால் என்ற இலக்கத்தைக் குறிப்பது வ என்ற குறி. அஞ்செழுத்தில் வ அருளைக் குறிக்கும். தலை - ஞானம். இது "கால் அந்தச் சத்தி அருள் ஞானமே பண்பார் தலை"

என்றுஇம் மந்திரத்திலேயேகூறப் பட்டிருப்பது காண்க. 2386

அடியாவது - பிண்ட உற்பத்தியில் முதலாவது, தலைஅடி உச்சி - தலையில் உச்சிக்கு நேர்கீழாக, மூலம் - ஆன்மா. 2387

பார்ஒளி - ஆதார ஒளிகள், அப்புறத் தப்பால் - பரமாகாய முடிவில், உன்னு வொளி - கருதப்படாத ஒளி, உரைசெயா மந்திரம் - வாயினால் உச்சரியாமல் உரைக்கும் மந்திரம். 2390

பதம் - திருவடி, வைம்மின் - தலையை வைம்மின், மதியது செய்து - சிந்தித்து, மலர்ப்பதம் ஓதும் - திருவடியைப் புகழுங்கள், கதிசெயும் - முத்தி உதவும். 2391

அமராபதி நாதன் - இந்திரன். கரித்து - வெறுத்து. பரித்து - தாங்கி. 2392

தாமரை - சுழுமுனை. மலர் - இதழ், காய்ச்சி - மூலக்கனலால் வெதுப்பி, பதம்செய - மனத்தை வசப் படுத்த. 2393

கால் - திருவடி, கட்டு - பிறப்பு, மால் - மயக்கம், துயக்கு - கேடு. பால்கொண்ட - ஞானத்தின் பால்பட்ட, செம்மை - நன்மை. 2394

பேணிய - காக்கும்பொருட்டு. நாற்றம் - கன்ம வாசனை, பற்றைய - பற்றுக உள்ள, செற்றம் - சினம். 2395

முழுது நலிவன - நன்மைகள் எல்லாவற்றையும் கெடுப்பன, மான்று - மயக்க முடையதாய், இருள் தாங்கி - இருளாயிருந்து, முடிகின்ற - அழிகின்ற, மூக் குற்றம் - காமம், வெகுளி, மயக்கம். 2396

ஏமம் - சிவானந்தம், எறிமணி - அடிக்கும் மணி, தாமம் - ஒளி, ஈண்டுச் சிவ ஒளி. 2397

முப் பதம் - தத் + துவம் + அசி, தத்துவமசி. என்ற - பொருந்திய. ஆன்ற - பூரணமான, என்றனன் - சீவனது பாசம், மாள - ஒழிய. 2398

பெற்றியிற் கைவிட்டு - நீக்கும் முறையில் நீக்கி, தொம்பதமாகுதல் - ஆன்மா தன் இயற்கை உருவோடு நிற்றல். 2399

அசியத்துள் - அதிபத நிலையில், நேரிழையாள் பதம் - சத்திநிபாதம், கற்பனை - விகற்பங்கள், கலந்து - சீவசிவ பேதமின்றி. 2400

அணு - ஆன்மா, பரம் - பரான்மா, பரை ஆகிய அருளுடன் கூடிய ஆன்மா, எய்ந்து - கூடி, கணு - தடை, இன்பத்துணை - இன்பத்தின்பகுதி. 2401

அம் பதம் - அழகிய அந்தப் பதம். மேலைச்சொரூபமா வாக்கியம் - கரணம் கடந்த உருவத்தை அறிவிக்கும் மகா வாக்கியம், செம்பொருள் - சிறந்த பொருள். 2402

ஐம்பது - ஐம்பது வயதாகியும். செம்பரம் - செம்பொருள், வாசி செலுத்திட - பிராணயாமப் பயிற்சி செய்ய. 2403

அறிவு நழுவில் - உலக பாசம் ஒழிந்தால், விடவியன் - விட்டவன், மூன்றிரண்டு ஒன்று நாலைந்து - ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து அவத்தைகள். 2404

நனவுபடி உண்ட - நனவில் பொருந்திய. 2405

மூன்றுபடி மண்டலம் — சோம, சூரிய, அக்கினி மண்டலங்கள், இளங்கொடி - குண்டலி, நான்று - கலந்து. 2406

மன்று - சிதாகாயம், மாபரம் - சிவம். 2407

கூறு உபதேசம் - சொல்லாமற் சொல்லுதல், குறிப்பா லுணர்த்தல், வேதப் பகவனார் - வேதத்தை வெளியிட்ட சதாசிவனார். 2408

பற்று - உலகப் பற்று, பரன் அறிவு - சிவஞானம், பரம்பரமாம் - ஆன்மா சிவமாம். 2409
பரம்பரமாகும் பரம் - ஆன்மா; பரம் பரமாக - முறையாக. 2410
நாலொன்று - ஐந்து; கலை, வித்தை, அராகம், புருடன், மாயை. நேயந் தனை - சிவத்தை. 2411
தூயம் - நின்மலத்துவம். விலாசம் - விரிவு. பராதீதம் - பரத்தில் அதீதம். 2412
அகன்றவன் - வியாபித்தவன். மதி - ஞானம். இருள் - ஆணவம். 2413
வியோகம் - ஒழிவு. பிரணவக்கூபம் - ஓங்கார வட்டத்துள். துரிய - ஆராய்ந்து அறிய. 2415
செம்மை - கந்தகம். சுவேதம் - பாதரசம். அணுவன் - ஆன்மா. போத வெறும் பாழ் - சுத்த ஞான ஒளி. மேரு சேர் கொடி - மேருவைச் சேர்ந்த காக்கைபோன்ற தன்மை. இது 'மேருவைச்சேர்ந்த காகமும் பொன்னும்' என்னும் பழமொழியை அடியாகக் கொண்டது. 2416
எச்ச இருமாயை - எஞ்சிய இருமாயை. உச்ச பரசிவம் - நின்மல சிவம். 2417
சொருபம் - ஆன்ம உருவம். 2418
அரந்த அரன் - சிவந்த நிறமுள்ள அரன், தரந்த - தரு+அந்த, உற்பத்தி செய்வதான அந்த. 2419
தற்...பரற்கு - பரை என்னும் சத்தியுடன் சேர்ந்த பரன், உடல் உய்த்தகும் - சரீரம் படைத்தலுக்கு உரிய. இச்சையின் ஞானாதி - ஆதி சத்தி, இச்சா சத்தி, கிரியா சத்தி, ஞானசத்தி முதலிய சத்திகளாய். மாநேயத்தே - பெருமையுள்ள சிவத்தினிடத்திலே. 2420
பாலிய - ஆன்மாக்களைக் காத்தற் பொருட்டு. கோலிய - சூழ்ந்த. அணுச்செய்தி - ஆன்மாக்களுக்காகச் செய்யும் ஐந்தொழில். 2421
ஆறும் உபாதி - ஆறு ஆதனங்களின் அநுபவம். ஊறுய் - குற்றமுடையதாய், உயிர்த்துண்டு - பெருமூச்சுவிட்டு. 2422
செகமுண்ணும் போதம் - உலகத்தை அறியும் அறிவு. பாழ் - ஆசையற்ற இடம். 2423
பண்டை மறைகள் - பழைய தமிழ் நான்மறைகள் (இது புதிதாகத் தமிழ்நாட்டில் நுழைந்த ஆரிய மறைகளை நீக்கிக் கூறியது ஆகும்). பரவான் - பரமாகாயம், காரணோபாதி - சுத்தமாயை; மிண்டினவன் - சேர்ந்தவன். 2424
நின்ற - நிலைபெற்றிருக்கின்ற. வெளியாய சத்தி - பரமாகாய சத்தி. அவன் வடிவாம் - அந்தப் பரனுடைய வடிவாம். 2425
மேரு - பரசிவம். 2426
முத்துரியம் - சீவதுரியம், பரதுரியம், சிவ துரியம். தனதாதி - பராவத்தையில் நனவாதி. ஈடு - வியாபகம். 2427
தானு நனவில் - சீவ அவத்தையாகிய நனவில். பரபதம் அற்றது - பராவத்தையின் முடிந்த இடம். மேன் மூன்றும் - சிவாவத்தையில் சுழுத்தியாதி மூன்றும். 2428
அணுவின் துரியத்து - சீவ துரியத்தில், கணுவில் - சேர்க்கையில். ஈரைந்து - சீவதுரியம் நான்கு+ பரதுரியம் நான்கு+பராவத்தையில் துரியம் துரியாதீதம் இரண்டு ஆகப் பத்து. 2429
நெறிவழி - உபதேச முறையாக. இருபாதியை - மாதொரு பாகனை. 2430
பட்டாங்கு - உள்ளவாறு. பன்னு - பல்+நா - பல்லும் நாவும். தட்டாதொழிவது - சொல்லுதற்கு இயலாது மேற்படுவது. 2431
தனைய - தானாகிய. பரதுரியம் தற்பதம் - பராவத்தையில் துரியமே தற்பதமாம். 2433

மூன்றும் துரியம் - சிவதுரியம், செம் பொருள், மெய்ப்பொருள். 2434
ஓவுறு தாரம் - பிரணவம். 2435
ஓவுசிவன்-உலகம் கடந்த சிவன். 2436
தத்துவத் தயிக்கியத்து - தத்துவ மசியால். சோகம் - அவனே நான். 2437
முத்தீ தொலைக்கும் - தாபத்திரயங் களை ஒழிக்கும். சத்தி - திருவருள். 2438
ஆறிய - அடங்கின. 2439
மாளிகை - தூலம், சூக்குமம், கார ணம்; மூவர் - மூவகையான ஆன் மாக்கள். காயக் கணக்கு - பிறப்பு. 2440
புடைபெயர்ந்து - நிலைகெட்டு. நிலவு- விளங்குகின்ற. பரிசொடு- முறைப் படி. 2441
பெருவாய் - பெரியதாய். பேதமே பேதித்து - வேறுபடுத்தி. 2442
சோலை - ஒளி உதயம். தணி- பொருந்தியுள்ள, சார - அடைய. 2443
கல்லொளி-காவிக்கல்லொளி. தட்ட- பொருந்த. சொல்லறுபேர் - அசலை. 2444
உடந்த - எதிரில் உள்ள, ஆஞ்ஞை. நடந்த - நோக்கிச்சென்ற, செந் தாமரை - மூலாதாரத்தாமரை. தகைந்தால்-வசப்பட்டால். பயோ தரி - அமுதேசுவரி. 2445
உடனுறு - உரியதான. 2446
ஒளியை - மூலாக்கினியை. வளி செய்து - பூரக, கும்பக, இரேசகம் செய்து. வெளியை - வெள்ளிய சுக்கிலத்தை. 2447
மூர்ச்சை - சோர்வு, கைக்காரணம் என்ன - கையில் வைத்து உணரும் விதமாக. மிக்க...ஏக - மனோன் மணி இருக்கும் ஆஞ்ஞையில் செல்ல. 2448
தானும் அசிபதம் - தன்மயமாவது உணர்த்தும் அசிபதம். தொற் பதம் - தொல்பதம், அநாதியான பதங்கள். 2449
காமியமாதி - கன்ம முதலிய மும் மலம். தொல்தாமதமாதி - பழை மையான தாமத முதலிய முக் குணங்கள். 2450
வாசி - பிராணவாயு. ஈரைந்து-பத்து அவத்தைகளாக.சிவமுன்வைத்து- சிவ, பர, சீவ, என வைத்து. 2451
மதி - அறிவு. மெய்த்த - களங்கமற்ற. விட்டிடும் - சேர்ப்பன். 2452
மாயையுள் - அஞ்ஞானத்துள். சாந்தி யில் - சாந்திகலையில். 2453
சோயந் தேவதத்தன்-அவனே தேவ தத்தன். இடத்தாகியவை - காலம் இடம் முதலியவற்றை. உபாதா னம் - மாயை. 2454
காரியம் ஏழ் - காரிய உபாதி ஏழ். அவை :—உடல், பொறி, காணம் நான்கு, பிராணவாயு மூன்று ஆக ஏழு. காரணம் ஏழ் - காரண உபாதி ஏழ். அவை :—(1) எல்லாம் அழித்தல். (2)எல்லாம் படைத்தல். (3) எல்லாம் அறிதல். (4) எல்லா வற்றிற்கும் காரணமாதல். (5) எங்கும் வியாபித்திருத்தல். (6) எல்லாம் தானுதல். (7) எல்லாம் காத்தல். 2456
வியாப்தம் - அடங்கி நிற்றல். 2457
எதிரற - இணையில்லாமல். உதறிய - விலக்கியுள்ள. பாழில் - உருவம் அற்ற இடத்தில். 2458
ஆதர் - அறிவு இல்லாதவர். அரு நிலம் - துரியாதீதம். 2459
பரை - சத்தி. ஆவென்று - பசு வென்று. பரன் - சிவன். தேறில்- ஆராய்ந்தால். 2460
உள்ள பரிசு - உண்மையான தன்மை. பள்ளம் - கருப்பாசயம். திடர் - உலகம். 2461
சீவ உபாதி - காரிய உபாதிகள். பரோபாதி - காரண உபாதிகள். அணுவன் - சீவன். 2462

கனாநனா - கனவில் நனவு. பேரு நிலம் - முத்தி. 2463
விதிரேகம் - எதிர்மறை, ஈண்டுக் காரிய உபாதியைக் குறிக்கின்றது. உபமிதத்தால் - கருணையினால். வீடல் - நீங்குதல். 2464
கடும்பசு - மோக வசப்பட்டு வருந்தும் சீவன். சொற்பதப் பார்-சொல்லப்படும் அஞ்ஞானம் நிறைந்த பூமி. 2465
வித்து - ஏது. வற்றல் - உன்னல். உபசாந்தம் - ஐம்பொறி யடக்கல். 2466
சாந்திடும் - ஒடுங்கும். மாயையுள் - அசுத்த மாயையில். கடுவெளி - சுத்த மாயை. பாரணவும்-பெருமை பொருந்தும். 2467
ஆத்தும சுத்தி - அந்தக்கரணத் தூய்மை. புரி - பரமானந்தம். பரங்காட்சி - ஆன்ம தரிசனம். உடனுற்று - சிவத்துடன் கூடி. 2468
நீர் சுத்தி-பாசம் ஒழிதலாகிய சுத்தி. பிறழ் - விளங்குகின்றது. 2469
ஈரைந்து - (1) ஆணவம் ஒழிதல். (2) தன்னை உணர்தல். (3) அதனை ஒழிதல். (4) நனவில் அதீதம். (5) வியாப்தம். (6) உபசாந்தம். (7) சிவமாதல். (8) சிவானந்தத்தில் தானற்று அழுந்தல். (9) அவ்வானந்தத்தை அநுபவித்தல். (10) அதனையும் ஒழித்தல். 2470
பரையின் பரவ - திருவருளின் பெருக்கினால். திரையினின்றாகிய- கடலிற் கூடிய. தெண் புனல் - ஆறு. ஆர் அமுது ஒக்க - தேவ அமிர்தம் போல. உரையற்ற - பேச்சற்ற. 2471
பிறை - சந்திரன். எறிவான் - கொல்லும்பொருட்டு. அறைமணி வாள் - ஒலிக்கின்ற மணி கட்டிய வாள். நிறை - உபசாந்தம். நெஞ்சிலர் - மனம் இல்லாதவர். 2472
கருந்தாள் - வலிய கால். இறப்ப - தாண்டிச்செல்ல. கருந்தாட் கயம்- புற்று. நீ மொழி - நீ அப்பெருமை பேசுதலை விட்டுவிடு. அலைகடல் - அலைகளையுடைய கடலில். 2473
கருதலர் - பகைவர். கருவாய் - போர்க்களம். மருவலர் - அடங்கினவர். தருவலர் - கொடுக்கும் வள்ளல்கள். 2474
பிணங்கவும் - வெகுளவும். பெருநிலம் - ஆஞ்ஞை. வணங்கெழுநாடி - வணங்க விரும்பி வருதலை உணர்ந்து. 2475
உன்னினும் உன்னும் - உன்னைப் பார்க்கிலும் அதிகமாக உன்னும். 2476
பிணக்கு - மாறுபாடு. 2477
எண் - கருதப்பட்ட. பண் அறிவாளன் - இசைஞான வடிவாளன். விண் - மேலான. 2478
கண்ணற - புற இடங்களில் அன்றி. எண்ணுற - உன்ன. இயற்றி - பூசை செய்து. பண்ணிடின்-தவம் செய்தால். 2479
பின் - அவனை அடைந்த பிறகு. கன்றா - விரோதமில்லாத. பொன்றாதபோது - வாடாத மலர்; உள்ளத் தாமரை. 2480
அகக்காற்றின் விளக்கது - பிராண வாயுவினால் விளங்கும். கேட்டதும் - மணி ஓசையைக் கேட்டதும். 2481
நேடி - தேடி. நேர்தரு - எதிர்ப்பட்ட. ஊடு - உள்ளே. கூடு - பிரமரந்திரம். மூடிக் கண்டேன்-என்னுள் அடக்கிக் கண்டேன். 2482
தேன் - அமிழ்தம். சிறுவரை-புருவமத்தி, மேரு. மறவன் - உருத்திரன். 2483
மாமதியாம்-ஆஞ்ஞையிலுள்ள சந்திரனிடத்துள்ள தாம். மதியாய்-அறிவாய். தா மதியாக - தாம் அறிவுருவாக. சுழுமுனை - உலகம்

தம்மிடத்து இருப்பதாக. சாந்தி - உபசாந்த நிலை. 2484

பதமுத்தி மூன்றும் - சத்தியலோகம், வைகுந்தம், கயிலாயம். இதமுற்ற - ஞான இன்பத்துக்குப் பொருளாகப் பொருந்திய. திறமுற்றவர்கள் - நிலைத்திருப்பவர்கள். 2485

சித்தர் - சிவத்தைக் கண்டவர். மூலத்துச் சத்தி - குண்டலினி. 2486

இது எண் திசை இறைவர்களைப் பற்றிக் கூறியுள்ளது. 2487

ஒருங்கிய - சேர்ந்துள்ள. மருங்கிய - பெருமையுடைய. மாயாபுரி - உடம்பு. தண்டு - வீணைத் தண்டு, முதுகுத் தண்டு எலும்பு. 2488

விட்டலர்கின்றனன் - விட்டு விட்டு ஒளி வீசுகின்றான். பட்டலர்கின்றது - தோன்றி விளங்குவது. 2489

அருவி - அமுதப் பெருக்கு. அகம் குளம் - உள்ளமாகிய குளம். நூறே சிவகதி - அளவற்ற ஆனந்தம். கூறே - பாகத்திலுள்ள. 2490

திசை எட்டும் - எட்டுத் திசைகளும். தேர் எட்டும் - எண் திக்கிறைவர்களின் வாகனங்கள் எட்டும். தேவதை எட்டும் - திசைப்பாலகர் எட்டும். வகை எட்டும் - அப்பாலகர் வடிவங்கள் எட்டும். வகை எட்டும் நான்கும் அற்று - கன்மேந்திரியம் 5, ஞானேந்திரியம் 5, மனம் புத்தி 2, ஆகப் பன்னிரண்டும் ஒழிந்து. முகை எட்டும் - எட்டு இதழ்களையுடைய உள்ளக் கமலம். 2491

எழும் - கிழக்கு முதல் வடக்கு ஈறாக உள்ள ஏழு இதழ்களும். சகளம் - சீவனின் இடங்கள். எட்டில் - வடகிழக்கு இதழாகிய எட்டாவது இதழ் பரனது இடம். ஒன்பதில் - ஒன்பதாவது இதழில். ஊழி பராபரம் - சதாசிவன் இடம். பத்தினில் - பத்தாவது இதழில். தாழ்வது - ஐக்கியத் தானம். 2492

பல்லூழி பண்பன் - பல ஊழிகளை உண்டாக்குகிறவன். இறையவன் நல்லூழி ஐந்தினுள் - இறைவனால் உலக வளர்ச்சி கருதி ஏற்பட்ட ஊழிகள் ஐந்தினுள்; (According to geology only 5 delusions have occurred hitherto in this world. This coincides with Thirumoolar.) பகவன் - சிவன். 2493

எட்டானை - எண்வகை வடிவு உடையவனை. 2494

உயர்வரை உச்சி - ஆஞ்ஞை. பாயும் - நீர் நிரம்பும். தாமரை - சகசிர அறை. 2495

ஒன்றுமிரண்டும் - முக்காணங்களும். வென்று - புலனை அடக்கி. ஒருங்கிய - ஒத்திருக்கின்ற. 2496

நவமாமவத்தை - நவஅவத்தை, ஒன்பது அவத்தைகள். நனவு, கனவு, சுழுத்தியை; சீவன், பரம், சிவன் மூன்றுக்கும் சேர்த்த ஒன்பது ஆதல் காண்க. பவமாம் - பிறப்பு உண்டாம், பற்று - பற்றுதற்கரிய. தவமார் - மேன்மை பொருந்திய. 2498

சிதைய - ஒடுங்க. பாறிப்பறிய - போயொழிய. நவமான அந்தம் - சிவசுழுத்தி. 2499

மூன்னூறு - கருதப்படுகின்ற. ஒன்பான் - அபிமானி ஒன்பது. பேர்த்திட்டு - ஒழித்துவிட்டு. தன் செய்த - சிவமாகச் செய்த. 2500

ஒன்பதும் ஐந்தும் - பதினைன்கு அறிவு நூல்களும். அகந்து - மனம் ஒருமைப்பட்டு. 2501

பன் - சொல்லப்படும். இருகாலம் - உறங்கப் போகும்போதும் விழித்து எழும்போதும். 2502

வேறு - மாறுபட்ட. 2504

அபிமானி - அதிதேவதை. மூத்தரியம் - சிவ, பர, சிவ துரியங்கள். செம்பாற் சிவம் - செம்மையுடைய சிவம். 2505

நாசி நுனியில் - மூக்கு நுனியினின்றும்வெளிப்படும் பிராணவாயுவில். நான்கு மூவிரல் - பன்னிரண்டு விரற்கடையில். கூசி இருக்கும் - கூற முடியாமல் நாணி இருக்கும். 2506

பிறவிக் கருவினை - பிறப்புக்கு மூலத்தை. கன்மக் கயத்துட்புகாமே - கன்மமாகிய குலத்துள் மூழ்காமல். 2507

மறைப்பொருள் - சிவம். 2508

மோழை - அமுத நதி. மூழை-கபால வாயில். கோழை - அஞ்ஞானம். அண்ணற் குறிப்பு - சிவச் சிந்தையால். ஆழ அடைத்து - வெளிப்படாமல் செய்து. அனலிற் புறம் செய்து - தவத்தால் நீக்கி. தாழ - அமுதம் தங்கு. 2509

ஆஞ்சம் - தீண்டல், சூதகம். ஆமிடம்- உண்டாம் இடம். மானிடம்-மனித சரீரம். 2510

சுழிபட்டு - மனம் அடங்கி. குழிபட்டு - கருக்குழியை நினைந்து. குறிகள் - சிவக் குறிகள். கழிபட்டவர் - மனம் அடங்கினவர். 2512

தூய்மணி - சிவம். தூயனல் - தன்மாத்திர வடிவம். தூர் - வேர், மூலம். 2513

தூயது - சிவம். வாளா - பயன் கருதாது. தூயது - சுத்தமுடைமை. வாளாம் - சித்து வடிவாம். தூயது ஆளா(க) - பரிசுத்தமுடைமை தன் வசமாக. வாளா(க) - வாட்படையாக. தூயடி - நல்வழி. 2514

பொருளதுவாய் - மெய்ப்பொருளாய். சுருளதுவாய் - புரிவினையுடையதாய். துன்பச் சுழி - பிறவிச் சுழல். மருள் - மயக்கம். 2515

வினையாமசத்து - வினையாகிய கன்மம். வீடல் - கெடுதல். வீடென்னும் வேதம் - அறம், பொருள், இன்பம், வீடு என்னும் தமிழ் வேத நான்கினுள் வீடு என்று சொல்லப்படும் வேதம். வினையாளர்-கன்மம் உடையவர். 2516

நரகதி- நரக கதி. இரகதி- இரக்கும் தொழில். கடைதோறும் - வாயில்கடோறும். தூரகதி உண்ண - ஓட்டமாய்ச் சென்று அலைய (மோட்ச நிந்தை செய்பவர் இரந்து வாழ்வார் என்றது). 2517

புறப்பட்டுப் போகும் - பன்னிரண்டங்குல அளவுள்ள பிராண வாயுவில் பிரிந்துபோகும் நாலங்குல அளவுள்ள பிராணவாயுவும். புகுதும் - கூடிக்கொளும். அறப்பட்ட- அற்ற இடத்தில் உறுவதான. இற - சீவபோதம் நீங்க. 2518

திடரிடை - மேட்டில். உறுபொருள் - சிவன். கலம் - மரக்கலம். அங்கு - உடலில். 2520

தடுப்பார் - மனத்தைத் தடுப்பார். புறமே உழிதர்வர் - துறவறத்திலே செல்வர். காண்வழி - அறியத் தக்க நெறி. கலதிகள் - மூடர். 2519

மூடுதல் - அஞ்ஞானம் சேருதல். கடம் - பாலை நிலம். ஊடும் உருவினை - ஊடுருவி நிற்கும் உருவமாகிய சிவத்தை. 2521

நடுவங்கி வேவது செய்து - சுழுமுனையில் மனத்தைச் செலுத்தி. 2522

பேசின் - உபதேசித்த. தாரணை, மந்திரம். 2523

தொகும் - அடங்கும். சத்தாதி - ஓசை முதலிய. விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டுவிடாத இலக்கணை என மூன்றும். 2524

வில் - பிரணவம். விசைநாண் - அஞ்செழுத்து. கோத்து - சீவன் ஆகிய அம்பு கோத்து. இலக்கு - சிவம் ஆகிய குறி. களிறு ஐந்து - இந்திரியங்கள் ஐந்து. கோலொடு - சீவனுடைய பசுத் தன்மையுடன். இல் - சமாதிநிலை. எறிகூரும் - எய்யும். கல் கலன் - மணி ஒளி. 2525

ஒலி விடும் - விட்டுநீங்கும். 2526

சீவன் நீங்கி - பசுத்துவம் ஒழிந்து. பிரசாதத்து - குருவின் கருணையால். 2527

பினமாம் - பின்னமாகிய. மனவாசகம் - மனமும் வாக்கும். 2531

பூரணி - வளர்ச்சி. பேர் - ஊர் பேர் முதலியன. ஓர் - ஒன்றை. காட்டும் - வெளிப்படும். 2532

நீ யதுவானாய் - துவம் தத் அசி என்பர் வடமொழியாளர். பேருரை - மகா வாக்கியம் என்பர் வடமொழியாளர். அது நானுனேன் என்னச் சமைந்து - "நீ அதுவானாய்" என்ற நிலை "அது நான் ஆனேன்" என்று நிற்க. சேய சிவம் - அதுவரை எட்டாமலிருந்த சிவம். ஆனந்தானந்தி - முடிவிலா ஆனந்தம் எய்துமவன். 2533

வேதத்திரி - அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று வேதங்கள். ஓமயம் - பிரணவ வடிவம். 2534

சிவகதி - சிவத்துக்கு இருப்பிடம். ஐந்து - வாய், நாசி, புருவம், மத்தகம், உச்சி. (மத்தகம் - நெற்றி நடு.) அவ்விடத்துச் சமனை, உவமனை ஆகிய ஆதாரங்களை உளவாதல் பற்றிக் கூறினர். தாய் நாடி - சுழுமுனைநாடி. 2535

செறிவறிவாய் - எல்லாம் அறிபவராய். கொள் - கொள்கை. 2536

அப்பும் அனலும் - தத்துவக் கூட்டங்கள். அப்பும் கலப்பும் - தத்துவங்கள் உண்டாவதும் ஒடுங்குவதும். 2537

கடி - சிறப்பாக. 2538

நீக்கவல்லான் - ஆணவத்தை ஒழிக்க வல்லான். 2539

பறந்தது - விரைந்து சென்றது. 2540

அவ்வாய - அவ்விடத்துச் செல்வதாகிய. எவ்வாய் உருவும் - எந்த வகையான சிவனும். கைவாயிலா நிறை - உருவம் இல்லாத. 2541

சாயா - நிழல். போமப்பரத்தே - சிவத்திற் கலக்கும். 2542

பரமாம் உடலை - சுமையாகிய உடலை. கடையுந் தலையும் - ஆதியும் அந்தமும் இல்லாத. கரக்கும் - ஒடுங்கும். 2543

அவி - அவிதல், அழிதல். தவிர்வு - உலகத்தை விட்டு நீங்கும் நெறி. 2544

திரன் - உறுதி. செறிவு - நிறைவு. வரன் - மேன்மையான செயல். 2545

அறிவினை - சீவ அறிவினை. உளங்கொள் பரம் - உள்ளத்தின்கண் ஒளித்திருக்கும் சிவத்துடன் இருக்கும் ஆன்மா. கிளர்ந்த பரம் - தெளிந்த ஆன்மா. வெட்டவெளியன் - சிதாகாய வடிவினன். 2546

பரமது விட்டு - பராவத்தையைக் கடந்து. முப்பாழ் ஒளி - முப்பாழ் ஒளிக்கும் அதீதப்பட்ட ஒளி. 2547

கரி - யானை (யானையுண்ட விளங்கனி) - விளா மரத்து நோய்க்கு யானை என்று பெயர். திரிய - மாறுபட. 2548

நந்தமை உண்டு - ஆன்மாவைச் சிவமயமாக்கி. நேய அந்தத்து - சிவதுரிய அதீதத்தில். நாம் - பெத்தர்களாகிய நாம். 2549

அற்றது - பற்றற்ற நெறி. குற்றமறுத்த பொன் - புடமிட்டு மாசொழிந்த பொன். அற்றற - மாசு

நீங்க. வைத்திறை - சிவத்தில் சிந்தையை நிறுத்தி. மாற்றற ஆற்றிடில் - மாறுபாடு ஒழியச் சமாதி எய்தினால். செற்றம் - மலம் நீங்கின. சுடர் - ஒளி பொருந்திய ஆன்மா. 2550

எல்லாம் - உலகப் பொருள்களை. எல்லாம் - அறிவு நூற்பொருள்களை எல்லாம். எல்லாம் அறிந்த அறிவனை-சிவனை. நான் என்னில்-நான் சிந்திக்கில். 2551

மாமறை - பெருமை பொருந்திய தமிழ் மறை. 2552

அமரில் - இருந்தால். 2553

மெய் - வாய்மை. உய் கலந்து - ஆன்மாக்கள் உய்யுமாறு கலந்து. 2554

கை கலந்து - சேர்ந்து. 2555

எய்திய காலத்து - அன்பு செய்தற்கு ஏற்ற காலத்தில். மெய் செயின் - உண்மையிலேயே அன்பு செயின். 2556

புலனெறி ஒன்பது - ஒன்பது வாசல்கள். தாட்கொளின் - அடைத்தால். மெய்யென் புரவியை - தேகத்தில் ஓடும் வாசியை. 2557

அகம்படி - உள்ளத்திலே. கைத்தாள் - கையிலே தாளிருந்தும். கொண்டு - அதைக்கொண்டு. பொய்த்தாள் இடும்பையை-பொய்யினது மூலம் வைக்கப்பட்டுள்ள உடலை. அத்தாள் - சுழுமுனை வாயிலில் உள்ள தாள். திறக்கில்-திறந்தால். 2559

உணர்வினால் - ஞான நெறியினால். புறம் பொலிவார் - புறத்தும் களங்கமற விளங்குவார். நடு - புருவ மத்தி. 2560

வம்பு பழுத்த - வாசனை மிகுந்த, அதாவது எல்லாவற்றையும் அறியும். மலர் - மலராகிய உச்சித் தாமரை. பழம் - ஞானமாகிய பழம். பறவை - காமாதிகள். அம்பு - அம்பு போலும் கூர்மையான மதி. 2561

துயக்கு - கலக்கம். இயக்கம் - மயக்கம். உயப் போ - உய்ந்துபோ. 2562

இருங்காயம்-பெருமையுள்ள சரீரம். தனிவினில் - தனித்திருந்து. போதப் புவி - ஞானபூமி. 2563

முன்னைவினை - ஊழ். உண்டே - அநுபவித்தே. பின்னைவினை - இந்தப் பிறப்பில் இயற்றும் வினை (ஆகாமியம்); கணார் - செய்யார். பேர்ந்தற - கன்மத்தை விட்டு இருக்க. நன்மையில் - நன்மையைச் செய்வதில். 2564

முன்னை வினையின் முடிச்சு - சஞ்சிதம். பின்னைவினை - ஆகாமியம். 2565

நேர் நிற்கில் - நன்னெறியில் நின்றால்; மன்னு - பொருந்தா. வாதனை தன்னால் - அட்டாங்க யோகத்தால். தனைமாற்றி ஆற்ற - தற்போதத்தை அழித்து ஒழிக்க. 2566

வாசி - பிராணவாயு. ஊசி - சுழுமுனை. 2568

மாடம் - சுவரில் உள்ள மாடத்தில். மூடம் - உள்ளம். 2569

அடுவன-ஒன்றையொன்று பகைத்து அழிக்கும் பூதங்கள். தம்மைத் தொடர்தல் - தத்துவங் களைந்து ஆன்மாவை ஆராய்ந்து அறிதல். 2571

உவாக்கடல் - பவுர்ணமியிற் பொங்குகின்ற கடல். துவாக் கடல் - சுகதுக்க வடிவக் கடல். தவாக்கடல்-நீங்குதல் இல்லாத அருட்கடல். 2572

பிணி - பாசம். நெடுஞ்செயல் - தவம். உன் தொழில் - நினைத்தல். ஐங்கருமம் - ஐம்புல வியாபாரம். 2573

உற - நிற்க. பேறு - பெறுதற்குரிய. திண்மை - வைராக்கியம். சிவ காயம் - தான் ஒடுங்கி நிற்கும் சிவ துரியம். அன்பில் ஆறும் - அன்புடன் அமரும். 2574

பவனிவன் - பாவத்தையுடைய இச் சீவன். புவனிவன் போவது - இவன் போகும் பல வகைப்பட்ட புவனங்கள். 2575

கொதிக்கின்றவாறும் - படைப்பும். குளிர்கின்றவாறும் - காப்பும். பதிக்கின்றவாறும் - அழிப்பும். வதிககின்ற ஐவர் - ஐந்தொழில் மூர்த்திகள். கொதிக்கின்ற காயத்து நூல் - உண்டாகின்ற ஒரு தேகத்திலிருந்து வேறு தேகம் எடுப்பதற்குக் காரணமாயுள்ள கன்மம். 2576

ஆர் இக்கடன் - பொருந்தும் இம் முறைமை. நேரியர் - முறை தவறாதவர். ஊரில் - சித்தத்தில். 2579

படின் - அகப்படின். 2580

வான்கன்று - வானுலகில் உள்ள பசுக்கள் (ஆன்மாக்கள்). ஊன் கன்றூன் - தவத்தால் உடலை வருத்தாத என்னை. 2581

இரண்டும் - பெத்தம் முத்திகள் இரண்டும். பணி - தாமாகச் செய்யும் பணி. (என்னெனின் அன்பு செய்பவர் பெத்தத்தில் எல்லாம் சிவன் செயல் என்று பணி இயற்றுவதாலும், முத்தியில் சீவ போதம் இழந்து சிவ போதமாய் நிற்றலாலும் என்க.) 2582

பறவை - சரீரம் (பறவை-புள், உயிர்; ஈண்டுப் புள்ளிருக்கும் குடம்பையைக் குறித்தது.) கற்பமும் - காய கற்பமும். பாமபும் - குண்டலியும். குறவம் சிலம்ப - மணி, கடல், யானை போன்ற பத்து வித நாதங்கள் ஒலிக்கக் கேட்டு. குளிர் வரை - அமிழ்தம் ஒழுகுவதால் குளிர்ந்திருக்கும் மேருவாகிய புருவமத்தி. நறவு - தேன் - அமிழ்தம். 2583

பெறுதுணை - அருளைப் பெறுதற்கு உரிய வழிகளை. செறிதுணை - செறிந்த துணை செய்து இடைவிடாமற் சிந்தித்து. அங்கியாகி - ஆணவ இருளைக் கெடுக்க ஞானக் கினியாகி. 2584

வலிசெய்து - துன்பம்செய்து. கானவன் - வேடன்; ஆனந்தமளிப்பவன். கருவரையான்; குறிஞ்சிக் கிழவன் அல்லது பிறப்பை வேர் அறுப்பவன். ஊன் அதனுள் - சரீரத்துள். 2585

நிலைபெறு(க) கேடு என்று - இருக்க அழிக என. புறத்தும் - நரகபுவனஙகளிடத்தும். 2586

தத்துவசுத்தி தலைப்பட்டு - தத்துவங்கள் 36-ம் வேறு என்று அறிந்து நீங்கி. தன்பணி - சிவப் பணி. 2587

வளங்கனி - முத்தி. பறவை-சீவன். உளங்கனி - உள்ளங் கனிந்து. களம் கனி - கள்ளம் கனிந்த. அங்கி - தீ போலும் வருத்தம் செய்யும் உலக வியாபாரங்களில். நால்வர்-அந்தக்கரணங்கள். 2588

எம் மாயமும் - எவ்வகைப்பட்ட மாயா சம்பந்தங்களையும். எம்மைக் காந்திட்டு - தான் என்பது அற்று. திருந்திடம் - திருத்தமுற்று இருக்குமிடம். 2589

பொறியுடையான் புலனைந்தும் கடந்த குறியுடையான் - பொறி வாயிலைந்து அவித்தான். 2590

குறியாக்குறி - மறந்துநினையாக்குறி. கூடாத கூட்டம் - கடலும் அலையும்போலக் கூடுங் கூட்டம். அறியா அறிவு - மறப்பற்ற மெய்ஞ் ஞானம். அவிழ்ந்து - கலந்துநின்று. ஏக சித்தமாய் - ஒருமனதாய்.

செறியாச் செறிவு - கூடாத கூட்டம். 2591

ஊறும் - பரிசமும். கட்டியம்-வெல்லமும். நெய் - வெண்ணெய். 2592

பொருப்பகம் - இமயமலை. பொற்கொடி - உமாதேவி. நெருப்புருவாகி - செம்மை வடிவினராகி. 2593

நடுவுள் வியோமம் - பாசுழுத்தி. 2594

தன்மை - சத்துவகுணம். புன்மை - இழிகுணத்தால். பன்மையில்-பல சீவர்களுள்ளும். 2595

என்னைச் சோதிக்கும்போது - அத்துவா சோதனை செய்யும்போது. படர்ந்து - வியாபித்து. கடந்து நின்று - சீவனுக்கு வேறாயிருந்து. அவ்வழி - ஆராயும் நெறி. 2596

தந்தை, ஆய், கேள், யான் - தந்தையாயும், தாயாயும், சுற்றமாயும், யானும். 2597

மச்சறிவது - சேர்ந்து இருப்பது பறிவது - வேறுபடுவது. பல்கணப் பற்று - பல ஆசைகள். 2598

வாள் - ஞானம். வேதித்து - வேறுபடுத்தி சுவடு - குற்றம். அவன் - சிவன். 2599

கருவை - பிறவிக்கு மூலமான பாசத்தை அருவை - அருவுருவமான மாயையை. வினைசெய்தற் பந்தம் - தொழில் புரிவதாலுண்டாகும் தொடர்பு. பணி அச்சம் - அத் தொழில்களால் உண்டாகும் பயம். தற்பரம் - சிவம். சதுரர் - வல்லவர். 2600

பலிடம் - அன்ன பலியும் (ஆரிய வேள்வியில் செய்யும் உயிர்ப்பலி அல்ல) அவியும் - பறப்பையின் மூலம் ஓமத்தீயில் பெய்த நெய் அவியும். ஒலி - தமிழ் வேதம் ஓதும் ஒலி. குவியும் - மனம் அடங்கும். தளிரும் - குளிர்ந்து தளிர்ந்த. 2601

இவன்-சீவன் (சண்டுக் குரு); அவன்-சிவன். புறம்பு - வேறானவன். 2602

பெருந்துறை சிவனது திருவடிதான் என்பது இம் மந்திரக் கருத்து. சிறப்பு இல் இலி - சிறப்பினையுடைய இல்லமாயிருக்கின்ற குரு. 2603

ஈராறு இருநிலம் - பதினொன்கு உலகங்கள். 2604

முகம்பீடம் - பதும ஆசனம். மடம் முன்னிய தேயம் - தேயமே மடம். அகம்பர வர்க்கமே - அகத்தில் பரனை இருத்துதலே. அகம்பர மாதனம் - அகத்தைப் பரனுக்கு ஆதனமாக்கி. எண்ணெண் கிரியை - கருதப்படும் எட்டுவித கிரியைகளும். குகை - இருதயம். 2605

அகமுகம் - உள் நினைந்திருப்பது. சகமுகம் - உலக வியாபாரங்களில் கலப்பது. செகமுகமாய - உயிர்களைக் காத்தற் பொருட்டு உலகத் தொழில்களைச் செய்த. அகமுகமயந்து - சிந்தையை உள்பக்கம் திருப்பி ஆராய்ந்து திருவடி நினைத்த. 2606

மாயை இரண்டு - மூலப் பிரகிருதி மாயை, அசுத்தமாயை. காயம் ஓர் ஐந்தும் - அன்னமய கோசம் முதலிய ஐந்து கோசங்களும் அல்லது ஐந்து பூதங்களால் ஆகிய காயம். 2607

கும்பிடு - ஐக்கியம். 2608

விரிவு குவிவு அற - நினைப்பு மறப்பு ஒழிய. குருபதம் - திருவடிப் பேறு. 2609

ஆயன் - தாயை ஒத்த. காயன - சித்துப் பொருளாயுள்ள. சேயன - உலகை கடந்து நின்ற. 2610

மான்ற - மயக்கமுள்ள. மறி - மாறி

வருகிற. நனவாதிகள் மூன்று - நனவு - கனவு - சுழுத்தி. துரியங்கள் மூன்று - சிவ - சீவ - பர துரியங்கள். ஊன்றிய - நிலைபெற்ற. 2612

சந்திர பூமிக்குடன் - சந்திர மண்டலத்தோடு கூடி. கந்த மலரில் இரண்டிதழ்க் கன்னி - இரண்டிதழ்களையுடைய ஆஞ்ஞையில் இருக்கும் சத்தி. பரம் - மேலான. 2613

சினம் புகுந்தான் - வெகுண்டவன். வனம் - தத்துவக் கூட்டம். வடக்கு - கயிலை. 2614

கோசம் - ஐந்து கோசங்களும். பறவை - சீவன். வனம் - தத்துவக் கூட்டம். சோடசமார்க்கம் - சரியையிற் சரியை முதல் 16. தசாங்கம் - தசகாரியம்; அவை தத்துவரூபம் - தத்துவ தரிசனம் முதல் சிவபோகம் ஈருகப் பத்து. 2615

மருவிப் பிரிவு - கூடிப்பிரிதல். உருக்கும் - தற்போதத்தைக் கெடுக்கும். 2616

பலப்படு - பலவகைப்பட்ட. தருமமும் - அறத்தின் வடிவாயுள்ள சிவமும். 2617

சுனை - புருவ மத்தி. விளைமலர்ச் சோதி - உள்ளக் கமலத்தில் விளங்கும் சிவ ஒளி. தினைப்பிளந்தன்ன - உடைந்த தினையரிசி அளவு. கனத்த மனம் - நற்குணங்கள் நிறைந்த மனம். 2618

விலக்குறின் - இடையூறுகளால் அந்நிலை தவற நேரிட்டால். நேடி - தேடி. 2619

நகழ்வு - விலகுதல். நிகழ்வு - உலகியாபாரம். திகழ்வு - வீண் ஆடம்பரம். புகழ்வழி - புகழ்தற்குரிய முத்திநெறி. 2620

வந்த . . . . போல் - மரகதத்தில் வந்த மாணிக்க ரேகை, அஞ்ஞானத்திடையில் உண்டான ஞான ஒளி. சந்திடு - தெரிவிக்கும். இலாடம் - நெற்றி. மூலம் - நாசியின் மூலமாகிய புருவ நடு. 2621

யோகக் கடவுள் - யோகத்தால் அறியப்படும் கடவுள். வெளியானோர் - பசுகரணம் நீங்கிச் சிவகரணமுடையோர். 2622

பரசும் - புகழப்படும். பாதியால் - தத்துவ ஞானத்தால். பெரிய பதி - முத்தி. பார் ஆக்கி - உலகைப் படைத்து. 2623

நீள் பொழில் - பெரிய உலகம். தம் பரம் - தமது கடவுள். உம்பர் - வானுலகு. 2624

கோ - பசு - ஆன்மா. கோவணமாகி - ஆன்மாக்களின் உருவந் தாங்கி. நாவணங்குப்படி - நாவால் துதிக்கும்படி. தேவணங்கோம் - வேறு தேவரை வணங்கோம் - சத்தம் - பத்துவித நாதங்கள். வணங்கும் பொருளாய் - சிவமாய். 2625

தூலப் பிரணவம் தூல சரீரத்துக்கு ஆனந்தமும், சூக்குமப் பிரணவம் சூக்கும தேகத்துக்கு (மேலைச் சொரூபம்) ஆனந்தமும், காரணப் பிரணவம் திருவருட்சத்தி பதியச் செய்தலும், மகாகாரணப் பிரணவம (மேலைப் பிரணவம்) வேதாந்த வீதியில சேர்த்தலுஞ் செய்யும். 2626

ஓங்கார அதீதம் - மகாகாரணப் பிரணவம். 2628

வருக்கம் - ஓங்காரத்தின் அம்சங்களாகிய அ-உ-ம. சுருக்கமில் - பாகந. 2629

மலையும் - மயக்கும. மருள்வன - மயங்குவன. தீ நெறி - தீச் சுடர் போன்று சிவம் விளங்குமுறை. 2630

சோடசமார்க்கம் - சரியையிற் சரியை முதல் 16 நெறிகள். சாரும் அம்

தம் - யோகத்தில் ஞானம். ஈரேழிற் கூடிய அந்தம் - ஞானத்தில் கிரியை. கோதண்டமும் - ஞானத்தில் யோகமும். ஞேயாந்தம - ஞானத்தில் ஞானம். 2631

ஒளியை - ஒளி மயமான ஆன்மாவை; உருவும் ஒளியும் - உடம்பு மறையும் (Vide) மரத்தை மறைத்தது மாமத யானை) ஒளியும் உருவம் அறியில் - மறைந்து போகும் உடம்பை அறிந்தால். உருவாம் - பிறப்பாம். ஒளியின் உருவம் அறியில் - ஆன்ம தரிசனம் செய்தால். ஒளியே - சிவ ஒளி உதயமாகும். ஒளியும் உருக - ஒளி மயமான ஆன்மாவின் பாசம் களைய. 2632

அகலொளி தாய் - அகண்ட ஒளி பரவி. பகல் ஒளி - சூரிய ஒளி. அத்தாமரை - அந்த உள்ளக் கமலத்தில் இகலொளி - சூரிய ஒளிக்கு மாறுபட்ட ஒளி. 2633

விரிகதிர் - சூரியன். சோதி அருள - சிவன் கொடுத்தலால். விளங்கு ஒளி பெற்ற தே பேரொளி - இல்லை என்னாது கொடுக்கும் புகழ் (ஒளி) பெற்ற தெய்வமாகிய சிவம் தம் இயற்கைப் பேரொளியினின்றும். வேறு களங்கொளி - வேறாகிய களங்கமுள்ள சூரிய - சந்திர அக்கினி ஒளிகளை உண்டாக்கி. கலந்து நின்றான் - அவர்களுக்கு ஒளியுண்டாமாறு சேர்ந்து நின்றான். 2634

இளங்கு - இலங்கு. விளங்கொளி - தானே விளங்கும் சித்து. 2635

மேலொளி - ஆகாயம். மாருதம் - காற்று. பார் ஒளி - மண். அங்கி - தீ. நீர் - நீர். மேலொளி ஐந்தும் - மேன்மை பொருந்திய அல்லது மேலே கூறிய ஐந்து ஒளிகளும். 2636

மின்னிய தூவொளி - படைப்புத் துவக்கத்தில் நின்மல சிவத்தினின்றும் தோன்றிய வெள் ஒளி. மேதக்க செவ்வொளி - அவ்வெள் ஒளியினின்றும் தோன்றிய ஐந்து வர்ண ஒளிகளில் மேலான பராசத்தியின் சிவந்த ஒளி. பரத்தொளியுடன் துன்னிய பரை - ஆதி இச்சை - ஞானம் - கிரியை ஆகிய ஐந்து வர்ண ஒளியுடன் ஆறு ஒளி. 2637

விளங்கொளி - பரையாதி ஒளிகள். மின்னொளியாகி - மேகத்தில் மின் ஒளி மறைந்து நிற்பதுபோல. கரந்து - ஆன்மாக்களிடத்து ஒளித்து. 2638

அவ்விருண் மன்னும் - உலக முடிவில் ஏற்படும் இருளில் அடங்கும். ஒளியான் - வெளிப்படுவான். அளங்கொளி - அலங்கு ஒளி - இலங்குகின்ற ஒளி. நஞ்சாரும் களம் கொள் ஈசன் - விடமுண்ட கண்டன். 2639

தாங்கு - நிலைபெற்று. விளங்கு ஒளி மூன்று - சிவ ஒளி - அருட்சத்தி ஒளி - ஆன்ம ஒளி. 2640.

மாமணிச் சோதி - சிவன். ஒளி ஆயம் - ஒளிக்கற்றை - பலவர்ண ஒளிகள் சேர்ந்தது. 2641

இருள் சேரா - ஆணவம் மூனைத்து நில்லாமல். கள . . . லாட - ஆணவ இருள் இரியக் கூத்தப்பிரான் ஆட. உன் மனத்து - உன்மனகலையில். 2642

போது . . . போனவர் - மாதொரு பாகனார். ஆதிடையாதி - சந்து செய்விப்பதில். பத்து ஐ - மேலான கடவுள். அமரா பிரான் - இந்திரன். நல்விருள் - ஆணவ இருள். 2643

உண்டில்லை - உலகம் உண்டு உலகம் இல்லை என்று வாதாடும் உலகத்தில். பண்டு - கேவல நிலை. பரம் கதி - மேலான முத்தி நெறி. கண்டிலை மானிடர் - இதுவரை காணாத மானிடர். கண்டகருத்து -

அறிந்த அறிவு, விண்டிலலை - உரைக்க வேண்டியதில்லை. 2644

பகலவன் ஈசன் - ஞான சூரியனாகிய ஈசன். வீஇ - விலக்கி. உடலுறு - மாயா சம்பந்தமான அஞ்ஞானத் தோடு மாறுபடுகின்ற. 2645

அளி - முதிர்ந்த. பவளச் செம்பொன் - பவளத்தில் சிவந்த பொன் பதித்தாலொத்தநிறத்தையுடைய, களிபவளத்தினன் - ஆன்மாக்களுக்கு மகிழ்ச்சியை அருளுகின்ற சூரியனைப்போல. 2646

பாசம் ஒன்றாக - இருவினை ஒப்பாக. பழவினை - முன்னீட்டிய வினைகள். வாசம் ஒன்றும் மலர் - பூவின் மணம்போல் சிவசீவ ஐக்கியம். 2647

இருக்கு - தமிழ் மொழியில் உள்ள இருக்கு முதலிய வேதங்கள். அவற்றின் தலைவன் - சிவன். வானாய் - வியாபகமாய். பரனாயிருக்க - பரவி இருக்க. 2648

மென்று கண்டால் - உச்சரித்து அதன் பயனை உணர்ந்தால். ஒன்றி நின்றிருக்கும் - வருத்தம் தணிக்கும். 2649

அகார . . . றாகி - தமிழ்மொழிக்கு வட்டெழுத்துக் காலத்திலும் அதற்கு முந்தியும் உயிர்கள் - 16, மெய்கள் 35, ஆக 51. 2650

அகராதி ஈரெண் - அகர முதலிய 16 எழுத்துக்களில் (தமிழில் உள்ள உயிர் எழுத்துக்கள் 16) உகராதி - உகர - அகர - மகரங்கள். சிகராதி - சிவாய. கோணம் - பிரணவம். நகராதி - நம. 2651

மூலம் - இலிங்கம் - உந்தி - இதயம் - கண்டம் - நுண்டம் என ஆதாரங்கள் ஆறு கூறப்பட்டது காண்க. மத்தகம் செல்லலாய நீரும் - நாத வடிவமான அக்கரம மூலத்திற் றோன்றிச் சென்று சகசிர ஆற்றையிற்றாக்கி வர்ணவடிவாய் வெளிப்படும் என்பது. ஐந்து - வாய், கண்டம், இதயம், உந்தி - இலிங்கம். 2652

கிரணங்கள் ஏழும் கிளர்ந்து எரி - ஒளி ஏழு கிரணங்களால் ஆக்கப்பட்டதால் ஏழும் கிளர்ந்து எரி என்றார். ஏழு கிரணங்களாவன:- ஊதா - நீலம் - பச்சை - சிவப்பு - மஞ்சள் - பழுப்பு - இளநீலம். மரணம் - யமன். அரணம் - உயிர்க்கு அரண் ஆகிய முத்தி. 2653

ஞாயிறு - பிங்கலை. திங்கள் - இடகலை. 2654

குணங்கள் - சாதனங்கள். கணக்கை - வகையை. மறுக்க - தடுக்க. 2655

வெறிக்க - மயங்க. தவம் - தவத்தால் 2656

வடவரை - கயிலை. அஞ்சில் - அஞ்சுதல் இல்லாத. 2657

ஐந்து - அஞ்செழுத்து. இராமாற்றம் - அஞ்ஞானத்தைக் கெடுத்தல் பரா - பரவ. அர மூற்றம் சூழ்ந்த - ஆதிசேடனால் [illegible] 265

பொன்னுக்குவக் கூட்டை - [illegible] பொன்போல் ஒளிவீச . . குளிகை - மந்திரம். 2659

சிவன் . . . மாயை - அஞ்செழுத்துக்கள் ஐம்பொருள்களை உணர்த்துகின்றன. சி - சிவனையும், வ - சத்தியையும், ய - சீவனையும், ந - மலத்தையும், ம - மாயையையும் உணர்த்துகின்றன. அவம் சேர்ந்த பாசம் ஐந்து - பாசத்தை உண்டாக்கும் மலங்கள் ஆணவம் - கன்மம் - மாயை - மயேயம் - திரோதாயி, ஐந்து. 2660

சிவனருளாய - சிவ சத்தியாகிய. சிவன் திருநாமம் - அஞ்செழுத்து. சிவன் - அருள் - ஆன்மா - திரோதம் - மலமாயை - சி - வ - ய - ந - ம. சிவன் முதலாக - சி முதலாக. திரோதம் - ஒழித்தல். 2661

நம்மலம் எல்லாம் - நகர - மகாரங்களால் குறிக்கப்பட்ட மலங்கள் எல்லாம். அவ்வாதிகளை - அந்த முதலில் உள்ள எழுத்துக்களாய ந-ம என்பவைகளை. 2662

நமாதி - நகரமுதல். சமாதிய தாய் - அவ்வக்கரங்களுக்கு ஆதியாய். தான் - ஆன்மா. சமாதித் துரியம் - துரிய அவத்தை. தமது ஆகமாக - தமது உடம்பு ஆக. சிவவாதல் - சி-வ முதலெழுத்துக்கள் ஆதல். 2664

அருட்குரு மாயமும் அத்தனும்-அருள் தங்கிய மோகினியும் உருத்திரனும். தம்மில் - தம்முள் கூடி. ஒருவனை - சாத்தனை. அவ்வெழுத்து - அந்தச் சி-வா-ய என்னும் எழுத்துக்கள். 2665

சிவசிவ வாயு - சிவா - என்னும் குறில் நெடில் எழுத்துக்களுக்குரிய மாத்திரைப்போது வாயுவை இரேசக பூரக கும்பகம் செய்தல். 2666

அவமதி - அஞ்ஞானம். 2668

அவாயம் - உபாயம் 2669

அஞ்சனவுமுறை - ஐபதிவும் ஒழுங்குமாறு. வழிக்கொண்டு - போய். அஞ்சுமவன் - உலகத்தை மறந்திருக்கும் அவன். செல்லும் அத்து - குறித்த காலத்தில். 2670

அங்கமும் - வேதத்துக்கு அங்கங்களாயுள்ள ஆறு சாத்திர நூல்கள். எழுத்தொன்றில் - அதிசூக்கும பஞ்சாக்கரமாகிய ஓர் எழுத்தில். சங்கை கெட்டு - சந்தேகம் கொள்ளாமல் தங்கரை - அழகிய முத்திக்கரை. அநங்கலம்-அழகிய மரக்கலம். 2671

நாயோட்டு மந்திரம் - சி. 2672

ஐந்தும் - அஞ்சு எழுத்துக்களும். ஏதர் - மூடர். எழுத்தை அழுத்தும் - விதி எழுத்தை மாற்றும். எழுத்து - சி. 2673

இம் மந்திரம் உலகமெல்லாம் சிவத்தின் திருக்கூத்தாம் என்பதை விளக்கிற்று 2674

சொற்பதம் - சொல்லும்படியான பதங்கள். இம் மந்திரம் (1) சிவானந்தக் கூத்து. (2) சுந்தரக்கூத்து (3) பொற்பதிக்கூத்து. (4) பொற்றில்லைக் கூத்து. (5) அற்புதக் கூத்து எனச் சிவநடனம் ஐவகைப்படும் என்பதை உணர்த்திற்று. 2675

திருமந்திரம் - அழகிய அஞ்செழுத்து மந்திரம். 2676

தேன் உந்தும் - இன்பம் பிறக்கும். நம்பிக்கு - சிவபிரானுக்கு. ஆனந்தம் - ஆனந்த சக்தி. 2678

பல்லியம் - பல இசை; கொட்டுக் கருவிகள். வாச்சியம் - அபிநயம். ஆகில . . . . னுக்கே - கூத்தப்பிரானுக்கு ஐந்தொழில் கூத்து ஆனந்தமே, என்னெனின், கேவல நிலையிலுள்ள ஆன்மாக்கள் முத்தியெய்துவார்கள் என்று எண்ணியே. 2679

ஒளியாம் பரம் - ஞானமாகிய பரம். உளதாய பரம் - சத்தாகிய பரம். அளி - கருணை. சிவகாமி - சிவானந்த சத்தி. களியார் பரம - ஆனந்தமாகிய பரம். நட்டத்தின் சித்தி - சிவானந்தக்கூத்தின் பயனும். 2680

அகள சகளத்தர் - உருவம் இல்லாதவர் உருவத்தோடு கூடி. ஐங்கருமத்தாக - படைப்பாதி ஐந்தொழில்களுக்காக. அருளால் - அருட்சத்தியைக் கொண்டு 2681

பூதாண்ட பேதாண்டம் - ஐம்பூதங்களால் ஆக்கப்பட்ட மாறுபட்ட வெவ்வேறு பல ஆயிர அண்டங்களும். 2682

வேதங்கள் ஐந்தில் - அறம் - பொருள் இன்பம் - வீடு என நான்கும் ஆகம நூல்களும் சேர்ந்து ஐந்து. ஓதுங்கலை . . . சித்தனே - பேசப்படு

கின்ற கலை - காலம் - ஊழி - அண்டம்-போதம் ஆக ஐந்திலும் ஆடும் சித்தன். 2683

தேவாசுரர் - தேவர்களும் அசுரர்களும். சத்தர் - வாமிகள். 2685

சதாசிவத்துக்கு - சதாசிவ தத்துவம் அல்லது சாதாக்கிய தத்துவத்தின் தலையில். 2686

இம்மந்திரம் கூத்துக்களின் வகைகளை விளக்குகின்றது ;—

(1) கொடு கொட்டி-எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடும் கூத்து.

(2) பாண்டம் - பாண்டரங்கம் எனவும்படும். முப்புரங்களை எரித்த காலத்தில் அந்நீற்றினை அணிந்து ஆடிய கூத்தின் பெயர்.

(3) கோடு - காபாலக்கூத்து. பிரமனது சிரசைக் கையில் ஏந்திக் கொண்டு ஆடிய கூத்து.

(4) சங்காரம் - நாள்தோறும் நடக்கும் அழித்தற் றொழிலுக்காக ஆடும் கூத்து.

(5) நடம் எட்டு-ஐந்தொழில் நடத்துடன் - காளிக்கூத்து-முனி நடனம் - ஆனந்த நடனம் ஆக எட்டு

(6) ஐந்து -குற்றாலம், கூடல், தில்லை, பேரூர், ஆலங்காடு இவைகளில் ஆடிய கூத்துக்கள் ஐந்து.

(7) ஆறு - ஆறு சமயங்களிலும் அவ்வவர் சமயத்துக்கேற்ற கூத்துக்கள் தேவதாருவாம் தில்லை-தெய்வத்தன்மை பொருந்திய தில்லை மரங்கள் உள்ள வனம். வடம் - ஆலமரம். மாவனம்-பெரிய காடு. 2687

அங்குசம் என்ன எழுமார்க்கம்-பிறசமயங்களை அடக்குவதில் அங்குசம் போன்றுள்ள சன்மார்க்கமாகிய சைவம். போதத்தில் - ஞானத்தில். தொந்தி-தொம்தீம் எனத் தட்டும் தாளம். மூலநாடி - சுழுமுனை நாடி. பொங்கிய காலம் - நெடுங் காலம். போகல் - அழிதல். 2689

இம்மந்திரம் ஆனந்தி அதாவது ஐந்தொழில் நடனமுதல் ஞானக் கூத்து ஈறாஆடும் ஆட்டங்களைக் குறிக்கது. நவக்கூத்து-சிவத்தின் ஒன்பது பேதமான கூத்து. (அருவம் 4, உருவம் 4, அருவுருவம் 1 ஆக 9.) 2690

சத்திகள் ஐந்து - பரை, ஆதி, இச்சை, கிரியை, ஞானம். சிவபேதந்தான் ஐந்து - சிவத்தின் உருவ பேதங்களாகிய அயன் - அரி - அரன் -ஈசன். அருவுருவ பேதமாகிய சதாசிவமும். முத்திகளெட்டும் - பதமுத்திகள் எட்டும். கணபதி-அயன்-அரி-முருகன் - உருத்திரன் -இந்திரன்-சண்டி-ஈசன்-நயிலை ஆக எட்டு. பதம் எட்டும் - உருவ அருவ பேதமாயுள்ள சாலோகாதிஎட்டும். சித்திகள் எட்டும் - அணிமா முதலிய சித்திகள் எட்டும். சிவபதம் தானெட்டும் - சைவ சம்பந்தமான பதங்கள் எட்டும். சுத்திகள் எட்டும் - (1) பார்த்தல் (நிரீட்சணம்) (2) தெளித்தல் (புரோக்கணம்) (3) தட்டுதல் (தாடனம்) (4) மூடுதல் (அப்யக்கணம்) (5) முத்தட்டு (தாளத்திரயம்) (6) திசைக்கட்டு (திசகு பந்தனம்) (7) வளைத்தல் (அவகுண்டனம்) (8) அமிர்தம் சொரிதல் (தேனு முத்திரை) 2691

தேகங்கள் ஏழு - ஏழுவகைத் தோற்றங்கள். சிவபாற்காக ஏழும்-சிவசூரியன் என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் மனமும் புத்தியும் ஆக ஏழு. தாகங்கள் ஏழு-ஏழுநா. அக்கினி சந்திரன் ஏழு - ஐம்பொறிகளையும் மனம் - புத்தி இவைகளையும் அடக்கி இருக்கும் நிலை. 2692

உபய உபயத்துள் - அருவத்தும் உருவத்தும் அருவுருவத்தும், 2693

அத்தர் - சிவன். அடி ஆர்பவர் - அடி சேர்ந்தோர். 2694

இடங்காண் - பரந்த. படர்ந்தான் செய்து - சித்திரம்போல் அசைவறச் செய்து. 2695

திருவம்பலக் கூத்தில் அன்பு வைப்பவர்கட்கு ஏற்படும் மெய் அடையாளங்களை இம்மந்திரம் கூறுகிறது. 2698

தேட்டறும் - ஆசைகெடும். வாட்டறும் - தளர்ச்சி நீங்கும். கால் - பிராணவாயு. புந்தியாகி-புத்தியின் வசப்பட்டு. புலன் ஓட்டறும் - புலன்கள் அடங்கும். மூறுச்சுறும் - முதிரும். 2699

கனகாசலம் - மேருகிரி. 2700

மேரு நடுநாடி - அண்டத்துள் நடுரேகையும் (Equator), பிண்டத்துள் சுழுமுனையும். அண்டத்துள் இதன் வட அயன வரைகளும் பிண்டத்துள் இடைகலை பிங்கலை நாடிகளும். இலங்கைக் குறியுறும்- இலங்கையில் மேருவின் குறியைப் பார்க்கலாம் (இதனால் மேருமலை திருமூலர் காலத்திலேயே அழிவெய்திவிட்டது என்பது போதருகின்றது) மேரு - சுமேரு - குமேரு என மூன்றாம். மேரு - பூமத்திய ரேகையும்-பூமியின் அச்சரேகையும் கூடும் இடம்; அதுதான் இலங்கை, சுமேரு-வடதுருவம் (N.•pole) குமேரு - தென் துருவம் (S pole). தில்லைவனம - மலயம் இவை பூமியின் நடுநாடி (Axis) யில் இருக்கின்றன என்பதை இம்மந்திரம் குறிக்கின்றது. 2701

பூமி நடுரேகை (Equator), அயன ரேகைகள் (Tropic of cancer and tropic of capricorn) இவைகளுக்கு இடை நிலையே மூன்றாம் பிறையை அணிந்த சிவபெருமான் ஆடும் எல்லைகளாம் என்று இம்மந்திரம் குறிக்கின்றது. ஐந்து அம்பலங்களும் இவ்வெல்லையிலேயே இருப்பதை நாம் காண்கின்றோம். 2702

ஆகாசங்கள் ஐந்து - மண்ணில் ஆகாயம், நீரில் ஆகாயம், தீயில் ஆகாயம், வாயுவில் ஆகாயம், ஆகாயத்தில் ஆகாயம் ஆக ஐந்து. 2703

குரு ஆனந்த ரேகை - குருவால் அருளப்பட்ட ஆனந்த மார்க்கம். சிரம் ஆனந்தம் - மேலான ஆனந்தம் - புரானந்தம் - புரி ஆனந்தம்-சரீர ஆனந்தம். பூவை - உமாதேவி. நிரானந்தம்-நித்தியானந்தம் 2704

பார் அண்டம்-பூமி அண்டம். நாதமோடு - நாத சத்தியோடு. 2705

கும்பிட - யாவரும் வணங்கும்படி. சிவலோகம் - பொற்றில்லை. 2706

பாதி - சிவன் பாதிச் சரீரி ஆகிய தேவி. 2707

படர்வொன்றி - வியாபித்தவன். 2708

ஈறான கன்னி - தமிழ் நாட்டுக்குத் தெற்கு எல்லையாக விளங்கும் கன்னிஆறு. கன்னி நதியும்-குமரி நதியும்; (2000 வருடங்கள் முன்னரே ஒள்நாடு - பெருவள நாடு - குமரி நாட்டோடு கடல் கொண்டு அழிந்தது)ஒன்பது தீர்த்தங்களும் எழு வெற்புக்களும் தென்னாட்டுக்குள் இருப்பன. இம் மந்திரத்தால் முதல்முதல் வேத - ஆகமங்களும் தென்னாட்டில்தான் பிறந்தன என்பது தெளிவாகின்றது. 2709

நாற்பதம் - சரியையாதி நான்கு பதம். தழலந்தம் - ஓமாக்கினி. 2710

மூவர் - அயன் - அரி - அரன். முனிசனம் - தவத்தர். கோவினுள் - சிவனுள். 2711

ஆறுமுகம் - ஈசானம் - தற்புருடம் - அகோரம் - வாமம் - சத்தியோசாதம் - அதோமுகம். 2712

ஐந்து நாதம் - ஐவகை வாக்குக்களாயுள்ள நாதங்கள். 2713

அற்றவாறு - பிறப்பு அற்றவாறு. 2714

அரதன மன்று - இரத்தின சபை (திருஆலங்காடு) குரவன் - குரு. 2715

குனிக்கும் - நினைக்கும். 2716

திருவழி - நன்னெறி. உள்ளாக் குனிக்கும் - உள்ளத்தில் நினைக்கும். 2717

உயிர் - பிராணவாயு. 2718

களியொளி ஆறும் - மேலான தூவொளி முதலிய ஆறு ஒளிகளும். 2719

தீ முதல் ஐந்தும் - ஐந்து பூதங்களும் 2720

கூத்தி - நடமாடும் சிவகாமி. 2721

இடங் கொண்ட - இடப்பாகம் கொண்ட. படங்கொடு - ஆணவமல மறைப்புக் கொண்டு. 2722

இரண்டு ஒத்த - சத்தி - சிவநடமிரண்டும். 2723

தெண்டினில் - முறைமையில். 2724

நாலொடு நூறு - 104. பத்திருநூறு - இருநூற்றுப் பத்து. 2726

வகாசம் - மேலாடை. மோகாய - விருப்பமுள்ள. மாகாயமன்று - ஆகாயமன்று. 2728

இம் மந்திரம் எல்லாம் சிவத்தின் நாடக சாலைகள் என்று கூறிற்று. 2729

மானிடர் - மான் + இடர் - மானை இடக்கரத்துப் பக்கம் உடையவர். கணம் ஆரம் - வரிசையாக உள்ள கூட்டங்கள். 2730

அப்பாலை - புறவண்டம். 2731

உன்மத்தம் - உலகை மறந்திருக்கும் நிலை. 2733

நீல நயமுடன் - நீல விழிகளோடு கூடிய. 2734

இம்மந்திரத்தில் குறிக்கப்பட்ட ஆலங்கள் அவரவர் புந்தியால் உணரலாம். 2736

இம் மந்திரம் இசையில் உள்ள பண்கள் வகைகளை நாடகப் பண்புக் கேற்பக் கூறுகிறது 2737

மூன்றினில் - ஒரு மலமுடையவர் - இருமல முடையவர் - மும்மல முடையவர். அஞ்சாகி - ஐந்து மலங்களாய். மூந்நூற்றறுபதாய் மூன்றினில் ஆறாய் - மூன்றினில் மூந்நூற்றறுபதாய் ஆறாய் - மூன்று வித உயிர்களிடத்திலும் $360 \times 6 = 2160$ சுவாசபேதமாய். முதற் பன்னீர் மூலமாய் - மூலாதாரமாய். அக்கம் - ஆன்மா. 2738

முடிவானவர் - ஒரு காலத்தில் இறக்குந் தன்மையுள்ள வானவர். வாமணி - வாமம் + அண்ணி - அழகு பொருந்தி. காமணி - கா + மணி - கற்பக தருவும் சிந்தாமணியும். 2739

புரிந்து - விரும்பி. எரிந்தவன் - தீப் பிழம்பாயுள்ள சிவன். 2740

ஆதர் - அறிவில்லாதவர். 2741

இருபதம - தத்பதம் - துவம்பதம். 2742

இருவரும் - பதஞ்சலி - வியாக்கிரமர். 2744

அவமாட - தீமை வெபொம் ஒழிய 2745

தாது - குற்றம். 2746

திண்டாட்டம் - உழைப்பு. தவமாம் பரன் - தவ உருவானு சிவன். 2747

கூடி - மாயையோடு கூடி. விட - அழிய. ஒளியாட - ஒளி உண்டாக. 2748

நாதத்துவம் - நாத தத்துவம். பேதத் தின்முடி - பிரிக்கப்படியன். பேதி - பிரிப்பது. 27[illegible]9

தான் - ஆன்மா. அந்தம் - முடிவு. 2750

திருந்தத் தியாகத் திருந்தலை - குற்றம நீங்கத் தியாக வானவர் தன்மை. 2751

துடி - உடுக்கை. கருவில - முயலகன்

மீது. உருவில் - சூக்குமமான. 2752

அணைப்பில் - ஊன்றிய பாதத்தில். அரனடி - தூக்கிய பாதம். 2753

கோமளம் - அழகு. முதல்வன் - சதாசிவம். 2754

சீயம் - சிங்கம்போன்ற. அணைபுகல் - அணைதற்குரிய புகலிடம். 2756

தருமிச்சை-பொருந்திய இச்சாசத்தி. ஞானாதிபேதம் - ஞானம் அஞ்ஞானம் முதலிய வேறுபாடு. 2757

உள்ளத்துள் ஓம் என - உள்ளத்தில் ஓம் என்று உணர. உடல் ஆகாயம் - உடல் சிதாகாயமாக விளங்கும். 2759

அண்டத்தப்பாற் றருநிலம் - மாயை. 2760

அண்டஒளி - சூரிய ஒளி. அகண்டஒளி - சிவ ஒளி. பிண்ட ஒளி - சீவ ஒளி. கொண்ட குறி-சரீர அமைப்புக்கள். 2761

பயனுறு . . . சோதி - சிற்றின்பத்துக்குக் கன்னியர் பயன்படுவர்; பேரின்பத்துக்குச் சிவன் பயன்படுவர். 2762

பிறியா - வேறாய்த் தனித்து இராத. பேர்ஒளி மூன்று - அண்ட ஒளி - அகண்ட ஒளி - பிண்டஒளி. அறியாது அடங்கிடில் - தெரியாவண்ணம் சிவஒளியில் ஒடுங்கினால். பெருங்காலம் - கற்பகோடி காலமாம். 2763

ஏகாச மாசுணமிட்டு - பாம்பை மேல் வேட்டியாகத் தரித்து. ஆகாச வண்ணம் அமர்ந்து - எங்கும் நிறைந்து. 2764

உயிர்க்கின்ற - படைக்கின்ற. உள்ளொளி - சிவம். குயிற்கொண்ட பேதை - உமை. வெயிற்கொண்டு - ஒளியுடையதாகி. வெளியதுவாம் - வெளிப்படுவான். 2765

அமுதம் பருகல் - ஆனந்தானுபவம். 2766

தானம் சமாதி - நிட்டை கூடும் இடம். 2767

மன ஒற்றுமையால் பொருள்களை நனவில் கண்டு ஆனந்தித்தல் ஒன்று, அதே பொருள்களைக் கனவில் கண்டு ஆனந்தித்தல் ஒன்று ஆக ஆனந்தங்கள் இரண்டென்ப என்று இம்மந்திரம் கூறுகின்றது. 2768

கரிஅட்ட - யானையை உரித்த. கரியன் கொல் சேயன்கொல் - கருப்போ சிவப்போ. 2769

மிக்கார் - தன்னையொழித்து மிகுந்துள்ளவர். பொன்னுரை - பொன் போலும் அருமையான உபதேசம். நக்கார் - நக்கன் - சிவன். 2772

விளக்கைப் பிளந்து - தத்துவங்களினின்றும் ஆன்ம ஒளியை வேறுபடுத்தி. விளக்கினை ஏற்றி - சிவ ஒளி பரவும்படி செய்து. விளக்கினுக்குள்ளே விளக்கினைத் தூண்டி - சிவ ஒளிக்குள் சீவ ஒளி விளங்கும்படிசெய்து. விளக்குடையான் - ஒளிக்கு ஒளியாயுள்ளவன். 2773

விசும்பொன்று தாங்கிய - விரிந்த. அசும்பினின்று - சிவக்கேணியில் இருந்து. குசும்பமலர் - செங்கழுநீர் மலர். 2775

நானென்றும் தானென்றும் - நான் வேறு - சிவன் வேறு என்று. இரண்டில்லை - ஒன்றும் அல்ல இரண்டும் அல்ல என்பது. 2777

நாதாந்த-நாத தத்துவங்கடந்த. நான் என்று அறிவோர்தல் - சிவ ஒளிக்குள் தற்போதம் இழந்து அறிவு மாத்திரையாய் இருத்தல். 2778

பிழைப்பிலன் - தவறுதல் இலன். ஆணவல்லார்க்கு - அன்புமிக்கார் கட்கு. 2780

சேய்நின்ற - மனம் - வாக்குகளுக்கு எட்டாமல் நின்ற. தேவர் அகம்படி - தேவர் மனத்தின் தன்மை. 2781

எப்பாழும் - மாயை சம்பந்தமானவை களும். பாழ் - மாயை. யாவும் - மாயா சம்பந்தமற்ற பொருள் களும். முப்பாழ் - சுத்தமாயை - அசுத்தமாயை மூலப்பிரகிருதி மாயை. கீழுள்ள முப்பாழ் - பூமியிலுள்ள மண் - பெண் - பொன் ஆகியவை. 2782

சத்தியாதி - ஞானமாதி. சோலை - அழகு. ஒப்பமிடல் - ஒப்புரைத் தல். ஒன்றுமாறாது - பொருந்தாத தன்மை. இன்னிய - இனிய. உற் பலம் - நீலோற்பலம் - கருங் குவளை. ஒண் - ஒண்மை - தூய்மை. சீர் - சிறப்பு. ஆறுமானதே - சிவத் தோடு சத்திகள் உற்பலம் என் னும் மலருக்குத் தூய்மை - சிறப்பு- நிறம் - மணம் - அழகு போல்வ தாம். மலருக்கு 5 குணங்கள் உள்ளனபோல சிவத்துக்கு ஐந்து சக்திகள் உண்டு. 2783

சத்தி சிவன் பரஞானம் - சத்தி யோடு கூடிய சிவத்தைப் பர ஞானத்தால் அறியவேண்டும். அபரஞானத்தால் அறியமுடி யாது. அனந்தம் சிவம் - ஆனந் தம் சிவம் - சிவானந்தம் - (ஆனந் தம் என்பது குறுகிவந்தது) உயர் ஆனந்தம் - உண்மையறிவு ஆனந்தம். வைத்த............ போலுமே - திருவருட் சத்தி பதிந்து, குரு உபதேசம் பெற்ற ஆன்மாக்கள். "ஒண் - சீர் - நிறம். மணம்" பன்னிய சோலை - மன் னிய நீலோற்பலம் போலும். உடல் - உடலோடு கூடிய ஆன் மாக்கள். 2784

உயிரானது எப்பொழுதும் சிவத் தோடு பொருந்திநிற்க, நீலோற் பலத்துக்கு அஞ்சு குணங்கள் பிறி வற இருப்பதுபோல், உயிருக்கும் சிவத்தின் குணங்கள் சிவசத்தி யால் உடல் உள்ள போதே தோன்ற நிற்பன என்பது இம் மந்திரம். 2785

நெகிழ - மனம் உருக. புனையில் - பாக்கள் புனைந்து அவன் புகழைப் பாடினால். பொதியலும் ஆகும் - அவனோடு இரண்டறக் கலக்க லாம். 2786

வாலிய - பரிசுத்தமான. மதுரம் - சுவை. துரியம் பொடிபட - துரியாவத்தை ஒழிய. தேக்கிடும் - ஞானம் தேக்கிடும். (நிறையும்). 2787

அமரத்துவம் கடந்து - கூற்றுவனை வென்று. தமரத்து - நாத தத்து வத்தில். துவள் - மயக்கம். 2788

சத்திய ஞான ஆனந்தம் இன்னதென இம்மந்திரம் கூறுகின்றது. மத்தி மம் - உண்ணிலைக் கருவிகள். ஆறாறு - 36 தத்துவங்கள். துரியத் துரிசு - துரிய அவத்தை. பெத்தம் அற - பாசம் நீங்க. பிறழ்வுற்று - விளங்கி. 2789

அவமான மும்மலம் - பிறப்பைக் கொடுக்கும் ஆணவம் - கன்மம்- மாயை. பவமான - குற்றமுள்ள. முப்பாழ்-மும்மாயையை.(மாயை- மாமாயை-பிரகிருதி மாயை) பற் றற - பாசம் நீங்கும் பொருட்டு. துவம் - மேன்மை. 2790

பரம் எங்குமாகி - எல்லா உயிர்களி டத்தும் நிறைந்து. நிரவு-நிறைந்த. அரிய துரியத்து - அருமையான துரியாவத்தையில். 2791

குலைக்கின்ற - நிலையைக் குலைக் கின்ற - தளரச் செய்கின்ற. குவ லயம் - மண் - பூமி. வரைத்தூ - ஓர் அளவில் அமைத்து. வலம் செயும் - வணங்கும். 2792

பொங்கி - விளங்கி. புவனபதி-அண் டங்களுக்கெல்லாம் அதிபதி. 2793

சுவடு - குறிகள். கமை - பொறுமை. காமாதி எட்டு - பெண்ணாசை -

குரோதம் - மதம்-மோகம்-உலோபம் - மாச்சரியம் - பொன்னாசை-மண்ணாசை ஆக 8. 2794

மூவகைத் தெய்வம் - அயன் - அரி - அரன். ஒருவன் முதல் உருவாயது வேறாம் - ஒருவனாகிய அரன் அம் மூவரில் ஒருவனாகியும் வேறாகியும் நிற்பது போல. அணு - சீவன். சேய - எண்ணுதற்கரிய. முத்தீரியம் - சிவ - சீவ-பாதரியங்கள். இறைநூல்- தமிழ் வேதங்களும் - தமிழ்ச் சிவாகமங்களும். 2795

கருவன்றி - தனக்கு ஒரு காரணம் இன்றி. மருவன்றி - ஒன்றோடும் கூடுதல் இன்றி. 2796

பறைய - குரு சொல்ல. 2798

சத்தியாகி நான்கு - சத்தி - சிவன் - பரம் - சீவன். மதித்த - கலந்த. 2899

தாரம் - பிரணவம். 2800

தலைநின்ற தாழ்வரை-கயிலை. (இது காச்சுமீரத்திலிருந்து பார்த்தால் கயிலைக்கொடுமுடி செங்குத்தாக இருப்பது தோன்றும்). மூலை நின்ற மாது-வயது வந்த உமை. 2801

போமாறு - புகுமாறு - ஊன் உயிர் வேறுபடவும் கூடவும். 2802

செற்றிலென் - செதுக்கினால் என். மறிக்கில்- அடித்தால். 2803

முன்னம் - முன் பிறப்புக்களில். விதி - கன்மபலனை அநுபவிக்க ஈசனால் விதிக்கப்பட்ட. வான் - மேன்மை உள்ளதாக. மாட்டு - சம்பந்தம். கோன் - சிவன். முன்னம் - சந்நிதானத்தில். சென்னி குறிவழி-தலைவிதியின்படி. செய்தது - செய்த கன்மம். நன்னிலம்- நல்ல உலக வாழ்க்கை. 2804

ஆறிட்ட நுண்மணலாறு - ஆற்றில் உள்ள நுண்ணிய மணல் போல் அளவற்ற கன்மபலனை. பேறிட்டு- அடையும் பொருட்டு. 2805

அம்பு ஊடு அறுக்கிலென் - அம்பு ஊடுருவிப் பாய்ந்தாலென். உழுவை-புலி. எனைப் பதி-ஞான பூமி. ஞானத்துழவு - ஞானம் அடைவதற்கு உரிய ஆராய்ச்சி. 2807

நமர் - இயமதூதர். 2808

தானாய்-யாவற்றிற்கும் ஆதாரமாய். ஆறு அறிவு - ஐந்து புலனறிவும் மன அறிவும். 2811

பிறழாத ஆனந்தம் - தவறுபடாத ஆனந்தம். வேதகமோதும்-தமிழ் வேதத்திலே கூறப்படும். 2812

புலவி - பிணக்கு. இணரும்-இதயத்துள் கலந்திருக்கும். துணர் - கொத்து. 2813

மின்னுற்ற - விளக்கம் பொருந்திய. தன்னுற்ற - தானே விளங்குகின்ற. என் உற்று அறிபவன் - என்னையே உற்று நோக்குபவன். 2816

மாசத்தி-திருவருட்சத்தி. தத்துவம்- மெய்யறிவு. சுத்தி அகன்றோர் - சுத்தாவத்தையைக் கடந்து சென்றவர். 2819

சொல்லறும் - மோனம் உண்டாம். பாழாம் - வேறுபாடு இன்றாம். விள்ளா - உண்டாகா. தன்னுருவு- சிவபோதம். 2820

அடைவே-முறையாக. நிருவாணம்- முத்தி. 2821

கற்று அற்றவர் - கற்று அறிந்து அடங்கினவர். சுற்று - சுற்றம். பெற்று உற்றவர் - அடைந்து அநுபவிப்பவர். பிதற்று - பேசுதல். 2822

காயம் பலகை - உடம்பானது சூதாடு பலகை போன்றது. கவறு ஐந்து - ஐம்பொறிகளும் சூதாடு கருவி போன்றது. கண்மூன்று - வலம் - இடம் - புருவமத்தி ஆகிய மூன்றும் மூன்றிடங்களாக. ஆயம் - சூதாடு கருவியிலுள்ள அறை. மாயம் - வஞ்சகம். 2826

தூறு - சிறுசெடி (காமாதி). தூநெறி மாறி - நீங்கித் தூய்மையான நெறியில். ஊறி - சுரந்து. 2827

ஆறுதெரு - ஆறு ஆதாரங்கள். அகப்பட்ட சந்தி - மூலாதாரம். சாறுபடுவன - இனிமை உண்டாவதான. நான்குபனை - நான்கு இதழ்களையுடைய பனைபோன்ற மலர். ஏணி - சுழுமுனை. கடலேழ் - எழுவகைப் பிறப்பு. 2828

வழுதலை வித்து - யோகப்பயிற்சி. பாகல் - வைராக்கியம். புழுதியைத் தோண்டினேன் - தத்துவ ஆராய்ச்சி செய்தேன். பூசனி பூத்தது - சிவம் வெளிப்பட்டது. தோட்டக் குடிகள் - இந்திரியாதி விடயங்கள். பழுத்தது - கிடைத்தது. வாழைக்கனி - ஆன்மலாபம். 2829

ஐயெனும் வித்து - ஐம்பூதங்களாகிய வித்து. ஆனை - சீவனை. செய் - திரோதாயி-திருவருட்சத்தி. 2830

பள்ளச்செய் - சுழுத்தி. பாழ்ச்செய் இரண்டு - இன்பம் இல்லாத நனவு—கனவு. கள்ளச்செய் - கரந்திருக்கும் சிவம். உள்ளச்செய் - மனமாகிய வயல். உழவு - தத்துவ ஆராய்ச்சி. வெள்ளச்செய் - சிவானந்த வெள்ளம். 2831

மூவணை ஏர் - மூந்நாடிக்குரிய வாயு. முக்காணி - மூலாதாரத்துள்ள முக்கோணம். அணிகோலி - வாயுவை முறையாகக் கட்டி. 2832

நறி - வீணைத்தண்டு. நாவணை கோலி - நாவை அணையாகச் செய்து. நடுவிற்செறு - காமாதியாகிய களைகள் இல்லாத யோகமாகிய வயல். கால் அணைகோலி - காலில் விலங்கிட்டு அதாவது பாசவயப்பட்டு. களர் உழுவார் - களர் நிலத்தை உழுவார் அதாவது, பயனற்ற காரியம் செய்வார். 2832

ஏற்றம் இரண்டு - இடைகலை, பிங்கலை. ஏழுதுரவு - ஆதாரமாறும்-அமுது ஊறும் சகசிர அறை. மூத்தான் - சந்திரகலை. இளையான் - சூரியகலை. படுத்த - பாய்ச்சிய. பாத்தி - நாடிகள். பாழ்ப்பாய்ந்து - வீணை. 2833

இருபத்து நாலு - ஆன்மதத்துவங்கள் 24. ஏழு - வித்தியா தத்துவங்கள் 7. ஐந்து - சிவதத்துவங்கள் 5. பனவற்கு - ஆன்மாவுக்கு. 2834

ஊற்றுப் பசுக்கள் - வித்தியா தத்துவங்கள். காற்றுப் பசுக்கள் - பத்துவித வாயுக்கள். மாற்றுப் பசுக்கள் - புலன்கள். 2835

தட்டான் - சீவன். அகத்தில் - உடம்பின்கண். மச்சின்மேல் - கபாலத்தில். செம்பால்-செம்மைத்தன்மை. வட்டம் - பிரணவம். வாய்மை - அஞ்செழுத்து. அதனை - அந்த அமுதை. தகைந்து - தடுத்து தன்னுடையதாக ஆக்கி. 2836

அரிக்கின்ற - தானிய அரிக்கட்டுக்கள் உண்டாதற்கு உரிய. நாற்றங்கால் அல்லற்கழனி - நாற்றங்கால் ஆகிய வயல்போலும் துன்பம் நிறைந்த உடல். திரிக்கின்ற ஓட்டம் - வெளியில் திரியும் நாலுவிரல் அளவுள்ள சுவாசம் (இது பன்னிரண்டங்குலமுள்ள சுவாசம் பூரகம் செய்யும் போது எண் விரல்தான் திரும்பி வருகின்றது. நால்விரல் வெளியே நின்றுவிடுகிறது என்பதைக் குறிக்கின்றது.) சிக்கெனக் கட்டி - அந்த நான்கு விரல் அளவு உள்ள சுவாசத்தையும் கூடிக் கொள்ளும்படி செய்து. வரிக்கின்ற - கொள்ளத்தக்க. நல்லான் கறவை - மனம். பூட்டில் - பிராணவாயுவாகிய சுவாசத்துடன் கூட்டினால். வெள்ளரி வித்து - சுக்கிலம். வித்தாமே - முத்திக்கு வித்தாமே. 2837

இடர்க்கொண்டு - வருந்தி முயன்று,

நாவி - மனதைப் பண் செய்து. எருவிட்டு - சுத்தவாதனையாகிய எருவினை இட்டு. வித்தி - மோனமாம் வித்தைப் பதித்து. கிடர்க்கொண்டு பூட்டி - முயற்சியினால். கிளறி - வெளிப்படச் செய்து. மூளையை - மவுனத்தினின்றும் முளைக்கும் ஞானத்தை. மிடர்க்கொண்டு - விசுத்தி ஆதாரத்திலுள்ள ஈசன் அருளினால். சோறட்டு - அமுதம் வரச்செய்து. அடர்க்கொண்டு - துன்பம் எய்தி. செந்நெல் - சிவானுபவம். 2838

மேலைக்கு - மோட்சத்துக்கு. காதம் - அமுத கேணி. விளைந்து என்னும் அடுக்கு அளவின்மையைக் குறித்தது. முக்காதம்-மூன்று மண்டலம். சோமன் - சூரியன் அக்கினி. 2839

வஞ்சி - வஞ்சிக்கொடி. மாய்தல் - கேடு அடைதல். 2840

குறுநரிக் கொட்டகம் - அணு அளவு ஆய மனம் இருக்கும் உடல். ஆப்பிடு - கட்டப்பட்ட. அங்கியுள் - சிவாக்கினியில். ஆயிழை ஏற்பட - சத்தி பதிய. 2841

மலை - புருவமத்தி. மழை - அமுத தாரை. மான் கன்று - சீவன். குலைமேல் - அம்மலையிலுள்ள மாமரக்கொத்து ஆகிய அறிவில் இருந்து? கொழுங்கனி - ஆன்ம அனுபவம். வீழ - உண்டாக. உலை - தவம். கொல்லன் - சிவன். முலைமேல் அமிர்தம் பொழிய - சத்தி பதிய. 2842

பார்ப்பான் அகம் - பிரமனால் படைக்கப்பட்ட சரீரம். பாற்பசு ஐந்து - ஐம்பொறிகள். பால் - ஆனந்தம். 2843

ஆமாக்கள் ஐந்து - பஞ்சப் பிராணன். அதாவது:—அபானன், உதானன், சமானன், பிராணன், வியானன். அரியேறு - ஆண் சிங்கத்தின் தன்மை வாய்ந்த. முப்பது - மூன்று+பத்து. i.e. கன்மேந்திரியம் 5 - ஞானேந்திரியம் 5 - ஆக 10. புத்தி - சித்தம் - அகங்காரம் - 3. தேமா இரண்டு - சுகம் - துக்கம். திப்பிலி ஒன்பது - நினைத்தல் - படித்தல் - புகழ்தல் - தொண்டு செய்தல் - அருச்சனை - நட்டல் - வந்தித்தல் - பார்த்து ஆனந்தித்தல் - தற்போதம் இழத்தல் ஆக 9. தாமா - தமக்கு உரியனவாக. குரங்கொளின் - வசப்படுமாயின். மனத்துள்ளன - மனத்துள்ள காமக் குரோத ஆதிகள். மூவா - வளர்ச்சி அடையா. கடாவிடின் - வைராக்கியம் வளர்ச்சி அடைதலின். மூட்டுகின்றார் - காமாதிகளைக் கொடுக்கின்றார். 2844

எழுதாத புத்தகத்து ஏட்டின் பொருளை - சதாசிவநாயனாரைத் தவிர வேறு எவராலும் எழுதப்படாத புத்தகத்தால் (மயிலிறகால்) தாழை மடலில் (ஏடு) வர்ணத்தைக் குழைத்து எழுதப்பட்ட தமிழ் வேதப் பொருளை. தெருளாத - இருது வென்பதே இல்லாத. கன்னி - மனோன்மணி (மனோன்மணி கையில்தான் வேத புத்தகம் உள்ளது என்பதை "ஏடங்கை நங்கை" என்ற திருமந்திரப் பாட்டாலும் அறிக). மலராத பூ - சிவம். பிறவாத வண்டு-பிறப்பற்ற சீவன். மணம்-சிவானந்தம். 2845

போகின்ற பொய் - இரேசக வாயு. புகுகின்ற பொய்வித்து - பூரக வாயு. கூடின்ற (பொய்) - கூடுகின்ற வாயு அதாவது நான்கு விரற்கடையுள்ள வாயு. நாவலின் கூழை - சரீரம். பைங்கூழ் - இருவினைப்பயன். ஐவர் - ஞானேந்திரி

யங்கள். வேகின்ற கூரை - சரீரம். 2846

மூங்கில் - மனம். வேம்பு - சிவம். பனை - திரோதானம். பாம்பு - அஞ்ஞானம். வெடிகின்றவாறு - அறியப்படாத தன்மை. 2847

பத்துப் பெரும்புலி - தசநாடி. யானை பதினைந்து - மண் முதலைந்து, சுவை முதலைந்து, வாக்காதி ஐந்து. வித்தகர் ஐவர் - ஞானேந் திரியங்கள். விநோதகர் - உடலின் கண் ஊழியம் செய்பவர். ஈரொண் மர் - பத்து வாயுக்கள். மூவர் - முக்குணம். அறுவர் - பிறத்தல் முதலிய விகாரங்கள். அத்தலை - அவ்வுடம்பில். ஐவர் - ஐந்து அவஸ்தைகள். 2848

இரண்டு கடா - இரேசகம் - பூரகம். இவ்வூர் - இவ்வுடம்பு. தொழும் பன் - சீவன். ஒருகடா - கும்பகம். 2849

சமன்கட்டி - செவ்விதாக அமைத்து. பருத்தி - சிவம். முத்தக் கயிறு - முறுக்கு அதிகப்பட்டு அறுபட்ட கயிறுபோல. மூவர் - முக்குணங் கள். ஊரினுள் - சித்தத்தில். நிரம்ப - பூரண சிவமாக. 2850

கூகை - அஞ்ஞானம். பாம்பு - காமம். கிளி - அறம். பூனை - மறம். நாகை - சிற்றறிவு. பூழும் - குரோ தமும். நடுவில் - சித்தத்துள். எலி - சீவன். 2851

குலை............உழக்கின் - எழுகின்ற கெட்ட எண்ணங்களை அடக்கி னால். வெள்ளெலி - சார்ந்ததன் வண்ணம் ஆகும் சீவன். உலை - உடம்பு. ஓடும் - முக்குணங்கள் கெடும். இருக்கும் - உள்ளாயின நிலைபெறும். புலைக்கு - மாயைக்கு. 2852

காடு - மாயையாகிய காடு. கடுவெளி - சூனியம். கூடு - உடல். ஐந்து. குதிரை - ஞானேந்திரியம் ஐந்து. மூடு புக்கானது - அடங்கி ஒழிந் தது. ஆறுள ஒட்டகம் - காமம் - குரோதம் - உலோபம் - மோகம் - மதம் - மாற்சரியம். மூடுபு - அடக்கி. தாவிடின் - ஒழுகினால். மூவணை - சீவதுரியம் - சிவதுரி யம் - பரதுரியம். 2853

கூறை - ஆடை. குழாய் - பாத்திரம்; (முன்காலத்தில் மூங்கில் குழாய் கள் பாத்திரமாக உபயோகப் படுத்தப்பட்டபடியால் அவ்வழக்கு இலக்கியங்களில் பயின்றது). காறை - கழுத்தணி. நாணும் - அரை நாண். ஆறைக்குழி - உபத் தம். 2854

துருத்தி - பிரவிருத்தி - நிவிர்த்தி. அக்கரை - எல்லை. மலைமேல் விருத்தி - சித்த விருத்தி; காமாதி கள். ஒருத்தி - சிவசத்தி. ஊர் - இருப்பிடம். 2855

பருந்தும் கிளியும் - அறமும் மற மும். படுபறை கொட்ட - சுக துக்கங்களை உண்டாக்க. மாதர் - மனம் முதலிய உட்கரணங்கள். திருமணப்பட்டார் - ஒருமை அடைந்தோர். பெருந்தவப்பூதம் பெறல் - பெருந்தவத்தினை சித் தம் அடைதலால். உருவாகும் இருந்திய பேறு - உண்டாகும் முத்திப்பேறு. 2856

பறவை - இந்திரியம். இரை - சுவை முதலிய ஐந்து. அதனூடுபுக்கு - அவ்விந்திரியவழிச் சென்று. உண்டி அறுக்குறில் - சுவை முத டிய விஷயாதிகளை நீக்கில். என் னுக்கும் - என்ன கிடைக்கும். சூடுஎறி - தவத்தால் உண்டாகும். நெய் - சிவானந்தம். மை கான் றிடும் - அவிச்சையை ஒழிக்கின்ற. பாடு - தன்மை. 2857

இலை - நூற்பயிற்சி. பூ - பிரவிருத்தி. வண்டு - தத்துவ ஆராய்ச்சி. தலை - சாத்தியம். வேர் - சாதகம்.

தாள் - சாதக முயற்சி. பூவின் குலே - சுவை முதலிய விஷயக் கூட்டம். கொய்யும் மலர் - சுகதுக்க அனுபவம். கொய்யும் தலே - ஆன்ம அனுபவம். கிளே - சீவபோதம். 2858

அக்கணம் நின்றதோர் - ஆன்மாவிற் பொருந்தியதோர். ஆலமரம் கண்டு - ஆல் அமர் அம் கண்டு - சிவத்தைக் கண்டு. நக்கண - வெளிப்படையாக. நடுவே - நடு நிலேயுடன். அஞ்சு துயரம் - அஞ்சு துன்பம். (அவித்தை-அஸ்மிதை-இராகம்-துவேஷம்-அபினிவேசம்) தாழ்ந்து - சிவத்தில் அடங்கி. 2859

கூப்பிடும் - உலகபந்தம் நீங்கும். ஆற்றில் - சிவோகம் பாவனு முயற்சியில். வன்காடு இருகாதம் - சங்கற்ப-விகற்பத்தோடு கூடிய இருவிதக் காடு ஆகிய அஞ்ஞானம். காப்பிடு கள்ளர் - காவல் செய்யும் இந்திரியக் கள்வர். வெள்ளர் - சிவானந்த வெள்ளப் பெருக்கு உடைய அடியவர். கூப்பிடும் - வாக்கு வியாபாரமும். கூரை - வீடு-சீவன் முத்தி. 2860

கொட்டியும் ஆம்பலும் - சகல - கேவலம். குளம் - ஆன்மா. எட்டி - வேம்பு; நாமமும் - உருவமும் (விடத்தக்கன ஆதலின்). வாழை-கட்டி-தேன்; சத்து-சித்து - ஆனந்தம். எட்டிப்பழம் - எட்டு + இப்பழம் எளிதிற்சித்திக்கும் இவ்வுலக போகம். or எட்டிப்பழம் - கண் கவர் வனப்பினதாகிய எட்டிப் பழம் விஷத்தன்மை யுடையது போல, இன்பம்போலத் தோன்றும் உலக இன்பங்களாகிய துன்பங்கள். 2861

பெடைவண்டும் ஆண்வண்டும் - சத்தியும் சிவனும் எவ. பீடிகை வண்ணக் குடைகொண்ட - பூமியில் பிறந்த. பாசத்துக் கோலமுண்டாள் - சீவன். கடைவண்டு - மனத்தால். தான் உண்ணும் - சுகதுக்கங்களே அநுபவிக்கும். கண் கலந்திட்ட பெடைவண்டு - அருட் சத்தியால். 2862

தட்டத்துநீர் - வலதுழக்கு-பிங்கலே. தாமரை-இரேசகவாயு. குட்டத்து நீர் - இடதுழக்கு - இடைகலே. குவளே - பூரகவாயு. விட்டம் - சுழு முனே. விளங்க - கும்பகம் செய்ய. குட்டத்தில் இட்டதோர் கொம்மட்டி - புழைக்கடையில் காய்த்திருக்கும் பழம்போல் முத்தி எளிதாம். 2863

ஆறு பறவைகள் - காமாதி ஆறு. ஐந்தகத்து - ஐம்பூதங்களால் ஆகிய உடலகத்து. நூறு பறவை - பல எண்ணங்கள். நுனிக்கொம்பு-அகங்கார தத்துவம். பெரும்பதி எழு - நனவு முதலிய எழு. மனே - முத்தி வீடு. 2864

கொட்டணம் செய்து குளிக்கின்ற கூவல் - சீவபோதத்தை அடக்கிச் சிவபோதத்தில் திளேக்கில். வட்டனப்பூமி - சுகநிலே. கட்டனம் செய்து கயிற்றுற் றெழுமி - அந் நிலேயைக் கட்டுப்படுத்தி நிலேக்கச் செய்து. உள் ஒட்டனம் செய்து - உள்ளத்துள்ளே ஓங்க வைத்தால். ஒளி - சிவத்தின் ஒளி. 2865

எழு வளேகடல்-அக்காலத்துக் குறிப்பிட்ட பூமி அண்டத்து எழு கடல். எட்டுக் குலவரை - சிறந்த எட்டு மலே. ஆழும் - இருக்கும். விசும்பு...... இருநிலம் - நிலம், நீர், தீ, வளி, வெளி. அது ஆலய மாமே - அந் நிலம் ஆலயம் போன்றது. ஆ + லயம் - ஆன்மா சிவத்தோடு இலயிக்கும் இடம். 2866

ஆலிங்கனம் செய்து - மோகத்துடன் கூடி. அகம் சுட - உள் வருந்த. சூலத்து - கருப்பையில். சால்

இங்கு - உடம்பை இவ்வுலகத்தில். கோல் - ஆட்சி, ஈண்டு வாழ்க்கை. கூபப் பறவைகள்-உடம்பின்கண் அமைந்த இந்திரியங்கள். மால் - மயக்கம். முன்பின் - முன்னர் (முன் சென்மங்களில்) இந்திரியங் களின் பின் (இந்திரியங்கள் சென்ற வழியில்). 2867

கொட்டு - இந்திரிய நுகர்ச்சி. தாலி - சுக்துக்க அநுபவம். பாரை - பொருள்களை அநுபவிக்கும் ஆசை. இட்டம் - திருவருட் சத்தியின் சம்பந்தம். 2868

கயல் - மாறி மாறி வருகின்ற உலகம். முயல்-தவமுயற்சியால் அடையக் கூடிய சிவம். மூவர் - சரியை - கிரியை - யோகவான்கள். (ஞானவான்கள் அடைதல் நிச்சயமாதலால் அதைக் கூறாமல் விட்டார்.) பறையொன்று பூசல் - ஆரவாரமுடைய சண்டை. மறையொன்று கண்ட - தமிழ் வேதப் பொருளாயுள்ள ஒன்றைக் கண்ட. துருவம் - ஆன்மா. பொன்னுமே- மலம் நீங்கிச் சிவத்தோடு கலக்கும். 2869

கோரை - அகண்ட அறிவு. குளம் - சித்தம். ஆரை - ஆசை. நாரை - கொக்கு. நாதனூர் பாரை கிடக்க- வன்மனத்தின்கண் சிவம் எழுந்தருள. 2870

கொல்லை - பிரணவம் (அ-உ). முக்காதம்-அகரமும் உகரமும் மூன்று மாத்திரை அளவின. காடு அரைக்காதம் - மலக்காடாகிய ம் அரை மாத்திரை அளவினது. எல்லை - அளவு. ஒல்லை - விரைவாக. ஊர் - முத்தி உலகம். 2871

உழ......காலத்து - தவம் கைகூடிய காலத்து. எழுமழை பெய்யா - ஞானத்தை எழுப்புகின்ற அருள் மழையைப் பெய்து. திருநிலைச் செல்விதழுவி - திருவருட் சத்தி பதிந்து. வினை சென்று தான் பயவாது - மூவகை வினைகளும் இன்பதுன்பங்களைத் தாராது. வழுவாது போவன் - தவறாமல் அருள் செய்வான். 2872

பதுங்கிய......காதம் - பன்னிரண்டங்குலம் பரிந்திடும் பிராணன். ஓது......உலவ - சிவானந்தக் கடலின் உணர்ச்சி தோன்ற நாலங்குலம் கூடிக்கொளின். மது...... ஊற - தேன் துளிக்கும் சிவக்கனியின் இன்பம் பெருக. பொது...... வளைத்தான்-இதுவரை வருத்திய ஐந்து இந்திரியங்களை வென்றவன் ஆவன். 2873

தோணி - உடல். கடல் - உலகமாய குடும்பக்கடல். வாணிபம் செய்து- நினைத்தல் மறத்தலாகிய வியாபாரங்களைச் செய்து. வழங்கி - ஒழுகி. நீவிக்கு - பெண்ணின் பொருட்டு. இறையும் - சிறிதேனும். நெஞ்சின் நிலைதளரின் - மனம் நிலைகுலைந்தால். அப்பு - சலிக்கும் தன்மையுள்ள நீரைப் போன்ற மனம். ஆலிப்பழம் - நச்சுக்கனி. 2874

முக்காதம் ஆற்றில் - முக்குண வழியில். மூன்றுள வாழைகள் - நனவு - கனவு - சுழுத்தி நிலைகள். செக்கு......காய்த்தன- தவத்தால் ஆணவம் - கன்மம் - மாயை ஆகிய மலங்கள் பக்குவப்பட்டன. பக்கனூர்-பக்குவப்பட்ட ஆன்மாக்கள். மிக்கார் - மேம்பட்டார். படங்கினூர் கன்னியர் நக்கு - மேகலை அணிந்த கன்னியர் மோகத்தை வென்று. மலருண்டு-சிவானந்த போகத்தைப் பருகி. 2875

அடியும் முடியும் - தோற்றமும் சிறப்பும். ஆத்தி - உலக சம்பந்தம். முடிய - கெட. முத்தலை மூங்கில் - முத்தியை அளிக்கும் மூன்று

கண்களுடைய சிவம். கொடியும் - படையும் - நினைப்பும் மறப்பும். கோட்சான் ஐ ஐந்து - குற்றம் பொருந்திய ஞானேந்திரியம் ஐந்து. கன்மேந்திரியம் ஐந்து. மடியும் - கெடும். வலம்புரி - வெற்றி நாதமாகிய சங்கொலி. 2876

குன்றியும் பாம்பும் - தோல்வியும் வெற்றியும். பசு - முசுவானரம்; அடக்கமும் அடங்காமையும். தென்றி....கூட்டத்து - செறிந்த புன் மன எண்ணங்களில். குன்... பின் - ஈடுபடாது சிவத்திடை மனதை நிறுத்தினால். பன்றி... வாறே - அஞ்ஞானத்தைப் போக்கலாம். 2877

மொட்டித்து - தவத்தால் வெளிப்பட்டு. மொட்டு - சிவானந்தம். கட்டுவிட்டு - யான் - எனது என்னும் கட்டை நீக்கி. மலர்தல் - சிவானந்தம் வெளிப்படுதல். பற்று விட்டு - மனதைப் பற்றில் விட்டு. மனே - முத்திவீடு. 2878

நீர் - நினைந்து எண்ணும் எண்ணங்கள். பாயும் - சிவானந்த வெள்ளம் பாயும். நிலம் - சித்தம். பச்சையாம் - சிவம் வெளியாம். கூரும் மழை பொழியாது - இந்திரியச் சேட்டைகள் இல்லாது. பொழி புனல் - சிவானந்த வெள்ளம். இந்நீர்மை - இத்தன்மை. திடர் - இந்திரிய வயப்பட்ட சித்தம். 2879

கூகை......ஏறி - அஞ்ஞானமுள்ள சீவன் சிவமாகிய குருவை அடைந்து. குணம்...காலத்து - உலகுக்கு முக்குணமாயை காரணம் என்று அறிகின்றபோது. நாக...டும் - குரங்கையொத்த மனமும் அடங்கும். பாக......பண்பனும் ஆமே - மனத்தை அடக்கி நடத்துகின்ற தன்மையுடையவன் ஆவன். 2880

வாழையும் சூரையும் - இன்பமும் துன்பமும். வந்து - இருவினையால் வந்து. வன் துண்டம் செய்திட்டு - இன்ப துன்பங்களில் மனம் வையாது இரண்டினையும் ஒப்ப நோக்கினால். வாழ்+ஐ இடங்கொண்டு - என்றும் உள்ள சிவம். மனத்தின்கண் இடம் கொண்டு. 2881

நிலத்தைப் பிளந்து - பூமியின்கண் சகல போகத்தையும். நெடுங் கடலோட்டி - கடல் யாத்திரை செய்து வேண்டிய செல்வங்களை ஈட்டியும். புனத்துக் குறவன் - ஐம்புல அநுபவியாகிய சீவன். புணர்ந்த கொழுமீன் - அடைந்த தேக உலக பாசங்கள். அருத்தம் - நற்பயன். அடுவது - பிறந்து இறந்து உழல்வதுமாம். 2882

தளிர்...அகத்து - பற்று அற்றவனது உள்ளத்தில் சுகம் உண்டாகும். விளிப்பதோர் சங்குண்டு - அது பத்துவித நாதங்களில் சங்கோசை கேட்கும்போது. வேந்தன் - ஆத்மா. குசவர் - காவிதி; இரேசக பூரகம். பதம் ஒன்று - கும்பகம். 2883

குடைவிட்டு - கவிந்துள்ள ஆசை நீங்கி. போந்தது - சிவத்திடம் சென்றது. கோவில் எழுமை - மனக்கோவிலில் உள்ள சித்தம். படைகண்டு - காமாதி சேனைகளைக் கண்டு. பாதி வழியில் - யோக அப்பியாசத்தின் நடுவில். மீண்டது - தப்பித்துக்கொண்டது. உடையவன் மந்திரி - புத்தி. உள்ளலும் - விசாரித்தால். ஊரார் - தேசியாராகிய சீவனார். அடையார் நெடுங்...கே - ஒன்பது வாயிலையுடைய தேகத்தில் புகார்—பிறவார். 2884

போகின்ற வெட்டும் - இந்திரியங்களில் செல்லும் விருப்பமும்

புகுகின்ற பத்தெட்டு - உள்ளே புகுகின்ற பற்றக்கூடிய எட்டு மாத்திரையான பிராணன். நாக ......புரவியும் - நிலையான எண் விரல் பிராணனோடு நால் விரல் பிராணனையும். பன்றி - வெற்றி. 2885

பாசி - ஆசை. குளம் - சித்தம். குருகு - சீவன். இரை - இந்திரிய விடயங்களை. தூசி மறவன் - வைராக்கியம் பதைக்கின்றவாறு - கெடும். 2886

கும்பம் - இந்திரியச் சேட்டைகள். அடங்கிய மனம். கொம்பு - இன்பம். காற்று - இன்ப உணர்ச்சி. வம்...பூ - ஞானமயமான ஆன்மா. 2887

வீணை - யாழ். தண்டு - புல்லாங்குழல். தாணு - சிவம். தருதலை - இன்பத்தை. வாணிபம் - இந்திரியச் சேட்டை. காணி - முத்தி உலகம். 2888

கொங்கு புக்காரொடு - இந்திரிய வழிச்சென்றவரோடு. அங்கு - துரிய அவத்தையில். திங்கள் புக்கால் - தண்ணிய ஒளி வெளிப்படுமாகில். தங்கு புக்கார் - துரியத்தில் நின்றார். 2889

போது - அஞ்ஞான இருள். புலர்ந்தது - நீங்கிற்று. பொன்னிறம் - ஞான ஒளி. தாதவிழ்புன்னை - அருளைப் பொழியும் சிவம். இருகரை தங்கும் - உள்ளும் புறமும் விளங்கும். மாதர் - அழகு. மண்தலம் - பூமி. 2890

கோமுற்று - வெறுப்பு விருப்பு உற்று. குடிகள் - சீவர்கள். காமுற்று அகத்தி - (அகற்றி - அகத்தி) விருப்பு வெறுப்புக்களை மகிழ்ந்து நீக்கி. கடைதோறும் - நேர்ந்த இடந்தோறும். மீவற்ற - பிறவி கெட. எல்லை விடாது வழி காட்டி - ஆகம மார்க்கம் தவறாமல் உபதேசித்து. ஆமுற்று அதட்டினால் - சிவபோதத்தை ஒழித்தால். ஐந்து உண்ணலாம் - ஐந்தெழுத்துப் பொருளான சிவானந்தம் அநுபவிக்கலாம். 2891

தோட்...கால் - சுகசமாதி கலந்தால். நாட்...செயும் - உலகத்தில் கிரியா மார்க்கத்தைக் கைக்கொண்டு என் செய்ய முடியும். மூட்டிக் கொடுத்து - சமாதிக்கு ஏற்பாடு செய்து. முதல்வனை - தென்முகக் கடவுளை. முன்னிட்டு - முன்னிலையாக வைத்து. காட்டிக் கொடுத்தவர் - உபதேசம் செய்த குரு. 2892

புலர்ந்தது போது - அஞ்ஞான இருள் கெட்டது. புட்கள் - அநுபவங்கள். பூங்கொடி - பெண். 2893

மாது - இலக்குமி. தாது இரண்டு - சுக்கில சுரோணிதம். பறவைகள் - சீவர்கள். வேதிரண்டு - ஆண் பெண் சரீரங்கள். 2894

தோணி - சரீரம். துறை - முத்தித்துறை. வாணி - மனத்தை. ஐவர் கோல் ஊன்றலும் - இந்திரியங்கள் வேலைக்கு ஆரம்பித்ததும். வாணிபம் செய்வார் - அஞ்ஞானத்தை வாங்கிக்கொண்டு ஞானத்தைக் கொடுக்கும் குரு. ஆணி கலங்கின் - பிறவிக்கு ஏதுவாகிய அஞ்ஞானம் கெட்டால். அது விதுவாகும் - சீவன் சிவனாகும். 2895

என இல்லை - என இல்லாமல். சென்றார் - சமாதியை அடையப் பயிற்சி செய்பவர். அங்கே - மோன சமாதியில். மறைப்பொருள் - பரம சிவம். ஆங்கணைந்தவர் - சமாதி கூடியவர். 2896

காட்...பயன் - அடையாளத்துக் கொண்டு அப்பாற்பட்ட சிவத்தை அடையும் நெறியை எட்டில்

எழுதி வைத்துக் கொண்டால் மாத்திரம் பயன் இல்லை. கூட்டும்...ல்லது - குரு உபதேசித்த நெறியில் நின்றால் அல்லது. ஆட்டி...தற்றே - வெள்ளாட்டின் கழுத்தில் தொங்கும் பயனற்ற அதர்போல முடியும். 2897

மறப்பது வாய்-மறப்பதுவே தொழிலாய். மாய னன்னுடன் - மாயா சரீரத்தை உடையவன். திரு மங்கை - திருவருட்சத்தி. உறக்க மில் போகம் - சிவயோக சமாதி. உறங்கிடும் - அமைந்திருப்பான். 2898

துரியங்கண் மூன்றும் - சீவ துரியம். சிவதுரியம்-பரதுரியம். அதன் மீது மூன்றாய் - சீவ-சிவ-பரதுரிய அதீதங்கள். விரிவு குவிவு-நினைப்பு மறப்பு. விழுங்கி உமிழ்ந்து - ஒழித்து. உரையில் - சொல்ல இயலாத. அநுபூதிகம் - அநுபவம். 2899

ஊனிலி - மாயை இல்லாதவன். திருவிலி - திரு + வில்லி-மேருவில்லி. மரு - குற்றம். 2900

காயத்தின் - உடம்பினுள். முகந்த - அநுபவித்த. 2901

உணர்வாகும் பீடம் - உள்ளம். மிடையாகா வண்ணம் - இடறு இல்லாமல். 2902

தற்பரம் - மகேசன். கற்பனை - பொய். 2903

கப்புறு சொற்பதம் - தொடர்ந்த சொன்னிலை. 2905

காஞ்சிரம் - எட்டி. மடவியள் - மடந்தைப் பருவத்தினள். கொண்டான் - கணவன். 2906

நடு உட்டெரு - சித்தத்தின் மத்தியில் அதாவது உள்ளத்தில். சந்தி-சமாதி; யோகமும் சமாதியும். 2907

விதனு - சோர்வு. வேறிருந்து - தனித்திருந்து. பதறுபடாது - பதையாது. கதறிய பாழ் - ஓட்டெடுக்கும் மாயை. அந்தக்கற... பாழில் - சிவத்தில். 2908

வாடா.........ஆனவர் - பரமசிவம். கூடார் - தம்மை அடையாதவர். கேடார் கமலம் - உள்ளக் கமலம். நாடார் - விரும்பார். 2909

அதுக்கென்று இருந்தார் - காம இன்பத்தை அநுபவிப்பதற்கே இருந்தவர்களாகிய மங்கையருடைய. பொதுக்கென - விரைவாக. சதுக்......காண - திடமொன்று இந்திரிய அடக்கம்பெற்றாரைக்காணில். வளம் தரும் - உபதேசம் செய்து முத்திவளம் தருவான். 2910

தான் - உடம்பு. தனம் - பொருள். ஊன் - மாமிசம். வான் - ஆகாயம். மனம் - நினைப்பு, மறப்பு. நான் - சீவபோதம். 2911

இருளும் வெளியும் - நினைப்பும் மறப்பும். பொரு............பொருந்த பொருள்களுள் சத்துப் பொருளாய் அமைய. உள்ளாகி - உள்ளத்தில் எழுந்தருளி. அழித்திடும்-மோகத்தைக் கெடுத்த. உருளாத-சென்று உருகாத. 2912

ஒன்றிநின்று - ஒருமுகப்பட்டு. உணர்வினை - தத்துவ அறிவை. பல ஊழி - பல யுகங்கள். 2913

தான் - ஆன்மா. வரைவற்றபின் - பற்றுதல் அற்றபின். காமனை - மாதர் போகத்தை. வென்றகண் - வெற்றிகொண்ட அறிவினால். 2914

மயக்க - சங்கற்பத்தை ஒழிக்க. மற்றொன்றுமில்லை - வேறு சாதனம் வேண்டாம். பினை மாய்வதில்லை - அதற்குமேல் மாள்வதற்கு வேறொன்று இல்லை. 2916

பலமன்னரி - உறுதியாக அடைந்து. 2917

உறவு என்னும் பாசம் - மனைவிமக்கள் என்னும் ஆசை. இழிந்து -

இழிவாக. செழும் சார்வு - சிறந்த. 2918

கரும்பு - கரும்புப்பால். அமுது - பசும் பால். அக்காரம் - வெல்லம். பீலி - மயிலிறகு. பெண் - மனம். 2919

அமட்ட - பந்தப்படுத்த. 2920

முரிந்தேன் - கெடுத்தேன். புரத்தினை - உடம்பினை. 2921

தியக்கு - நான்; எனது என்னும் மயக்கம். 2923

கண்டு - படைத்து. விண்டு - சிவானந்தம். வெறுமனம் - விருத்தியற்ற மனம். துண்டு - சிவம். தாறு - மனம். 2924

அன்னை - திருவருள் சத்தி. அத்தன் - சிவன். யான் - உயிர். 2925

சுழி - கடல். அண்டத் தலைவர் - இந்திரர். ஆதியும் - மாயையும். உண்டனர் - வசப்பட்டனர். 2926

கத்தும் சிலுகும் - பிதற்றலும் சண்டையும். சத்தம் பரவிந்து - சொல்லும் சொற்பொருளும். 2928

துன்பம் வணக்கலுற்றேன் - துன்பத்தைக் கெடுத்தேன். 2933

பலம் - பிறப்பு. 2934

கரும்பும் தேனும் - உண்டலும் உறங்கலும். அரும்பும் கந்தமும் - தோன்றுதலும் நிலைத்தலும். வெளியுறக் கண்டபின் - நன்றாய் அநுபவித்தபின். கரும்...புளித்ததே - உண்டலும் உறங்கலும் ஒழிந்தன. 2935

உள்ள - தொன்றுதொட்டு உள்ள. மீட்டு - பின்னர். வள்ளல் - சிவம். அருத்தி - சிவானந்தத்தை உண்பித்து. வளம் - மாண்பு. கைவளம் - சஞ்சித வினை. கரு - பிறப்பு. 2936

மீண்டார் - இந்திரியப் போக்கினின்றும் மீண்டார். கமலம் - உள்ளக்கமலம். தூண்டா விளக்கு - சிவன். தகளி - உள்ளம். நெய் - சிவானந்தம். ஒருத்தி - மனம். மாண்டான் ஒருவன் - அவிச்சை கெட்டது. 2937

மாயனை - மாயையோடு கூடிய சிவபிரானை. போயின நாடு - சங்கற்பத்தின் எல்லை. காயமின்னாட்டிடை - உடம்பினுள். 2940

மன்னுமலை - உடம்பு. மதவாரணம் - மனம். காலமுதல்வனார் - தத்துவங்களைப் படைத்தவன். பாடு - பெருமை. 2041

முகிழ் - உள்ளத்தில் இருக்கின்ற. 2942

போதறிவாளன் - எல்லாம் அறிபவன். 2943

பூதக்கண்ணாடி - தூலக்கண். போதுளன் - உள்ளத்தாமரையில் இருப்பவன். வேதக்கண்ணாடி - ஞானக்கண். நீதிக் கண்ணாடி - தத்துவஞானம். கீதக்கண்ணாடி - இசை. 2944

ஆயிரம் என்பது ஈண்டு அளவின்மை. ஏமம் - சுகம். ஓமம் - ஐம்பெரும் வேள்விகள். காமம் - சுகதுக்கங்களை அனுபவிக்கும் உடல். 2945

நாளுவிதம் - சரியையிற் சரியை முதல். ஊனோர் கமலம் - ஆறு ஆதாரங்கள். வானோர் உலகம் - நிராதாரங்கள். தேன் - சிவானந்தம். 2946

சுந்தர மாதர் - அழகு பொருந்திய மாதர். துழனி - போகம். அந்தரவானம் - ஒளிஉலகம். 2947

கலங்கிய நீரின் தன்மை தெரியாதது போல, எண்ணங்களால் கலக்குண்ட மனத்தையுடையார் சிவத்தின் தன்மையை அறியமாட்டார். சித்தத்தைக் கலங்கவிடாமல் தெளியவைத்தால் சிவம் வெளிப்படும் என்பது இம் மந்திரக் கருத்து. 2948

மெய்த்தவத்தான் - சிவன். அமைந்து ஒழிந்தேன் - செயல் மாளப்பெற்றேன். 2949

